## நன்றியுரை

திருவேங்கடவன் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் முனைவர் (பிஎச்.டி) பட்ட ஆய்வுப் பணியை மேற்கொள்வதற்கு அனுமதி அளித்த திருவேங்கடவன் பல்கலைக் கழகத்தார்க்கும், வாய்ப்பினை நல்கிய தமிழ்த் துறைக்கும் என் முதற்கண் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்விற்கு மேற்பார்வையாளராக இருந்து, இவ்வாய்வின்பால் எனக்கு ஆர்வத்தினைத் தூண்டி, ஊக்குவித்து, நல்வழிப்படுத்தி, ஆய்வேடு சிறப்புற துணைப்புரிந்த திருவேங்கடவன் பல்கலைகழகத் தமிழ்த்துறைத் தலைவர் **இணைப்பேராசிரியர் டாக்டர் ஜா. மனுவேல்** அவர்களுக்கும் நான் என்றென்றும் நன்றி கடன்பட்டவனாவேன். திருவேங்கடவன் பல்கலைக்கழக தமிழ்த்துறை **பேராசிரியர்.தேவ சங்கீதம்** அவர்களுக்கும், தமிழ்த்துறை **பேராசிரியர். ஆர். மனுவேல்** அவர்களுக்கும் என் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்து கொள்கிறேன். ஆய்வுக் காலங்களில் அன்போடு உபசரித்த எனது மேற்பார்வையாளர் அவர்களின் துணைவியார் **சாரதா மனுவேல்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இவ்வாய்வுக் காலங்களில் பெரிதும் துணைப்புரிந்த சித்தபாக்கள் தமிழ்நாடு மின்சார வாரியம் திரு. **கோ. முருகேசன்,**

மாவட்ட வருவாய்துறை அதிகாரி, **திரு து. முனசாமி, கோ. ரோசிகான்** அவர்களுக்கு என் நன்றியை உரிதாக்குகிறேன். மற்றும் துவக்கப்பள்ளி ஆசிரியராக பணிபுரியும் எனது அத்தை **கோ.பூலோகம்** அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்

என்னை உயர்ந்தநிலையில் ஆளாக்கி பார்க்கநினைத்தும், வளர்த்த பெற்றோர்கள் **கோ. சுப்பிரமணி, சு. எல்லம்மால்** அவர்களுக்கும் **தம்பி சு. சுரேஸ், சு. புஜ்ஜிபாபு, சு.பாலாஜிங்கை** மற்றும் **தங்கை சு. தன்லட்சுமி, சு. கீதா** அவர்களுக்கும் என் நன்றியை சமர்ப்பிக்கிறேன்.

இவ்வாய்வின் தொடக்கமான கள ஆய்வின்போது நாட்டுப்புற மருத்துவப் பாடல்களைச் சேகரிக்க பல ஊர்களுக்கு அழைத்து சென்ற அண்ணன்மார்கள் **சாரங்கபாணி, ஜபராஜ், கோவிந்தராஜ், ஏழுமலை** நண்பர்கள் **பரணி, குமாரசாமி, சீனிவாசன், இலட்சுமணன், உமாமகேஸ், ஸ்ரீரஞ்சனி, ரவிசந்திரன், சேகர்** போன்றோருக்கும் எனது நன்றி.

தங்களுடைய வேலை நேரங்களில் மனம்கோணாது பாடிய **நாட்டுப்புற மருத்துவ பாடகர்கள்** அனைவருக்கும் எனது நன்றியை பணிவுடன் உரித்தாக்குகிறேன்

கேட்கும்பொழுதெல்லாம் முகம்கோணாமல் என்னுடைய ஆய்விற்குத் தேவையான அனைத்து உதவிகளையும் செய்த முனைவர். தனஞ்செழியன் உதவி ஆசிரியர் அவர்களுக்கும் மற்றும் முனைவர். அம்முதேவி உதவி ஆசிரியர் அவர்களுக்கும் நன்றியை உரிதாக்குகிறேன்.

என்னுடன் சேர்ந்து ஆய்வுக்கு உதவிசெய்த ஆய்வு மாணவர்கள் / மாணவிகள் அண்ணன் அம்பேத்கார், அக்கா அமுதா, அக்கா மாலதி, அண்ணன் ஜெயகரன், தமிழ்செல்வி, ஜெகன், சுகுமாரன், இரவி, இராபர்ட், காந்தி மற்றும் தமிழ்ச்செல்வி ஆகிய அனைவருக்கும் என் இதயப்பூர்வ நன்றிகள் பல.

முதுகலை முதலாமாண்டு, இரண்டாமாண்டு மாணவ, மாணவிகளுக்கும் என் நன்றி.

ஆய்விற்குத் தேவையான வசதிகளையும் சிறந்த முறையில் கணிணி அச்சு செய்த நண்பர் இரா. பிரபாகரன் அவர்களுக்கும் எனது நன்றி.

இவ்வாய்வேட்டினைச் சிறந்த முறையில் வடிவம் அமைந்து தந்த திருப்பதி மாணவர் நகலத்தாருக்கும் மற்றும் ஆய்வேடு உருவாவதற்கு துணையாய் இருந்த ஏனைய அன்பர்கள், நண்பர்கள் அனைவருக்கும் என் இதயபூர்வ நன்றிகள் பல.

# பொருளடக்கம்

## சுருக்க குறியீட்டு எண்

ப - பக்கம்

பக். - பக்கங்கள்

தொ.ஆ - தொகுப்பு ஆசிரியர்

மு.நூ. - முன் குறிப்பிட்ட நூல்

பா.எண் - பாடல் எண்

நூ.எண் - நூற்பா எண்

Ed - Editor
P - Page
PP - Pages
Op.cit - Opera Cita to: in the work cited.
Ibid - Ibem

## முன்னுரை

மனித குலத்தை முதன்மையாக நெறிப்படுத்துவது நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வமாகும். 'சுவர் இருந்தால்தான் சித்திரம் வரையமுடியும்' என்ற பழமொழிக்கேற்ப முற்றிலும் உண்மையானதாக நாட்டுப்புற மருத்துவம் திகழ்கின்றது. ஒருவன் எவ்வளவு சொத்து, செல்வம் உடையவனாக இருந்தாலும், அவன் உடலில் ஆரோக்கியம் இல்லையென்றால், அவனுடைய சொத்தும், செல்வமும் விரைவில் அழிந்துபோகக் கூடியதாக அமையும். ஆரோக்கியமான உடல் நிலை பெற்ற எவரும் சமுதாயத்தில் உயர்ந்த நிலையை அடைய முடியும் என்பது குறிப்பிடத்தக்கதாகும். எனவே, இந்த உலகில் ஒருவன் நிம்மதியாக, இன்பமாக வாழவேண்டுமெனில், அவனின் உடல் ஆரோக்கியம் முதன்மையாகக் கருதப்படுகிறது. ஆரோக்கியமான உடல் நிலையைப் பெற நாட்டு மருந்துகள் உதவுகிறது. உலகில் தற்போது ஆரோக்கியமுள்ள மனிதனைக் காண்பது அரிதாகிவிட்டது. நோய் – மருத்துவர் – மருந்து போன்றவை மனித வாழ்க்கையோடு ஒன்றிய அம்சங்களாய் மாறிவருகின்றன. இவற்றிற்கெல்லாம் மாறிவரும் உணவுப் பழக்கங்கள், இயந்திரமயமான வாழ்க்கை முறை, சுற்றுப்புறச் சூழல் சீர்கேடு, மேல்நாட்டுப் பழக்கவழக்கங்கள், இயற்கையோடு

ஒத்து வாழாத வாழ்க்கை முறைகள் இதற்குப் பெரிதும் காரணமாக அமைகின்றது. எனவே மருத்துவமுறை பண்டையக் காலத்திலிருந்து இன்று வரை தமிழ்நாட்டிலேயே பயிரிடப்பட்டு வருவதால் தமிழ் மருத்துவம் எனப்படுகிறது. தமிழ் மருத்துவமானது சித்த மருத்துவம் நாட்டு மருத்துவம் என்ற இருவகையில் ஆய்வேட்டில் பயன்படுத்தப்படுகிறது. இன்றைய நாகரிக வளர்ச்சி, ஆங்கில மருத்துவத்தின் வியத்தகு முன்னேற்றம் ஆகிய காரணங்களால் நாட்டுப்புற மக்கள் மற்றும் நாட்டுப்புற மருத்துவர்கள் அவற்றின் முக்கியத்துவங்களை இழந்து விடாதபடிக்கும் சமுதாயத்திற்கும் பயனளிக்க வேண்டும் என்ற உயர்ந்த குறிக்கோளை அடிப்டையாகக்கொண்டு நாட்டுப்புற மருத்துவத்தின் சிறப்புகளும் அதன் அம்சங்களும் மருத்துவ முறைகளும், இந்த ஆய்வேட்டில் ஆராயப்பட உள்ளது.

## ஆய்வுத் தலைப்பு

"நாட்டுப்புற மருத்துவம் – ஓர் ஆய்வு" என்பது இவ்வாய்வேட்டின் தலைப்பாகும்.

## ஆய்வின் நோக்கம்

இன்றைய நாகரிக வளர்ச்சி, ஆங்கில மருத்துவத்தின் வியத்தகு முன்னேற்றம் ஆகிய காரணங்களால் நாட்டுப்புற மருத்துவங்கள்

அவற்றின் முக்கியத்துவங்களை இழந்து வருகின்றன. பல நூற்றாண்டுகளாக மரபு வழியாகப் பின்பற்றப்பட்டு வந்ததும், பலரின் அனுபவத்தில் பெறப்பட்டதும், பக்கவிளைவுகளற்ற எளிமையான மருத்துவ முறைகளைத் தன்னகத்தே கொண்டதுமான நாட்டுப்புற மருத்துவம் இன்று கேட்பாரற்றுக் கவனிக்கப்படாமல் உள்ளது. இன்னும் சில தலைமுறைகள் கடந்து செல்லும்போது நாட்டுப்புற மருத்துவம் முற்றிலும் மறக்கப்பட்டு அழிந்துவிடும் நிலைக்கு உள்ளாகிவிடும்.

நோயைப் போக்கிட மருந்துகளை மட்டும் கொடுத்துக் குணமடையச் செய்யும் முறையிலிருந்து மாறுபட்டு நோயாளிகளை அவர்களது பண்பாட்டுச் சூழலில் வைத்து மருத்துவம் செய்யும்முறை பற்றி நாட்டுப்புற மருத்துவத்தில் அழிந்து போகாமல் சேகரித்துப் பதிவு செய்வதே ஆய்வின் முக்கிய நோக்கமாகும்.

## ஆய்வு எல்லையும் பரப்பும்

நாட்டுப்புற மருத்துவமானது அனைத்து மக்களுக்கும் பொதுவானதாகக் கருதப்படுகிறது. ஆனால் இம்மருத்துவமுறை வாழ்வியல் சார்ந்துள்ள இலக்கியங்கள், மரபுவழி மருத்துவச் செய்திகள் ஆகியன ஆய்வின் எல்லைகளாக அமைந்துள்ளன. இருப்பினும்

ஆய்வின் வரையறையினைக்கருதி வாழ்வியல் நிகழ்வுகள், மருத்துவத்தின் தோற்றம், மரபுவழி மருத்துவமுறைகளில் மூலிகை மருத்துவம், மூலிகையுடன் கூடிய மந்திர மருத்துவம், தனிப்பட்ட மந்திர மருத்துவம் ஆகியன மட்டுமே ஆய்வின் பரப்புகளாக எடுத்துக்கொள்ளப்பட்டன.

## ஆய்வு மூலங்கள்

இவ்வாய்விற்கான தரவுகள் முதன்மைத் தரவுகள், துணைத்தரவுகள் என்ற இரண்டு வகையில் அமைகின்றன. நாட்டு மருத்துவம் பற்றி நூல்கள் முதன்மைத் தரவுகளாகவும், நாட்டுப்புற மருத்துவ மூலிகை, செடி, கொடி, பற்றி பிற நூல்கள் துணைத்தரவுகளாகவும் அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

ஆய்வுத் தொடர்பாகத் திரட்டப்பட்டச் செய்திகள் அனைத்தும் விளக்க ஆய்வு ஒப்பாய்வு ஆகிய முறைகளில் ஆராயப்படுகின்றது. மக்களின் நம்பிக்கைகளின் அடிப்படையில் மருத்துவமுறை அமைகின்ற காரணத்தால் இவ்வாய்வு சமுதாய ஆய்வாகவும், உளவியல் ஆய்வாகவும் அமைகின்றது.

## ஆய்வேட்டின் அமைப்பு

இவ்வாய்வு முன்னுரை முடிவுரை நீங்கலாக கீழ்கண்டவாறு ஐந்து இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. அவை முறையே

1. நாட்டுப்புறவியலில் நாட்டுப்புற மருத்துவம்
2. தமிழ் இலக்கியங்களில் நாட்டுப்புற மருத்துவம்
3. நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் மருத்துவம்
4. நாட்டுப்புற மருத்துவத்தின் சிறப்புக் கூறுகள்
5. நாட்டுப்புற மருத்துவ முறைகளில் நோய்களும் குணமாக்கும் முறைகளும்.

*இயல் ஒன்று*

### நாட்டுப்புறவியலில் நாட்டுப்புற மருத்துவம்

நாட்டுப்புறவியல் விளக்கம் – நாட்டுப்புறவியல் பற்றி பல்வேறு அகராதிகள் தரும் விளக்கம் – நாட்டுப்புறவியல் சொற்பொருள் விளக்கம் – நாட்டுப்புறவியலின் தோற்றம், வகைகள், அதன் வளர்ச்சி நிலை – நாட்டுப்புற இலக்கியத்திலும் நாட்டுப்புற கலைகளிலும் இடம்பெறும் மருத்துவ நிலை – சித்த மருத்துவத்தின் விளக்கம் – நாட்டுப்புற மருத்துவத்தின் அடிப்படைக் கொள்கைகள், தத்துவங்கள், சிறப்புகள் போன்ற தலைப்புகளின் வழி இவ்வியல் அராயப்படுகின்றன.

*இயல் இரண்டு*

**தமிழ் இலக்கியங்களில் நாட்டுப்புற மருத்துவம்**

தொல்காப்பியம் – சங்க இலக்கியம் முதலானவற்றுள் காணப்பெறும் மருத்துவச் செய்திகளிலிருந்து மருத்துவனின் பண்புகள், மருந்து, மருத்துவ முறை, மருத்துவக் கோட்பாடு, நோய், நோய்க்காரணிகள் போன்ற செய்திகள் – சங்க இலக்கியங்கள் வழியாக அக்காலத்தில் வாழ்ந்த மக்கள் மருத்துவம் செய்வதை ஒரு அறமாக மேற்கொண்டார்கள் என்ற செய்திகள் – காப்பியங்கள், புராணங்கள் குறிப்பிடும் மருத்துவச் செய்திகள் – பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் கூறும் மருத்துவ செய்திகளிலிருந்து நோய், நோயில்லாநெறி, நோய் வராமல் தடுக்கும் முறைகள், உணவு நெறி போன்ற செய்திகள்– சிற்றிலக்கியங்கள் குறிப்படும் செய்திகள் – இக்கால இலக்கியங்கள் குறிப்பிடும் செய்திகள் போன்றவை இவ்வியலின் மூலம் அறியப்படுகின்றது.

*'யல் மூன்று*

**நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் மருத்துவம்**

நாட்டுப்புறப் பாடல்கள் விளக்கம் – ஆய்வாளர்களின் வழியாக நாட்டுப்புறப் பாடல்களின் செய்திகள் – நாட்டுப்புறப் பாடல்களின்

வரலாறு, தனித்தன்மைகள், அதன் அமைப்பு முறை, வகைகள் போன்றவையும் – தமிழறிஞர்களின் கருத்துகள், வெளிநாட்டவர்களின் குறிப்புகள் – நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் மருத்துவ முறைகள் (நாட்டுப்புற மருத்துவம், இயற்கை மருத்துவம், ஆங்கில மருத்துவம், மந்திர மருத்துவம், மூலிகை மருத்துவம், நம்பிக்கை மருத்துவம்) – நாட்டுப்புறப் பாடல்களில் பலவகையான நோய்களும் குணமாகும் மருந்துகளைப் பற்றியும் இவ்வியலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

*இயல் நான்கு*

**நாட்டுப்புற மருத்துவத்தின் சிறப்புக் கூறுகள்**

பண்டையத் தமிழ் இலக்கியங்களில் நாட்டுப்புற மருத்துவத்திற்காக பயன்படுத்தியவைப் பற்றியும் – தாவரத்தின் முக்கிய அம்சத்தைப் பற்றியும் – மருத்துவவியலார் தாவரத்தின் குணமாக்கப்படும் நோய்களின் தன்மைகளையும் – 'மூலிகை' என்ற தனிச்சொல்லால் மருத்துவத்தின் நிலையையும் – மூலிகைகளான மரங்கள், செடிகள், கொடிகள், இலைகள், வேர்கள், விதைகள், பழங்கள், காய்கள் ஆகியவை நாட்டுப்புற மருத்துவத்தின் சிறப்புக் கூறுகளாக அமைந்திருப்பதாக இவ்வியலில் ஆராயப்படுகின்றன.

*இயல் ஐந்து*

**நாட்டுப்புற மருத்துவ முறைகளில் நோய்களும் குணமாக்கும் முறைகளும்.**

நோய் – நோய் தோன்றுவதற்கான காரணங்கள் – நோய்களைக் கண்டறியும் விதம் – நோய்களின் வகைகள் – பலவகையான நோய்களும் குணமாக்கும் முறைகளும் – மந்திர சமய மருத்துவத்தில் பலவகையான நோய்களைக் குணமாக்கும் முறைகள் – மருந்து – பொருள் –விளக்கம் – மருந்துகளின் பல வகைகள் (அகமருந்துகள், புறமருந்துகள்) – பத்தியம் (மருந்து உண்ணும்போது மேற்கொள்ளும் பத்திய முறைகள், பத்தியத்தின் போது உண்ணக்கூடிய உணவு வகைகள்) – போன்றவை இதில் ஆராயப்படவுள்ளன.

முடிவுரை

முன்னுரை முதலாக ஒவ்வொரு இயலில் எழுதப்பட்டுள்ள ஆய்வு முடிவுகள் இறுதியில் முடிவுரையாகத் தொகுத்துத் தரப்பெற்றுள்ளது. துணைநூற்பட்டியலில் முதன்மை மற்றும் துணைமை ஆதார நூல்கள் அகரவரிசைப்படி அமைக்கப்பட்டுள்ளன. பின்னிணைப்பில் நாட்டுப்புற மருத்துவத்தில் காணப்படும் மரங்கள், செடிகள், கொடிகள், இலைகள், வேர்கள், விதைகள் போன்றவைப் பற்றிய படங்கள் வழங்கப்பட்டுள்ளன.

# இயல் -1

# நாட்டுப்புறவியலில் நாட்டுப்புற மருத்துவம்

## முன்னுரை

மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள மரபுவழிவந்த வழக்காறுகளைப் பற்றி ஆராய்வது நாட்டுப்புறவியல் ஆகும். இது அன்றாட மக்கள் வாழ்விலிருந்து பிரிக்க முடியாத ஒன்றாக உள்ளது எனலாம். நாட்டுப்புறவியலில் உள்ள பல்வேறு பிரிவுகளில் மருத்துவம் தோன்றுவதற்கு முன்பு மக்களிடம் இருந்த தொன்மையான மருத்துவமுறை நாட்டுப்புற மருத்துவ முறையாகும். இது இன்றும் சமூகத்தில் இன்றியமையாத இடத்தைப் பெற்று விளங்குகின்றது. இவ்வியலில் நாட்டுப்புறவியல் என்றால் என்ன என்பதை சுருக்கமாக விளக்கி, அதன் வகைபாடுகளைப் பற்றிப் பேச முற்படுகின்றன. வகைப்பாடுகளில் மருத்துவம் தொடர்பான செய்திகள் விரிவாக இவ்வியலில் காணலாம்.

தமிழ் நாட்டுப்புற மருத்துவத்தை அறிந்துக்கொள்வதற்கு முதன்மை ஆதாரமாக அமைவது சித்தர் பாடல்கள் ஆகும். அதனால்தான் சித்த மருத்துவம் நம் நாட்டிற்கு தமிழர்களின் நாட்டுப்புற மருத்துவமாக மாறியது எனலாம். நாட்டுப்புற மருத்துவத்தில் அடிப்படையாக அமைவது பத்தியமாகும். இப்பத்தியத்தின்வழி நாட்டுப்புற மக்கள் உடல் ஆரோக்கியத்தை வளர்த்தனர்.

'பாரத நாட்டை மூலிகைச் செடிகளின் கருவூலம் என்று மேநாட்டறிஞர் கூறுவதாகவும், பாரத நாட்டின் மற்றொரு பெயர் மூலிகை அடிப்படையில் பிறந்த நாவலந்தீவு'[1] என்றும் இரா. குமாரசுவாமி அவர்கள் குறிப்பிடுகின்றார். மேலும் 'உலகில் பல பாகங்களில் உள்ள அரிய பலவிதமான மூலிகை இனங்கள் அனைத்தும் விதவிதமான பருவங்களும் காலநிலைகளும் வெவ்வேறான மண்வளமும் மழைவளமும் கொண்ட இப்பெரிய துணைக் கண்டத்தில் அமைந்திருப்பது சிறப்புக்குறியதாகும்'[2] என்று க்ரிஸ்விஷ் என்பவர் கூறுவர். மேலே குறிப்பிட்ட கருத்தின்படி பெரும்பகுதி இமயமலை, விந்தியமலை, பொதியமலை போன்ற மலைகளில் மருத்துவ செடிகள் இருப்பது நமக்குத் தெரியவருகிறது.

இந்திய நாட்டில் இவ்வாறு அமைந்த மூலிகை வளத்தால் மக்கள் இயற்கையுடன் பொருந்தி வாழ வழிவகுத்தது என்று கூறலாம். இதனையே, 'உலகில் நீங்கள் எங்கு நோய் வாய்ப்பட்டாலும் அந்நோயைத் தீர்க்க அங்கு இயற்கை மருந்து இருப்பதைப் பார்ப்பீர்கள்'[3] என்று ஜார்வில் கூறுகிறார். 'நாட்டு மருத்துவம் ஒரு பரம்பரையிடமிருந்து இளைய பரம்பரைக்குக் கைமாறுகிறது'[4] என்று டான்யாடர் கூறுவர். இவ்வாறு நாட்டுப் புறமருத்துவத்தின் செய்திகளை அறிஞர்களின் வாயிலாக அறியமுடிகிறது.

## நாட்டுப்புறவியல்

நாட்டுப்புறவியல் (Folklore) என்பது பழக்கத்திற்கு வருவதற்கு முன்பே இதனைக் குறிக்கப் பல்வேறு சொற்கள் பயன்படுத்தப்பட்டு வந்தன. அவை நாட்டுப் பாடல், நாடோடிப் பாடல், கிராமியப் பாடல், வாய்மொழி இலக்கியம் மற்றும் 'காற்றில் மிதந்த கவிதை' என்றும் கூறுவர்.

நாட்டுப்புறவியல் என்ற சொல்லை வில்லியம் தாமஸ் என்பவர் 1846ல் முதன் முதலில் பயன்படுத்தினார். அதற்கு முன்பு Popular Antiquities அல்லது Popular என்ற சொல்லைப் பயன்படுத்தி வந்தனர். Folk, Lore ஆகிய இரு சொற்கள் Folklore என்று இணைந்து உருவானதாகும். Folk என்பது படிக்காத பாமர விவசாயிகளைக் குறிப்பிடுவதற்கு பயன்படுத்திய சொல்லாகும். பின்னர் நாட்டுப்புற மக்களைக் குறிக்க Lore என்ற சொல்லைப் பயன்படுத்தினர். இந்தச் சொல்லை 'மரபுச் செய்தித் தொகுதி' என்றும் 'வழக்காறு' என்றும் 'அறிவு' என்றும் பொருள் கொள்ளலாம். 'பொதுவான தொழில், சமயம் முதலியவற்றைப் பின்பற்றும் குழுவை Folk என்பர். Folklore என்பதற்குச் சென்னைப் பல்கலைக்கழக 'ஆங்கிலத் தமிழ் அகராதி'யில் 'மக்கள் மரபாராய்ச்சி' என்றும் 'மக்கள் மரபுவழிப் பழக்க வழக்கக் கோட்பாடு' என்றும் பொருள் கூறுகிறது.[5] அதாவது 'மரபுவழிப்பட்ட நம்பிக்கைகளையும் புராணங்களையும் பழக்க வழக்கங்களையும் பொதுமக்களிடமிருந்து அறிந்து கொள்வதும் அத்துடன் பொதுமக்களின் இலக்கியங்களைக் கற்றுக் கொள்வதும் நாட்டுப்புறவியல்'[6] என்று குறிப்பிடுவர்.

பண்டைய நம்பிக்கைகள், வழக்கங்கள் பற்றிய அறிவியலே நாட்டுப்புறவியலாகும் என்று ஸ்ரிபன் பியுக்ஸ் கூறுகிறார். மரபு வழியாக வழங்கப்படும் வழக்காறுகள் ஒரு தலைமுறையினரிடமிருந்து மற்றொரு தலைமுறையினருக்குப் பரவுவதைப் பற்றி ஆராய்வதே நாட்டுப்புறவியலாகும் என ஆர்ச்சர் டெய்லர் கூறுகிறார். 'நாட்டுப்புறவியல் என்பது மக்களது பண்பாட்டை ஆராயும் ஆய்வு' என நாட்டுப்புறவியல் அறிஞர் தியோடர் கஸ்டர் கூறுகிறார். நாட்டுப்புற இலக்கியமானது மனித சமுதாயம் எதை அனுபவித்ததோ, எதைக் கற்றதோ அதைக் குவித்து வைத்திருக்கும் சேமிப்பு அறையாகும்[7] என்று எஸ்பினோஸோ கூறுவர்.

நாட்டுப்புறச் சமுதாயதில் வாழும் மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாட்டுக் கூறுகள், அவர்களது எண்ணங்கள், நம்பிக்கைகள், வாழ்க்கை முறை, தொழில், கனவுகள், உறவுமுறைகள், ஆசைகள், எதிர்ப்பார்ப்புகள், உணர்வுகள் போன்றவை வெளிப்படுத்தும் பல்வேறு இலக்கியங்களையும் மற்றும் நாட்டுப்புற கலைகளான ஆடல், கூத்து, விளையாட்டுகள், கைவினைகள், விழாக்கள், மருத்துவம் போன்ற கலைகளையும் கண்டறிந்து விளக்கும் முறையில் ஆராய்வது நாட்டுப்புறவியல் ஆகும். ஆகவே, நாட்டுப்புறவியல் வழக்காறுகளைக் குறிப்பிடுவதற்காகப் பயன்படுத்தப்பட்ட சொல் என்று அறிந்துக்கொள்ளமுடிகிறது.

## நாட்டுப்புறவியல் சொற்பொருள்

நாட்டு, பாமரர், நாட்டார் என்று நானுகடுகொருவிதமாகச் சொன்னவர் நா. வானமாமலை அவர்கள் ஆவார். டாக்டர் பா.ரா.சுப்பிரமணியம் Folklore என்பதனை நாட்டுப்புறக் கலை என்றும் மொழிபெயர்த்தார். பேரா. அ.மு. பரமசிவானந்தம் Folk- என்ற சொல்லுக்கு வாய்மொழி என்று விளக்கம் கூறினார். டாக்டர்.தே.லூர்து நாட்டார் வழக்காற்றியல் என்னும் தொடரைப் பயன்படுத்தினார். நாட்டார் என்னும் சொல் நாட்டுப்புறத்தாரை மட்டுமின்றி குறிப்பிட்ட சில சாதியினரையும் குறிக்கக் கூடியதாகும். டாக்டர். சு. சண்முகசுந்தரம் நாட்டுப்புறவியல் என்ற பெயரை முதன் முதலில் அறிமுகப்படுத்தினார்.

நாட்டுப்புறவியல் என்ற பெயரை நான் 1975-இல் எனது நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம் என்ற நூல் மூலமாக வெளியிட்டேன். இது 'Folk lore' என்ற சொல்லுக்கு நான் செய்த தமிழாக்கம். டாக்டர் ந. சஞ்சீவி சில மாதங்களுக்கு பிறகு சரி என்றார். Folk என்பதற்கு நாட்டுப்புறம் என்பது சரிதான் என்ற எனது கொள்கைக்கு ஆதாரமானவர் டாக்டர் ஆறு. அழகப்பன். எனது 'நாட்டுப்புறவியல்' என்ற சொல்லாக்கத்தை டாக்டர். ச.வே. சுப்பிரமணியம், டாக்டர். ஆறு. இராமநாதன், டாக்டர்.சக்திவேல் போன்றோர் ஏற்றுக்கொண்ட போது டாக்டர்.தே.லூர்து மட்டும் ஏற்க மறுத்தார். அது மட்டுமின்றி ஏனையோர் கூறிய எல்லாப் பெயர்களையும் மறுத்தார். நாட்டார் வழக்காற்றியல் என்று அவர்

பயன்படுத்தி வந்த தொடர் மட்டும் பொருத்தமானது என அவர் வாதிட்டார். ஊர்பந் என்ற சொல்லிற்கு நாட்டுப்புறம் என்று சொன்னால் 'கிராமப் பகுதியை மட்டும் குறிக்கும். அப்படியென்றால் நகர்ப்புறத்தில் இப்பாடல்கள் பாடவில்லையா?" என்பது லூர்து அவர்களின் வினாவாகும். தொடர்ந்து அவர் கூறும் கூற்றையே தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு டாக்டர் சண்முகசுந்தரம் அவருக்கு விளக்கம் கூறினார். 'கிராமத்திலிருந்து நகரில் வந்து வாழும் ஒரு தாய் தாலாட்டுவதைக் கேட்கிறோம்' என்பது டாக்டர் லூர்துவின் கூற்று. 'இதற்குப் பொருள் என்ன? நாட்டுப்புறத்துக்கே உரிய இப்பாடல் நகரிலும் சில வேளைகளில் பாடப்படலாம் என்பதுதானே என்கிறார். பேரா. சண்முகசுந்தரம். எனவே எங்கு பாடினாலும் அதன் தோற்றம் நாட்டுப்புறம்தானே அதன் வேர்கள் நாட்டுப்புறத்தில்தானே உள்ளன' என்று குறிப்பிடுகின்றார்.

நாட்டுப்புறம் என்ற சொல்லோடு தொடர்புடைய 'பாமரர்' என்னும் சொல் பற்றியும் டாக்டர்.தே.லூர்து ஒரு வினா எழுப்பினார். 'பாமரர் என்போர் படிப்படிவில்லாத கிராமப்புற மக்கள் என்று கொண்டால் இவர்தம் பாடல்களைத் தவிரப் படிப்பறிவு பெற்ற ஒரு தாய் பாடும் பாட்டை என்னவென்று கொள்வது?' என்பது அந்த வினாவாகும். 'இந்தப் பாடல்களால் பாடுவோர் படிப்பறிவு பெற்றிருந்தாலும், பாடல்கள் பாமரர்கள் பாடும் பாடல்கள்தானே? இதில் என்ன ஐயப்பாடு என்பது டாக்டர்

சண்முகசுந்தரத்தின் கூற்றாகும். சினிமாப் பாடல்களைச் சினிமாக்காரர்கள் தவிர மற்றவர்கள் பாடுவதில்லையா? பாடுகிறார்கள் என்பதற்காகப் பெயரையும் மாற்றுகிறோமா? யார் பாடினாலும் எங்கிருந்து பாடினாலும் அது நாட்டுப்பாடல்தான் என்பது தெளிவாக புரிகின்றது.

Folk என்பதற்கு நாட்டுப்புறம் என்ற சொல் சரியான தமிழாக்கம் இல்லையென்று கூறிய டாக்டர் தே.லூர்து அதற்கு நாட்டார் என்னும் சொல் மிகப் பொருத்தமானது என்று குறிப்பிடுகின்றார். அதற்கு அவர் பல காரணங்களைக் கூறுகிறார். அவற்றுள் ஒன்று 'நாட்டார் கூட்டம்' என்னும் தொடர் மக்கள் வழக்கிலும் காணப்படுகிறது. நாட்டார் என்ற சொல்லைச் சென்னையில் உள்ளவர்கள் நாட்டார்களை அழைப்பதற்குப் பயன்படுத்துகின்றனர். ஆசாரியாரை ஆச்சாரி என்பதுபோல நாட்டாரை நாட்டார் என்றழைக்கின்றனர். ஆனால் நாட்டார் என்பது தஞ்சை, இராமநாதபுரம், புதுக்கோட்டை ஆகிய மாவட்டங்களில் வாழும் கள்ளர் என்னும் இனத்தவரையே குறிக்கும். தஞ்சைக்கரந்தையில் வாழ்ந்த தமிழறிஞர் ந.மு. வேங்கடசாமி நாட்டாரை நாடறியும். சிவகங்கை திருப்பத்தூர் பகுதிகளில் இன்றும் கள்ளர் இனத்தவரை நாட்டார் என்றே அழைக்கின்றனர். மேலும், உறங்கான்பட்டி, பாகனேரி, மல்லாக்கோட்டை ஆகிய ஊர்களிலும் உள்ள கள்ளர்கள் நாட்டார்கள் என்று அழைக்கப்படுகின்றனர். எனவே, டாக்டர்

லூர்து பயன்படுத்திய நாட்டார் வழக்காற்றியல் என்பது ஒரு குறிப்பிட்ட சாதியினர்க்கு உரியது போலத் தோன்றும். அது குழப்பத்தைத் தோற்றுவிக்கும் வகையில் 'நாட்டார் வழக்காற்றியல் என்றால் எந்தச் சாதியைக் கருதுவது? 1986இல் உ.கஸ்தூரி காந்தி எம்.ஏ, 'நாட்டர் வாழ்வியலும் பண்பாடும்' என்னும் நூலை எழுதினார். இந்நூல் Folk lore என்ற பொருளை தருகின்ற நூல் என்று வாங்கிப் படித்த பொழுது அது பஜனேரி நாட்டார்களாகிய கள்ளர் குலத்தவர் வாழ்வில்..' என்று போய்க்கொண்டிருக்கிறது. இத்தகைய குழப்பமும் குளறுபடியும் தேவைதானா?"[9] என்று எண்ணத் தோன்றுகின்றது.

பேராசிரியர் சண்முக சுந்தரத்தின் கூற்றுப்படி, 'நாட்டு, நாடோடி, பாமரர், கிராமியம் என்ற சொற்களைவிட 'நாட்டுபுறம்' என்னும் சொல் Folk என்னும் ஆங்கிலச் சொல்லுக்குப் பொருத்தமானதால்' நாட்டுப்புறவியல் என்று Folk loreக்கு மொழிமாற்றம் செய்வது சரியானதாக கருதப்பட்டது. இது பெரும்பாலான அறிஞர்களாலும், ஆய்வாளர்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. இது குழப்பமில்லாமல் இதைத்தான் குறிப்பிடுவது என்ற தெளிவுடன் உள்ளது. நாட்டுப்புறப்பாடல்களிலும் இச்சொல்லாட்சி இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.[10]

## நாட்டுப்புறவியல் வகைகள்

எத்தகைய ஆய்வுக்கும் வகைப்பாடு செய்தல் முக்கியமான ஒன்றாகும். நாட்டுப்புறவியல் மட்டுமின்றி அறிவியல் துறைகளுக்கும் வகைப்படுத்துதல் இன்றியமையாதாக கருதப்படுகின்றது. நாட்டுப்புறவியலை பலர் பல வகைகளாகப் பிரித்திருக்கின்றனர். 'வில்லியம் பாஸ்கம்' வாய்மொழிக்கலை, ஓரளவு வாய்மொழிக் கலை, வாய்மொழி சாராக்கலை என மூன்று வகையாகக் குறிப்பிடுகின்றார்.[11] அதேபோல் 'போக்ஸ்' செயல் வகை, அறிவியல் வகை, மொழியியல் வகை, இலக்கிய வகை என நான்காகக் கூறுகிறார்.[12] பிரான்சிஸ்லீயுட்லி இலக்கியம், நம்பிக்கைகள், கைவினைப் பொருட்கள், மொழி அல்லது நாட்டுப்புறப் பேச்சு என நான்காகக் கூறுகிறார்.[13] ரிச்சர்ட் டார்சன் என்பவர் உடல், செயல் சாரா நாட்டுப்புறவியல் என இரண்டு வகையில் குறிப்பிடுகிறார்.[14] அதேபோல் சு.சண்முகசுந்தரம் இலக்கியம் சார்ந்தவை, இலக்கியம் சாராதவை என இரண்டாகப் பிரிக்கின்றார்.[15] நாட்டுப்புறவியலை சு. சக்திவேல் நாட்டுப்புற இலக்கியம் என்றும் நாட்டுப்புறக்கலை நம்பிக்கை என்றும் இரண்டு பிரிவாகப் பிரித்துள்ளார்.[16] மேற்கண்டவற்றைத் தொகுத்து நோக்கினால் நாட்டுப்புறவியலை இலக்கியங்கள், பழக்க வழக்கங்கள், கலைகள், அறிவியல், மருத்துவ வகைகள் எனப் பிரிக்கலாம்.

## இலக்கியம்

நாட்டுப்புற இலக்கியம் என்பதில் இலக்கியம் சார்ந்தவை, இலக்கியம் சாராதவை என இரண்டு வகைகள் உள்ளன. இலக்கியம் சார்ந்தவை என்பதில் நாட்டுப்புறப் பாடல்கள், கதை, கதைப்பாடல், பழமொழி, விடுகதை போன்றவை அமைகின்றன.

நாட்டுப்புற இக்கியங்களில் கதைகள் என்பதும் ஒன்றாகும். மனிதனின் ஆசைகள், அவலங்கள் தேவைகள், விருப்பு வெறுப்புகள், கனவுகள், கற்பனைகள் கதைகளாகின்றன. ஆதிகால மனிதன் தனது அனுபவங்களை மற்றவர்களுக்கு கதையாகக் கூறத் தொடங்கியதே கதையின் தொடக்கமாக அமைகின்றது. அச்ச உணர்வு, தாழ்வு மனப்பான்மை அறம் உரைத்தல் முதலியவைகள் கதைகள் தோன்றக் காரணமாக அமைந்தன எனலாம்.

நாட்டுப்புற இலக்கியத்தில் பாடல்கள் என்பவை மக்களின் வாழ்வோடு வாழ்வாக பின்னிப் பிணைந்துள்ளன. மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள நிகழ்வுகள் நாட்டுப்புறப் பாடலின் பொருளாக உள்ளன. நாட்டுப்புறப் பாடல்களை மக்கள் தோட்ட வயல்களிலும், தொழில் செய்யும் இடங்களிலும் பாடுகின்றனர். நாட்டுப்புறப்பாடல்களை நாட்டுப்பாடல், நாடோடிப் பாடல், நாட்டார் பாடல், வாய்மொழிப் பாடல், பாமரர் பாடல், பரம்பரைப் பாடல், கிராமியப் பாடல், கல்லாதார் பாடல், மக்கள் பாடல், ஏட்டில் எழுதாக் கவிதை என்றெல்லாம்

குறிப்பிடுவர். நாட்டுப்புறப் பாடல்களில் பாடப்படும் சூழ்நிலைக்குத் தக்கவாறு பொருள் மாறுகிறது. காப்பியங்கள் தோன்றுவதற்கு கதைப்பாடல்களே மூலகாரணமாக இருந்தன என்று கூறலாம். கதைகள் பாடலாகப் பாடப்படுவதைக் கதைப்பாடல் என்பர். கதைப்பாடல்கள் வரலாறுகள் அல்ல, வீரகாவியங்கள், சமுதாயத்தின் உயர்ந்த அம்சங்களைப் போற்றுபவையாகவும் பண்பாட்டை விளக்குபவையாகவும் உள்ளன.

உலகின் பல்வேறு பகுதிகளிலும் மக்களிடம் பழமொழிகள் இன்றும் காணப்படுகின்றன. பழமொழிகள் அறிவுரையாகவும், அறிவுரையாக மட்டுமில்லாமல் வாழ்க்கைக்கு விளக்காகவும் உள்ளன எனலாம். இதனை மூதுரை மொழி, முதுமை, முன்சொல், முதுசொல், பழஞ்சொல் என்றும் கூறுவர். பழமொழி உலகுக்கு உணர்த்தும் உண்மையை சிறுவாக்கியத்தின் மூலம் சுருக்கிக் கூறுகிறது. பலரது அறிவையும், ஒருவரது நுண்ணறிவையும் அறியமுடியும் அறிவின் சுருக்கமே பழமொழி என்று கூறுவர். ஒரு புதிருக்கான பொருள் அடக்கி இருப்பது மறைபொருளினின்று விடுவிக்கப்பட வேண்டிய கதையே விடுகதையாகும். வினா எழுப்புவதான தன்மையிலும் விடுகதைகள் அமைகின்றன. கேள்வி விடுப்பவன் விடையை மனத்தில் வைத்துக் கொண்டு விடை கொடுப்பவனைத் திண்டாடச் செய்து அவனுடைய திண்டாட்டத்தைக் கண்டு மகிழ்ச்சி

வினா எழுப்புவதாகவும் விடையிருக்கும் தன்மையாகவும் விடுகதைகள் உள்ளன. அறிவு ஊட்டுவதும், சிந்தனையைத் தூண்டுவதும் விடுகதையின் குறிக்கோளாகும். விடுகதையைத் தொல்காப்பியம் 'பிசி' என்று குறிப்பிடுகின்றது.[12]

## பழக்க வழக்கங்கள்

பழக்க வழக்கங்கள் என்பதில் நம்பிக்கைகள், சடங்குகள், விழாக்கள், விளையாட்டுகள் போன்றவை வருகின்றன. தொன்று தொட்டு பிறர் வாழ்விலிருந்து பலவற்றைப் பழகிக் கொள்கின்றனர். வழங்கி வருவது வழக்கம் என்றால் பழகிக்கொள்வது பழக்கமாகும். மனிதன் ஒன்றினைப் பற்றிக் கொண்ட பின், அவனால் எளிதில் விட்டுவிட முடிவதில்லை. இதுவே காலந்தொட்டு பழக்க வழக்கமாகவந்து கொண்டிருக்கின்றன. இந்த பழக்க வழக்கமானது அவர் பிறந்த மண், சாதி, மதம், சமயம் ஆகியவற்றிக்கு ஏற்ப மாறுபட்டு விளங்குகின்றன.

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு அம்மக்களால், சமுதாயத்தால் பாதுகாக்கப்படுகின்றன. நம்பிக்கைகள் பெரும்பாலும் அச்ச உணர்வின் அடிப்படையாகத் தோன்றி காட்சியளித்தலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராத பொழுது, காரணம் கூற முடியாதபோது மனித மனமானது நம்புகிறது. அப்போது நம்பிக்கைகள்

உருவாக்கப்படுகின்றன. மனித வாழ்வில் பிறப்பு முதல் இறப்பு வரையுள்ள நம்பிக்கைகள் பலவாகும். இந்த நம்பிக்கைகள் தனிமனிதனையும், சமுதாயத்தினையும் வழிநடத்திச் செல்வனவாக உள்ளன எனலாம்.

சடங்கென்பது நிர்ணயிக்கப்பட்ட விரிவான நடத்தைகளின் வடிவமாகும். செயல், பழக்கம், சடங்கு ஆகிய மூன்றும் வெவ்வேறு வளர்ச்சிப்படியில் உள்ள ஒரே செய்தியாகும்.[18] ஒரு செயல் முதலில் தனி மனிதனால் பின்பற்றப்படுகிறது. காலப் போக்கில் மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு பொதுமைப்படுத்தப்பட்டுப் பல படிநிலை வளர்ச்சியைப் பெறுகின்றது.

நம்பிக்கைகளில் விழாக்களும் இடம் பெறுகின்றன. சமுதாயம் பல்வேறு சாதியப் பிரிவுகளாக வாழ்ந்த போதிலும் அச்சமுதாயத்தில் உள்ள அனைவரும் ஒன்றிணைந்து கொண்டாடுவது திருவிழாக்களாகும். இந்த விழாக்கள் பொழுது போக்குக்கு மட்டுமில்லாமல் மக்களின் பயன் கருதியும் நடத்தப்படுகின்றன. நாட்டுப்புற விழாக்கள் மூலம் மக்களின் பழக்கவழக்கங்கள், நாகரிகம் பண்பாடு முதலியனவை வெளிப்படுகின்றன.

பழக்க வழக்கங்கள் என்பதில் அவ்வப்பொழுது நிகழும் நாட்டுப்புற விளையாட்டுக்களும் இடம் பெற்றுள்ளன. நாட்டுப்புற மக்களின் நாகரிகத்தோடும், பண்பாட்டோடும்

விளையாட்டு இணைந்ததாக உள்ளது. விளையாட்டு வெளித்தூண்டல்களின்றி மகிழ்ச்சியூட்டும் செயல்களில் இயற்கையாக ஈடுபடுவதாகும் என்று கூறுவர்.

## கலைகள்

கலைகளை நிகழ்கலைகள், நிகழாகலைகள் எனப் பிரிக்கலாம். கிராமிய மக்களின் உணர்ச்சிகளின் உறைவிடமாய் மக்களைக்களிப்படையச் செய்யும் கலைகள் நாட்டுப்புறக் கலைகளாகும். மனமகிழ்ச்சி ஒன்றே கலைகளின் நோக்கமாக இருந்தது. மனித உணர்வுகளுக்குக் கலைகள் வடிவமாயிருந்தன. இதனைத் தொன்மக் கலை, நாட்டுப்புறக் கலை, செம்மைக் கலை எனப் பிரிப்பர். நிகழ் கலைகள் என்பதில் கிராமியக் கலைகள் இடம் பெற்றுள்ளன. கிராமியக் கலைகளில் ஆட்டமும், நடனமும் பல வகைப்படும். கிராமிய நடனத்தை ஆட்டம் என்று அழைப்பர். நாட்டுப்புற ஆட்டங்கள் மிகத் தொன்மையானவை நாட்டுப்புற மக்கள் ஆடல், நடனம் போன்றவற்றில் உணர்ச்சிகளையும், மெய்ப்பாடுகளையும் வெளிப்படுத்தியுள்ளனர். பரதக் கலைக்கு முன்னரே ஆட்டம், நடனம் என்ற இரண்டுமே செல்வாக்குப் பெற்றிருந்தன எனலாம்.

கட்டடக் கலை கலைகளில் ஒன்றாகக் கருதப்படுகிறது. நீளம், அகலம், பருமன் ஆகிய பரிமாணங்களால் கண்ணையும் கருத்தையும் கவர்வது கட்டக் கலையாகும். கட்டடம் கலையாக

வேண்டுமானால் காண்பவரின் கருத்தை கவர வேண்டும். கல், மண், மரம் போன்ற பொருட்களால் ஆக்கப்படுவது கட்டடக் கலையாகும். கட்டடக் கலையை உறைந்து போன இசைக் கலை என ஸ்லீகல் கூறியுள்ளார். கட்டடக் கலைக்கு மூன்று இயல்புகள் உண்டு எனக் கூறுகிறார்.[17]

## அறிவியல்

அறிவியல் என்பது மனிதன் தனது சிந்தனையை ஒருமைப்படுத்தி, இயற்கையை அனுசரித்துத் தேவைகளைப் பெறப் பயன்படுத்தும் ஒரு வியத்தகு கருவியாக உள்ளது. அந்தக் கருவிகளின் மூலம் அழகுணர்ச்சியும், தொழில் நுட்பமும் வெளிப்பட்டுள்ளது. நாட்டுப்புற மக்களின் மரபு வழியைக் கடைப்பிடித்துப் பொருட்களைத் தயாரித்தனர். இவர்களது தொழில்நுட்ப பொருள்களில் மரபுவழி கூறுகள் காணமுடிகின்றது. அவை மண்பாண்டம் செய்தல், துணி நெய்தல், தந்த வேலைப்பாடுகள், சங்கு, எலும்பு போன்றவற்றில் உருவம் செதுக்கல், சிலை செய்தல் மட்டுமல்லாமல், கலப்பை, மாட்டுவண்டி முதலியவற்றிலும் நாட்டுப்புற மக்களின் தொழில் நுட்பத்தை அறிய முடிகின்றது. இவற்றை போலவே நாட்டுப்புற மக்களிடத்தில் மருத்துவம் தொடர்பான அறிவியல் செய்திகளும் அறிந்துவைத்துள்ளனர்.

## விலங்குகளிடம் இருந்து அறிந்த அறிவியல்

உலகியல் வழக்கில் ஆதிமனிதன் மூலிகைகளையும் அவற்றின் மருத்துவத் தன்மைகளையும் அறிந்துக்கொண்ட பாங்கு, தன் அனுபவம், சுற்றுப்புறத்தை ஆராய்தல் போன்ற அனுபவங்களின் அடிப்படையில் ஆனது. இவ்வாறு மனிதன் தன் அனுபவத்தாலும் சுற்றுப்புறத்திலுள்ள விலங்குகளின் வழக்கங்களைக் கண்காணித்தலும் பல மருத்துவச் செய்திகளை அறிந்துகொண்டான். 'நோயுற்ற நாய்கள் குடல்புழுவை வெளிக்கொண்டு வர புல்லைத் தின்றதும் பாம்புக் கடியுண்ட கீரிப்பிள்ளைகள் நச்சு நீங்க மூலிகைகளை மென்றுதின்றதும் ஆதிமனிதனுக்கு மூலிகை அறிவை ஊட்டிய பாடங்கள் என்று இரா. குமாரசுவாமி குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர் அதர்வண வேதத்தில் பறவைகளும், பாம்புகளும், கீரிகளும், பன்றிகளும் தம் மூலிகை அனுபவங்களை மனிதனுக்கு புகட்டுவதாகப் பல சுலோகங்கள் காணப்படுவதாகவும்[20] குறிப்பிடுகின்றனர்.

மனிதன் தனிமனித நிலையிலின்று மாறி, சமுதாயமாகக் கூடி வாழத் தலைப்பட்ட நாளில் உலகில் பல நாகரிகங்கள் தோன்றின. மனித இன வாழ்வோடு இணைந்து தோன்றிய மருத்துவமும் அவ்வந்நாகரிகங்களோடு தன்னைப் பிணைத்துக்கொண்டு, பல்வேறு மருத்துவ முறைகளாக வளர்ந்தது. அவ்வகையில் உலகில் தோன்றிய தொன்மையான மருத்துவ முறைகளுள் ஒன்று சித்த மருத்துவம் என்னும் தென்னிந்திய மருத்துவமுறை என்று கூறுவர்.

பண்டைய நாகரிகங்களுள், தம்முடைய தொன்மையானது இன்றுவரை நின்று நிலவுவன சிலவேவாகும். பிறவெல்லாம் அவ்வக் காலத்திலேயே அழிந்தும் பின்வந்த நாகரிகங்களின் கலப்பில் தம்மை இழந்து உருமாறியும் போயின என்றும் கூறுவர். அவ்வந்நாகரிங்களின் நிலைபேற்றுக்கும் அழிவிற்கும் ஏற்ப, அவற்றின் மருத்துவமுறைகளின் வளர்ச்சியும் முதலாகவும் அமைந்தன. அந்நாகரிகத்தின் அழிவில் தானும் முடிவுற்றது. கிரேக்க மருத்துவமுறை, அவர்தம் நாகரிகத்தோடு முடிவுறாது, பின்வந்த உரோமானிய நாகரிகத்திலும் தொடர்ந்து, அதன்பின் ஐரோப்பிய மற்றும் அராபிய நாகரிகங்களால் பின்பற்றப்பெற்று, இன்று முறையே அலோபதி, யூனானி என்ற இருபெரும் மருத்துவ முறைகளாக வளர்ந்துவிளங்குகின்றது.[21]

இவ்விரு முறைகளினின்றும் வேறுபட்டு, தோன்றிய நாள்தொட்டு இன்றுவரை தொடர்ந்த வளர்ச்சியுடன் விளங்குகின்ற மருத்துவ முறைகளும் உள. சித்தமருத்துவம், சீனமருத்துவம், ஆயுர்வேத மருத்துவம் என்பன இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. இவற்றுள், சீனநாட்டின் பாரம்பரிய முறையாக விளங்குவது சீனமருத்துவம். ஏனைய இரண்டு முறைகளும் இந்தியாவில் வழங்கும் தொன்மையான மருத்துவ முறைகளாம். இவற்றுள் ஆயுர்வேதம், வட இந்தியாவில் தோன்றி வளர்ந்த மருத்துவ முறையாக விளங்கும் சித்தமருத்துவம், தென்னிந்தியாவில் - சிறப்பாகத் தமிழ்நாட்டில் முதல் முறையாக

கால்பதித்தன என்று கூறலாம். அதன் காரணமாகச் சித்த மருத்துவம், 'தமிழ் மருத்துவம்' என்னும் காரணப் பெயராலும் அழைக்கப் பெறுகின்றது. எனினும், 'சித்தமருத்துவம்' என்றே இதன் பெயர் வழக்கில் இன்றுவரையும் நிலைத்துவருகின்றது.

### சித்தர் - விளக்கம்

பண்டைத் தமிழகத்தில் நன்னெறியில் ஒழுகிய சான்றோர் பலர் வாழ்ந்திருந்தனர். அவர்கள் தம் இயல்பாலும் ஒழுக்கத்தாலும் செயலாலும் மக்களின் அன்றாட நடைமுறை வாழ்விலிருந்து வேறுபட்டுத் தன்மையராய், பல்வேறு குழுக்களாக விளங்கினர். அப்பல்வேறு குழுக்களில் ஒரு குழுவினரே 'சித்தர்' என்று கூறுவர்.

சித்தர்களை மாதவர், தேவர், வானத்தோர், வேதவர், பித்தர், இருடி, முனியோகி முதலான பிற பிரிவினருடன் இருந்தனர் என்று கூறுவர்.[22]

அவர்களைச் சமயநிலையில் பக்தரோடு வைத்துத் தேவாரம் குறிப்பிடுகின்றது.[23] பிங்கல நிகண்டு சுட்டும் வானோர் பதினெண்மருள் 'சித்தர்' இரண்டாம் நிலையில் குறிப்பிடப்படுகின்றனர்.[24] இவ்வாறு அவர்கள் பல்வேறு பிரிவினருள் ஒருவராகக் குறிப்பிடப்பெற்றாலும் இருடி, முனி என்ற இருபிரிவினரிடையே பெரிதும் ஒருங்கிணைத்துப் பேசப்படுகின்றனர். இம்மூவரையும் 'பேரறிவாளர்' என்ற

விரிவில் வைத்துக் குறிப்பிடுவர்.[25] இவர்களுள் இருடி என்பார் புதியன கண்டு உரைப்பவர் என்றும், முனி என்பார் 'உலகியல் உணர்வுகளை வெறுத்தொதுக்கிய வாழ்க்கையராய்ச் சமுதாயத்தை நன்னெறிப்படுத்த முயல்பவர்' என்றும் விளக்கம் கூறுவர்.[26] ஆனால் சித்தர் பற்றிச் சுருக்கமான தெளிவான வரையறை இல்லை என்று கூறலாம். இவர்களைப் பற்றிப் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன என்று கூறுவர்.

சித்தர்கள் என்றால் சித்தி பெற்றவர்கள், பேறு பெற்றவர்கள், வீட்டின்பம் அடைந்தவர்கள் என்று கலைக் களஞ்சியம் குறிப்பிடுகின்றது.[27] கடவுளைக் காண முயல்பவன் 'பக்தன்', கண்டு தெளிந்தவன் 'சித்தன்' என்பார் தெ.பொ.மீ.[28] பக்தி நெறியின்று வேறான நெறியில் கடவுளைக் கண்டு தெளிந்தவர் சித்தர் என்று மு. அருணாசலம் கூறுகின்றார்.[29] இறைமையடைந்தவன் சித்தன், அவன் செயல் சித்து' என்பார் டாக்டர் இரா. மாணிக்கவாசகம்.[30] 'சித்தத்தைச் சிவன்பால் செலுத்திச் சிந்தனையில் மூழ்கச் சித்தவிகாரம் ஒடுங்கி ஆன்ம சக்தி எழும் என்றும், இவ்வான்ம சக்தியின்று எழுவதே 'சித்து' என்றும், இச்சித்துக்கள் கைவரப்பெற்றவர்களே சித்தி பெற்றவர்கள் சித்தர்கள் என்றும் குறிப்பிடுகின்றார் திரு.வி.க.[31]

'உலகில் வாழும் நிலையிலேயே சூக்கும உடலுடன், பரமபொருளோடு ஒன்றி வாழ்தலாகிய முத்திநிலைபெற்றவனே சித்தன்' என்பார் ந. அருணாசலக் கவுண்டர்.[32] 'சித்தர்கள் மனித

இயல்பைக் கடந்தவர்கள், வயது மற்றும் மக்களுக்குரிய இயற்கை விதிகளுக்குக் கட்டுப்படாதவர்கள்' என்பார் நீ. கந்தசாமிப் பிள்ளைக.[33] சித்தர்களைச் 'சித்து' எனப்பெறும் தெளிந்த ஞானம் உடையவர்கள் என்றும், 'சித்தி' எனப்பெறும், யோகத்தால் உயர்ந்த நிலையைப் பெற்றவர்கள் என்றும் இருநிலைகளில் விளக்கம் தருகிறார் மு.வை. அரவிந்தன்.[34] சி.கோ.தெய்வநாயகம் சித்தர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, நிலையற்ற மானுட வாழ்வில் மானுடராய்ப் பிறந்தும், மெய் வருத்தி, வாழ்வின் நிலைப்பினை உணர்ந்தவர்கள் அறிவுதான் கடவுள் என்ற கோட்பாட்டில் நின்றவர்கள் என்று கூறுகின்றார்.[35]

மேற்கண்ட கருத்துகளேன்றி, உலகியலைத் துறந்தவர்கள், உலக நடப்புக்கு மாறானவர்கள், சித்தாடுவதில் வல்லவர்கள், அட்டமா சித்தி பெற்றவர்கள், இரசவாதத்தில் வல்லவர்கள், யோகசித்தி பெற்றவர்கள் என்று பலவாறு விளக்கங்கள் தரப்படுகின்றன.[36]

சித்தர்தம் பாடல்களினின்று கிடைக்கும் அகச்சான்றுகள் அவர்களைப் 'பாசம் முதலானவைகளை நீக்கி, ஆன்மாவை இறைவனோடு ஒன்றச் செய்யும் சாயுச்சிய நிலையை எய்தியவர், கர்ம வினைகளை நீக்கியவர், உடம்பை நிலைபெறச்செய்து, சுக்கிலத்தனைக் கட்டி, உடம்பில் உறையும் - குண்டலியாகிய வாலை சக்தியை - பராபரியைப் போற்றியும் வழிபடுவர். சாத்திரத்தை எரித்தவர் என்று பல நிலைகளில் குறிப்பிடுகின்றனர்.[37]

சித்தர் பற்றிக் கூறப்பெறும் மேற்கூட்டிய பல்வேறு கருத்துகளையும் ஒரு சேர நோக்கும்போது, சித்தர் பற்றிய தெளிவான விளக்கம் கிடைக்கின்றது. வாழும் காலத்திலேயே ஆன்மாவை இறைவனோடு ஒன்றச் செய்தலாகிய குறிக்கோளை எய்தியவர் சித்தர். அக்குறிக்கோளை அடைய அவர்கள் உடலையே கருவியாகக் கொண்டு அறிவுநெறியில் நின்றனர். ஆன்மாவை இறைவனோடு ஒன்றச் செய்தல் மனிதப்பிறவிக்கே வாய்க்கும் என்றும், இப்பிறவியிலும் உயிர் உடலோடு கூடியிருக்கும காலத்திலேயே இப்போது கிடைக்கும் என்றும் ஆய்ந்து கண்டனர். எனவே, இவ்வுடலை இறைவன் குடிகொண்ட கோயிலாகப் போற்றினர். அலைபாய்கின்ற சித்தத்தை வென்று ஒடுக்கும் நிலையிலேயே ஆன்மாவைப் பரம்பொருளோடு ஒன்று சேர்க்கும் என உணர்ந்தனர். சித்தத்தை வெல்ல அச்சித்தத்தைச் சிவன்பால் செலுத்தினர், யோகப் பயிற்சியை மேற்கொண்டனர். சுக்கிலத்தைக் கட்டல், பாசம் முதலிய மலங்களை நீக்கல் முதலான செயல்களால் உடலை நிலைநிறுத்தவும், மனத்தை ஒருநிலைப்படுத்தவும் வழிகண்டனர். இத்தகைய கடின முயற்சிகளால் சித்தத்தை வென்று ஒடுக்கினர் உடலின்கண் நிலைபெற்றிருக்கும் 'குண்டலி' என்னும் தெய்விக சக்தியை ஆறு ஆதாரங்களையும் கடந்து, மேலெழுப்பிப் புருவநடுவில் நிறுத்தினர். அதன்மூலம் உச்சியினின்று ஒழுகும் மாறா மதியமுதம் எனும் அமுதை

உண்டனர். அந்நிலையிலேயே ஆன்மாவை இறைவனோடு ஒன்றச்செய்தனர். இயற்கையைக் காட்டிலும் பேராற்றலைக் கைவரப்பெற்றனர்.

பெறற்கரிய இப்பேறு வாய்த்தற்குக் காரணமான உடலை மெய்யென்று கண்ட சித்தர்கள் இவ்வுடலைப் பொய்யென்று கூறும் சாத்திரங்களை வெறுத்தனர். உடல்வழிப் பெறும் இன்பங்களைக் கருதாமையால், உலக நடப்புக்கு மாறானவராகக் கருதப்பெற்றனர். அழியக் கூடிய உடலை அழியாமல் நிலைநிறுத்தி இயற்கையை வென்ற நிலையில், பல அரிய ஆற்றல்களை கைவரப்பெற்று விளங்கினர். அவ்வாற்றல்களே 'அட்டமா சித்தி' எனப்பெறும் எண்வகைப் பேறுகளாம். அவை, அணிமா, மகிமா, லகிமா, கரிமா, பிராத்தி, பிரகாமியம், வசித்துவம், ஈசத்துவம் என்பவாகும். எனினும், அவர்கள் இச்சித்துக்களில் அகமகிழாது, இவற்றுக்கு மேலான இறைமைப் பேற்றிலேயே மனமொன்றி விளங்கினர்.

'சித்தர்' பற்றிப் பல்வேறு கருத்துகளைக் கூறியுள்ள அனைவருமே 'சித்தர்' எனும் சொல்லுக்கு விளக்கம் கூறும் போது சித்தம், சித்தி, சித்து என்ற மூன்று அடிச்சொற்களையே கொண்டு முறையே சித்தத்தை ஒடுக்கி வென்றவர். சித்தி பெற்றவர், சித்து உடையவர் என்றெல்லாம் விளக்கம் தருவர். இவற்றுள் 'சித்தம்' என்பது சிந்தை, மனம், மூலம், அறிவு அந்தக்கரணங்கள் நான்கனுள் என்றெல்லாம் பொருள் தரும். 'சித்தி' என்பது

பெறுதற்கரிய பேறு, தெளிந்த ஞானநிலை, ஆன்மா இறைவனோடு ஒன்றிய சாயுச்சிய நிலை, யோகத்தால் பெறும் உயரிய நிலை என்ற பொருள்களைக் குறிக்கும் 'சித்து' என்ற சொல் அரிய சக்திகள் கைவரப்பெற்ற நிலையைக் குறிக்கும்.[14] எனினும், 'சித்தி, சித்து' என்ற இரண்டு சொற்களுமே ஏறக்குறைய ஒரே பொருளிலேயே கையாளப்பெற்றன. எனவேதான், அரிய சக்திகளாகிய எண்வகைச் சித்துகளை 'அட்டமா சித்தி' என்பதோடு, சித்தி என்ற சொல் குறிக்கும் ஞானநிலை என்னும் பொருளைச் சித்து என்ற சொல்லிற்கு வழங்கும் நிலையும் வழக்கில் உள்ளது எனலாம்.

மேற்கண்ட மூன்று நிலைகளையும் சித்தர் வாழ்வியலோடு பொருத்திக் காண்போமாயின் இம்மூன்று உடனிகழ்ச்சிப் பொருள்களாக விளங்குதல் தெளிவு பெறுகின்றன. சித்தத்தை வென்ற நிலையிலேயே சித்தியாகிய ஞானநிலை கிட்டும், சித்தி பெற்ற நிலையிலேயே சித்தி கைவரப்பெறும். இம்மூன்று நிலைகளையும் உற்றுநோக்க, சித்தத்தை வென்றொடுக்குதல் ஒரு நிலையாகவும், சித்தி பெறுதலும், சித்து கைவரப்பெறுதலும் மற்றொரு நிலையாகவும் விளங்குதல் புலனாகும். உடலை வருத்தி அரிதின் முயன்று சித்தியை வென்று ஒடுக்குதல் பண்புநிலை, அதன் விளைவாகச் சித்தி பெற்றுச் சித்து உடையராதல் பயனிலை. எனவேதான் சித்தருக்கு விளக்கம் தருவோர், பண்பை நோக்கிய நிலையில் சித்தத்தை வென்றவர்

என்றும், பயனை நோக்கிய நிலையில் சித்தி பெற்றவர். சித்து உடையவர் என்றும் பொருள் கூறுகின்றனர். எனினும் சித்தம், சித்தி, சித்து என்ற மூன்று சொற்களுக்கும், 'சித்' என்பதே வேர்ச்சொல்லாக அமைந்துள்ளது. இதன் பொருள் அறிவு, பேரறிவு என்பதாகும்.[39] அவ்வகையில் மேற்கண்ட மூன்றனுள் 'சித்தம்' என்னும் சொல்லே 'சித்' என்பதற்குரிய அறிவு எனும் பொருளை உடையதாக விளங்குகின்றது. ஏனைய இரண்டும் அவ்வறிவின்வழிப் பெற்ற நிலையையே உணர்த்துகின்றன. எனவே சித்தத்தை வென்று அதன்மூலம் ஆன்மாவை இறைவனோடு ஒன்று செய்தவர் என்ற பொருளில் சித்தம் என்ற சொல்லின் அடிப்படையிலேயே - இச்சித்தர் எனும் சொல் வழங்கப் பெற்றிருத்தல் வேண்டும் என்று கருத இடமுள்ளது.

## லக்கியத்தில் சித்தர்

சித்தர் என்னும் வழக்கு கி.பி. ஐந்தாம் நூற்றாண்டிலிருந்தே இலக்கியத்தில் வழங்கக் காண்கிறோம். அதற்குமுன், இச்சொல் இலக்கிய வழக்கிலிருந்ததாகச் சான்றில்லை. ஆனால் இதற்கு இணையான சொற்களாகிய நிறைமொழிமாந்தர், அறிவர் என்ற சொற்கள் வழங்கியுள்ளன.[40] இவற்றுள் 'நிறைமொழிமாந்தர்' என்ற சொல் பொதுநிலையில் சான்றோர், அறவோர், அந்தணர், முனிவர் முதலான அனைவரையும் குறிக்க, அறிவர் என்ற சொல் ஒரு குறிப்பிட்ட கூட்டத்தாரைக் குறிக்கும் சொல்லாக விளங்கப்பெறுகின்றது.

மன்னன் ஒருவன் புறத்தே பொருது பெற்ற வெற்றிக்கு இணையாக, இவ்வறிவர் தமக்குரிய நெறியில் நின்று பெற்ற முழுதுணர் அறிதிறம் 'அறிவன் வாகை' என்று தொல்காப்பியத்தில் போற்றிப் பெறுகின்றதை,

'மறுவில் செய்தி மூவகைக் காலமும்
நெறியில் ஆற்றிய அறிவன் தேயமும்'[11]

என்று குறிப்பிடுவதிலிருந்து அறிவன் என்பது முக்காலத்தை அறியும் சித்தைப் பெற்றவர்கள் சித்தர்கள் என்பது புலப்படுகிறது. அறிஞர் க. வெள்ளைவாரணர், தொல்காப்பியருக்கு முன் வாழ்ந்தவராகக் கூறப்பெறும் அகத்தியரும், தொல்காப்பியருக்கு பின்வாழ்ந்த திருமூலரும் அறிவன் தேயத்து அனைநிலை வகையினர் என்ற நச்சினார்க்கினியர் கூற்றை எடுத்துக்காட்டி, இவ்விருவரும் சித்தர் கணத்துள் முதன்மையானவராகப் போற்றிப்பெறுதலைச் சுட்டி, அறிவரும் சித்தரும் ஒருவரே என்பார்[12] சித்தர்களுக்குப் பஞ்ச பூதங்கள் ஏவல் செய்யும் என்பதை,

'நிலம் தொட்டுப்புகார் வானம் ஏறார்
விலங்கிடு முந்நீர்க் காலிற் கொள்ளார்'[13]

என குறுந்தொகை பாடல் வரிகளில் அரிய சக்திகள் கைவரப்பெற்றார் அக்காலத்தில் இருந்தமையை எதிர்முகமாகச் சுட்டுகின்றது. சித்தர்களின் ஆற்றலை மணிமேகலை,

'நிலத்திற் குளித்து நெடுவிசும் பேறிச்
சலத்திற் திரியுமோர் சாரணன்'[14]

என்று குறிப்பிடுகிறது. ககனம் என்றால் வானுலகம் அடையும்வழி என்றும், காயசித்தி என்றால் உடலை நரை,

திரையின்றி அதிக நாள் இருக்கச் செய்யும் தன்மை என்றும் கூறுவர். இவைகள் சித்துகளால் விளைபவை என்பதைக் குற்றாலக் குறவஞ்சியில்,

'ககன சித்தர் வந்து வந்து காய சித்தி விளைப்பர்'[45]

என்ற திரிகூடராசப்பக் கவிராயரின் பாடலிலிருந்து புலப்படுகிறது. சித்தர்களின் செயலையும் சித்தர்கள் தமிழ்நாட்டில் வாழ்ந்தனர் என்பதையும், மகாகவி பாரதியார்

'செய்யுறு காரியம் தாமனறிச் செய்வார்
சித்தர்களா மென்றிங் கூதோட ர சங்கம்'

'செத்தவர் தம்மை எழுப்பித் தருகின்ற சித்தர் பிறந்த தமிழ்நாடு'[46] என்று தன் கவிதையில் குறிப்பிட்டுள்ளார்.

தொல்காப்பியர் உலக உயிர்களைப் பற்றிக் கூறும்பொழுது மனிதப்பிறவியை, 'ஆறாம் அறிவே அவற்றோடு மனனே' என்று சுட்டுகிறார்.[47] ஆறாம் அறிவாகிய மனத்தைப் பெற்றவர்களே மக்கள் என்பது அவர் கருத்து. எனவே, சிந்திக்கும் ஆற்றல் பெற்ற மனத்தை உடையவர்கள் மனிதரெனப்பட்டனராக அம்மனமாகிய அறிவைப் பொறிகளின்வழிச் செலுத்தாது ஒரு நிலைப்படுத்தி வென்று ஒடுக்கிய நிலையில் முழுதுணர் அறிவு வாய்க்கப் பெற்றவர் 'அறிவர்' எனக் கொள்ளுதல் பொருந்தும். இவ்வாறு கொண்டால், சித்தத்தை வென்றவர் சித்தர் என்ற பொருளோடு முற்றிலும் பொருந்துகின்றது. எனவே மனமாகிய ஆறாமறிவை வென்ற சான்றோர் அறிவர் எனப் பெற்றனர் என்பதும், இவர்களே பின்னாளில் சித்தர் என்று

அழக்கப்பெற்றனர் என்பதும் பெறப்படும். சங்க காலத்திற்குப்பின் 'அறிவர்' என்ற வழக்கு இல்லாமையும் ஈண்டு நோக்கத்தக்கது.

மேற்கண்ட சான்றுகளால் சித்தர்கள் சங்ககாலத்திலேயே வாழ்ந்தமை தெளிவு. மேலும் அலெக்சாண்டர் காலத்து கிரேக்க வரலாற்றாசிரியர்கள், அரிய சக்திகள் கைவரப்பெற்ற சித்தர் கூட்டத்தார் இந்தியா முதல் எகிப்து வரை வாழ்ந்திருந்ததாகக் குறிப்பிடுகின்றனர்.[18] இக்கருத்தையே சான்றாகக் கொண்டு, பண்டைய தமிழகமான கடலுக்குள் மூழ்கிய லெமூரியா கண்டத்திலேயே சித்தர்கள் வாழ்ந்திருக்கக்கூடும் என்றும், அக்காலத்தில் தமிழகத்தின் தென்முனை முதல் எகிப்து வரை ஒரே நிலப்பரப்பாக விளங்கியதாகக் கருதப்படுவதால் இங்கிருந்தே சித்தர்கள் எகிப்து வரை பரவி வாழ்ந்திருக்கக்கூடும் என்றும் நீ. கந்தசாமிப் பிள்ளை கூறுகின்றார்.[19] சிந்துவெளியில் கிடைக்கும், யோகநிலையில் காணப்பெறும் சிவன் கோலம், அக்காலத்திலும் சித்தர் வாழ்ந்திருக்கக் கூடும் என்று கருத இடம் தருகிறது. சிவனையே சித்தன் என்பது சைவசித்தாந்தம்.[20]

சித்தர்கள் காலம், இடம், சமயம் கடந்தவர்கள் எனினும் தமிழ்மொழியுடனும் தமிழ் நாகரிகத்துடனும் பெரிதும் தொடர்புடையவராக விளங்கினர். எனவே, இவர் தோற்றம் பண்டைத் தமிழகமே என்று கொள்வதில் இழுக்கொன்றுமில்லை என்று கூறலாம்.

## சித்தர்கள் எண்ணிக்கை

சித்தர்களைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகளோ ஆவணங்களோ கல்வெட்டுகளோ எதுவுமே காணக்கூடியதாக இல்லை. இந்நிலையில் சித்தர்கள் எத்தனைபேர்கள் என்பதில் பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. திரேதாயுகத்தில் ஆயிரம்பேர், துவாபார யுகத்தில் ஐந்நூறு பேர், கலியுகத்தில் மூவாயிரம் பேர்[51] சித்தர்கள் வாழ்ந்ததாகக் கூறப்படுகிறது.

சித்தர் பதினெண்மர் என்று கூறுதல் தமிழகத்தில் ஒரு மரபாகவே பின்பற்றப்படுகிறது. ஆனால் வழக்கில் நூற்றுக்கும் மேற்பட்ட சித்தர் பெயர்கள் கூறப்படுகின்றன. அவற்றுள் மிகவும் பிற்காலத்தவரான இராமலிங்கர் முதலானோர் பெயர்களும் உள்ளன. தொடக்கத்தில் பதினெண் சித்தர்களே இருந்திக்கலாம் என்றும் பின்னர் அவர்களோடு பின்வந்தவர்களின் பெயர்களும் சேர்க்கப்பெற்ற நிலையில் அப்பதினெண்மர் யார் என்பதில் குழப்பம் ஏற்பட்டிருக்கக்கூடும் என்பர் ஒரு சாரார்.[52] அதற்கேற்ப, சித்தர் நூல்கள் பதினெண்மர் பெயர்களைக் கூறுகின்றன. தில்லையில் திருமூலர், அழகர் மலையில் இராமதேவர், அனந்த சயனத்தில் கும்பமுனி, அருணையில் இடைக்காம் வைத்தீஸ்வரன் கோயிலில் தன் வந்தரி, எட்டுக்குடியில் வான்மீகர், மருதாசலத்தில் பாம்பாட்டி, மாயுரத்தில் குதம்பை, ஆரூரில் கமல முனி, பழநியில் போகர், பரன்குன்றில் குதம்பை, திருப்பதியில் கொங்கணர், இராமேசுரத்தில் பதஞ்சலி, காசியில்

நந்தி, கருவூரில் காங்கேயர், பொய்யூரில் கோரக்கர் சோதிரங்கத்தில் சட்டமுனி, மதுரையில் சுந்தரானந்த தேவர்[53] எனப் பதினெண்மர் சித்தரெனக் குறிப்பிடப்படுகிறது. ஆனால் இப்பெயர்கள் நூலுக்கு நூல் மாறுபட்டு விளங்குகின்றன. எனவே, சித்தர் பதினெண்மரா அன்றி மிகப் பலரா என்பது சிக்கலான வினாவாக உள்ளது.

பன்னிரு ஆழ்வார்கள், அறுபத்து மூன்று நாயன்மார்கள் என்பன போல பதினெண் சித்தர்கள் என்னும் மரபு நீண்ட காலமாக இருந்து வருகிறது. பதினெண்வகைக் குணங்களை உடைய மனித உடலுக்கு மருத்துவம் செய்த சித்தர் என்ற தொடரே நாளடைவில் மருவி, 'பதினெண் சித்தர்' என்று வழங்கப்பெற்றதாக மற்றுமொரு கருத்து கூறப்படுகிறது.[54] எவ்வாறாயினும் சித்தர் பதினெட்டுக்கும் மேற்பட்டவர்கள் என்பது தெளிவு. மேலும், நவநாத சித்தர் என்றொரு பிரிவும் வடநாட்டில் வாழ்ந்ததாக வழக்கிலுள்ளது. தென்னாட்டுக் கோரக்கர் முதலானோர் பெயர்களும் அந்நவநாத சித்தர் பட்டியலில் உள்ளது.[55]

### சித்தர்களின் காலம்

தென்னாட்டில் தோன்றிய சித்தர்கள் நவநாதச் சித்தர்கள் என்றும், மூல வர்க்கச் சித்தர்கள் என்றும் அழைக்கப்பட்டனர் என்பர். மூலவர்க்கச் சித்தர்கள் தோன்றுவதற்கு முன்னால்

இருந்தவர்கள் நவநாதச் சித்தர்கள் ஆவர். சத்திய நாதர், ஆதிநாதர், சகோதரநாதர், அநாதிநாதர், வகுளிநாதர், மதங்கநாதர், கடேந்திரநாதர், மச்சேந்திரநாதர், கோரக்க நாதர் ஆகியவர்கள் நவநாதச் சித்தர்களாவர். திருமூலர், நந்திதேவர், அகத்தியர், குதம்பை, பாம்பாட்டி, சட்டைமுனி, காலாங்கி, புலிக்கீசர், புன்னாக்கீசர், அகப்பேய், பூனைக்கண்ணனார் ஆகியோர் மூலவர்க்கச்சித்தர்கள் ஆவர். சித்தர்களின் காலத்தை கி.பி. பதினான்காம் நூற்றாண்டு முதல் பதினெட்டாம் நூற்றாண்டு வரை கூறுவது மரபாய் உள்ளது. சித்தர்கள் பதினெட்டு என்பது பொது மரபு. ஆனால் இன்று ஐம்பதுக்கும் மேற்பட்ட சித்தர்களின் பெயர்கள் கிடைக்கின்றன.[16] சித்தர்கள் பாமர மக்களின் மனதில் இடம்பெற்றிருந்தார்கள். இவர்களின் அற்புதச் செயல்கள் சாதாரண மனிதர்களைக் கவர்ந்திருக்கின்றன. சித்தர்களின் சமாதிகளைத் தொழுதால் நோய் நீங்கும். நல்லவை நடக்கும் என்ற நம்பிக்கை இன்றும் உள்ளது.

### சித்தரும் மருத்துவக்கலையும்

சித்தர்கள் உடலை வருத்தி அறிவின் துணைகொண்டு மனத்தை வென்று ஒடுக்கி ஆன்மாவை இறைவனோடு ஒன்றிணைந்த பேற்றினராக மக்களிடமிருந்து வேறுபட்டு விளங்கினர். எனினும், மக்கள் சமுதாயத்தினின்று விலக்கிச் செல்லாமல் மக்களை நன்னெறிப்படுத்தவும், சமுதாயத்தைச்

சீர்திருத்தவும் முனைந்தனர். மேலும், 'யாம் பெற்ற இன்பம் பெறும் இவ்வையகம்' என்ற உயரிய நோக்கில் நின்று தாமறிந்தவற்றையெல்லாம் சமுதாயமும் பெற்றுப் பயனடையும் வண்ணம் எடுத்துரைத்தனர். துறைதோறும் புதியன பல கண்டுரைத்தனர். மருத்துவம், சோதிடம், சமூகவியல், தத்துவம் முதலான பல துறைகளிலும் அவர்கள் ஆற்றிய பணிகள் மிகுதியானவை. அவற்றுள் குறிப்பிடத்தக்க துறையாக விளங்குவது மருத்துவம் ஆகும்.

சித்தர்கள் சித்தி பெறுவதற்கு உடலைப் போற்றிக் காத்தல் இன்றியமையாதது. இவ்வுடல் அழியக் காரணமாயிருப்பவை பிணி, மூப்பு, சாக்காடு என்ற மூன்றுமே ஆகும். எனவே, இம்மூன்றையும் வெல்ல அவர்கட்கு மருத்துவம் தேவையாயிற்று. சித்தர்கள், சித்தியாகிய பேறு பெறுவதற்கு மருத்துவத்தைத் துணைகொண்டமையை, சாம்பசிவம்பிள்ளை, 'மூச்சை அடக்கிப் பிடித்து மூலக்கனலாகிய குண்டலி சக்தியை எழுப்பி, மணி மந்திர மருந்துகளின் உதவியால் மாறா மதியமுதம் உண்டு நரைதிரை மூப்பு பிணி சாக்காடு ஆகிய இவைகளை அறியாது நித்திய உடம்பைப் பெற்றவர்கள்'[17] என்று விளக்குவார்.

'யோகப் பயிற்சியால் எழும் மூலக்கனலை மனிதன் ஆளத் தொடங்கும்வரை, உடல் கூட்டால் எழும் நோய்த் தொல்லைகளினின்று உடலைக்காக்கத் தோன்றியதே மருத்துவம்' என்பார் கூற்றும் இவண் கருதத்தக்கது.[18]

'சித்தர்களும், பிறவிப் பயனைப் பெறவிடாமல் தடையாய் நிற்கும் பிணிகளிலும் மாந்தர்களிடம் கழிபேரிரக்கம் கொண்டவர்களாய் அந்நோய்களைத் தவிர்க்க மனங்கொண்டு, நோய்களைத் தடுக்கவும் தீர்க்கவும்வழி முறைகளை வகுத்துள்ளனர். அத்தகைய மருத்துவ முறையே சித்தமருத்துவம்'[59] ஆகும் என்ற கருத்து சித்தரால் தோற்றுவிக்கப் பெற்றதே மருத்துவம் என்ற கருத்தை வலியுறுத்துகின்றது. இதனை அரண் செய்யும் வகையில், சித்தர்கள் மரணத்தைத் தள்ளிப்போட மருத்துவத்தையும், இறப்பிலா நிலையடைய காயகற்பத்தையும் கண்டனர் என்றும்[60] இறைவனால் படைக்கப்பெற்ற இச்சரீரத்தைக் கெடாமல் காக்கவும் குறை உண்டானவிடத்து நிவர்த்திக்கவும் சித்தரால் படைக்கப்பெற்ற முறையே சித்தமருத்துவம்'[61] என்றும் கூறுவர்.

இக்கருத்துகளினின்று மாறுபட்டு, சித்தமருத்துவம் இறைவனால் உமாதேவிக்கு உபதேசிக்கப்பட்டதென்றும், உமை முருகனுக்கும், முருகன் நந்திக்கும் முறையே உபதேசித்தனராக, நந்தியால் சித்தர்கட்கு உபதேசிக்கப் பெற்றது என்றும் கூறுவது சித்தர் மரபாகும்.[62] மேற்கண்ட கருத்துகளை நோக்கும்போது சித்தமருத்துவமுறை, இறைவனால் படைக்கப்பெற்று உமை, முருகன் நந்தி முதலானோர் வழியே குரு-சீட மரபுப்படி சித்தர்களுக்கு ஓதப்பெற்றது.

சித்தர்கள் யோகப் பயிற்சியால் குண்டலினியை எழுப்பும்போது உண்டான உடல் சூட்டினால் ஏற்படும் நோய்த் தொல்லைகளினின்று தம் உடலைக் காக்க மேற்கொண்டது. நோய்களினின்று உலக உயிர்களைக் காக்க, சித்தர்களால் வகுக்கப்பெற்றது என்று குறிப்பிடுவர்.

தொடக்ககால மனிதன் தன் இயல்பாலும், அறிவாலும் சில மருத்துவமுறைகளை அறிந்திருந்தான் என்பது முன்னர்க் கூறப்பட்டது. தோற்றம் அறிய இயலாத ஒன்றைக் கடவுள் படைத்ததாகக் கூறும் மரபின் அடிப்படையிலேயே இப்பண்டைய மருத்துவமும் இறைவனால் படைக்கப்பெற்றதாகக் கூறப்பட்டது. 'பதினெட்டுச் சித்தர்கள்தாம் நம் நாட்டில் சித்த வைத்திய முறையை முதலில் கண்டவர்கள் என்று சொல்ல முடியாது. இவர்களுக்கு முன்பே வைத்தியமுறை வளர்ந்திருக்க வேண்டும். அதை வளர்த்த பேரறிஞர்கள் - சித்தர்கள் பலர் வாழ்ந்திருக்கக் கூடும். அவர்கள் பெயர் நமக்குத் தெரியவில்லை'[6] என்னும் கூற்று மருத்துவக்கலையின் தோற்றம் சித்தருக்கு முற்பட்டது என்பதை உணர்த்துகின்றது. எனவே, இதுகாறும் கண்டவற்றால் இயல்பாகத் தோன்றிய மருத்துவ முறையைச் சித்தர்கள் தம் அனுபவத்தின் பயன்கொண்டு, சித்தி பெற்ற நிலையில் தம் யோக, ஞான அனுபவங்களால் நெறிப்படுத்தினர். பல புதிய முறைகளைக் கண்டு, அக்கலையை மேலும் செம்மையுறச் செய்தனர் என்று கொள்ளுதல் பொருந்தும்.

எனவே, சித்தமருத்துவம் என்ற பெயர் சித்தரால் போற்றி வளர்க்கப்பெற்ற மருத்துவம் என்ற பொருளினது எனக் கொள்வதே ஏற்கும்.

## மருத்துவ வகைகள்

மக்கள் வாழும் இயற்கை சூழலின் வழியே உலகில் பல்வேறு பகுதிகளில் பல வகை மருத்துவ முறைகள் தோன்றியுள்ளன. அவை, அந்தப்பகுதி மக்களுக்கும், உணவுகளைப் பயன்படுத்தும் முறைகளுக்கும் ஏற்றவாறு அமைந்தன. சித்தவைத்திய சிரோன்மணி என்ற பட்டம் பெற்ற டாக்டர் துர்க்காதாஸ், எஸ்.கே. ஸ்வாமி என்பவர் 'உலகில் சித்த வைத்தியம், ஆயுர்வேத வைத்தியம், யுனானி வைத்தியம், அலோபதி வைத்தியம், ஹோமியோபதி வைத்தியம், நாட்டுப்புற வைத்தியம் என பலவகையாகப் பிரிக்கப்பட்டு பயன்படுத்தி வருகின்றன என்பார். அவற்றுள் மிகவும் தொன்மை வாய்ந்தது சித்த வைத்தியமாகும். மற்றெல்லா வைத்திய முறைகளை அவை எப்போது தோன்றியது என்று வரையறுத்துக் கூற முடியும். ஆனால் சித்த வைத்திய முறை எப்போது தோன்றியது என்று வரையறுத்துக் கூற முடியாது. சித்த வைத்திய முறை தமிழ்நாட்டில் வாழ்ந்து வந்த சித்தர் பெருமக்களால் உருவானது. அது பாரம்பரிய மரபு முறைப்படி பரவி வந்துள்ள வைத்தியமாகும்[64] என்பார். சித்த மருத்துவ முறையும் ஆயுர்வேத

வைத்திய முறையும் இமயம் முதல் குமரிவரையிலுள் இந்திய மக்களால் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. ஆகையால் இவற்றைத் தேசிய வைத்தியங்களாகக் கருதலாம் என்ற கருத்தும் நிலவி வருகிறது.

## ஆயுர்வேதம் வைத்தியம்

ஆயுர்வேத மருத்துவமுறை ஆரியர்களுக்குச் சொந்தமான மருத்துவம் என்றும், பிரம்மாவால் படைக்கப்பட்டது என்றும் கருத்துக்கள் நிலவி வந்தாலும் சித்த மருத்துவத்தைப் பின்பற்றி மிக எளிய முறையில் உருவாக்கப்பட்டது என்றும் கூறுவர். இதன் தோற்றம் கி.பி.எழுநூறு என்று கூறப்படுகிறது. மனிதனின் உடலில் காணப்படும் பொருட்களான வாயு, பித்தம், கபம் ஆகியவற்றின் அடிப்படையில் இம்மருத்துவமுறை அமைந்துள்ளது. மனிதன் உண்ணும் உணவில் குறை, மனத்தடுமாற்றம், அசுத்தம், பழக்கவழக்கம் இவற்றால் நோய் ஏற்படுவதாக இம்மருத்துவமுறை கூறுகிறது. இம்மருத்துவமுறையின் நோக்கம் உடலிலுள்ள நச்சுத்தன்மைகளைப் போக்குவதாகும். பொழுது விடியும் முன் எழுதல், முறையாகக் காலைக்கடன் முடித்தல், பல் முதல் உடல் உறுப்புகளைச் சுத்தமாக வைத்திருத்தல், ஆசனம், பிராணயாமம் செய்தல் ஆகியவை இம்மருத்துவ சிகிச்சையின்போது கடைப்பிடிக்க வேண்டியவைகடமைகள் ஆகும். மனிதனுடைய

உடல்நலத்தைப் பாதுகாத்து அவனுடைய ஆயுளை வளர்த்துக் கொள்ள வழிகாட்டிய மருத்துவம் ஆயுர்வேதம். ஆயுர்வேதம் நான்கு வேதங்களுள் ஒன்றான அதர்வண வேதத்தில் ஒரு பகுதியாக அமைந்தது என்பர். ஆயுர்வேதம் என்ற சொல்லுக்கு தமிழ் அகராதிகள் மருத்துவக் கலை என்று பொருள் கூறுகிறது.

## யுனானி வைத்தியம்

கிரேக்க, அரேபிய முறைகளின் இணைப்பு முறையே யுனானி எனப்படும். இம்மருத்துவமுறை முகம்மதிய அரசர்களால் இந்தியாவில் புகுத்தப்பட்டது. உடலின் தன்மையினை இரத்தம், சளி, பித்தம், சோர்வு ஆகிய நான்கு குணங்களாகப் பிரித்து நாடித் துடிப்பின் மூலம் அறிந்து மூலிகை, தாது உப்புக்கள் மூலம் சிகிச்சை அளிப்பதே யுனானி மருத்துவ முறையின் நோக்கமாகும். உயிரினங்களின் தசைச் சத்துக்கள், தாவர இனங்களின் வித்துக்கள் ஆகியவை மிகுதியாக சிகிச்சைக்குப் பயன்படுத்தப்படுகின்றன. இந்த யுனானி முறைக்கு வித்திட்டவர் ஹிப்போகிரேடஸ் என்றும், தொடர்ந்து நடைமுறைக்குக் கொண்டு வந்தவர் அபி-அலி சின்னா என்று கூறப்படுகின்றனர்.[61] இன்றும் நடைமுறையில் இம்மருத்துவத்தை மக்கள் பின்பற்றி வருகின்றனர்.

## ஹோமியோபதி வைத்தியம்

கி.பி. பதினெட்டாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் தோன்றியதாகக் கருதப்படும் இம்மருத்துவமுறை ஒரு கலப்புமருத்துவ முறை என்றழைக்கப்படுகிறது. ஹோமியோபதி வைத்திய முறை ஜெர்மன் நாட்டைச் சார்ந்த டாக்டர் சாமுவேல் ஹானிமேன் என்பவரால் கண்டுபிடிக்கப்பட்டது. முள்ளை முள்ளால் எடுக்கும் முறையே இதன் கோட்பாடு ஆகும். இம்மருத்துவ முறையில் மிகச்சிறிய அளவிலேயே மருந்து கொடுக்கப்படுகிறது. இம்மருந்துகள் இருக்கும் இடத்தில் வாசனை தரும். எப்பொருளும் வைக்கக்கூடாது. மேலும், இம்மருந்து உண்ணுகின்றவர் தேனீர், காபி போன்றவைகளை அருந்தக் கூடாது என்பர்.

## அலோபதி

அலோபதி மருத்துவம் முறையை ஆங்கில மருத்துவ முறை என்றும் கூறுவர். கடந்த இருநூறு ஆண்டுகளில் உலகில் விரைவாக வளர்ந்த மருத்துவம் அலோபதி மருத்துவ முறையாகும். இம்முறையே தற்போது அதிக அளவில் உலகெங்கும் பயன்படுத்தப்படுகிறது. முதல் முதலில் இம்மருத்துவமுறை கிரேக்க நாட்டில் அறிமுகப்படுத்தப்பட்டது, உடலைச் சோதனை செய்து, உடல் உறுப்புகளின் இயக்கத்திலும், அமைப்பிலும் ஏற்படும் மாற்றங்களைக் கொண்டு

மருந்து வழங்கப்படுதல், உடலின் நோய் எதிர்ப்புச் சக்தியை அதிகரித்தல், நோய் பரவாமல் தடுத்தல் ஆகியவையே இதன் நோக்கம். இன்று பெரும்பாலான நாடுகள் அலோபதி மருத்துவமுறையைப் பின்பற்றுகின்றன. இம்மருத்துவ முறையின் வளர்ச்சி, உடல் உறுப்பின் ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு துறையை ஏற்படுத்தியுள்ளது. அந்த அளவிற்கு நோயும், நோயின் தன்மையும் பெருகி உள்ளன. இம்முறையில் நோய்கள் உடனடிக் குணம் அடைவதாலும், அதிதீவிர நோய்ச் சிகிச்சையில் முதலிடம் வகிப்பதனாலும், அறுவைச் சிகிச்சை முறையினாலும், தற்காலத்தில் மிகச்சிறப்பான நிலையில் மனிதச் சமுதாயத்திற்குத் தொண்டாற்றி வருகிறது.

## அக்யுபஞ்சர்

இம்மருத்தவ முறை போகர் என்ற சித்தர் வர்மாணி என்ற வைத்திய முறையைக் கண்டுபிடித்தார். இவ்வர்மாணி என்ற வைத்திய முறையை சீனர்கள் அக்யுபஞ்சர், அக்குபிரஷ்ர் என்கின்ற பெயரில் பயன்படுத்துகின்றனர். இம்முறையில் நோயுள்ள இடத்தில் ஊசியால் குத்தி மருத்து செலுத்துதல் மூலம் குணப்படுத்தப்படுகிறது.

## சித்த மருத்துவம்

தமிழ்நாட்டு மக்களால் உருவாக்கப்பட்டதாகும். மேலும்

தமிழக மக்களால் பாதுகாக்கப்பட்டும் இன்று வரை பயன்படுத்தப்பட்டு வரும் மருத்துவ முறை சித்த மருத்துவ முறை. இறைவனால் படைக்கப்பட்ட மனிதனின் உடலைக் கெடாமல் பாதுகாக்கவும், நோய் ஏற்படும்போது குணமாக்கவும் சித்தரால் படைக்கப்பெற்ற முறையே சித்த மருத்துவம் என்று கருத்தப்படுகிறது. இம்முறை யோகா போன்ற இயற்கை மருத்துவ முறைகளைக் கொண்டது. 'உலகில் காணப்படும் மருத்துவ முறைகள் அனைத்திற்கும் முன்னோடியாக சித்த மருத்துவம் திகழுகின்றது. எனவே, சித்த மருத்துவம் தாய் மருத்துவம் என்று போற்றப்படுகிறது. சித்த மருத்துவ நூல்கள் தமிழில் மட்டுமே அதிகமாகக் காணக்கிடைப்பதாலும், சித்த மருத்துவமுறை பண்டை நாள் முதல் இன்றுவரை தமிழ் நாட்டிலேயே பயிலப்பட்டு வருவதாலும் சித்த மருத்துவத்தைத் தமிழ் மருத்துவம் என்றும் கூறலாம்.'[66]

## நாட்டுப்புற மருத்துவம்

நாட்டுப்புற மருத்துவத்தை வீட்டு வைத்தியம் நாட்டு வைத்தியம், நாட்டு மருத்துவம், வீட்டு மருத்துவம், கை மருத்துவம், கை வைத்தியம், பாட்டி மருத்துவம், பாட்டி வைத்தியம் என்ற பல்வேறு பெயர்களில் வழங்குகின்றனர். மக்கள் அன்றாடம் தம் வாழ்வில் கையாளும் மருத்துவ முறையாக நாட்டுப்புற மருத்துவம் இருந்து வருகின்றது. நாட்டுப்புற மக்கள்

தமக்குற்ற நோய்களைத் தீர்க்கக் கையாளும் மருத்துவ முறைகளை நாட்டுப்புற மருத்துவம் எனலாம். 'அதாவது அறிவியல் அடிப்படை ஏதுமின்றி சில குறிப்பிட்ட சாதியினராலோ, மரபுவழி மருத்துவராலோ, பூசாரிகளாலோ, பொதுமக்களுள் யாரேனும் ஒருவராலோ பரம்பரை பரம்பரையாக பின்பற்றப்பட்டு வரும் மருத்துவ முறையை நாம் நாட்டுப்புற மருத்துவம் என்று கூறலாம்.[67] இம்மருத்துவ முறைகளை செவி வழியாகவே அறிந்திருந்தனர் நாட்டுப்புற மருத்துவத்தில் குறைந்த செலவு, நிறைந்த பயன், பின் விளைவற்றது என்பர் அனைவருமே நாட்டுப்புற மருந்தினை உட்கொள்ளலாம். மஞ்சள் காமாலைக்கு ஆங்கில மருத்துவத்தில் இதுவரை சரியான மருந்து கண்டுபிடிக்கவில்லை. ஆனால் நாட்டுப்புற மருத்துவத்தில் மஞ்சள் காமாலைக்கு கீழாநெல்லி இன்றும் இருந்து வருகின்றது. மக்களோடு தோன்றி வளர்ந்த மருத்துவ முறையாக நாட்டுப்புற மருத்துவ முறை இருந்து வருகின்றது.

## நாட்டுப்புற மருத்துவம் தோன்றிய காலம்

நாட்டுப்புற மருத்துவம் தோன்றிய காலத்தைச் சரியாக அறுதியிட்டுக் கூற முடியாது. அப்படிக் கூறவேண்டுமானால் தமிழகத்து மண்ணில் செடி, கொடிகள் தோன்றிய காலமே நாட்டு மருத்துவம் தோன்றிய காலம் என்று கூறலாம். 'கேன்ஸ் எட்டோ முன்ஸ்ற்றெர்ஸ் என்பவர் நாட்டுப்புற மருத்துவ வரலாறு

பரந்துபட்டது எனவும் அதன், தொடக்கத்தைக் காணமுடியவில்லை என்றும் நாட்டு மருந்துகளைவிட நாட்டுப்புற மருத்துவம் வயதானது என்றும் கூறியுள்ளார்.[illegible]

## நாட்டுப்புற மருத்துவம் தோன்றிய விதம்

பொதுவாக உயிரினங்கள் வலி, காயம் போன்றவற்றால் பாதிக்கப்படும்போது அவற்றைக் குணமாக்க முயல்வது உயிரினங்களின் ஒரு பொதுவான இயல்பாகக் காணப்பெறுகிறது. இதற்குப் பல்வேறு வழிமுறைகளை மேற்கொள்கின்றனர். மற்ற உயிரினங்களில் இந்த இயல்பு வெறும் உணர்வுப் பூர்வமாக மட்டுமே காணப்படுகிறது. ஆனால், மனிதர்கள் மட்டுதான் வலி காயம் போன்றவற்றைத் தணிக்க அறிவுப் பூர்வமான முயற்சிகளை மேற்கொள்கின்றனர்.

காலில்பட்ட காயத்தினால் ஏற்பட்ட வலியைத் தணிக்கவும் அதன் விளைவாக புண்ணை ஆற்றவும் ஆதிமனிதன் அருகில் கிடைத்த பச்சிலையைப் பிடுங்கித் தேய்த்த நாளே நாட்டு மருத்துவத்தின் தொடக்க நாளாகும். அதன் பின்னர் மனித உடலில் நோய் நிலைகளைப் பட்டறிவு வாயிலாக அறிந்த மனிதன் அவற்றிற்கு அறிவுபூர்வமாக விளக்கமளித்துப் புரிந்துகொள்ள பலவித முயற்சிகளை மேற்கொண்டான். இதனால் பழங்காலத்தில் பண்பாட்டு வளர்ச்சியில் சிறந்து விளங்கிய பல்வேறு கலாச்சார இனத்தினரும் அவர்களுடைய

பட்டறிவிற்கும் சிந்தனைக்கும் ஏற்ப பல்வேறு மருத்துவக் கொள்கைகளையும் மருத்துவ முறைகளையும் உருவாக்கியுள்ளனர்.

பல்வேறு பண்பாட்டு இனமக்களின் தொடக்கால மருத்துவக் கொள்கைகளும் மருத்துவ முறைகளும் அவர்களுடைய மந்திரசக்தி, தெய்வசக்தி பற்றிய நம்பிக்கைகளுடன் பின்னிப் பிணைந்தனவாகவே காணப்பட்ட போதிலும் அவற்றிற்கிடையில் ஒரு பொதுவான ஒற்றுமையையும் நாம் காணமுடியும். நவீன மருத்துவம் தோன்றுவதற்கு பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே நன்கு வளர்ச்சி அடைந்த நிலையில் இருந்த பழங்கால மருத்துவமுறைகளை நவீன மருத்துவத்தினால் முற்றிலும் அகற்றிவிட முடியவில்லை.

## நாட்டுப்புற மருத்துவ வகைகள்

நாட்டுப்புற மருத்துவத்தை இயற்கை மருத்துவம் (Natural Folk Medicine) மந்திர மருத்துவம் (Magic Religions Medicine) எனப் பிரிக்கலாம். இவற்றின் விளக்கங்களை விரிவாக காணலாம்.

## இயற்கை மருத்துவம்

நாட்டுப்புற மருத்துவத்தில் இயற்கை மருத்துவம் நம் மூதாதையர்களிடமிருந்து வந்தது என்பதில் ஐயம் இல்லை.

மேலும் இம்மருத்துவம் எல்லோருக்கும் பொதுவானதும், பழமையானதும், எல்லோரும் பின்பற்றக் கூடியதும் ஆகும். உணவே மருந்து, மருந்தே உணவு என்ற சித்தர்களின் கொள்கையினை வலியுறுத்தும் வகையிலும், அக்கருத்துக்களில் பல மாற்றங்களைச் செய்து, தனி மருத்துவக் கலையாக உருவாக்கப்பட்டும், தற்காலத்தில் பயன்படுத்தப்பட்டும் வருகிறது. இயற்கையாக விளையும் பச்சைக்காய், கனிகளை மட்டுமே உண்டு, மருந்து, மாத்திரைகள் இல்லாமல் எல்லாவிதமான நோய்களையும் குணப்படுத்த முடியும் என்பதே இயற்கை மருத்துவத்தின் கொள்கையாகும். சமைத்த உணவுகளை, பானங்களை முற்றும் தவிர்க்க வேண்டும் என்பது இயற்கை மருத்துவக் கொள்கையின் பிரதான அம்சமாகும். 'இயற்கை மருத்துவத்தைவிட இயற்கையுணவு மருத்துவம்தான் சிறந்தது. இயற்கையுணவு மருத்துவத்தை இந்தியாவிற்கு அறிமுகப்படுத்தியது காந்தியடிகள் ஆவார்'.[69] மேலும், இயற்கையுணவு மருத்துவம் என்பது எளிமையானது. ஏழை மக்களாலும் எளிதில் பின்பற்ற முடியும். பொருட்செலவு இல்லாதது ஆகும். இம்மருத்துவமுறை மக்களிடம் நிலையானதொரு இடத்தைப் பிடித்துள்ளதெனலாம்.

**மந்திர மருத்துவம்**

இருபத்தோராம் நூற்றாண்டில் இந்திய நாட்டில் மருத்துவ

வழிமுறையில் ஒரு சில முரண்பாடுகள் உள்ளன என்று கூறலாம். இந்திய நாட்டின் ஒரு பக்கத்தில் மாற்று இருதயம் பொருத்தும் அளவுக்கு மருத்துவ அறிவியல் வளர்ச்சி விளங்க இன்னொரு பக்கத்தில் நோய்களை நீக்குவதற்கு உரிய மருத்துவ முறையாக மந்திர மருத்துவம் விளங்குவதைக் காணமுடிகிறது.

மக்கள் தாம் பெற்ற நோயினைத் தீர்ப்பதற்கு மதத்தையும், மந்திரவாதத்தையும் தழுவி நிற்பது மந்திர மருத்துவமாகும். இம்முறையில் பெரிதும் மருந்துகள் எதுவும் பயன்படுத்தப் பெறுவதில்லை. மந்திர அடிப்படையிலான மருத்துவத்தில் நோயுற்றோருக்கு மந்திரம் தெரிந்த ஒருவரால் மந்திரம் சொல்லப்பெற்று நோயைக் குணப்படுத்த முயற்சி செய்யப்பெறும். மந்திர மருத்துவத்தின் உட்பொருளை அறிந்துகொள்ள வேண்டுமெனில் மந்திரம் என்பதின் தோற்றத்தை பற்றி அறிந்துகொள்ளுதல் வேண்டும். இயற்கையின் இயக்கவிதிகளை அறியாத ஆதிமனிதன் அதன் வியத்தகு நம்பிக்கையை ஏற்படுத்தினான். மேலும் இயற்கையின் நிகழ்வுகளைச் சில பாவனைச் செயல்கள் மூலம் கட்டுப்படுத்தலாம் என்ற மனத்திடத்தை உருவாக்குவதற்குச் சில பழக்கங்களை மேற்கொண்டான். அதுவே பிற்காலத்தில் மந்திரமாக மாறியது. இது குறித்து, 'புராதன மந்திரமானது கற்பனையொன்றினை உருவாக்குவதன் மூலம் யதார்த்தத்தை' கட்டுப்படுத்தலாம் என்ற கருத்தோட்டத்தை அடிப்படையாகக்

கொண்டுள்ளது. இது உண்மையான தொழில்நுட்பத்தில் பற்றாக் குறையினை ஈடுகட்டுவதற்காகத் தோன்றிய கற்பனையான தொழில்நுட்பமாகும் என்று தாம்சன் ஜார்ஜ் கூறுகிறார்.[10]

## மந்திரத்தின் பெரும் பிரிவுகள்

புராணக் காலத்தில் அன்றாட வாழ்க்கைக்கு வேண்டி, குறிப்பாக உணவு சேகரிப்பதற்காகப் பயன்படுத்தப்பட்ட மந்திரம் பிற்காலத்தில் நன்மை, தீமைகளுக்காகவும் பயன்படுத்தப்பட்டது. இச்சிந்தனையுடன் மந்திரத்தின் பயனை அடிப்படையாகக் கொண்டு அதனை இருபெரும் பிரிவுகளில் அடக்கலாம். ஒன்று தூயமந்திரம், மற்றொன்று தீயமந்திரம்.

## தூயமந்திரம்

தூயமந்திரத்தை 'வெள்ளை மந்திரம்' என்று கூறுவர். இம்மந்திரம் செய்பவருக்கும் செய்யப்படுபவருக்கும் நன்மையை உருவாக்குவது.

## தீயமந்திரம்

தீயமந்திரத்தினைக் 'கறுப்பு மந்திரம்' என்ற பெயரிலும் அழைப்பர். இம்மந்திரம் செய்யப்பட்டவருக்குத் தீமைகளை உண்டாக்குவது.

## மந்திரங்களின் அடிப்படை வகைப்பாடு

உலகில் உள்ள எல்லா இனமக்களும் நம்பிக்கையின் அடிப்படையில் மந்திரங்களைச் செய்து வந்தனர். தற்போதும் தெரிந்தோ தெரியாமலோ மந்திரங்கள் செய்து கொண்டும் இருக்கின்றனர். மந்திரம் தூயமந்திரம், தீயமந்திரம் என்ற இரு பெரும்பிரிவுகளில் 'ஒத்த மந்திரம்', 'தொத்து மந்திரம்' என்ற இரு அடிப்படைத் தன்மைகளைக் கொண்டுள்ளன.

## ஒத்த மந்திரம்

'ஒத்த மந்திரம்' என்பது ஒத்தது ஒத்ததை உருவாக்குகிறது' என்ற கோட்பாட்டின் அடிப்படையில் அமைந்துள்ளது என்று ஆ. சிவசுப்பிரமணியன் கூறுகின்றார்.[71] சான்றாக, குழந்தையில்லாதவர்கள் கோவில்களுக்குச் சென்று தொட்டில் செய்து தொங்கவிடல், குறிப்பிட்ட உடலுறுப்புகளுக்கு உண்டாகின்ற நோய்களைப் போக்க உலோகத்தால் அவ்வுறுப்புகளைச் செய்து வழிபடும் தெய்வங்களுக்கு காணிக்கையாகச் செலுத்துதல், மங்கலகரமான செயல்களை ஆரம்பிக்கும் போது வழிபடும் தெய்வங்களுக்கு தாராளமாக படையலிட்டுப் பூசைகள் செய்வது போல்வன ஒத்ததை ஒத்தது ஒருவாக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் செய்யப்படுவனவாகும். எனவே, ஒத்த மந்திரத்தை ஒத்த விதியின் அடிப்படையில் அமைந்தது என்று கூறலாம்.

## தொத்து மந்திரம்

'தொத்து மந்திரமானது ஒரு தடவைத் தொடர்பு கொண்டிருந்தது எப்பொழுதும் தொடர்பு கொண்டிருக்கும் என்ற கொள்கையின் அடிப்படையில் அமைந்ததாகும் என சிவசுப்பிரமணியன் கூறுகிறார். சான்றாக, ஒருவரின் தலைமுடி, காலடிமண், எச்சில், மலம், பயன்படுத்திய துணி போன்றவற்றில் ஏதேனும் ஒன்றினைச் சேகரித்து மந்திரம் செய்வதால் அது அந்தப்பொருளுக்குரியவரைத் தொற்றிக் கொண்டு அவரைப் பாதிப்படையச் செய்கிறது என்பதாகும். எனவே, தொடர்பு விதியின் அடிப்படையில் அமைந்ததாகிறது தொத்து மந்திரம்.

## மந்திரத்திற்குப் பயன்படுத்தப்படும் பொருட்கள்

தலைமுடி, காலடிமண், எச்சில், மலம், பயன்படுத்திய ஆடையின் நூல், மூத்திரம், மூத்திரம் பெய்த இடத்திலுள்ள மண், சுடுகாட்டு எலும்பு, மண்டை ஓடு, சுடுகாட்டு மண் அல்லது சாம்பல் ஆகியன தீயமந்திரங்களுக்குப் பயன்படுத்தப்படும் பொருட்களாக உள்ளன. பொதுவாக மனிதக்கழிவுகளுக்குத் தீயசக்திகள் இருப்பதாக உள்ள நம்பிக்கை உலகளாவியதாகும். இந்நம்பிக்கையின் அடிப்படையில்தான் பல பழங்குடியினரும் கழிப்பறைகளைப் பயன்படுத்த அஞ்சுகின்றனர். தங்களுடைய கழிவுகளை எவருக்கும் தெரியாத இடத்தில் அழித்துவிடுகின்றனர்.

நாட்டுப்புற மக்கள் பயன்படுத்துகின்ற மந்திரப் பொருட்கள் ஒவ்வொன்றும் மனித உடலின் ஒவ்வொரு பகுதியையும் குறிப்பிடுவனவாக உள்ளன. முடி, எச்சில் மண்டையோடு போல்வன தலையையும், மலம், மூத்திரம், ஆடையின்நூல், சுடுகாட்டிலுள்ள எலும்பு, சாம்பல், மண் ஆகியன உடலையும், காலடிமண் கால்களையும் குறிக்கின்றன. எனவே, அவ்வப் பொருட்களுக்கு ஏற்படும் பாதிப்பு அதைக் குறிக்கின்ற மனித உறுப்புகளுக்கு ஏற்படும் பாதிப்பு அதைக் குறிக்கின்ற மனித உறுப்புகளுக்கு ஏற்படுவதாக நம்புகின்றனர். பெண்களுக்கு எதிராக மந்திரங்கள் செய்யும் போது அவர்கள் தலையில் சூடிய பூவும், அவர்களது மாதவிடாய்த் துணிகளும் பயன்படுத்தப்படுகின்றன.

## மந்திர மருத்துவமுறைகளின் நிகழ்கால நிலை

மக்கள் நாட்டு மருந்துகளைப் பயன்படுத்தினாலும் அம்மருந்துகளைப் பயன்படுத்திய பிறகு நோய் நீங்காவிட்டால் 'நோய்க்கும்பார் பேய்க்கும்பார்' என்ற பழமொழிக்கு இணங்க சில மந்திரச் சடங்குகளை மேற்கொள்கின்றனர். அவை, மந்திரித்தல், திருநீறு போடுதல், நீர் அடித்தல், கயிறு மந்திரித்துக் கட்டுதல், கண்பார்வைப் போக்குதல், தாயத்தெழுதிக் கட்டுதல், மறுகடந்து வைக்கச் செய்தல், பலிகொடுத்தல் பேயோட்டுதல் போன்றவையாகும்.

## மந்திரித்தல்

நோய் ஏற்பட்டவரை, நோய்நீக்கும் மந்திரம் சொல்லத் தெரிந்தவர் முன் உட்காரவைத்து மந்திரமொழிகள் பலமுறை கூறப் பெறுகின்றன. இதுவே மந்திரித்தல் எனப் பெறுகிறது. இவ்வாறு மந்திரம் கூறுவதால் நோய் நீங்கிவிடும் என்று மக்கள் நம்புகின்றனர்.

## திருநீறு போடுதல்

நாட்டுப்புற மருத்துவர் நோயாளியைக் கிழக்குமுகமாக தன்முன்னே உட்கார வைத்துத் தட்டில் இருக்கும் திருநீறை வலதுகையால் மூடிக்கொண்டு மந்திரங்களைப் புறத்தார் தெளிவாகக் கேட்காதவாறு கூறுவார். பிறகு கண்களைத் திறந்து கையிலிருக்கும் திருநீற்றை நோயாளியின் முகத்தில் படும்படி வீசுவார். இவ்வாறு மந்திரம் ஓதி மூன்று தடவைகள் செய்தபின்பு நோயாளியின் நெற்றியில் திருநீற்றைப் பூசி மீதமுள்ள திருநீற்றை நோயாளிடம் கொடுப்பார். சிலவேளைகளில் நோயாளியின் வாயில் சிறிது திருநீற்றை இட்டு நீர் அருந்துமாறும் கூறுகின்றார். நோயாளிக்கு மனப்பயத்தால் ஏற்படுகின்ற நோய்களை இம்மந்திரம் மாற்றி நலத்தைக் கொடுப்பதாக நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர்.

### நீர் அடித்தல்

நாட்டுப்புற மக்கள் செவ்வாய், வெள்ளிக்கிழமைகளில் நோயாளியைத் தன்முன்னால் கிழக்குமுகமாக உட்கார வைத்து, மண்குடுவை அல்லது செம்புநிறையத் தண்ணீர் எடுத்து தன்முன்னால் வைப்பார். அதன்பின் நோயாளியின் முகத்தையும் பாத்திரத்தில் இருக்கும் நீரையும் பார்த்துத் தெய்வத்திடம் மந்திரமோதி வேண்டுவார். அவ்வேண்டுதலை ஏற்ற தெய்வம் நிழலாட்டமாகத் தண்ணீரில் தெரிவதாக நம்பிக்கையோடு கூறுவார். அவ்வேளையில் வண்ணாத்து அந்நீரில் சிறிதளவு கையிலெடுத்து நோயாளியின் முகத்தில் எதிர்பாராதவிதமாகத் திடீரெனப் பளாரென்று மூன்று முறைகள் தெளிப்பார். அந்நேரத்தில் நோயாளி திடீரெனத் திடுக்கிடுவார். அதோடு அந்நீராலேயே முகம் கழுவி எஞ்சியிருக்கும் நீர் முழுவதையும் குடிக்குமாறு நாட்டுப்புற மருத்துவர் பணித்திட, அதனை நோயாளி நிறைவேற்றியவுடன் நோயானது சிறிது சிறிதாக மாறுவதாக நம்புகின்றனர்.

### கயிறு மந்திரித்துக் கட்டுதல்

நோயாளியை நாட்டு மருத்துவர் முன்னால் உட்காரவைத்து இருவருக்கும் நடுவில் வாழையின் தும்பிலையொன்று போடப்பட்டிருக்கும். வாழை இலையின்மேல் கறுப்பு, மஞ்சள், சிவப்பு ஆகியவற்றை

வெற்றிலையோடு சேர்த்து வைத்திருப்பர். அதோடு கூடமும் சில்லறைக் காசும் சிறுகற்களில் ஐந்தும் மூன்று நெல்மணிகளும் வைக்கப்பட்டிருக்கும். நாட்டுப்புற மக்களை குறித்துத் தெய்வத்தை வணங்கியபின் பஸ்பத்தை எடுத்து தன் நெற்றியில் பூசுவார். கூடத்தை வெற்றிலையில் வைத்து நெருப்பேற்றியபின் கயிறினை எடுத்து மந்திரம் ஜெபித்து முடிச்சு போடுவார். மந்திரம் முடிகின்ற பொழுதெல்லாம் கயிற்றில் முடிச்சுகள் போடுவார். இங்ஙனம் மந்திரம் ஓதி ஏழு முடிச்சுகள் இட்டப்பட்டபின் நோயாளியின் வலது கையாலேயே பஸ்பத்தை எடுத்து நெற்றியில் பூசிடுமாறு கூறுவார். பஸ்பத்தைப் பூசியதும் கயிற்றினை நோயாளியின் கையில் கொடுப்பார். நோயாளிகள் அக்கயிற்றினைக் கை, இடுப்பு, கழுத்து ஆகிய பகுதிகளில் தாங்கள் விரும்பும் ஏதேனும் இடத்தில் கட்டிக்கொள்வர். அதன் பின்னர் வாழை இலையும் அதில் வைக்கப்பட்டிருக்கும். அதிலுள்ள பொருட்களை எடுத்து எங்கேனும் முச்சந்தியில் கொண்டுபோய் மந்திரம் ஓதி நாட்டுமருத்துவர் தன்கையாலேயே போடுவார். இம்மந்திர மருத்துவத்தால் தங்களது துன்பங்களும் நோய்களும் நீங்குகின்றன என்று நாட்டுப்புற மக்கள் கூறுகின்றனர்.

## ஊர்ப்பார்வை போக்குதல்

குடியிருப்பு அல்லது ஊரிலுள்ள மக்கள் அனைவருக்கும்

பொதுவாக ஏற்படுகின்ற துன்பங்கள், நோய்கள், பிரச்சினைகள் ஆகியவற்றைப் போக்கிட வேண்டி செய்யப்படும் மந்திரம் ஊர்பார்வைப் போக்குதல் வகையைச் சார்ந்தது. 'தனிமனிதர்களின் துன்பங்களைப் போக்கிக் கொள்வதற்காக மட்டுமின்றி ஊரினர் அனைவரது நன்மைக்காகவும் தீமையை மாற்றியமைக்கும் சடங்கு. அனைத்துத் தரப்பு மக்களிடையிலும் நிகழ்வதுண்டு. இதில், பயன்படுத்தப்படும் பொருளைப் 'பொதுப்பலியாடு' என்று பிரேசர் ஜார்ஜ் ஜேம்ஸ் கூறுகிறார். இக்கூற்றிற்கு ஏற்றாற்போன்றே நாட்டுப்புற மக்களின் ஊர்ப்பார்வைப் போக்கும் மந்திரமும் அமைந்துள்ளது.

குடியிருப்பிலுள்ள அனைத்துக் குடில்களிலும் இருந்து ஒருநாள் எரிக்கப்பட்ட அடுப்புச் சாம்பலைச் சேகரித்து அமாவாசை நாளன்று மந்திர மருத்துவரின் கையில் கொடுப்பார். அவர் மந்திரம் ஓதுவதின் வாயிலாக ஊர்மக்கள் அனைவரின் துன்பங்களையும் சாம்பலின் மீது ஏற்றுவார். அன்று இரவு குடியிருப்பின் எல்லையைச் சுற்றி மந்திர மோதிக் கொண்டே அக்கோட்டின்மேல் சாம்பலைத் தூவுவார். குடியிருப்பின் எல்லை முழுவதும் இவ்வாறு சாம்பலைத்தூவுவர், குடியிருப்புக்கு வெளியே நிற்கும் ஏதேனுமொரு பால்மரத்தடிவரைக் சாம்பலினைத் தூவிச் செல்வதோடு, அம்மரத்தில் நீண்ட ஆணியொன்றினையும் அடித்து பின்னர் மருந்துகளைச் சுவைப்பார். இவ்வாறு செய்தவன் மூலம்

குடியிருப்பினுள்ளோருக்கு ஏற்பட்ட நோய்களும், துன்பங்களும் நீங்கி மரத்திற்குச் செல்ல மக்கள் அனைவருக்கும் நலம் கிடைக்கிறது என்பது நாட்டுப்புற மக்களின் நம்பிக்கையாக அமைகின்றது.

## நறுக்கெழுதிக் கட்டுதல்

நோயினால் அவதியுறும் மக்கள் மந்திர மருத்துவரிடம் சென்று நோய் நீங்கிட வழிகேட்பார். அப்பொழுது மருத்துவர் தெய்வத்திடம் பிரசன்னம் (தெய்வத்திடம் செய்ய வேண்டிய செயல் என்ன என்பதைக் கேட்டல்) கேட்டு, அதன்படி நறுக்கெழுதிக் கட்டுமாறு கூறுவார். அதற்கென நோயாளி கொடுக்கும் தொகையைத் தட்சணையாகவும் பெற்றுக் கொள்வார்.

## பனையோலை நறுக்கு

பனையோலையில் ஒருதுண்டினை எடுத்துச் சுமார் அரை அடி நீளத்திற்கு வெட்டிப் பக்கங்களைச் சீவி மருத்துவர் தயார் செய்தபின், நோயாளியின் பெயரை நினைத்து ஓலையின் நடுவில் ஒரு முக்கோண வடிவத்தை நேராகவும், அதே அளவில் இன்னொரு வடிவத்தைத் தலைகீழாகவும் ஒன்றின்மேல் ஒன்று சேர்த்து ஆணியால் கீழ்க்காணப்படும் படம்போல் வரைந்திடுவார்.



பட்டத்தின் நடுவில் பெரிய வட்டங்கள் மூன்றும், முனைப்பகுதிகளில் சிறிய வட்டங்கள் ஒவ்வொன்றுமாக இட்டு நோயாளியின் பெயரைக் குறிப்பிட்டுத் தெய்வத்திடம் நோய் நீக்கிட வேண்டுவார். அதன்பின் மஞ்சளும் சுண்ணாம்பும் சேர்த்து அரைத்த கலவையினை ஓலையில் பூசி அதனை மடித்து மஞ்சள் சுண்ணாம்பு சேர்த்து அரைத்த கலவையில் நனைத்தெடுக்கப்பட்ட நூலினால் இறுக்கமாகக் கட்டி, தனக்கு துணைநின்று உதவிடும் தெய்வத்தை வேண்டி நோயாளியின் இடுப்பில் கட்டுமாறு கூறுவார். தாயத்தினைக்கட்டும் நோயாளி மனத்திடம் பெற்றுச் செய்வினை, கண்டறிய முடியா நோய் போன்றவற்றிலிருந்து விடுதலை பெற்றுச் சுகம் பெறுவதாக நம்புவர்.

## மறுகந்து வைத்தல்

செய்வினைத் தொல்லைகள், தீராத நோய்கள் போன்றவை நீங்கிட மறுகந்து வைத்தல் என்றும் மந்திரத்தையும் நாட்டு மருத்துவர் செய்கின்றனர்.

## வெள்ளி, செவ்வாய் நாட்கள்

வெள்ளி அல்லது செவ்வாய் கிழமைகளில் இரவில் நோயாளியின் குடிலின் நடுவில் வாழையிலை விரித்து பஸ்பம், பூ, தேங்காய், பழம், சாம்பிராணி, சூடம், பொரிகடல், வெல்லம் போன்றவற்றைப் படையல் செய்தபின் பூசை செய்கின்றனர். நோயாளியின் பாலினத்தைச் சார்ந்த கோழியொன்றினைக் கொண்டுவந்து நோயாளியின் தலையை மூன்று முறை மந்திரம் ஓதி சுற்றுவதோடு படையலின் ஒரு கால் முன்னெடுத்து மறுகடந்து போகும்படியாக மருத்துவர் பணித்திட நோயாளிகளும் அவ்வாறே செய்கின்றனர். நோயாளி படையல் பொருட்களை மறுகடந்தபின் திரும்பிப்பார்க்காது குடிலின் தென் மூலையில் ஒதுங்கி இருக்கவேண்டும். மருத்துவர் படையல் பொருட்களை எடுத்துக்கொண்டு குடிலுக்கு வெளியே ஏதேனுமொரு முச்சந்தியில் சென்று மீண்டும் படையலிட்டு மந்திரமோதி கோழியின் கழுத்தை அறுத்துப் பலி கொடுப்பார். மருத்துவரின் உதவியாளர்கள் கோழியை எடுத்து சமையல் செய்து அதனை மருத்துவரிடம் கொடுக்க அவர் அதனை வாங்கி படையலில் வைத்துத் தெய்வத்திடம் நோய் நீங்கிட வேண்டுவார். வேண்டி முடிந்ததும் சமையல் செய்த இறைச்சியைச் சாராயத்துடன் மருத்துவரும் அவரது உதவியாளர்களும் உண்டபின், மருத்துவர், படையல் பொருட்களைப் பிரித்துக்கொண்டு, உதவியாளர்களுடன் தன்னுடைய குடிலுக்குச் செல்வார்.

## பலிகொடுத்தல்

தீராத நோயினாலும் பல்வேறுபட்ட பிரச்சினைகளினாலும் அவதியுறுவோர் மருத்துவரிடம் சென்று நோய் நீங்கிவிட வழி கேட்பார். மருத்துவர் இறைவனிடம் நோயாளியின் பிரச்சினைகள் நீங்கிட வேண்டும்போது, பலிகொடுத்தால் நோய் நீங்கும் என்ற நல்உத்தரவு தெய்வத்திடமிருந்து கிடைத்தால் பலிகொடுத்திட மருத்துவர் கூறுவார். பலிகொடுக்கும் முறையானது இருவகையில் உள்ளது. ஒன்று உயிர்ப்பலி, மற்றொன்று பொருட்பலி ஆகும்.

## உயிர்ப்பலி

அமாவாசை நாளன்று நடுச்சாமப்பொழுதில் மருத்துவர் நோயாளியைா அழைத்துக் கொண்டு ஏதேனுமொரு முச்சந்திக்குச் செல்வார். அங்குக் கிழக்குமுகமாக நோயாளியை உட்காரவைத்து, வாழையிலைகளை விரித்து அதன்மேல் பூ, பழம், பஸ்பம், வெற்றிலைபாக்கு, சூடம், சாம்பிராணி, அவல், பொரி, வெல்லம், பச்சரிசி போன்றவற்றைப் படையலிட்டு மந்திரம் ஓதி பூசை செய்வார். பூசையின்போது நோயாளியின் பாலினத்தைச் சார்ந்த கோழியொன்றினை எடுத்து, நோயாளியின் தலையை அதன் இரத்தமெடுத்து நோயாளியின் நெற்றியில் திலகம் வைப்பார். அதன்பின் பலிகொடுக்கப்பட்ட கோழியையும் அதன் தலையையும் படையலில் வைப்பார். அப்படையலை

நோயாளி மூன்றுமுறை சுற்றிக் கிழக்குமுகமாக வணங்கியதும் குடிலுக்கு அழைத்து வரப்படுவார்.

## பொருட்பலி

நாட்டுப்புற மக்கள் சிலர் உயிர்ப்பலிக்குப் பதிலாகப் பொருட்பலியும் கொடுப்பார். நோயாளியைக் கிழக்குமுகமாக உட்காரவைத்து உயிர்ப்பலிக்குப் படையல் செய்த கோழி தவிர்த்து மற்றப் பொருட்களைப் படையலிட்டுப் பஸ்பத்தை மருத்துவர் நெற்றியில் பூசுவர். அதன்பின் எலுமிச்சை, தேங்காய், வில்வபழங்காய், பூசணிக்காய், முட்டை ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றினைக் கொண்டு மந்திரமோதி நோயாளியின் தலையைச் சுற்றி தரையில் வைத்து வெட்டரிவாளால் வெட்டி பலிகொடுப்பார். பலிகொடுத்த பொருளின்மீது மஞ்சளும் சுண்ணாம்பும் கலந்த கலவையைப் பூசுவர். இது திலகமாகக் கருதப்படும். இத்திலகமே உயிர்ப்பலியில் வைக்கப்படும் குருதித்திலகமாகக் கருதப்படுகிறது. பின்னர் உயிர்ப்பலி கொடுத்தபின் படையலை மூன்றுமுறை நோயாளி சுற்றிவந்து வணங்கிக் கிழக்குமுகமான குடிலுக்குள் அழைத்து வரப்படுவார்.

## பேயோட்டுதல்

ஆணோ, பெண்ணோ எதிர்பாராத வகையில் உடல் நிலையாலும் மனநிலையாலும் பாதிப்படைந்தால்

அப்பாதிப்புக்குரிய காரணமாகத் தீய ஆவியின் செயல் என நம்பப் பெறுகின்றது. பேய் பிடித்தவரிடமிருந்து பேயை ஓட்டுவதற்கு மந்திரவாதி மூலம் சில மந்திரங்கள் உச்சரிக்கப் பெற்று சில மந்திரச் சடங்குகளும் மேற்கொள்ளப் பெறும். இவ்வாறு செய்வது பேயோட்டுதல் ஆகும். இவ்வாறு செய்வதால் நோயிலிருந்து விடுதலைக் கிடைக்கும் என மக்கள் நம்புகின்றனர்.

மந்திரச் சடங்குகள் தமிழகத்தைப் பொறுத்தவரை அனைத்துச் சமயத்தாரிடமும் காணப்பெறுகின்றன. இந்து சமயத்தில் மருத்துவ மந்திரச் சடங்குகளைச் செய்வோரைப் பூசாரி, திருநீறுபோடுகின்றவர், சாமியாடி, கோடாங்கிக்காரர், பார்வை பார்ப்பவர்; மந்திரவாதி என்ற பெயர்களில் மக்கள் அழைக்கின்றனர். கிறிஸ்வ சமயத்தில் பாதிரியாரும் முஸ்லிம் சமயத்தில் ஹஸ்ரத் என்பவரும் மருத்துவ மந்திர சடங்குகளைச் செய்வதைக் காணலாம்.

மனித சமுதாயம் வளர வளர மருத்துவமுறையும் வளர்ந்து வருகிறது. கலாச்சாரம் உணவு போன்றவை மாறும்போது மருத்துவ முறையும் மாறுகிறது. மேலும் காலம் மாற மாற மக்களின் அறிவியல் அறிவு வளர வளர மக்களுக்கு மருத்துவ மந்திரச்சடங்குகளின் மேல் நம்பிக்கைக் குறைந்துகொண்டே வருகிறது எனலாம்.

## சித்தமருத்துவமும் தமிழ் மருத்துவமே

சித்த மருத்துவம் தமிழகத்திற்கும் தமிழ்மொழிக்கும் சொந்தமான தனிச்சிறப்புடைய முறை. இம்முறை தமிழ் மருத்துவம் என்றும் வழங்கப்பெறுகிறது. இப்பெயர் பெற்றதற்கான காரணத்தை அறிஞர் பலரும் குறிப்பிடுகின்றனர்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே தமிழகத்தில் தோன்றிய மருத்துவமுறை சித்தமருத்துவமுறை ஆகும். தொடக்கத்தில் இம்முறை சிந்துசமவெளி மருத்துவமுறையோடு தொடர்புற்றிருக்கக்கூடும். பின்னர் சித்தர்களால் தனிப்பட்ட முறையில் அக்கறையுடன் வளர்க்கப்படலாயிற்று. தமிழகத்தில் தோன்றி இன்றும் தமிழகத்தில் மட்டுமே வளர்ந்து வழங்கி வருவதால் 'தமிழ் மருத்துவம்' என்று வழங்கப்படுகிறது[70] என்று சித்த மருத்துவமும், தமிழ்மருத்துவம் என்ற இருபெயர்களும் ஒருங்கே வழங்கப்பெறுதல் சுட்டப்பெறுகிறது. 'தமிழ் மருத்துவம்' எனப்பெறும் வழக்கிற்கு உரிய காரணங்களாக, இம்மருத்துவத்தை வகுத்த சித்தர்கள் தமிழ்நாட்டில் இருந்தவர்கள். சித்த மருத்துவ நூல்கள் தமிழிலேயே காணக்கிடைக்கின்றன. பண்டையநாள்தொட்டு இன்று வரை இம்மருத்துவமுறை தமிழகத்திலேயே பயிலப்பெற்று வருகின்றது என்பவற்றைக் கலைக்களஞ்சியம் குறிப்பிடுகின்றது.[71]

போகர், புலிப்பாணி, இராமதேவர் முதலியோர்களைத் தவிர பெரும்பாலும் சித்தர்களெல்லாம் தமிழர்களே. இச்சித்த

வைத்தியம் தமிழ்நாட்டுக்கே உரியதென்பதை மறுக்கமுடியாது என்று சாம்பசிவம் பிள்ளை தம்முடைய அகராதியில் குறிப்பிடுகிறார்.[74]

சித்தர் நூல்கள் என்று குறிப்பிடும் பதினெண் சித்தருள்போகர் சீனநாட்டவர். தமிழகத்து இராமதேவர் அராபிய நாட்டிற்குச் சென்று மீண்ட நிலையில் யாக்கோபுச் சித்தர் எனப் பெயர்பெற்றார்[75] என்றவாறு வழங்கும் செய்திகள் சித்தர்கள் காலம், இடம், மொழி கடந்தவர்கள் என்பதை உணர்த்துகின்றன. எனினும் அவர்தம் கருத்துகள் தமிழிலேயே வடிவம் பெற்று விளங்குகின்றன.

இவற்றை நோக்க, சித்தர்கள் தமது கொள்கைகளாலும், குறிக்கோள்களாலும் மக்களிடமிருந்து விலகி நின்றபோதும், தமிழினின்று விலகவிடாமல் தமிழகத்திற்கு உரிய இம்மருத்துவத்தைத் தாமும் தமிழிலேயே வடிவமைத்துத் தாம் அறிந்த புதியனவாகக் கண்டுணர்ந்த மருத்துவ முறையினை தமிழிலேயே படைத்தனர். இவ்வாறு அவர்கள் தமிழ்மொழியிலே எடுத்துக்கொள்வதற்கு ஏற்ப, தமிழ்மொழியும் உயர்தனிச் செம்மொழியாக இருக்கும் தொன்மைச் சிறப்பினதாய், இனிமை நிறைந்ததாய், சொற்பொருள் வளமிக்கதாய், கலைகளை வளர்த்தற்குத் தக்கதொரு மொழியாக விளங்கியது எனலாம். இவ்வாறு தமிழர் நாகரிகத்தோடு தோன்றிவளர்ந்தமையாலும், தமிழிலேயே வளர்க்கப்பெற்றமையாலும், தமிழ்நாட்டையே

களமாகக்கொண்டு, தமிழர்க்கே உரிமையுடைய கலையாக இன்றும் விளங்குவதாலும் இச்சித்தமருத்துவம் தமிழ்மருத்துவம் என்று அழைக்கப்பெற்றது என்பது ஏற்புடையதாக கருதப்படுகிறது.

## தமிழ் மருத்துவமே முதன்மையானது

தமிழ் மருத்துவமே இந்திய மருத்துவ முறைகளில் முதன்மையானது என்பது வரலாற்று ஆசிரியர்களின் கணிப்பாகும். யுனானி வைத்தியம் கி.பி. 6ல் தோன்றியது என்றும், கிரேக்க வைத்தியம் கி.பி.900 ஆம் ஆண்டில் தோன்றியது என்றும், ஆங்கில வைத்தியம் கி.பி.1775 ஆம் ஆண்டில் தோன்றியது என்றும் கூறுவர். அதே வரலாற்று ஆசிரியர்கள் எல்லா நாகரிகங்களையும் விட இந்திய நாகரிகமே பழமையானது என்று கூறுகின்றனர். அதற்கான காரணம் என்னவென்றால் உலகில் முதன்முதலில் மனித குலம் தோன்றிய இடம் எகிப்து என முதலில் நம்பப்பட்டது. ஆனால் இலெமூரியா ஆய்வுக்குப் பின் அந்த நம்பிக்கை மாறிவிட்டது. எனவே, மருத்துவத்துறையில் இந்திய மருத்துவமே முதன்முறையாகத் தோன்றிய மருத்துவம் என்பது உண்மையாகிறது. 'இந்திய மருத்துவம் என்பது சித்த மருத்துவம் ஆயுர்வேத மருத்துவம், யுனானி மருத்துவம் என வகைப்படும் வரலாற்று ஆசிரியர்களின் ஆய்வுகளாலும், கல்தோன்றி மண்தோன்றாக்

காலத்தே முன்தோன்றிய மூத்தக்குடி என்று தமிழினத்தை அழைப்பதாலும் இந்திய மருத்துவத்திற்குள்ளும் முதன்மையாகத் தோன்றிய மருத்துவம் சித்த மருத்துவமே எனலாம். உலக நாடுகளில் பிற வைத்திய முறைகள் ஆரம்ப நிலையில் இருந்தபொழுது, தமிழ்நாட்டில் சித்த மருத்துவம் முழுமை பெற்ற மருத்துவமாகத் திகழ்ந்தது. தற்போது ஆங்கில மருத்துவத்துறையில் நவீன கருவிகள் கண்டுபிடிக்கப்பட்டு, பல பரிசோதனைக் கூடங்களும், மனிதனின் உடல் உறுப்புகளுக்கென்று தனித்தனியாக சிறப்பு பயிற்சி பெற்ற மருத்துவர்களும் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். ஆனால், பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சித்த மருத்துவத்தில் பரிசோதனை முறைகளை கையாளப்பட்டுள்ளன. மனிதனின் உடல் முழுவதையும் சோதனை செய்து நோய்களைக் கண்டறிந்து சிகிச்சைகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. இதனால் சித்த மருத்துவம் பழமையானதும், பிற மருத்துவ முறைகளை எல்லாம் முதன்மையானதும், முழுமையானதாகவும் இருப்பதால் எல்லா மருத்துவ முறைகளுக்கும் தாய் தமிழ் மருத்துவமாகிய சித்த மருத்துவத்தை வழிகாட்டியாகக் கொள்வர். சித்த மருத்துவம் நாட்டு மருத்துவம் என்று ஆய்வில் குறிப்பிடப்படுகிறது.

### நாட்டுப்புற மருத்துவத்தின் வளர்ச்சி

பழங்காலத்தில் வாழ்ந்த மக்கள் இலை, பட்டடைளை

ஆடையாக அணிந்தும், குகைகளில் வசித்தும், உணவுகளைப் பச்சையாக உண்டும் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு உடலில் ஏதாவது நோய் ஏற்பட்டபோது, அந்நோய் என்னதென்று அறியாமல், பேய், பிசாசு, பூதம் மற்றும் கெட்ட தேவதைகளால் தான் உடலில் நோய்கள் ஏற்படுகின்றன என்ற மூட நம்பிக்கையில் வாழ்ந்தார்கள். சூரியனையும், சந்திரனையும் தெய்வங்களாக வணங்கினார்கள். மந்திரங்களை உச்சரித்தால்தான் உடலில் காணப்படும் நோய்கள் மறையும் என்று நம்பினார்கள். அவ்வாறு மந்திரங்களை உச்சரிக்கின்ற மந்திரவாதிகள்தான் பின்னர் மருத்துவர் என அழைக்கப்பட்டனர். கிரேக்கம், சீனம் ஆகிய நாடுகளில் கூட மருத்துவத் துறையில் ஆரம்பத்தில் மந்திரதந்திரங்கள் தான் இடம் பெற்றிருக்கின்றன. காலப்போக்கில் உணவுக்காக உண்ணும் இலை, பட்டைகள் மற்றும் காய், கனிகளினின்று உடலில் ஏற்படுகின்ற நோய்கள் குறைவதை மக்கள் உணர்ந்தார்கள். சில தாவரங்கள் நோய்களைக் குணமாக்குவதை அறிந்து மூலிகைகளை அதிக அளவில் மருந்தாகப் பயன்படுத்தினார்கள் என்பர்.

மூலிகைகளை மருந்தாகப் பயன்படுத்திய மனிதன் அறிவு வளர, வளர ஆக்கப்பூர்வமாகச் சிந்திக்கத் தொடங்கினான். பாபிலோனியர்கள் மிருகங்களை அறுத்து உடலின் கூறுகளைப் பயின்றுள்ளார்கள். இதன் மூலம் உடல்கூறு பற்றிய அறிவு வளர்ந்தது. சீன தேசத்து குவாங்கீ என்பவர் இரத்த ஓட்டத்தைக்

கண்டறிந்தார். கிளாசடியஸ் என்ற ரோமானியர் சிறுநீரகத்தின் மூலம் இரத்தத்திலிருந்து கழிவுகள் பிரிக்கப்படுகின்றன. அக்கழிவுதான் சிறுநீர் என்பதைக் கண்டுபிடித்தார்.[77] நாளடைவில் உலகம் முழுவதும் மக்களிடையே புதியவைகளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்ற ஆர்வம் ஏற்பட்டுவிட்டது. அதனடிப்படையில் அணு உயிர் விஞ்ஞானமும் வளர்ச்சி பெறத் தொடங்கியது. ஒவ்வொரு நோய் தோன்றுவதற்கு ஒவ்வொரு நுண்ணுயிர்தான் காரணம் என்பதும் கண்டறியப்பட்டது. இவ்வாறு மருத்துவத்துறையில் ஒவ்வொரு பிரிவும் வளர்ச்சி பெற்றது. பின்னர் புதுப்புது மருத்துவத் தத்துவங்கள், புதிய மருத்துவத்துறைகளை வளர்த்தது என்பர்.

## நாட்டுமருத்துவ அடிப்படைக் கொள்கைகள்

சித்தர்கள், ஆன்மா இறைவனை அடைவதற்குக் கருவியாக விளங்கும் இவ்வுடலைக் கோயிலாகப் போற்றினர். உடலை அழியாது காப்பதன் மூலம் உடலுக்குள் நிலைபெற்றிருக்கும் ஆன்மாவை இறைவனோடு இணைப்பதே அவர்தம் குறிக்கோள் ஆகும்.

'உடம்பார் அழியின் உயிரார் அழிவார்
திடம்படு மெய்ஞ்ஞானம் நண்ணவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே'[78]

என்பார் திருமூலர். எனவே, சித்தமருத்துவம் உடலை' கருதியன்று, உடலுக்குள் நிலைபெற்றிருக்கும் உயிரைக்

கருதியது. இவ்வாறு உயிரைப் போற்றும் இம்மருத்துவம் ஐம்பூதக் கொள்கை, அண்ட-பிண்டக் கொள்கை, முப்பிணிக் கொள்கை, உடற்கொள்கை என்ற நான்கு கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு விளங்குகின்றது.[79]

## ஐம்பூதக் கொள்கை

அணுமயமான இவ்வுலகம் ஐம்பூதங்களின் கூட்டுறவால் ஆகியது. இயற்கையின் ஆற்றல்வாய்ந்த மூலக்கூறுகளான மண், விண், காற்று, தீ, நீர் என்ற ஐந்துமே ஐம்பூதங்கள் எனப்படுகின்றன. இம்மூலக்கூறுகள் பருநிலை, நுண்ணியநிலை என்ற இருநிலைகளில் விளங்குகின்றன.[80] இவற்றுள் நுண்ணியநிலையே ஐம்பூதங்களின் உண்மையான வடிவம் ஆகும். கண்களுக்குப் புலனாகாத இம்மூலக்கூறுகள் தம்முள் கலந்த நிலையிலேயே, பருநிலைப் பூதங்கள் உருவாகின்றன. இவ்வாறு அவை தம்முள் கலந்து தோன்றும் நிலை 'பஞ்சீகரணம்' ஆகும். தொல்காப்பியம் கூறும் 'கலந்த மயக்கம்' என்ற தொடர் இதனையே குறிப்பிடுகிறது.[81] இப்பருநிலைப் பூதங்கள் கண்களுக்குப் புலனாகும் தன்மை ஆகும். இவ்வுலகப் பொருள்கள் அனைத்துமே ஐம்பூதங்களின் கூட்டுறவில் உருவானவை. இவ்வைம்பூதங்களுள் தீ, நீர் என்ற மூன்று மட்டுமே இயங்கும் தொழிலாகும். ஏனைய மண் விண் இரண்டும் முறையே தொழிற்படுதற்கு உரிய இடமாகவும் கூரையாகவும் விளங்குகின்றன.

### அண்ட - பிண்டக் கொள்கை

சித்தர் பார்வையில் மனிதன் ஒரு சிற்றண்டம் ஆவான். இவ்வுலகம் ஐம்பூதங்களால் ஆகியது போன்றே, மனித உடலும் ஐம்பூதங்களால் ஆகியது. ஐம்பூதங்களுள், இயங்கும் ஆற்றல் கொண்ட காற்று, தீ, நீர் என்ற மூன்றும் சில நேரங்களில் இயற்கை மாற்றங்களுக்கு உள்ளாகும்போது புயல், நில அதிர்ச்சி, எரிமலை வெடித்தல் முதலான பெரும் அழிவுகளை ஏற்படுத்துகின்றன. அவை மூன்றும் மனித உடலில் தொழிற்படும்போது ஏற்படும் மாற்றங்கள் நோய்களாக உருவெடுக்கின்றன.[82] அண்டத்திலும் பிண்டத்திலும் இடம்பெற்றிருக்கும் பஞ்சபூதங்கள் ஒன்றிலேனும், மனித உடலில் அமையும்போது அண்டத்தைக் காட்டிலும் மிகவும் சிக்கலானவையாக விளங்குகின்றன. எனினும் மனிதன், 'சித்தம்' என்ற தெய்விக ஆற்றலைப் பெற்றுள்ளான். இதனால் அவன் அண்டத்தைக் காட்டிலும் வலிமை பெற்றவனாக விளங்குகின்றான் என்பதைச் சித்தர்கள் தமது ஞானத்தால் அறிந்து கூறியுள்ளனர்.[83] பேரண்டத்தைக் காட்டிலும் மனிதன் வலியுடையவன் என்பதைச் சித்தர் பாடல்களும் செயல்களும் விளக்குகின்றன.

### முப்பிணிக் கொள்கை

ஐம்பெரும் பூதங்களுள் இயங்கும் ஆற்றல் கொண்ட காற்று, தீ, நீர் ஆகிய மூன்றும் மனித உடலில் தொழிற்படும் நிலையில்

முறையே வளி, அழல், ஐயம் என்ற முக்குற்றங்களாக - முப்பிணிகளாக அமைந்து விளங்குகின்றன. வாதம், பித்தம், கபம் என்றும் அழைக்கப்பெறுகின்றன. இம்மூன்று குற்றங்களும் உடலில் தொழிற்படும் போது மற்ற இரு மூலக்கூறுகளுள் மண்ணின் கூறு ஐயத்துடனும் விண்ணின் கூறு வளியுடனும் சேரும்.

மனித உடலில் இடுப்புக் கீழுள்ள பகுதி வளியின் ஆளுமைக்குரியது. மலசலம் முதலான பதினான்கு வேகங்களையும் கழித்தல், இரத்தவோட்டம், மூச்சோட்டம், தசைகளின் இயக்கம் ஆகியவற்றைச் செயற்படுத்துதல், அறிவாற்றலைச் செயற்படுமாறு தூண்டுதல், மூளை மற்றும் நரம்பு மண்டலங்களை இயக்குதல் ஆகியன இதன் தொழில்.[84] வளித்தத்துவம் பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்செயன் என்ற பத்து வகைப்படும்.[85]

மார்பிலிருந்து இடுப்பின் மேற்பகுதி வரை அழலின் ஆளுமைக்குரியது. பசி, தாகம், செரித்தல், பார்வை, அறிவுக்கூர்மை, உடல் வெப்பத்தைச் சீராக வைத்திருத்தல், உணவாற்றலை இயக்க ஆற்றலாக மாற்றுதல் உடலெதிர்வினை நரம்பு மண்டலத்தைச் செயற்படுத்தல் ஆகியன அழல் தத்துவத்தின் தொழில்களாம்.[86] இஃது ஐவகைப்படும். அவை, பாசக பித்தம், இரஞ்சக பித்தம், சாதக பித்தம், ஆலோசக பித்தம், பிராசக பித்தம் என்பனவாகும்.[87]

நீரின் கூறாகிய ஐயம், தலை முதல் நெஞ்சுவரை உள்ள பகுதிக்கு உரியது. மேலும் மூட்டுப் பகுதிகளும் இதன் ஆளுமைக்குரியன. வளி, அழல் ஆகிய இரண்டையும் சமநிலையில் வைத்திருத்தல், மூட்டுகளிடையே பசைத்தன்மையாக நின்று அவற்றை நன்முறையில் இயங்குதல் ஆகியன இதன் தொழில்[88] உடலுக்கு வடிவம் தருவது இந்த ஐயத் தத்துவமே என்பர். இதுவும் அவலம்பகம், கிலேதகம், போதகம், நற்பகம், சந்திகம் என்ற ஐவகையாக அமைந்துள்ளது.[89]

வளி, அழல், ஐயம் என்ற இம்மூன்று தத்துவங்களும் முறையே படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய செயல்களைத் தொழிற்படுத்துகின்றன. மனித வாழ்க்கை நூற்றாண்டு காலமெனக் கொண்டால், முதல் முப்பத்தைந்து ஆண்டுகள் வளித்தத்துவத்திற்குரிய காலமாகும். மனிதனுக்குரிய அனைத்து வளர்ச்சி நிலைகளும் இம்முப்பத்தைந்துவயதிலேயே நின்றுவிடும். அடுத்து முப்பத்தைந்து முதல் எழுபது வயது வரை உள்ள ஆண்டுகள் அழல் தத்துவத்திற்கு உரிய காலமாகும். இக்காலம் வரை, வளர்ச்சி பெறாவிடினும் உடலுறுப்புகள் யாவும் நன்னிலையில் இயங்கும். இறுதி முப்பது ஆண்டுகள் ஐயப்பிணிக்கு உரியன. எழுபது வயதுக்கு மேற்பட்ட இக்காலத்தில் மனிதனின் ஒவ்வோர் உறுப்பும் செயல்குன்றி தேய்ந்து இறுதியில் உடல் அழியும். இதனையே,

'வாதமாய்ப் படைத்துப்பித்த வன்னியாய்க் காத்துச்
சீதசேட்ப மாய்த் துடைத்து'

என்று தேதையர் குறிப்பிடுகின்றார்.[90] மனித உடலில் பிறப்பு முதல் இறப்பு வரை அனைத்து இயக்கங்கட்கும் மூலமாக நின்று ஆளுகின்ற இம்முப்பிணிகளும் தம் நிலையினின்று பிறழும் அளவில், அவற்றின் மிகுதி குறைகளுக்கேற்ப நோய்கள் உண்டாகின்றன.

**உடற்கொள்கை**

சித்தர்கள் மனித உடலை அதன் அமைப்பைக் கருதா, பருவுடல், நுண்ணுடல் என்ற இரு கூறாகக் காண்பர்.[91] பருவுடல் இரசம், குருதி, மாமிசம், மேதை, என்பு, மச்சை, சுக்கிலம் ஆகிய எழுவகைத் தாதுக்களை ஆதாரமாகக் கொண்டு, எலும்புகள், தசைகள், நரம்புகள், இரத்தக் குழாய்கள், தசை நார்கள் முதலியவற்றால் ஆகியது. மெய்ண்ணுடல் ஆன்மாவை உடையதாக, பத்து நாடிகளையும், பத்து வாயுக்களையும் ஆதாரமாக கொண்டது. இந்நுண்ணுடலை, சூக்கும உடல், காரண உடல் என மேலும் இரண்டாகப் பகுப்பர். அவற்றுள் சூக்கும உடலே பத்து நாடிகளையும், பத்து வாயுக்களையும் ஆதாரமாகப் பெற்று விளங்குவது என்றும், காரணவுடல் ஐம்பூதங்களை ஆதாரமாகக்கொண்டு விளங்குவது என்றும் கூறுவர்.[92] சித்தர்கள் மனிதனுக்கு உண்டாகும் நோய்களை இம்மூவகை உடல் தத்துவ நிலையில் ஆய்ந்து முறையே சொறி, சிரங்கு, வலி, சுரம் முதலியன பருவுடல் பற்றியன என்றும், திரை,

மூப்பு முதலியன காரண உடலைப் பற்றியன என்றும் அறிந்து பாகுபடுத்தியுள்ளனர்.[93]

## நாட்டு மருத்துவத் தத்துவங்கள்

நாட்டு மருத்துவம் ஐம்பூதம், அறுசுவை, முக்குற்றம் போன்ற அடிப்படைத் தத்துவங்களைத் தனக்குள் கொண்டதாகத் திகழ்கிறது. இதனை,

'அண்டத்தி லுள்ளதே பிண்டம்
பிண்டத்தி லுள்ளதே அண்டம்
அண்டமும் பிண்டமும் ஒன்றே
அறிந்து தான் பார்க்கும் போதே'[94]

என்ற சட்டமுனியின் ஞானப்பாடலால் அறியலாம். ஐம்பூதம், அறுசுவை, முக்குற்றம் ஆகிய மூன்றையும் அடிப்படைத் தத்துவங்களாகக் கொண்டு நோய் கண்டுபிடிக்கப்பட்டு, அந்நோய்க்கு மருந்து செய்து கொடுக்கப்படுவது நாட்டு மருத்துவத்தின் சிறப்பு அம்சமாகக் கருதப்படுகிறது. ஐம்பூதம் என்பது நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம் என்பனவைகளாகும். அறுசுவை என்பதுஇனிப்பு, புளிப்பு, உப்பு, கைப்பு, கார்ப்பு, துவர்ப்பு என்பவைகளாகும். முக்குற்றம் என்பது வாதம்(வளி) ஆகாயம்+வாயு), பித்தம் (அழல்=தீ) கபம்(ஐயம்) நீர்+மண் இம்முக்குற்றங்களும் *1:1/2:1/4* என்ற விகிதத்தில் மனித உடலில் காணப்படுவது இயல்பானதாகும். இம்முக்குற்றங்களும் ஐம்பூதங்களில் மாற்றம் ஏற்படும்போது இயல்பான விகித அளவிலிருந்து மாறுதல் அடையும்போது நோய் ஏற்படுகிறது.

இதனை அறுசுவைகளில் எந்த சுவை சரியான அளவில் மாறும் என்பதை ஆராய்ந்து ஒப்புரை, எதிருரை, கலப்புரை என்ற நிலைகளில் மருத்துவம் அமைகிறது என்பர்.

## ஒப்புரை

முள்ளை முள்ளால் எடுப்பதுபோல் நோயை உண்டாக்கும் காரணிகளையே அணுத்திவலைகளாக்கி மருந்தாகப் பயன்படுத்தும் சிகிச்சை முறையே ஒப்புரை எனப்படும். திக்குற்ற மிகுதியினால் உண்டாகும் ஒரு நோய்க்குத் தீயினைக் கொண்ட ஒரு சுவையினையே மருந்தாகப் பயன்படுத்துதல் வேண்டும் என்பர். எடுத்துக்காட்டாக பித்தத்தினால் ஏற்படும் வாந்தி புளிப்புச் சுவையுடைய உணவால் குணமாகுதல் ஹோமியோபதி மருத்துவம் இத்தத்துவத்தின் அடிப்படையில் இயங்குகிறது.

## எதிருரை

நோயை உண்டாக்கும் கிருமிகளின்மீது எதிர்விளைவுகளை உண்டாக்கி, அக்கிருமிகளை அழிக்கும் சிகிச்சை முறையே எதிர்ப்புரை எனப்படுகிறது. எக்குற்ற மிகுதியினால் நோய் உண்டானதோ, அதனைத் தணிக்கும் மாற்றுச் சுவையுள்ள மருந்து கொடுத்து நோயைப் போக்குதல், கபத்தின் மிகுதியால் இருமல் ஏற்படும்போது, அதிக வெப்பமுடைய மிளகினைப் பொடித்துப் பாலில் கொடுக்கக்

குணமாதல், தற்போது புகழ்பெற்று விளங்கும் ஆங்கில மருத்துவம் இத்தத்துவத்தின் அடிப்படையில் இயங்கும் மருத்துவ முறையாகும்.

## கலப்புரை

ஒப்புரை, எதிருரை ஆகிய இரண்டும் கலந்தது கலப்புரை மருத்துவமாகும். இக்கலப்புரை மருத்துவ முறையின் தத்துவத்தின் அடிப்படையில் இயங்குவது தான் தமிழ் மருத்துவம் என்றும் நாட்டு மருத்துவம் என்றும் அழைப்பர். இதற்கு எடுத்துக்காட்டாகப் பல செய்முறைகளைக் கூறமுடியும். ஒருநோய் குணமாகப் பல சுவையுள்ள மருந்துச் சரக்குகளும் கலந்து மருந்து செய்யப்படுகிறது.

## நாட்டு மருத்துவத்தின் நான்கு நிலைகள்

வாதம், வைத்தியம், யோகம், ஞானம் என்ற நான்கு நிலைகளையும் விளக்கிக் கூறுவது நாட்டு மருத்துவமாகும். இவற்றை விரிவாக விளக்கி காணலாம்.

## வாதம்(இரசவாதம்)

வாதம் என்பது ஓர் உலோகத்தை மற்றொரு உலோகமாக மாற்றும் வேதியியல் முறை என்றுபொதுவாகக் கூறலாம். இவ்வுலகில் ஆன்மா ஒன்றே தனித்த இயல்புடையது. ஏனைய

உயிருள்பொருள், உயிரில்பொருள் அனைத்தும் ஐம்பூதக் கூட்டுறவிலேயே உருவானவை என்ற தத்துவம் இவ்வாதத் துறையின் அடிப்படைக் கொள்கையாகும்.[95] இவ்வைம்பூதக் கலப்பின் நுண்மையை ஒருவன் அறிவானாயின், அவ்வறிவின்மூலம் உலகப்பொருட்களைத் தனித்தனி மூலக்கூறுகளாகப் பிரிக்கவும், மீண்டும் அவற்றை ஒன்றிணைக்கவும், ஒன்றைப் பிறதொன்றாக மாற்றவும் முடியும் என்று கூறுவர். இத்தகைய ஆற்றலின் குறியீடாகவே 'சாதாரண உலோகத்தைப் பொன்னாக மாற்றும் முறை' என்று இவ்வாதத்துறையைச் சுட்டுவது குறிப்பிடத்தக்கது.

வாதம் கைவரப்பெற்ற நிலையில் ஒருவன் வைத்தியம், யோகம், காயகற்பம் ஆகியவற்றில் பல சித்திகளைப் பெற்று மேன்மையடைய இயலும். இக்காரணம் பற்றியே வைத்தியம், யோகம், ஞானம் என்ற மூன்றுக்கும் முதலாவதாக வாதத்தைக் குறிப்பிட்டிருக்கக்கூடும் என்றும் இவ்வாத வித்தையில் பாதரசம் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது என்றும் கூறுவர். எனவே, இதனை இரசவாதமுறை என்றே வழங்குவது இதன் அமைப்பாக அமைகின்றது.

வாதமுறை, வைத்தியத்துடன் நெருங்கிய தொடர்புடையது. மரஇனம் மற்றும் உயிரினங்களைக் கொண்டு செய்யப்பெறும் மருந்துகளின் ஆற்றல், ஒரு குறிப்பிட்ட எல்லைக்குள் அமைவதோடு, குறிப்பிட்ட கால அளவில்

செயலிழந்துவிடுகின்றது. இந்நிலையில், உலோகங்கள், தாதுக்கள், முதலியன நெடுநாள் அழியாது நிலைத்தல் கண்டு, அவற்றை மருந்தாக்கி உட்கொள்வதன்வழி இவ்வுடலையும் நெடுநாள் நிலைக்கச் செய்யவியலும் என்று உணர்ந்தனர் என்று கூறுவர். அவ்வாறு உலோகம் முதலியவற்றால் செய்யப்பெற்ற மருந்துகள் ஆற்றலுடையனவா? என்றறிய அவற்றைச் சாதாரண உலோகங்களில் சுருக்கக்கொடுத்து ஆராய்ந்தனர். அதன்மூலம் அவை பொன், வெள்ளி முதலான உயர்ந்த உலோகங்களாக மாறுவதைக் கொண்டு அவற்றின் தகுதியை அளந்தனர். இவ்வாறு சாதாரண உலோகங்களை உயிர்ந்தனவாக மாற்றும் மருந்துகள் அழியக்கூடிய இயல்புடைய இவ்வுடலையும் அழியாது நிலைபெறச் செய்விப்பன என்பதை அறிந்திருந்தனர்.[96] எனவே, சித்தர்தம் வாதமுறை பொன்னாசை கருதியதன்று, உடலைக் காப்பதையே பொருளாகக் கொண்டது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இரசவாதமுறையில் ஈடுபடுவோர் வெற்றிபெறுதல் எளிதன்று. அவர்கள் வாதமுறையின் முடிவில் தோல்வியைத் தழுவினாலும் இவ்வாதமுறையில் பெற்ற பயிற்சியால் வைத்தியத் துறையில் தேர்ச்சியுடையோராகின்றனர். இரசவாதத்துறை, முறையால் வேறுபட்டதாயினும் உடலைக் காக்கும் நோக்கத்தோடு, மருத்துவத்துறையோடு ஒன்றி விளங்குவதால் இவ்வாதத்துறையின் முடிவு வைத்தியத்துறையைத்

தொடக்கமாகக் கொள்கிறது. இவ்வுண்மையை விளக்குவனவாகவே,

'வாதம் வைத்தியத்துக்காதி',
'வாதி மகன் வைத்தியன்',
'வாதி கெட்டு வைத்திய வானான்',

என்ற பழமொழிகளில் காணமுடிகின்றன.

## யோகம்.

யோகம் என்பது உடலைப் பயன்படுத்தி அதன்மூலம் உள்ளத்தைப் பயன்படுத்தக் கூடிய செயலை யோகம் என்பர். யோகம் என்பதற்கு இணைதல், இரண்டறக்கலத்தல் என்ற பொருளுமுண்டு.[97] ஆன்மாவும் இறைவனும் ஒன்று கூடுதலாகிய நிலையை அடைய உதவும் வழிமுறைகள் யோகம் என்று ஆகுபெயராகக் குறிக்கப்பெறுகின்றன. மேலும் நாட்டு மருத்துவர்கள் யோக முறைகளால் உடலையும், உயிரையும் அழியாமல் வைத்திருக்க முடியும் என்று நம்பினர். யோக முறைகளை மேற்கொள்வதால் மனதையும், உடலையும் ஒருமுகப்படுத்த முடியும். யோக முறைகளைக் கடைப்பிடிப்பது கடினமாகயிருந்தாலும், கடைப்பிடித்தால் சான்றோர் எனப் பலராலும் போற்றப்பட முடியும் என்பர். யோக முறைகளைப் பற்றி,

'இயமம் நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணா யாமம்பிரத் தியாகாரஞ்
சயமுறு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே'[98]

என்றுதமிழ் மூவாயிரச் செய்யுள் விளக்குகிறது. யோக முறைகள் நல்ல எண்ணங்களைக் கடைபிடிக்கும் இயமம் நன்னடத்தைக் கொண்டு வாழும் நியமம் அசையாமல் அமர்ந்தபடி மனதை ஒருமுகப்படுத்தும் ஆசனப்பயிற்சி, மூச்சுப்பயிற்சி செய்யும் பிராணாயாமம், ஐம்புலன்களை அடக்கி மனதை ஒருவழிப்படுத்தி, பிற காரியங்களில் எண்ணம் போகாதிருக்கச் செய்யும் பிரத்தியாகாரம், மனதைத் தன் வசமாக்கி, ஒரு பொருளைப் பற்றியே எண்ணும் தாரணை, குறித்த ஒரு பொருள் பற்றியே அசைவற்ற நிலையான சமாதி ஆகிய எட்டு வகையான அடிப்படைக் கொண்டது என்று குறிப்பிடுவர். யோகாசனப் பயிற்சி இன்று நோய் தீர்க்கும் முறையாகவே உலகெங்கும் கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றது.

## ஞானம்

முக்காலமும் உணர்ந்தவன் ஞானி என்று சித்தர்கள் அழைக்கப்படுகின்றனர். சித்தர்களால் கடைப்பிடிக்கப்பட்டு வந்த மார்க்கம் ஞானமார்க்கமாகும். ஞான பெருமளவு மனிதனைப் பக்குவப்படுத்தும்போது, மனதிற்கு மருத்துவமாகிவிடும் என்பர்.

உலக உயிர்கள் அனைத்துள்ளும் மனிதன் ஒருவனுக்கே உடலின்கண் அரியதொரு சக்தி அமைந்து விளங்குகின்றது. இச்சக்தியால் மனிதன் கடவுளுக்குச் சமமானவனாகக்

கருதப்படுகிறான். மனிதனுள் இயல்பிலேயே அமைந்துள்ள இச்சக்தி மாயையினால் மறைக்கப்பட்டு இருக்கின்றது. அந்த மாயையாகிய தடை அவனை விடுபேறு அடைவதற்குரிய வழியில் செல்லவொட்டாமல் தடுக்கும். மனிதன் மாயையாகிய அத்தடையைத் தன் அறிவால் வென்று விலக்கிய நிலையில் அச்சக்தியானது முழுவலிமையுடன் அவனிடத்தே வெளிப்பட்டுத் தோன்றும் இந்நிலையே 'ஞானம்' எனப்படும்" இது 'தன்னைத் தானறிதல்' என்றுரைப்பர்.

வாதம் கைகூடி, வைத்தியத்தில் முழுமைபெற்ற நிலையில் உடலுக்கு உளதாகும் நோய், மரணம், மூப்பு முதலான அச்சங்களைத் தவிர்த்து அதன்மூலம் யோகப்பயிற்சி மேற்கொண்டு ஆன்மாவை ஒருநிலைப்படுத்தி, மாயையாகிய தடையை வென்று நீக்கித் தன்னைத் தானறிந்த நிலையில் ஆன்மா இறைவனோடு ஒன்றுதலாகிய ஞானம் கைக்கூடும் என்பது இவற்றால் பெறப்படுகின்றது.

## நாட்டுமருத்துவத்தின் சிறப்புகள்

நவீன மருத்துவத்துறையில் விஞ்ஞான வளர்ச்சிதான் முதன்மையானதாகக் காணப்படுகின்றது. ஆனால் நாட்டுமருத்துவத்தில் மெய்ஞ்ஞானமும், விஞ்ஞானமும் ஒன்றாக இணைக்கப்பட்டுள்ளது. 'சித்தர்கள் இயற்கையில் நிகழும் சில நிகழ்ச்சிகளைப் பெற்று சில கோட்பாடுகளை நிறுவினர் என்பர்.

நவீன அறிவியல் அறிஞர்கள் ஒரு கோட்பாட்டை அல்லது ஒரு வரையறையை எடுத்துக்கொண்டு அதற்கான சோதனைகள் செய்து முடிவில் நிகழ்ச்சிகளைப் பெற்று உண்மை என்பதை உறுதி செய்கின்றனர். சான்றாக மெய்ஞ்ஞானம் என்பது லென்சில் சூரிய ஒளியைத் திரட்டி ஒரு புள்ளியாக்குவது போன்றது. விஞ்ஞானம் என்பது சூரிய ஒளியில் இருந்து கதிர்கள் விரிந்து செல்வதைப் போன்றது. இதன்மூலம் விஞ்ஞானமும், மெய்ஞ்ஞானமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையது என்பது புலப்படுகிறது.[100] இதன் அடிப்படையில் தான் நாட்டு மருத்துவம் வளர்ச்சி பெற்றுள்ளது என்பர். நாட்டு மருத்துவம் பல சிறப்பு அம்சங்களை தன்னகத்தே கொண்டுவிளங்குகிறது.

நிலம், நீர், காற்று, தீ, ஆகாயம் என்ற ஐம்பெரும் பூதங்களின் அடிப்படையில் தோன்றும் நோய்களின் மூலக்காரணம் அறிந்து சிகிச்சையளித்தல் நாட்டு மருத்துவத்தின் சிறப்பு அம்சங்களாகும். எனவே, மேல்நாட்டு மருத்துவ முறைகளில் நீரினில் பரவுபவை, காற்றினால் பரவுபவை, கிருமிகளால் உண்டாகும் நோய் என்று நோய்கள் பிரிக்கப்படுகிறது. அனைத்து நோய்களும் மற்றொரு உயிரின் உடலுக்குள் செல்வதாலே தோன்றுகிறது என்ற வரையறை உள்ளது. உடலுக்குள் செல்லும் உயிரினக் கொல்வதற்கான மருந்து கொடுக்கப்படுகிறது. ஆனால் நாட்டுமருத்துவத்தில் கிருமிகள் மனிதனின் உடலுக்குள் நுழைவதற்கும், வாத, பித்த,

கப குற்றங்களின் அளவு மாறுபடுதலே மூலகாரணம் என்று கூறப்படுகிறது. எனவே, முக்குற்றங்களின் அளவை சரியாகக்கினால் நோய் குணமாகும் என்ற அடிப்படையில் நோயின் மூலகாரணம் வேரோடு அகற்றப்படுகிறது.

உடலுக்கும், உள்ளத்துக்கும் மருத்துவம் செய்யும் சிறப்புடையது நாட்டு மருத்துவமாகும். உடலைப் பிணிக்கின்ற முக்குற்றங்களிலிருந்தும், உள்ளத்தைப் பிணிக்கின்ற மும்மலங்களாகிய ஆணவம், கன்மம், மாயை என்பவைகளிலிருந்து விடுதலை பெறுகின்ற வழிமுறைகளைக் கற்றுத் தருவது நாட்டு மருத்துவமாகும். உள்ளம் பிணிபட்டிருந்தால் உடலும் பிணிபட்டு விடும். இதனை,

'மனமது செம்மையானால் மந்திரஞ் செபிக்க வேண்டா
மனமது செம்மையானால் வாயுவை உபர்த்த வேண்டா
மனமது செம்மையானால் வாசியை நிறுத்த வேண்டா
மனமது செம்மையானால் மந்திரஞ் செம்மையாமே'[10]

என்ற சித்தர் பாடல் குறிப்பிடுகிறது. உடலும், உள்ளமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையவை. இதனை இக்கால மருத்துவர்களும் ஏற்றுக்கொண்டுள்ளனர். கி.பி.2000ல் அனைவருக்கும் ஆரோக்கியம் என்ற கொள்கையை உலக சுகாதார நிறுவனம் ஏற்படுத்தியுள்ளது. இதன் அடிப்படையில் உலகெங்கிலும் காணப்படும் பல்வேறு மருத்துவமுறைகள் கொடிய நோய்களைக் குணப்படுத்துவதற்கான ஆய்வுகளை மேற்கொண்டு வருகின்றன. உலகிலுள்ள பிற மருத்துவ

முறைகள் அனைத்தும் நோய்க்கு மட்டுமே மருத்துவம் என்ற அடிப்படையில் செயல்படுகிறது. ஆனால் சித்த மருத்துவமாகிய நாட்டு மருத்துவம் உடலுக்கும், உள்ளத்துக்கும் மருத்துவம் செய்யக் கூடியதாகக் காணப்படுகிறது. இதனை, திருமூலநாயனாரின் 'உடம்பார் அழியின் உயிரார் அழிவர்'[102] என்ற பாடல்வரி மெய்ப்பிக்கின்றது.

நவீன மருத்துவ முறைகளில் நோய்க்காகும் மருந்துச் செலவைவிட, நோயினைக் கணிக்கப்பயன்படுத்தும் நவீனகருவி முறைகளிலே அதிகமான பணம் செலவழிந்துவிடுகிறது. ஆனால் நாட்டு மருத்துவர்கள் மனிதனின் உடலில் ஏற்படும் நோய்களைப் பற்றி அறிய எட்டு வகையானத் தேர்வு முறைகளைப் பயன்படுத்துகின்றனர். அகத்திய முனிவரின் வைத்திய இரத்தினச் சுருக்கம் என்ற நூலில், நாடி நிதானம் என்ற பகுதியில் நாடி இலக்கணத்தைப் பற்றி,

> 'நாடியால் முன்னோர் சொன்ன நற்குறி குணங்களாலும்
> நீடிய வழியினாலும் நின்ற நாட்குறிப்பினாலும்
> வாடிய மேனியாலும் மலமொடு நீரினாலும்
> கூடிய வியாதி தன்னைச் சுகம்பெற அறிந்த சொல்லே'[103]

எனக் குறிப்பிடுகின்றார். மனிதனின் நாடியைச் சோதனை செய்வதின் மூலம்தான் நோய்களையும், அவற்றின் பிறநிலைகளையும் அறிந்து மருத்துவம் செய்ய முடியும் என்பது நாட்டு மருத்துவத்தில் மட்டும் உண்டு என்பர். 'மனிதனின் வாழ்நாள் வாதம், பித்தம், கபம் என்னும் மூன்று கூறுகளின் அடிப்படையில் நிகழுகிறது. முதல் கூறில் வாதமும்,

நடுப்பகுதியில் பித்தமும், இறுதியில் கபமும் செயல்படுகின்றன. இதை நாடியின் மூலம் சித்தர்கள் அறிந்தனர். கட்டை விரலுக்குக் கீழுள்ள மணிக்கட்டின் மேற்புறம் ஆள்காட்டி விரல், நடுவிரல், மோதிரவிரல் ஆகிய மூன்று விரல்களையும் வைத்து மெதுவாக அழுத்திப் பிடிக்க மூன்று விரல்களில் மூன்று விதமான துடிப்புகள் தெரிய வரும். ஆள்காட்டி விரலின் நுனியில் தோன்றும் துடிப்பிற்கு வாதம்(காற்று) என்றும், நடுவிரலின் நுனியில் தோன்றும் துடிப்பிற்குப் பித்தம் (நெருப்பு) என்றும், மோதிர விரலின் நுனியில் தோன்றும் துடிப்பிற்குக் கபம்(தண்ணீர்) என்றும் பெயரிட்டுள்ளனர்.[104] விரல்களின் நுனியில் தோன்றும் துடிப்பிற்குப் பித்தம் (நெருப்பு) என்றும், மோதிர விலரின் நுனியில் தோன்றும் துடிப்பிற்குக் கபம்(தண்ணீர்) என்றும் பெயரிட்டுள்ளனர்.[104] விரல்களின் நுனியில் காணப்படும் துடிப்புகளை வைத்து நோய்களைக் கண்டறிந்துள்ளார்கள். மேலும் நோயாளியின் உடலின் குளிர்ச்சியையும், வெம்மையையும் பற்றி, தொட்டு, தடவி, ஊன்றி, அழுத்தி, தட்டி நோயின் தன்மையை அறிவர். இதற்கு தொட்டறிதல் என்று பெயர். நோயாளியின் குடும்ப வரலாறு, நோயாளியின் வரலாறு, நோயின் வரலாறு, உடல் வன்மை மென்மை, செரிப்புத் தன்மை, இயற்கை உணவு, தொழில் பற்றிக் கேட்டறிவர் நோயின் கால அளவு, வயது, தோன்றிய காலம், இடம், வாழ்விடத்தின் சூழ்நிலை ஆகியவற்றை அறிவர்.

நோயாளியின் உணர்வை, நோயாளியின் ஐம்புலன்களின் உணர்ச்சி, நிலை, மணம், சுவை, கேள்வி, காட்சி ஆகியவைகளின் மூலம் அறிந்து கொள்வர். நோயாளியின் இதயத் துடிப்பு, நுரையிரலின் இயக்க ஒலி, விக்கம், நீர்க்கோர்வை, இருமல் பற்றி தெரிந்து கொள்வர். நோயாளியின் கண், மூக்கு, தோல், செவி முதலிய உறுப்புகளின் இயல்புகள், நிறம் போன்ற பண்புகளை அறிவர். கழிவுப் பொருளாகிய மலம், நீர், வியர்வை பற்றியும், மலத்தின் நிறம், நுரை, இறுகல், இளகல், நீரின் நிறம், எடை, மணம், நுரை முதலியவைகளைப் பற்றி அறிவர். இவ்வாறு நாட்டு மருத்துவர்கள், நோயாளியின் உடலை எட்டு வகையான முறைகளில் சோதனைகளை மேற்கொள்கின்றார்கள் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

மேற்கண்டவைகளை தவிர மிகவும் எளிய முறையில், நீரில் நல்லெண்ணெய் விட்டுச் சோதனை செய்யும் முறையும் நாட்டு மருத்துவத்தில் உண்டு. ஒரு கண்ணாடிக் குடுவையில் விடியற்காலையில் வெளியேறும் சிறுநீர் எடுத்து, அதில் இரண்டு சொட்டு நல்லெண்ணெயை விடும்போது, எண்ணெய்த்துளி பாம்பு போன்ற தோற்றமுடையதாக இருந்தால் வாதநோய் என்றும், மோதிரம் இடைவிட்ட வட்டம் போன்ற தோற்றத்தையுடையதாக இருந்தால் பித்தநோய் என்றும் எண்ணெய்த் துளி முத்துபோல் திரண்டு நின்றால் கபநோய் என்றும் கூறுகின்றனர். 'சிறுநீரில் விடப்பட்ட எண்ணெயத்துளி





சிறுநீரில் வேகமாகப் பரவினால் உடலிலுள்ள நோய் விரைவில் குணமாகும். மெதுவாகப் பரவினால் நோய் குணமாக தாமதமாகும். துளி அப்படியே இருப்பின் நோய் தீராது. எண்ணெய்த்துளி சிதறினாலோ, மூழ்கி விட்டாலோ மரணமே முடிவு என்பதை அறிந்து கொள்ள முடியும்[105] இவ்வாறு நோயாளியை முழுவதும் ஆராய்ந்து மருந்தளிப்பதால் நாட்டுமருத்துவம் ஒரு நிறைவு பெற்ற மருத்துவம் என்பர்.

நாட்டு மருந்துகள் நிதானமாக நோய்களைக் குணப்படுத்தக் கூடியதாகக் காணப்பட்டாலும், நிரந்தரமாகக் குணம் தரக்கூடியது என்பர். நோய்களை வேரோடு அழிக்கும் தன்மையுடையது. உதாரணமாக, மூட்டு வலிக்காக, நாட்டு மருந்துவரை நாடிச் சென்றால், தொடர்ந்து இருபது நாட்கள் மருந்து உண்ணவேண்டும் என்று கூறுவர். உண்ணுவதற்கும், மூட்டுகளில் பூசுவதற்கும் மருந்து தருவர். உண்ணுவதற்கான மருந்தைத் தேனுடன் உண்ண வேண்டும் என்றும், மருந்துஉண்ணும்போது வாயுத் தொல்லை ஏற்படுத்தும் உணவுகளையும், புளிப்பையும் உண்ணக் கூடாது என்றும் கூறுவர். மருத்துவரின் ஆலோசனையை முற்றிலும் கடைபிடித்துமருந்து உண்டால் மூட்டுவலி வேரோடு அகன்று போய்விடுகிறது. மேலும் நாட்டுமருந்துகள் புடமிடும் முறையில் தயாரிக்கப்படுவதால் மருந்துகளின் ஆற்றல் கெடாமல் இருக்கிறது. பக்க விளைவுகளை ஏற்படுத்தாத இயற்கைப் பொருட்களால் மருந்துகள் தயாரிக்கப்படுகிறது.

சித்த மருத்துவத்தில் ஒருநோய்க்கு ஒரே மருந்து என்ற நிலை எந்த நோய்க்கும கிடையாது. ஒரு நோய்க்குப் பல மருந்துகள் கூறப்பெறுவதே சித்த மருத்துவத்தின் தனிச்சிறப்பு. அவ்வமயம், ஒரு மருந்து பல நோய்களைக் குணப்படுத்தும் திறம் வாய்ந்தது ஆகும்.

மேற்க்கூறிய வழிமுறைகளோடு கலாச்சாரம், பண்பாடு, மதம், மொழி இவற்றோடு தொடர்புடைய ஒரு மருத்துவம் நாட்டுப்புற மருத்துவமாகும்.

## நாட்டு மருத்துவத்தின் மூன்று நிலைகள்

நாட்டு நருத்துத்தின் தனிப்பெரும் சிறப்பாகக் காணப்படுவது, நாட்டு மருத்துவம், தேவருரை, மக்களுரை, குளுரை என்னும் மூன்று நிலைகளில் செய்யப்படுவதாகும். இதனை,

> 'சூதகந்தி தாதுபற்பஞ் சொன்ன நாட்டார் சிகிச்சை
> ஓதரிய மூலியிம்மமுன் னோர்ச் சிகிச்சை - வேதடரும்
> சத்திரசா ராக்கினிநி சாசரச்சி கிச்சையென்றே
> முத்திரத்த தாகும் மொழி'[106]

என்ற தேரையர் பதார்த்த குணசிந்தாமணியால் அறியலாம்.

## தேவருரை

உலோகப் பொருட்களால் செய்யப்படும் கட்டு, களங்கு, பற்பு, செந்தூரங்கள் போன்ற உயரிய மருந்துகளால் செய்யப்படுவதாகும். இது தேவ மருத்துவம் என்றும் வழங்கப்படுகிறது.

## மக்களுரை

மூலிகைகளின் சாறு, குடிநீர், சூரணம், மாத்திரை முதலியவைகளைக் கொண்டு செய்யப்படுவதாகும். இது மனித மருத்துவம் என்று வழங்கப்படுகிறது.

## சூளுரை

அறுவை, கீறல், கட்டுகை, சலாகை, கொம்பு கட்டல் ஆகியவை அறுவை மருத்துவக் கருவிகளால் செய்யப்படுவதாகும்.

மேற்கண்ட மூன்று மருத்துவ முறைகளிலும் முதலில் மனித மருத்துவத்தைத்தான் முதலில் பயன்படுத்துவார்கள். மனித மருத்துவம் பலன் அளிக்கவில்லையென்றால் தேவருரையையும், தேவருரையும் பலன் அளிக்கவில்லையென்றால் சூளுரையையும் பயன்படுத்துவார்கள். நோய் ஏற்பட்டவுடன் அறுவை சிகிச்சை முறைகளைப் பயன்படுத்தாமல், தகுந்த உள் மருந்துகளால் குணப்படுத்த முடியுமா என்பதைக் கொடுத்துப் பார்த்து, முடியாத நிலைகளில் மட்டும் அறுவை சிகிச்சையைப் பயன்படுத்துதல் என்பது மிகவும் பயன்தரக்கூடியதாகும் என்பர். இதனையே,

'வேரு பாரு தழை பாரு மிஞ்சினக்கால்
மெல்ல மெல்லப் பற்பம் செந்தூரம் பாரே'[107]

என்ற பாடல் வரி புலப்படுத்துகிறது.

## உணவே மருந்து, மருந்தே உணவு

உணவே மருந்து, மருந்தே உணவு என்பது நாட்டு மருத்துவத்தின் சிறப்புக்குரியது. இந்தப் பண்பு தமிழர் வீடுகளில்

பாட்டி வைத்தியம் என்ற பெயரில் இன்றும் வழக்கத்தில் உள்ளது. அன்றாடம் மக்கள் உண்ணும் உணவில் சேர்க்கும் காய்கறி, கடுகு, மிளகு, சீரகம், பூண்டு, மஞ்சள், சுக்கு, திப்பிலி யாவுமே மருத்துவ குணங்களைக் கொண்டது. மிளகு உணவிலுள்ள நஞ்சினை நீக்குகின்றது. சீரகம் பித்தத்தை நீக்கி உணவின் சீரண சக்தியை அதிகரிக்கின்றது. வெள்ளை பூண்டு உடலில காணப்படும் அதிகமான கொழுப்பைக் குறைக்கின்றது. 'கடுகு உயிர்ப்பாற்றலையே அழிக்கும் வல்லமை கொண்டது. மிளகு சளியை உறுப்புகளில் தங்கவிடாமல் வெளியேற்றும். மஞ்சள் கிருமிநாசினியாகப் பயன்படும். சுக்கு, திப்பிலி யாவும் உடலில் கழிவுகளை வெளியேற்றும் ஆற்றல் கொண்டவை'[108] மனிதனின் உடல் அன்றாடம் உண்ணும் உணவில் கீரைகளை அதிகம் பயன்படுத்த வேண்டும் என்றும், மருத்துவ அறிஞர்கள் குறிப்பிடுகிறார்கள். பருப்பைச் சமைக்கும்போது பெருங்காயமும், நிலக்கடலை உண்ணும்போது வெல்லத்தைத் தின்பதும், கருணையைச் சமைக்கும்போது புளி சேர்ப்பதும், முட்டைக்கு மிளகு சேர்ப்பதும் உணவே மருந்து, மருந்தே உணவு என்பதாகும் என்பர். மேலும், நாட்டு மருந்து உண்ணும் காலங்களில் சில உணவு பொருட்கள் மருந்தின் தன்மையைக் கெடுத்துவிடும் என்ற அடிப்படையில் அத்தகைய உணவை விலக்க வேண்டும் என்பர். குறிப்பாக உப்பு, புளி, காரம் ஆகிய மூன்றையும் பத்தியச் சுவையாக சொல்வர். ஏனென்றால் புளிப்புச்

சுவை அமிலத்தை உண்டாக்கும். அமிலம் உலோகத்தைக் கரைக்கும் தன்மையுடையது. எனவே உணவு அமிலத்தன்மையில்லாமல் இருக்க வேண்டும். காரம் சீரண மண்டலத்தை வெளிப்படுத்திவிடும். உப்பால் உணவு நஞ்சாகி இதயநோய் போன்றவற்றை உண்டாக்கும் என்பது நாட்டு மருத்துவர்களின் நம்பிக்கையாகும்.

## பிற மருத்துவ முறைகளின் வளர்ச்சிக்கு காரணம் நாட்டு மருத்துவம்

பிற மருத்துவ முறைகளின் வளர்ச்சிக்கு நாட்டு மருத்துவத்தின் பிரிவுகள் துணை செய்துள்ளன. எடுத்துக்காட்டாக, இயற்கை மருத்துவம், நாட்டு மருத்துவர்களின் உணவே மருந்து என்ற கொள்கையினையும், ஆசனப் பயிற்சி, மூச்சுப் பயிற்சி முதலியவற்றையும் உள்ளடக்கித் தனி மருத்துவமாக வளர்ந்துள்ளது. சீன மத்துவமுறைகள்யாவும் வர்மக் கலையிலிருந்து வளர்ந்தவையாகும். நவீன மத்துவத்தில் பயன்படும் உடற்பயிற்சி முறைகள் நாட்டு மருத்துவத்தில் கூறப்பட்டவையாகும். கடல் உயிரியல் மருந்துத் துறையின் முன்னோடியாக நாட்டு மருத்துவம் திகழ்கிறது என்பர். 'இன்று கடல்வாழ் பிராணிகளிடமிருந்து மலட்டுத்தன்மை, புற்றுநோய், இதயநோய், தோல்நோய் போன்ற இராஜவியாதிகளுக்கு மருந்து இருப்பதை மேல்நாட்டு அறிவியலறிஞர்கள்

கண்டுபிடித்துள்ளனர். ஆனால் 2000 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த சித்தர்கள் கடல் பிராணிகளான பவளம், முத்து, பலவகை, மீன்கள் போன்றவைகளிலிருந்து மருந்து செய்து மேற்கண்ட நோய்களுக்குப் பயன்படுத்தியுள்ளார்கள்'[109] என்பர். எனவே கடல் உயிரியல் மருந்துத் துறையின் வளர்ச்சிக்கு சித்தர்கள் வழிகாட்டிகளாகத் திகழ்ந்துள்ளார்கள் என்பர்.

## நாட்டு மருத்துவம் வளர்ச்சிப் பெறாமல் இருப்பதற்கானக் காரணங்கள்

பல சிறப்பு பண்புகளை உடையதாக நாட்டு மருத்துவம் காணப்பட்டாலும் அதன் வளர்ச்சிக் குன்றிதான் காணப்படுகிறது. நாட்டு மருத்துவத்தைச் சித்தர்கள் சமுதாயத்தின் நலனுக்காகக் கூறியிருக்கிறார்கள். மருத்துவத்தின் பயன்கள் ரகசியமாக பாதுகாக்கப்பட்டுள்ளதால் நாட்டு மருத்துவம் வளர்ச்சிப் பெறமுடியவில்லை. மருத்துவ மூலிகைகள், மருந்துச் சரக்குகளைக் கண்டுபிடிப்பதில் சிரமம் ஏற்படுகிறது. டாக்டர் உ.வே.சா அவர்கள் 1927ஆம் ஆண்டு சென்னை பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய 'கலைகள்' என்னும் தலைப்பில் அமைந்த உரையில் மலையிலிருந்து கல்லை எடுத்து வந்து தலையில் போட்டால் தலைவலி போகுமென்று ஒரு பாடலில் சொல்லப்பட்டிருக்கிறது. இது குழப்பமாகத் தோன்றும். ஆனால் தலைவலியைப் போக்கக்கூடிய ஒரு செடிக்குக் கல்லை என்பது பெயரலாகும். எனவே மருந்துச் செடிகளை அடையாளம்

கண்பது மிக முக்கியமானதாகும். மருந்துச் செடிகளின் பெயர்களில் ஏற்படும் மயக்கமும், மூலிகைகளைக் கண்டுபிடிப்பதில் ஏற்படும் சிக்கலும் ஏற்படுவதால் மக்கள் நாட்டு மருந்துகளில் அதிக அக்கறையில்லாதவர்களாகக் காணப்படுகிறார்கள்.

நாட்டு மருத்துவத்தில், பத்திய முறைகளும் மெதுவாகக் குணமாக்கும் தன்மைகளும் உடையது. இது தற்கால இயந்திரத்தனமான வாழ்விற்கு முரண்படும் தன்மையாகும். நோய் ஏற்பட்டவுடன் ஒரு ஊசியைச் செலுத்தியோ, அல்லது இரண்டு மாத்திரைகளைச் சாப்பிட்டோ நோயிலிருந்து விடுதலை பெறதான் மக்கள் விரும்புகிறார்கள். எனவே சூரணம், இலேகியம், தைலம் போன்ற மருந்துகளின் பயன்கள் புறக் கணிக்கப்பட்டுள்ளது. நாட்டு மருத்துவர்கள் பணத்தை மட்டும் குறிக்கோளாகக் கொண்டு மருந்து செய்கிறார்கள்.

நாட்டு மருத்துவம் பற்றிய நூல்கள் பல மொழிகளில் மொழி பெயர்க்கப்படாதபடியால் உலகளாவிய மருத்துவமாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை. நாட்டு மருத்துவக் கல்லூரிகளில் பயின்று வெளிவரும் மாணவர்களும், ஆசிரியர்களும், பொருள் சேகரிக்கும் எண்ணத்துடன், நாட்டு மருத்துவத்தை மறந்து, நவின மருத்துவமுறைகளை மேற்கொள்கிறார்கள். பல நல்ல மருத்துவக் குறிப்புகள் அடங்கிய மருத்துவச் சுவடிகள் அழிந்து போய்விட்டது. மேற்கண்ட காரணிகளால் நாட்டு மருத்துவம் வளர்ச்சிப் பெறாமல் காணப்படுகிறது.

## நாட்டு மருத்துவம் வளர்ச்சிப் பெற மேற்கொள்ள வேண்டியவை

நாட்டு மருத்துவத்தின் வளர்ச்சி குன்றிவந்தாலும், அதன் சிறப்பை உணர்ந்த மக்களும், நவீன மருத்துவத்தின் பக்க விளைவுகளைக் கண்டு அஞ்சுவோரும், பணச் செலவைக் கண்டு தயங்குவோரும் தற்போது நாட்டு மருத்துவத்தையே நாடிவரும் நிலை காணப்படுகிறது. இந்நிலையை வளர்ச்சிப் பெறச் செய்வதன் மூலம் நாட்டு மருத்துவத்தின் மறுமலர்ச்சிக் காலத்தை விரைவில் கொண்டு வரமுடியும் என்பர்.

பழங்கால சித்தர்கள் எழுதிவைத்த அறிய மருத்துவக் குறிப்புகள் அடங்கிய சுவடிகளைத் திரட்டி பாதுகாத்து, அவைகளில் மறைந்து காணப்படும் அரிய மருந்துகளைத் தயாரித்து ஆராய்ந்து மக்களுக்கு வழங்க வேண்டும். மருத்துவ அகராதிகள், மறைபொருட் சொல்லகராதிகள் முழுமையாகவும், பிழை நீக்கியும் ஆராய்ந்து வெளியிடப்படுதல் வேண்டும். நாட்டு மருத்துவ நூல்கள், பழமொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டு உலகத்தில் வாழும் அனைத்து மக்களும் பின்பற்றப்பட வேண்டும். மருந்துகளின் செயல்பாடு நவீன மருத்துவக் கண்ணோட்டத்துடன் நிலைநாட்டப்படுதல் வேண்டும். தரமான மருந்து தயாரிக்கும் முறைகள் அடங்கிய புத்தகங்கள் வெளிவருதல் வேண்டும். நோய்களை வேரோடு அறுக்கும் தன்மை, பக்க விளைவுகளற்ற தன்மை, நிரந்தரத் தீர்வு என்ற நிலைகளில் பயன்படுவன நாட்டு மருந்துகள் என்ற

உண்மையைப் பொதுமக்களும் அறியுமாறு அறிக்கைகள், நாளிதழ்கள், வானொலி, தொலைக்காட்சிகளில் விளம்பரம், மாநாடுகள் முதலியவற்றை நடைமுறைப்படுத்தல் வேண்டும். அலோபதி மருத்துவமுறையால் சுகமாகாத ஆஸ்துமா, தோல் நோய்கள், கரப்பான் போன்ற நோய்களை நாட்டு மருத்துவத்தால் குணப்படுத்த முடியும் என்பதைக் கூற வேண்டும். எய்ட்ஸ் நோயால் பாதிக்கப்பட்ட நோயாளிகளின் வாழ்நாட்களை நாட்டு மருத்துவத்தால் அதிகரிக்க முடியும் என்பதைக் ஆணித்தரமாகக் கூறலாம்.

பரம்பரை மருத்துவர்களை ஊக்கப்படுத்தி, அவர்களிடையே வழக்கில் பயன்படுத்தப்படும் அரிய மருத்துவக் குறிப்புக்களை எல்லோரும் பயன்படுத்தும் விதத்தில் பொது மருத்துவமுறைகளாக்குதல் வேண்டும். மூலிகைப் பண்ணைகள் அமைத்துக் கிடைப்பதற்கு அரிய மூலிகைகளை வளர்க்க வேண்டும்.

சித்த மருத்துவக் கல்லூரி மாணவர்களும், ஆசிரியர்களும், ஒப்பீட்டு நிலைக்காகப் பல மருத்துவ முறைகளின் அறிவு பெற்றிருந்தாலும், ஆழ்ந்த நாட்டுமருத்துவ ஈடுபாடுடன் நாட்டு மருத்துவத்தையே செய்து மக்கள் மத்தியில் நாட்டு மருத்துவம் பரவ வழிவகை செய்ய வேண்டும். அரசாங்கமும் மூலிகை மருந்துகளின் தரத்தை அதிகரிக்க வலியுறுத்த வேண்டும். மூலிகை மருந்துகள் வளர்க்கப்பட உலக அளவில் அங்கீகரிக்க

தேவையான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும். சரியான மிகைத் தாவரங்களை கண்டறிதல், மருந்துகள் உற்பத்தி செய்யும் முறைகளை மேம்படுத்துதல், மருந்துகளின் உயிரியல் தன்மைகளில் கவனம் செலுத்த வேண்டும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## நாட்டு மருத்துவமும் பிற கலைகளும்

அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் உண்டு என்பது சித்தர் கண்டறிந்து கூறிய உண்மை. அண்டத்திலுள்ள கோள்களுக்கும் பிண்டத்திலுள்ள உறுப்புகளுக்கும் நெருங்கிய தொடர்பு உள்ளதாகக் கூறுவர். இந்நிலையில் வானிலலாகிய கணிதத்துறை நாட்டு மருத்துவத்தில் இன்றியமையாதது இடம்பெறுகின்றது. மேலும் ஒருவருடைய பிறந்தகால சாதகத்தில் சென்மலக்கினத்திற்கு ஆறாம் வீட்டுக்குரியவனுடைய இயக்கத்தையும், இலக்கினத்திற்கு உரியவனுடைய இயக்கத்தையும் கணித்துக் கூறுமளவில் அவருக்கு ஏற்படக்கூடிய நோய்களையும் அவற்றின் வன்மை, மென்மைகளையும் கண்டறியலாமென்பர்.[110] எனவே, சோதிடக்கலையும் மருத்துவத்தோடு நெருங்கிய தொடர்புடையது. அன்றியும் மனிதனுக்குத் தோன்றும் நோய்கள் யாவும் தீயசக்திகள் மற்றும் சிரணக் கோளாறுகளினால் ஏற்படுவன என்றும் அவற்றைப் போக்க மாந்திரகம் மற்றும்

மனோவசியக் கிரியைகளிலும் மருத்துவர் தேர்ச்சி பெற்றவராக விளங்கவேண்டும் என்றும் கூறுவர்.[111] மேலும், வேதியியல், பஞ்சபட்சி சாத்திரம், சர சாத்திரம் முதலானவையும் மருத்துவன் அறிந்திருக்கவேண்டிய கலைகளாகக் குறிப்பிடப் பெறுகின்றன.[112] எனவே, நாட்டுமருத்துவம் சோதிடம், மந்திரம், வானியல், பஞ்சபட்சி சாத்திரம், சர சாத்திரம் முதலான பல கலைகளோடு தொடர்புடையதாக விளங்குகின்றது.

## தொகுப்புரை

இவ்வியலின் முடிவாக நாட்டுப்புறவியலில் நாட்டுப்புற மருத்துவம் சிறந்து விளங்குகின்றன. பண்டை காலத்தில் சித்தர்கள் சித்தி பெற்றவர்களாக இருந்தாலும் சித்த மருத்துவத்திற்கு அடிக்கல் நாட்டியவர்களே எனக்கருதலாம்.

மருத்துவத்தில் பல வகைகள் உள்ளன. அவற்றுள் பழமை வாய்ந்ததும், சிறப்புக்குரியதும் சித்தமருத்துவமே என்பது தெரியவருகின்றது. ஆதி மனிதன் வாழ்ந்த காலத்திலேயே நாட்டுப்புற மருத்துவம் தோற்றம் பெற்றன என்பது அறியப்படுகின்றன. மந்திரச் சடங்குகள் இன்றும் ஒருவகை மருத்துவ முறையாகக் கருதப்படுகின்றன. சித்தமருத்துவமும், தமிழ் மருத்துவமே என்பது தெளிவுபட அறியமுடிகின்றது. உணவே மருந்து; மருந்தே உணவு என்பது முடிவாக அறியப்படுகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. இரா. குமாரசாமி, திருக்குறள் மூலிகைகள், ப.1
2. மேலது, ப.1
3. வி. சரசுவதி, நாட்டுப்புறப் பாடல்கள் சமூக ஒப்பாய்வு, ப.76
4. Don Yoder, Folk Medicine, P. 195
5. English - Tamil Dictionary, Madras University
6. சு. சண்முக சுந்தரம், நாட்டுப்புறவியல், பக்.13-14
7. சு. சக்திவேல், நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம், ப.7
8. சு. சண்முக சுந்தரம், நாட்டுப்புறவியல், ப.6
9. மேலது, ப.18
10. மேலது, ப.21
11. வில்லியம் பாஸ்கம், நாட்டுப்புறவியல், ப.14
12. மேலது, ப.7
13. மேலது, ப.13
14. சு. சண்முக சுந்தரம், மு.நூ, ப.15
15. சு. சக்திவேல், மு.நூ, ப.8
16. மேலது, ப.118
17. ஆ. திருநாகலிங்கம், புதுச்சேரி நாட்டுப்புறக் கதைகள் காட்டும் சமுதாயம், ப.158
18. சு. சக்திவேல், மு.நூ. ப.277
19. வாழ்வியல் களஞ்சியம், தொகுதி-4, ப.3094
20. இரா. குமாரசுவாமி, திருக்குறள் மூலிகைகள், பக்.10-11
21. N. Kandaswamy Pillai, History of Siddha Medicine, Pp.29-35
22. டாக். இரா. மாணிக்கவாசகம், நம்நாட்டுச் சித்தர்கள், ப.36
23. 'பத்தரொடு சித்தர் பயில்கின்ற பழூரே' திருஞானசம்பந்தர், தேவாரம், பா.2.234.1
24. பிங்கல நிகண்டு, பா.92

25. டா.இரா. மாணிக்கவாசகம், மு.கு.நூ. ப.27

26. மேலது, ப.40

27. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.643

28. மேலது, ப.643

29. மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு, 14ஆம் நூற்றாண்டு, ப.339

30. டாக். இரா. மாணிக்கவாசகம், சித்தர்கள் டாக்டர் ந. சஞ்சீவி (தொகு), பெருந்தமிழ், ப.114

31. திரு.வி.க., சித்த மார்க்கம், பக்.11-12

32. கு. அருணாசலக் கவுண்டர், முன்னுரை, ந. கோவேந்தன்பதி, சித்தர் பாடல்கள், ப.4

33. N. Kandaswamy Pillai, Op.Cit, Pp.244-245

34. மு.வை. அரவிந்தன், முன்னுரை, சித்தர்பாடல்கள், பக்.7-8

35. சி.கோ. தெய்வநாயகம், சித்தர் சிந்தனைகள், பக்.1-2

36. க. நாராயணன், சித்தர் தத்துவம், ப.34

37. டாக். இரா. மாணிக்கவாசகம், மு.கு.நூ., பக்.47-48

38. மேலது, பக்.40-46

39. Tamil Lexicon, Vol-iii, p1146

40. டா. இரா. மாணிக்கவாசகம், மு.கு.நூ., ப.53

41. தொல்காப்பியம், புறத்திணை, ப.122

42. தொல்காப்பியம், புறத்திணையியல், நூ.20, நச்சர் உரை, ப.178-179, க.வெள்ளைவாரணர், முன்னுரை, சித்தர்கள் சிந்தனைகள், சி.கோ. தெய்வநாயகம், நூ.ஆ., பக்.1-2

43. திரு. பொ. வே. சோமசுந்தரனார், குறுந்தொகை உரை ஆசிரியர், பா.130., ப.275

44. மணிமேகலை, ஆபுத்திரன் நாடடைந்த காதை, ப.225

45. திரிகூடராசப்பக் கவிராயர், குற்றாலக் குறவஞ்சி, பா.சா

46. பாரதியார், கவிதைகள், ப.268

47. தொல்காப்பியம், மரபியல், நூ. 26.6

48. N. Kandaswamy Pillai, Op.Cit, P.244

49. Ibid., P.244

50. டாக். இரா. மாணிக்கவாசகம், மு.கு.நூ., ப.44

51. தன்வந்திரி, ப.200, பா.37

52. சாமி. சிதம்பரனார், சித்தர் கண்ட விஞ்ஞானம், ப.25

53. க.சு. உத்தமராயன், சித்த மருத்துவாங்கச் சுருக்கம், சென்னை, 1983, ப.3

54. சீத்தாராம் சுப்பிரமணியம், சித்த மருத்துவ சிந்தாமணி, பக்.14-15

55. கலை களஞ்சியம், தொகுதி-4, பக்.643-645

56. டாக். எஸ். ஸ்ரீகுமார், தமிழ் இலக்கிய வரலாறு, ப.237

57. T.V.S. Dictionary, Vol.3, p.2081

58. Dr. K. Natarajan, Siddta Syatem of Yoga and Medicine, Lecture Dated.15.12.1988

59. டாக்டர். சு. உத்தமராயன், தோற்றக்கிரம ஆராய்ச்சியும் சித்த மருத்துவ வரலாறும், பக்.2-3

60. இரா. நிர்மலாதேவி (பதி) கருவூரார் பலதிரட்டு, ப.10

61. மே.சீ. சுப்பிரமணியன், சித்த மருந்தியல், ப.6

62. டாக். எஸ். சிதம்பரதாணு பிள்ளை, சித்த மருத்துவ அமுது, ப.7

63. சாமி. சிதம்பரனார், மு.கு.நூ., ப.25

64. டாக். துர்க்காதாஸ், இரத்தக்கொதிப்புக்குச் சித்த வைத்தியம், ப.60

65. வில்லியம், பஸ்கர், நாட்டுப்புறவியல், ப.18

66. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.642

67. இ.ரா. பாக்கியலட்சுமி, நாட்டுப்புறவியலாய்வு நெறிமுறைகள், ப.50

68. இரா. குமாரசுவாமி, திருக்குறள் மூலிகைகள், ப.8

69. மு.ஆ. அப்பன், இயற்கை உணவே நோய் தீர்க்கும் மருந்து, ப.136

70. Thomson George, Aesehyleus and Athens year 1980, P.11

71. ஆ. சிவசுப்பிரமணியன், மந்திரம் சடங்குகள், ப.20

72. க. வெங்கடேசன், ஆய்வு நோக்கில் நாட்டுப்புற மருத்துவம், ப.100

73. கலைக் களஞ்சியம், தொகுதி-4, ப.642

74. T.V.S. Dictionary, Vol-3, P.2118

75. Ibid, Vol-I, P.498, Vol-III, P.2102

76. டாக். அரசு, சித்தர்களும், நோய் தீர்க்கும் சித்தமருத்துவமும், ப.26

77. மேலது, ப.25

78. திருமந்திரம், பா.724

79. K. Radhakrishnan, Pulse in Siddha System, P.5

80. Ibid, Pp.10-11

81. தொல்காப்பியம், மரபியல், நூ.91

82. K. Radhakrishnan, Op.Cit.P7

83. Ibid, Pp.9-10

84. Ibid, P.14

85. சித்தராம் சுப்பிரமணியம், மு.கு.நூ., பக்.53-54

86. K. Radhakrishnan, Op.Cit.P.15

87. சித்தராம் சுப்பிரமணியம், மு.கு.நூ., ப.55

88. K. Radhakrishnan, Op.Cit.P.16

89. சித்தராம் சுப்பிரமணியம், மு.கு.நூ., ப.56

90. டாக்டர். க.சு. உத்தமராயன் தமிழ் இலக்கியங்களில் மருத்துவநூற் செய்திகள், டாக். ரு. சஞ்சீவி(பதி), பல்கலைப் பழந்தமிழ், ப.179

91. T.V.S. Dictionary, Vol-3, P.2124

92. டாக். எஸ். சிதம்பரதாணுப் பிள்ளை, மு.கு.நூ. பக்.19-20

93. டாக். இரா. மாணிக்கவாசகம், மு.கு.நூ., ப.229

94. ம.புனிதா, தேரையர் அந்தாதி, ப.10

95. T.V.S. Dictionary, Vol-3, P.2111

96. Dr. V. NarayanaSwamy, Introduction to the Siddha System of Medicine, Pp.13-14

97. டாக். க.சு. உத்தமராயன், மு.கு.நூ., ப.307

98. முனைவர். புனிதா, தேரையர் அந்தாதி, ப.13

99. T.V.S. Dictionary, Vol-3, P.2096

100. டாக். அரசு., சித்தர்களும் நோய் தீர்க்கும் சித்தமருத்துவமும், ப.30

101. முனைவர். ம. புனிதா, தேரையர் அந்தாதி, ப.6

102. டாக். அரசு., சித்தர்களும், நோய் தீர்க்கும் சித்தவைத்தியம், ப.101

103. டாக். துர்க்காதாஸ், இரத்தக் கொதிப்புக்குச சித்த வைத்தியம், ப.54

104. டாக். அரசு., சித்தர்களும் நோய் தீர்க்கும் மருத்துவம், ப.32

105. டாக். டி. மகாலெட்சுமி, சித்த மருத்துவமணிகள், ப.21

106. முனைவர். புனிதா, தேரையர் அந்தாதி, ப.13

107. மேலது, ப.15

108. பூ.சு. குப்புசாமி முதலியார், அனுபோக வைத்திய பிரம்ம ரகசியம், ப.7

109. கதிரவன் நாளிதழ், 24.5.2003

110. ஜெ. சீதாராம் பிரஸாத், மு.கு.நூ., ப.3

111. T.V.S. Dictionary, Vol-3, Pp.2091-2092

112. ஜெ. சிதம்பரம் பிரஸாத், மு.கு.நூ., ப.3

# இயல் -2

## சங்க இலக்கியங்களில் மருத்துவச் செய்திகள்

சங்க காலப் புலவர்களுள் மருத்துவம் கற்றறிந்த புலவர்களும் வாழ்ந்தனர். ஆகையால்தான் மருத்துவம் பற்றிய நூல்களெல்லாம் செய்யுள் வடிவில் அமைந்துள்ளன. புலமை சான்ற தமிழறிஞர்கள் மருந்துகள் அறிந்துபோற்றியவர்கள் என்பது போன்ற அவர்தம் பெயர்களிலிருந்து அறியலாம். மருத்துவன் தாமோதரனார், வெள்ளெருக்கிலையார், மருத்துவன் நல்லச்சுதனார் போன்ற புலவர்கள் இதற்கு சான்றுகளாவர்.

மருத்துவம் அறிந்த சங்கப் புலவர்களில் மருத்துவன் தாமோதரனார் இயற்றிய திருவள்ளுவ மாலையில் 11.ஆம் பாடலைப் பாடியவர். அப்பாடல் மருத்துவத்தை கூறும் பாடலாக இருக்க காணலாம்.

*'சிந்தி நீர்க்கண்டம் தெறிசுக்குத் தேனளாய்*
*மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்''*

என்ற பாடலில் *சிந்தி நீர்ச் சர்க்கரையையும், சுக்குப்பொடியையும்* தேனோடு கலந்து முகர்ந்தால் தலைவலி குணமாகும் எனக் குறிப்பிட்டுள்ளார்.

### மருத்துவன்

மருத்துவன் என்ற சொல் பிணியைத் தீர்ப்பவன், பிணி தீர்க்க மருந்து கொடுப்பவன், நோயறிந்து மருந்து தருபவன் என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன.

மருத்துவன் நோயாளிக்கு எவ்வாறு மருத்துவம் செய்ய வேண்டுமென நற்றிணைப் பாடல் கூறிப்பிடுவதை அறியலாம்.

'அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல'[2]

என்ற பாடல் வரிகளில் மருத்துவன் நோயுற்றவனின் விருப்பத்தை அறிந்து அதற்கேற்றாற் போல் மருத்துவம் செய்யாமல் நோயின் தன்மைகளான நோயுற்றவரின் உடல்நிலையை நன்கு ஆராய்ந்து அவனின் நோய் எதிர்ப்புச் சக்தி, உடலின் தன்மைக்கு ஏற்றவாறு மருத்துவம் செய்வதே மருத்துவனின் பண்பாகும். இதில்தான் நோயாற்றுகின்ற மருத்துவனைப் போற்றி 'அறவோன்' என்று பாராட்டுகின்ற பண்பு மக்களிடையே மிகுந்திருக்கின்றன. அத்தகைய சிறப்பு பெயர்ப்பெற்ற மருத்துவன் கொடுக்கும் மருந்துதான் நோயாளியின் நோயைப் போக்கக்கூடியதாக இருக்கும் என்பதை கலித்தொகைப் பாடலில் கூறிப்பிடப்பட்டுள்ளன.

'திருந்திய யாக்கையுள் மருத்துவன் ஊட்டிய
மருந்துபோல் மருந்தாகி மனன் உவப்ப'[3]

என்ற பாடல் வரிகளில் மருத்துவன் தருகின்ற மருந்து துன்பத்தினை நீக்குவதாக உணர்த்தப்படுகிறது. மேலும் தனக்கு உற்ற நோயை நீக்குமாறு, மருத்துவனிடம் நோயாளி வேண்டி கேட்டுக் கொண்டபின்னர் மருத்துவன் நோயாளிக்கு மருந்தளிக்காவிட்டால் அது கொடுமை ஆகும் என்பதை,

'வருந்திய செல்லல் தீர்த்த திறனறியொருவன்
மருந்து அறை கோடலின் கொடிதே'[4]

என்ற நெய்தற்கலி பாடல் கூறிப்பிடுகின்றன. எனவே,

உயிர்களைக் காத்தல் மருத்துவரின் கடமையாக எண்ண வேண்டும் என்பதை,

'இன்னுயிர் போர்தரு மத்துவர்'[5]

என்ற கலித்தொகை பாடலின் மூலம் அறியலாம்.

## மருத்துவம்

*சங்க காலத்தில் மருத்துவன், மருத்துவம் செய்வதை ஒரு தொழிலாகக் கருதாமல் தொண்டாகவே மேற்கொண்டுள்ளான். பிறருடைய நோயைத் தான் உற்றது போல் கருதி மருத்துவம் செய்துள்ளான் என்பதை,*

*'பிறர் நோயும் தந்நோய் போல் போற்றி அறனறிதல்*
*சான்றவர்க்கெல்லாம் கடனாம்'[6]*

*என்ற கலித்தொகைப் பாடல் வரிகள் கூறிப்பிடுகின்றன. இதனையே அகத்தியரும்,*

*'பார்த்திடவே வேறுபாடா புலத்திலேனையா*
*பாரிலுள் உயிர்களெல்லாந் தன்னுயிர்போல் எண்ணி'[7]*

*எனப் பாடியுள்ளார். தற்காலத்தில் கருச்சிதைவை செயற்கை முறையில் உண்டாக்கினால் சட்டப்படி குற்றமாகும். ஆனால் சங்க காலத்தில் அவ்வாறு எந்த சட்டமும் இல்லை. ஆனால் கருச்சிதைவைச் செய்வது ஒரு கொடியப் பாவச் செயலாகவும், அறமற்ற ஒரு செயலாகவும், நீதிமுறைகளுக்கும், ஒழுக்கப் பண்பிற்கும் மாறுபட்டதாகவும் சித்திரிக்கப்பட்டுள்ளது. மருத்துவர்கள் கருச்சிதைவிற்கு ஊக்கம் கொடுக்க கூடாது. அதையும் மீறி செய்தால் அறமே அவர்களைத் தண்டித்து விடும்*

என்று நம்பப்படுகிறது என்பதை

'மாணிழை மகளிர் கருச்சிதைத்தோர்க்கும்
.... உய்தி இல்லையென அறம்பாடிற்றே'[8]

என்று புறநானூறு பாடல் வரிகள் புலப்படுத்துகிறது. மருத்துவம் செய்கின்ற வைத்தியன் வியாபார நோக்கத்தோடு செய்யாமல், மனித குலத்தொண்டனாகச் சேவை செய்துள்ளனர் என்பது தெரியவருகிறது.

## மருந்து

பண்டையக் காலத் திராவிட மக்களாகிய தமிழர்கள் மருந்தையும் மருந்துப் பொருளையும் பயன்படுத்துவதில் வளர்ச்சியடைந்த நிலையில் சிறந்து காணப்பட்டார்கள் என்பதற்கு சிந்துவெளி நாகரிகம் பற்றி அகழாய்வில் கிடைத்துள்ள பொருள்கள் சான்றாக அமைகின்றன. இன்றைய தமிழ் மருத்துவர்களும் ஆய்வுர்வேத மருத்துவர்களும் மருந்துப் பொருளாகப் பயன்படுத்துகின்ற சிலாசித்து மான்கொம்பு, பவழம், தாளகம் போன்ற மருந்துப் பொருள்கள் அங்கே கண்டெடுக்கப்பட்டுள்ளன. மேலும் வேம்பு, இக்காலத்தில் உயிர்க்கொல்லி மருந்தாகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றது. ஆனால் இதன் தொடக்கம், சிந்துவெளி நதிக்கரை நாகரிகமக்களிடத்துத்தொடங்கியது என்பர். சிந்துவெளி மக்கள் வேப்பிலையைச் சிறந்த மருந்தாக இல்லங்கள் தோறும் பயன்படுத்தி வந்திருக்கின்றனர்[9] என்று அறிஞர் தீட்சிக் கூறுவதிலிருந்து அறிய முடிகிறது.

## இலக்கியத்தில் மருந்து

தமிழில் தோன்றிய மிக பழமையான இலக்கண நூலாகிய தொல்காப்பியத்தில் மருந்து என்ற சொல் உண்மையான நோய்க்கு மருந்தாகவும், பிணிதீரப் பயன்படுத்தியச் சொல்லாகவும் இருந்துள்ளது என்பதை,

'வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்
வேம்பும் கடுவும் போல வெஞ்சொல்'[10]

என்ற செய்யுளில் வாயின் மூலம் அளிக்கப்படும் மருந்தை வேம்பு, கடுவையும் மற்றும் மருத்துவன் கூறும் இதமான சொற்களும் வாயுறை என்பதற்கு மருந்து பொருளாக இருப்பது தெரியவருகிறது. இதனையே புறநானூற்றுப் பாடல் கூறிப்பிடுவதை அறியலாம்.

'மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி'[11]

என்றும் உவமைச் சொல்லால் மரங்களின் பட்டை, பால், இலை, காய் போன்றவை மருத்து தாவரங்களாக பயன்பட்டன என்பது அறியமுடிகிறது. மேலும் மக்களுக்கு உண்டாகும் பிணியைப் போக்குவது மருந்து. அம்மருந்தைத் தருகின்றவை தாவரங்கள் என்ற அறிந்த சங்க கால மக்கள் தாங்கள் வாழ்கின்ற பகுதிகளுக்கு அருகிலே கிடைத்த தாவரங்களை நோய் தீர்க்கும் மருந்தாக பயன்படுத்தியுள்ளனர் என்பதை,

புல்லும், மரமும், புதலும் பூம்
வல்லியும் பெயர் கொண்ட மருந்தெனப்படும்'[12]

என்று சேந்தன் திவாகரம் கூறுவதிலிருந்து தாவரங்களின் புல் முதல் மரங்கள் வரை அனைத்து பாகங்களும் மருந்தாக

பயன்பட்டன. அம்மருந்தைத் தருகின்ற தாவரங்களும், மரங்களும் அழிந்துவிட்டால் மருந்தின்றித் திண்டாட நேரும். அதனால் மருந்தாகும் பொருள்கள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது, எதிர்காலத்தின் தேவையை உணரும் சகச் சிந்தனைக் கருத்தாகும். இத்தகைய சமூகச் சிந்தனை பழந்தமிழ் மக்களிடையே பரவலாக காணப்படுகிறது. அத்தகைய சிந்தனையுடைய மக்கள் மருந்தாகும் மரங்களை, அவற்றிலிருந்து மருந்துகளை எடுக்க வெட்டுகின்றபோது அவை முற்றிலும் அழிந்துவிடாமல், அவற்றிலிருந்து குறைந்த அளவிலேயே மருந்தை எடுத்து, மீண்டும் அவை துளிர்த்து வளரும் விதத்தில் பாதுகாத்தும் இருக்கின்றார்கள் என்பதை,

'மரஞ்சா மருந்துங் கொள்ளார் மாந்தர்
உரஞ்சாச் செய்யார் உயர்தவம் வளங்கெட'[13]

என்ற நற்றிணை பாடல் வரிகளில் மரம் பட்டுபோகும் அளவிற்கு ஒரே மரத்தில் மருந்தெடுக்கும் பழக்கம் அவர்களிடத்தில் இல்லை என்பதும் மருந்தின் தேவையை அனைவரும் உணர்ந்திருந்தனர் என்பது தெரியவருகிறது.

## மருந்துப் பொருள்

பண்டையக் காலத் தமிழகம், ஆட்சி முறையினாலும் மக்கள் வாழ்க்கை அமைப்பு முறையினாலும் சிறந்து விளங்கியது. இவற்றை அறிந்த மேலை, கீழை நாட்டு அரசின் தூதுவர்களும், செல்வந்தர்களும், அறிஞர்களும், வணிகர்களும் தமிழகத்தை

நாடி வரத் தொடங்கினர். தங்கள் நாட்டுத் திரவியங்களைக் கொண்டு வந்து தந்து இந்நாட்டு சிறப்புக்குரிய பொருள்களை ஏற்றிச் சென்றனர்.

'யவனர் தந்த வினைமாண் நன்கலம்
பொன்னொடு வந்து கறியொடு பெயரும்"[14]

யவனர்கள் தங்கள் நாட்டிலிருந்து கொண்டு வந்த மரக்கலங்களிலிருந்து பொன்னை இறக்குவர். அப்பொன்னுக்கு ஈடாகத் தமிழகத்தின் மருந்துப் பொருளான மிளகை ஏற்றுவர். இவ்வாறு பொன்னுக்குப் பண்டமாற்றாக மிளகு வழங்கப்பட்டது. பழந்தமிழ்த் துறைமுகம் என்று இலக்கியங்களால் சிறப்பித்துக் கூறப்படும் முசிறித்துறைமுகப் பட்டினத்தில் இருந்துதான் மருந்துப் பொருள்கள் ஏற்றுமதியாயின.

பழந்தமிழ்ப் பட்டினத்துறைமுகங்களிலிருந்து ஏற்றுமதியான பொருள்களில் குறிப்பாக, இலவங்கம், மிளகு, இஞ்சி, அரிசி, ஏலம், தேக்கு, கருங்காலி, சுக்கு, சந்தனம், யானைத்தந்தம் போன்றவையாகும். இவற்றுள் மிளகு, இஞ்சி ஆகிய இரண்டு மருந்துப் பொருள்கள். மருந்துக்கென்றே பெயர் பெற்றவை. கி.மு.5 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த ஹிப்பாகிரேட்டஸ் என்ற புகழ்ப் பெற்ற கிரேக்க மருத்துவர், இந்திய மருத்துவ முறைகளையும், மருந்து வகைகளையும் கையாண்டு வந்துள்ளார். மிளகை 'இந்தி மருந்து' என்றே குறிப்பிட்டிருக்கிறார்.[15]

## மருத்துவ முறை

சங்க காலத்தில் மருத்துவம் தற்காலத்தைப் போல் முன்னேற்றம் இல்லாவிட்டாலும் நோய்களை தீர்க்கும் முறையினை மக்கள் அறிந்திருந்தனர். சங்க காலத்தில் மருத்துவரே மருந்து கொடுப்பவராகவும், மருந்தை செய்பவராகவும் விளங்கினர். உடலில் ஏற்படும் நோயை 'புண்' என்றும் உள்ளத்தில் ஏற்படும் நோயை 'காமநோய்' என்றும் பிரித்து மருத்துவ முறையினை கையாண்டுள்ளனர் என்பதற்கு புதைபொருள் அகழாய்வுகளும், சங்க இலக்கியங்களும் சான்றாக அமைந்திருப்பதைக் காணமுடிகிறது.

புதைப் பொருள் அகழாய்வு ஆராய்ச்சியின் படி, சிந்து, கங்கைச் சமவெளிகளில் வாழ்ந்திருந்த பழந்திராவிட மக்கள் அறுவை மருத்துவத்துக்காகச் செம்புக்கத்திகளைப் பயன்படுத்தியிருக்கின்றனர் என்பது தெரியவருகிறது. அறுவை மருத்துவத்துக்காகச் செம்பைப் பயன்படுத்தினால் அது பக்கவிளைவுகளை ஏற்படுத்தாது என்னும் அறிவியல் உண்மையைப் பண்டைய தமிழர் அறிந்திருந்தனர். புதைந்த நாகரிக இனத்து மக்கள் மருந்து, மருத்துவம், அறுவை மருத்துவம் ஆகியவற்றை அறிந்தும் பயன்படுத்தியும் வந்திருந்தனர்[16] என்பதை உறுதிப்படுத்துவதுபோல் சங்க இலக்கியங்களில் குறிப்பிடும் மருத்துவ முறையினை காணலாம்.

## போர்கள மருத்துவம்

பண்டைக் கால மருத்துவ முறைகளாகச் சங்க இலக்கியங்களில் காணப்பெறும் மருத்துவ முறைகள் அனைத்தும் போர் வீரர்களுக்குப் போரினால் ஏற்படுகின்ற புண்ணையும் அதற்குண்டான மருந்து, மருத்துவம் ஆகியவைப் பற்றிய செய்திகளாகவே காணப்படுகின்றன. காரணம், வீரம் பற்றிய செய்திகளையே புறப்பாடல்கள் கூறுவனவாக அமைவதனால், அது தொடர்பான செய்திகள் மட்டுமே புலவர்களால் போற்றிப் பாடப்பட்டிருக்கின்றன.

## அறுவை மருத்துவம்

போர்க் காலங்களில் போர்வீரர்களுக்கு ஏற்படுகின்ற விழுப்புண் பெரிய அளவில் இருந்தால் அப்புண்ணை மருந்துகளால் ஆற்றுவது கடினம் என்பதை உணர்ந்து, மருத்துவ வல்லுனர்களால் அப்புண்கள் ஆறுத்தெடுக்கப்பட்டு, பின்பு தைக்கப்பட்டன. அதன்பின்னரே மருந்திட்டுக்கட்டுதலும் நிகழ்ந்துள்ளது. இதுவே இன்றைய நாளிலும் நடைமுறையிலுள்ளது. இவ்வாறு விழுப்புண்ணைத் தைக்கும் முறையைப் பதிற்றுப்பத்து பாடலின் மூலம் அறியலாம்.

*'மீன்தேர் கொட்பின் பனிக்கயம் மூழ்கிச்*
*சிரல் பெயர்ந்தன்ன நெடுவெள்ளூசி*
*நெடுவசி பரந்த வடுவாழ் மார்பின்'* [17]

என்ற பாடலின் மீன்கொத்தி பறவையானது தண்ணீருக்குள் மூழ்கி தன் மூக்கு நுனியில் மீனைப் பிடித்து கொண்டு தண்ணீரை

விட்டு வெளியே வருவதைப் போன்று, நெடிய வெள்ளூசி புண்ணுக்குள் நுழைந்து வெளியேவிடுகிறது என்கிறது. இப்பாடலின் மூலம் போரில் காயமுற்றவருக்குச் செய்யப்பட்ட அறுவை சிகிச்சையை இது குறிப்பிடுகிறது.

## ஒட்டு மருத்துவம்

இரும்பு உலோகங்களான வேல், வாள், ஈட்டி போன்ற ஆயுதங்களால் ஏற்படுகின்ற புண்களில் இரும்பின் உலோக நஞ்சு கலப்பதற்கு வாய்ப்புகள் உள்ளன. அவ்வாறு கலக்க நேர்ந்தால், உலோக நஞ்சால் உடலுக்குத் தீங்கு நேரிடலாம். அவ்வாறு நேராதிருக்க இக்கால மருத்துவர்கள் ஏ.டீ.சி என்னும் தடுப்பூசியைப் பயன்படுத்துகின்றனர். பண்டைக்கால மருத்துவர்கள் உலோக மாறவும் அத்திப்பால் பயன்படுத்தினர் என்று புறநானூறு குறிப்பிடுகிறது.

'இரும்பு சுவைக் கொண்ட விழுப்புண் நோய்தீர்ந்து
மருந்துகொள் மரத்தின் வாள்வடு மயங்கி
வடுவின்றி வடிந்த யாக்கையான்'[13]

என்ற பாடல் வரிகளில் 'வடுவின்றி வடிந்த யாக்கையான்' என்று பழைய நிலைக்கே உடல்நிலை பெற்றது என்பதை இன்றைய ஒட்டு மருத்துவத்துடன் ஒப்பிடலாம்.

## கட்டுக்கட்டுதல் மருத்துவம்

இக்கால மருத்துவத்தில் புண்ணுக்கு மருந்து வைத்து கட்டும் போது புண்ணின்மேல் பஞ்சு வைத்துக்கட்டும் முறை, பண்டைய

தமிழ் மருத்துவர்கள் மேற்கொண்ட முறையைப் பின்பற்றி அமைந்ததாக இருக்கலாம். அக்காலத்தில் தோன்றிய முறையே தொன்று தொட்டு தொடர்ந்ததாகவும் இருக்கலாம். அதனை உறுதி செய்யும் வித்தில்,

'கவாய்ப் போகி துதிவாய் எஃகமொடு
பஞ்சியும் களையாப் புண்ணர்'[19]

என்னும் புறநானூற்று வரிகளில் மருந்துடன் பஞ்சுவைத்துக் கட்டும் வளர்ச்சி பண்டைய நாளிலேயே இருந்ததை உணரலாம். மேலும் சில குறிப்பிட்ட நோய்களுக்கு மருந்து பொருட்களைச் சூடாக்கி அவற்றிலிருந்து எழும் ஆவி உடம்பில் படும்படி செய்யும்போது ஒத்தடம் கொடுக்கும். இதனை 'ஒத்தடம் பிடித்துக் கொடுக்கும் மருத்துவம்' என்பர். இம்முறையைக் கலித்தொகைப் பாடலில் அறியலாம்.

'பண்புதா வந்தான்தொடர் நோய் வேது
கொள்வது போலும் கடும்பகல் ஞாயிறே'[20]

என்ற பாடல் வரிகளில் சூரியனின் ஒளியை ஆவியாக இருந்தது எனக் குறிப்பிட்டுள்ளது.

## இசை மருத்துவம்

நோயாளிக்கு நோயின் கடுமையைத் தணிக்க மருந்து, சுகாதாரமான சூழல், மணந்த மணம், இனிய இசை, அன்பான பணிவிடை ஆகியன தேவைப்படும். இது வளர்ந்த நாகரிகங்கொண்ட மக்களால் மேற்கொள்ளப்பட்டு வருகின்ற பழக்கவழக்க நடைமுறைகள். இவ்வாறான நடைமுறைகள்

ஈராயிரம் ஆண்டின் முன்பே பழந்தமிழர் இல்லற ஒழுக்கங்களில் இரண்டறக் கலந்த ஒன்றாகக் காணப்படுகின்றது.

'தீங்கனி இரவமொடு வேம்புமனைச் சேரீஇ
வாங்கு மருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழ திழுகி
ஐயவி சிதறி ஆம்பல் ஊதி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
வேந்துற விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே"[21]

என்னும் புறநானூற்றுச் செய்யுள், விழுப்புண் கொண்ட போர்வீரன் கிடத்தப் பட்டிருக்கும் மனையின் இறைப்பில் இரவம், வேம்பு ஆகிய இலைகளை செருகி மனையெங்கும் வெண்ணிறல் கொண்ட சிறுகடுவைத் தூவி நறுமணம் கமழும் நறும்புகை புகைத்து யாழினால் பல்லிசை இசைத்தும் ஆம்பல் என்னும் குழலை ஊதியும் காஞ்சிப் பண்ணைப் பாடியும் மருத்துவம் செய்தனர்.

## உளநோய் மருத்துவம்

ஒவ்வொரு ஆணுக்கும், பெண்ணுக்கும் குறிப்பிட்ட பருவத்தில் ஏற்படும் இயற்கை உந்துதல் காதல். இக்காதலினால் அவர்கள் அடையும் இன்பமும் துன்பமும் பலவாகும். சேர்ந்திருக்கும் பொழுது அளவில்லா மகிழ்ச்சியடையும் காதலர், பிரிவில் சொல்லமுடியாத துயரை அடைகின்றனர். சங்க அக இலக்கியங்களில் காதல் பிரிவால் தலைமக்கள் அடையும் துன்பம்

புலவர்களால் நோயாகச் சுட்டப்பட்டுள்ளது. இந்த நோய்க்குரிய மருந்தினையும் புலவர்கள் தம் பாடலில் குறிப்பிட்டுள்ளனர். தலைவியைச் சந்திக்க இயலாத தலைவன் தனது துன்பத்தை,

> பெருந்தோள் குறுமகள் அல்லது
> மருந்துபிறி தில்லையான் உற்ற நோய்க்கே"[72]

என வெளிப்படுத்துகின்றான். தலைவியைப் பிரிந்த தலைவனுக்குத் தலைவியின் நோயைத் தீர்க்க மருந்து ஒன்று இல்லை. தலைவிதான் மருந்தாவாள் என்பதை,

> 'பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
> மருந்தும் உண்டோ மயலோ இதுவே"[73]

என்ற நற்றிணை பாடல்வரிகளில் தலைவியின் இத்தகைய உள நோய்க்குச் சிறந்த மருந்தாகப் 'பூப்புனலாடுதல்' என்று கூறப்பட்டுள்ளது.

## தமிழ் மருத்துவக் கோட்பாடு

சங்க காலத் தமிழ் மருத்துவக் கோட்பாட்டினைக் குறிப்பினால் உணர்த்துவதாகத் தொல்காப்பியம், புறநானூறு, பரிபாடல் ஆகியவற்றில் காணப்பெறும் பஞ்ச பூதங்களைப் பற்றி வரும் குறிப்புகளைக் கூறலாம். இந்த உலகம் பஞ்ச பூத மயமானதென்பதே சித்த மருத்துவக் கொள்கை. பண்டைய மருத்துவக் கோட்பாட்டின் வளர்ச்சியாகவே இக்கால மருத்துவத்தினைக் கருதலாம்.

## பஞ்ச பூதம்

இந்த உலகம் ஐம்பெரும் பூதங்கள் கலந்த மயக்கம். உலகத் தோற்றத்தின் மூலம் பொருளாக அமைவன ஐம்பெரும் பூதங்கள் எனப்படும். அவை நிலம்,நீர், தீ, காற்று, ஆகாயம் என்பனவாகும்.

'நிலம் தீ நீர் வளி விசும்பொ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்'[24]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

உலகம் என்பது உலகினையும் உலகிலுள்ள பொருள்களையும் குறிக்கும். உலகமாவது, முத்து மணியும் கலந்தாற்போல நிலம், தீ, நீர், வளி, ஆகாயம் என விரவி நிற்கும். உலகினுள் பொருள் பொன்னும், வெள்ளியும், செம்பும் உருக்கி ஒன்றானாற்போல வேற்றுமைப் படாது நிற்கும். அவ்விரண்டினையும் உலகம் உடையதாகலின் 'கலந்த மயக்கம்' என்று இளம் பூரணர் உரைகாண்கிறார். முத்தும் மணியும் கலந்தாற்போல் உலகமும் பொன், வெள்ளி, செம்பு ஆகியவை உருக்கினாற் போல உலகிலுள்ள பொருள்களும் அமையும் ஒன்று. புறத்தே உள்ள பூதங்களையும், அகத்தே உள்ள பூதங்களையும் வேறுபடுத்திக் காட்டினார். மேலும் புறநானூறு குறிப்பிடுவதை காணலாம்.

'மண்டிணிந்த நிலனும்
'நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வலித்தலைகிய நீரும் என்றாங்கு
ஐம்பெம் பூதத் தியற்கை'[25]

என்ற பாடல் வரிகளில் அணுச் செறிந்த நிலனும், அந்நிலத்தின் ஓங்கிய ஆகாயமும், அவ்வாகாயத்தைத் தடவிவரும் காற்றும், அக்காற்றின் கண் தலைப்பட்ட தீயும், அத்தீயோடு மாறுபட்ட நீருமென ஐவகைப் பெரிய பூதத்தினது தன்மைபோல என்று ஐம்பெரும் பூத்தைப் பற்றி புறநானூறு குறிப்பிட்டுள்ளது. இந்த ஐம்பெரும் பூதங்கள் ஆதியாகக் கொண்டு, சுவை முதலான புலன்களும், அவற்றை நுகரும் பொறிகளும் உண்டாகின்றன என்று பரிபாடல் உரைக்கிறது.

'சுவைமை இசைமை தோற்ற நாற்றமு
றவையு நீயே யடுபோ ரண்ணால்
அவையவை கொள்ளுங் கருவியு நீயே
முந்தியாங் கூறிய வைந்த னுள்ளும்
ஒன்றனிற் போற்றிய விசும்பும் நீயே
இரண்டி னுணரும் வளியு நீயே
மூன்றி னுணருந் தீயு நீயே
நான்கி னுணரு நீரு நீயே
ஐந்துடன் முற்றிய நிலனு நீயே'[76]

என்று குறிப்பிட்டுள்ளது.

ஒன்று-ஓசை,
இரண்டு-ஓசை, ஊறு,
மூன்று-ஓசை, ஊறு, ஒளி,
நான்கு-ஓசை, ஊறு, ஒளி, சுவை,
ஐந்து-ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம்

என்றும் குணங்களால் பூதங்கள் உணரப்படுகின்றன.

நிலம் தீ நீர் வளி விசும்பு-தொல்காப்பியம்
நிலம் ஆகாயம் காற் தீ நீர்-புறநானூறு
நிலம் நீர் தீ வளி விசும்பு-பரிபாடல்

என்ற வரிசைப்படுத்துகின்றன.

### நோய்-பிணி

தொல்காப்பியம், சங்க இலக்கியம் ஆகியவற்றில் நோய், பிணி என்ற சொற்கள் உடல்நலக் குறைவு என்ற நிலையினைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ளன. நோய், பிணி என்ற சொற்கள் ஒன்றனுக்கு ஒன்று பதிலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதையும் தொல்காப்பியத்தில் காணமுடிகிறது. இதை,

'பையுளும் சிறுமையும் நோயின் பொருள்'[27]
'நோயும் இன்பமும் இருவகை நிலையில்[28]
'அவரவர் உறுபிணி தமபோற் சேர்த்தியும்'[29]
'மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு
யாப்புற வந்த இளிவரல் நான்கே'[30]

என்று தொல்காப்பிய செய்யுள்களில் கூறிப்பிடுவதை அறியலாம். மேலும் சங்க இலக்கியங்களிலும் நோய், பிணி என்ற சொற்கள் உடல், மனதுன்பம் நிலைகளைக் குறிப்பிடுவனவாகக் கையாளப்பட்டுள்ளன.

பண்டைய இலக்கியங்களில் காணப்படும் நோய்ப் பற்றிய குறிப்புகளை உற்றுநோக்கினால் இருவகையான போக்குகளைக் காணமுடிகிறது. அவை

1. இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளால் வருபவை

2. நோயானது இயற்கை நிகழ்வே என்ற புறவயநோக்கில் கண்டு கொள்ளப்படுபவை.

தொன்மை நாகரிகங்களில் முதன்முதலில் நோய்க்கு அடிப்படை இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளாகிய பேய், பிசாசு போன்றனவே என்ற நம்பிக்கை நிலவியுள்ளமையைக்

காணமுடிகிறது. இந்த நம்பிக்கை உலகில் மனித இனத்தின் கூட்டுணர்வில் பதிந்து இருக்கின்ற காரணத்தால் இன்றுவரை அதனை நீக்க முடியாமலேயே உள்ளது. மனித இனத்தின் அறிவு வளர்ச்சியினால் சிறிது சிறிதாக இவ்வுணர்வினை எதிர்த்து நோக்கும் அடிப்படையிலும் அளந்தறி முறையிலும் பிற காரணிகளைக் கண்டு, விளங்கிக் கொண்டும் முன்னேற முடிகிறது. எனினும் மனித அறிவின் விளக்கங்களின் குறைபாடுகளால் இன்றும் நோய்கள் பலவும் இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளால் விளைகின்றன என்ற நம்பிக்கையே நீடிக்கிறது. எல்லா மனிதர்களிடையேயும் இத்தொடக்கால கூட்டுணர்வின் எச்சம் முழுமையாக நீங்காமல் இருந்து வருகிறது என்பது மறுப்பதிற்கில்லை எனலாம்.

நமக்குக் கிடைக்கும் பண்டைத் தமிழ் நூல்கள், நாகரிக வாழ்வு நடத்திய சமுதாயத்தின் ஆக்கங்கள் என்றாலும், ஆங்காங்கே நோய்க் காரணிகளில் ஒன்றாக இயற்கைக்கு அப்பாற்பட்ட நிகழ்ச்சிகள் நிகழ்ந்துள்ளதைச் சான்றுபகர்வதாகவும் அமைந்துள்ளன.

பண்டைத்தமிழ் நூல்களில் வேலன் வெறியாட்டு, விரிச்சி கேட்டல் ஆகியன மந்திர மாக்களுடைய செயல்களாக விளக்கப்பட்டுள்ளன. வெறியாட்டு அயர்பவன், வேலன் என்று அழைக்கப்பட்டான். கட்டு, கழங்கு ஆகியவற்றைப் பயிற்றி

அலரி மலர்களையும், தினை, நெல்பொரி போன்றவற்றையும் தூவி ஆட்டுச் செந்நீரை நெற்றியில் தடவி இறுதியில் 'இவர் மீது முருகன் வந்துள்ளான் இந்நோயை நீக்குவேன்' என்று கூறுவான் என்பதை,

'முருகயர்ந்து உவந்த முதுவாய் வேல
சிறுமறி கொன்றிவள் நறுநுதல் நீவி'[31]
'.....முதுவாய் வேலன்
எம்மிறை அணங்கலின் வந்தின்னு இந்நோய்
தணிமருந்து அறிவல்'[32]
'வேலன் புணைந்த வெறியயர் களந்தொறும்
செந்நெல் வான் பொரி சிதறு..'[33]

முருகன் மட்டுமின்றி வேறுபல தெய்வங்களும் நோய் நீக்கி வழிபாட்டுக்கு நாடப்பட்டன என்பதையும் சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன. அக்காலத்தில் ஆண்கள் மட்டுமின்றி செம்முது பெண்டிர், 'சாலினி' எனப்படும் பெண்களும் விரிச்சி கூறுபவர்களாக இருந்துள்ளனர். நாழி விளக்கேற்றி நறுமண முல்லையும், அலரியும் தூவி கைதொழுது நற்சொல் கேட்டு நோய் நீக்கும்வழி வேண்டிய நிலை இருந்துள்ளது என்பதை,

'நாழி கொண்ட நறுவி முல்லையும்
அரும்பவிழ் அலரி தூய்உய்க் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப..'[34]
'...சூல் மகளிர் யாழில்
செவ்வழிப் பண்பாடி ஆகுளி இரட்ட
முழவு இசைக்க ஒள்சுடர் விளக்கேந்தி
கடுஞ்சூல் மகளிர் பேணிக் கைதொழு
பெருந்தோட் சாலினி மடுப்ப..'[35]
'செம்முது பெண்டிரோடு நெல்முன் நறீஇக்
கட்டிற் கேட்கும்...'[36]
'பொய்யா மரபின் ஊர்முது வேலன்
கழங்கு மெய்படுத்தும் கன்னந் தூக்கி

முருகு என மொழியாம்"[37]

கன்னம் என்பது கடவுளை வேண்டி நோய் தணியும் பொருட்டுத் தரப்படும் படிமம் ஆகும். இவ்வாறு மாந்திரிகமும், சமயமும் சார்ந்த தொடக்ககால நோய் நீக்கல் முறை தமிழ் நாட்டில் உள்ளன. இருளர் வரை இன்றும் தொடர்கிறது.

மருந்துகள் மூலம் நோயின் தீரா நிலையில் ,நோயாளியின் உறவினர் மாந்திரிக முறையில் நோய் நீக்கம் பெற அணுகும் முறையும் இருந்தது, இருந்துவருகிறது. இயற்கையிலிருந்த சக்திகளாகிய தெய்வம், பேய், பில்லி, சூன்யம், செய்வினை போன்ற காரணிகள் அறிவு வளர்ச்சியின் காரணமாக காலப்போக்கில் மந்திரவாதியின் பட்டியலிருந்து நீக்கப்பட்டாலும் இன்றும், சில புதிர் நோய்களுக்கு மந்திரமாயங்களை நம்பும் நிலையே நீடிக்கிறது. முதுவாய் வேலன் தன்னிடம் வந்த நோயாளிகளின் துன்பந்திர ஆவி பலி தந்து 'முருகு' என மொழிந்து நோயைக் குணப்படுத்தும் முறையில் நற்சொல் கேட்டலின் செம்முது பெண்டிரும், சாலினியும் சமய சடங்குகளை செய்து நோய்ப் போக்கும் முறையும் ஒரு பொது நிகழ்ச்சியாகவே நடந்து வந்துள்ளன. இத்தகைய மந்திர தந்திர முறைகள் உள்ள உடலியல் 'சார்' மருத்துவ அணுகுமுறை என் கூறப்படுகிறது. அக்காலத்தில் சமய சடங்குகளும் உறுதியான திர்ப்பும் சுற்றியுள்ளவர்களைத் தன் முடிவிற்குக் கட்டுப்படவைக்கும் திறன் வேலனுக்கும், சாலினிக்கும் இருந்தது. அவையே இன்றுவரை மாந்திரிக

முறையினை வாழவைக்க முடிகிறது என்கிறார் ஆராய்ச்சியாளர் ந. முருகன்.[38]

புறத்துறைகளில் பேய்க்காஞ்சித் துறை என்பதும் ஒன்று. அதில் பேய்கள் மனிதனைப் பற்றித் துன்புறுத்தும் என்ற நம்பிக்கையையும் விளக்கப்பட்டுள்ளமையை காணமுடிகிறது. பேய், மகளிர் என்று பெண்பாற்படுத்துக் கூறப்பட்டுள்ளது என்பதை,

'தீங்கனி இரவமொடு வேம்புமனைச் செரீஇ
வாங்கு மருப் பியாழொடு பல்லியங் கறங்கக்
கைபயப் பெயர்த்து மையிழ திழுகி
ஐயவி சிதறி ஆம்பல் ஊதி
இசைமணி எறிந்து காஞ்சி பாடி
நெடுநகர் வரைப்பிற் கடிநறை புகைஇக்
வேந்துறு விழுமந் தாங்கிய
பூம்பொறிக் கழற்கால் நெடுந்தகை புண்ணே'[39]

போரில் பெரும்புண்பட்ட காதலன் பேயால் பற்றப்பிடாமல் இருக்க இரவம், வேம்பு, தழைகளைக் செருகீயும், வெண்கடுகைச் சிதறியும், ஆம்பல் இசைத்தும், புகைப்போட்டுக் காஞ்சிப்பண் பாடியும் அவன் புண்ணுக்கு மந்திட்டும் காப்பாற்றுவோம் என்கிறாள் ஒரு பெண். இதன் மூலம் பேய் பிடிக்கும் என்ற நம்பிக்கை இருந்ததையும், பேயை விரட்ட சில நடவடிக்கைகளை மேற்கொண்டனர் என்பதும் அறியப்படுகிறது. பேய் அணங்கு ஆகிய பெயர்களும் சங்க இலக்கியங்களில் காணப்படுகின்றன. எனவே அணங்காலும் நோய் வரும் என்பதும் அறியப்படுகிறது.

'எம்மிறை அணங்கலின் வந்தன்று இந்நோய்'[40]
'பேஎய்க் கொளீஇயள் இவள்'[41]

என்னும் பாடல் வரிகளில் அணங்கு, பேய் ஆகியவற்றால் நோய்ப்படும் என நம்பிக்கை அக்காலத்தில் நிலவியமை அறியப்படுகிறது. தெய்வங்கள் நோய்க் காரணியாகவும், நோய் நீக்கும் மருந்தாகவும் அமையும் என்ற நம்பிக்கையும் அதைச் சார்ந்த சடங்குகளும் வழக்கத்தில் இருந்தன என்பது அறியப்படுகிறது.

'...நோய்க்கு மருந்தாகா
வேற்றுப் பெருந் தெய்வம் பலவுடன் வாழ்த்தி'
'எம்மிறை அணங்கலின் வந்தன்று இந்நோய்
தணிமருந்து அறிவல்'
'அணங்குடை முருகன் கோட்டத்து'[42]

என்றிவ்வாறு தெய்வக்குற்றம் நோய்காரணியாக நம்பப்பட்டமையும் காணமுடிகிறது.

மறுமை, இம்மை பற்றிய சிந்தனை இருந்தமையால் நல்வினையும், தீவினையும் பிறப்பின் அடிப்படைகளாகக் கருதப்பட்டன. இதனால் நோய்களுக்குத் தம் முன்வினையே காரணம் எனக்கருதும் நிலை இருந்ததும் தெரியவருகிறது என்பதை,

'யாம்செய் தொல்வினைக்கு எவன் பேதுற்றனை
வருந்தல்...'[43]

என்ற பாடல்வரிகளில் தற்போதைய துன்பத்திற்குக் காரணம் தொல்வினையே என்று எண்ணிய நிலை தெரியாது எனினும் இந்நிலை அதிகமாகத் தென்படவில்லை.

புறவயச் சிந்தனையின் விளைவாக நோய்கள் தோன்றுவதற்குரிய காரணிகள் என்று பண்டைய நூல்களில் காண்பவற்றுள் பெரும்பாலான சான்றுகள் மூலம் அறியப்படும். பிணி, பசிப்பிணியைப்பற்றி சங்க இலக்கியங்களில் பசிப்பிணியும் அதனால் உடலில் உண்டாகும் உடல் மாற்றங்களை அக்கால மருத்துவப் புலவர்கள் அறிந்திருந்தனர். பசியைச் சுடுபசி, நீடுபசி, சூடுகின்ற பசி தொன்றுதொட்டு தொடரும் பசி என்றும் உயங்கு பசி, கடும்பசி என்று சங்க இலக்கியங்களில் கூறிப்பட்டுள்ளனர். அக்காலத்தில் பசியை நோய் என்றும் கூறினர்.

'பசிப்பிணி மருத்துவ னில்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமி னெமக்கே'[44]

என்ற புறநானூறு பாடல்வரிகளில் பசியை நோய் என்று கூறி அந்நோயினை எங்களுக்கு நீர் சொல்லுமின் என்று கூறுவதாக அமைந்துள்ளது. பசியும் அதனால் ஏற்படும் உடல் மாற்றங்களைக் கொண்டுதான் அதற்கு பசி என்று பசியை பிணியாகக் கொண்டனர். உண்ணாமையால் உடல் வாடல், கண்ணீர் நீர் வடிதல் போன்றவற்றைப் பற்றி அகநானூறு பாடலில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது.

'உண்ணா மையின் உயங்கிய மருங்கின்
ஆடாப் படிவத் தான்றோர் போல'[45]

மேலும் பொருளாசையால் வரும் பிணியைப் பற்றி சங்க இலக்கியங்களில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

'மன்னார்ப் பொருட்பிணி'[46]

'நில்லாப் பொருட்பிணி'[47]
'காமர் பொருட்பிணி'[48]

என்ற பாடல் வரிகளில் விதந்து பேசப்படுகிறது. அதன்பிறகு காம உணர்வால் வரும் பிணியைப் பற்றியும் பலவிடங்களில் குறிப்பு பகர்கின்றன.

'காமம் காமமென்ப காமம்
அணங்கும் பிணியும் அன்றே'[49]
'துச்சா நோயினும் நோயாகின்றே'[50]

என்னும் பாடல்வரிகளில் காமநோய் தூக்கமல்லாத கொடிய நோயைவிடக் கொடியது என்ற உண்மை உணரப்பட்டுள்ளது. இந்நோயினால் விளையும் உடலியல் மாற்றங்கள் பற்றி சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. முதுமை காரணமாக ஏற்படும் உடல் தளர்ச்சியால் ஏற்படும் நடுக்கம், இருமல் முதலிய நோய்ப்பெயர்கள் சுட்டப்பட்டுள்ளன.

'தொடித்தலை விழுத்தண்டு ஊன்றி, நடுக்குற்று
இருமிடை மிடைந்த சிலசொல்
பெருமுது தாளர்...'[51]

என்ற புறநானூற்று பாடல்வரிகளில் காணமுடிகிறது.

### சுரம்

இக்கால மருத்துவத்தில் சுரம் என்ற சொல் உடல் காய்ச்சலைக் குறிக்கும் சொல்லாக உள்ளது. இச்சொல் உடல் வெப்பம் அதிகமாவதைக் குறிக்கும். ஆனால் இலக்கியத்தில் கடும்பாலை நிலத்தைக் குறிப்பதாக உள்ளது. பாலை நிலப் பாடல்களில் அருஞ்சுரம், வெஞ்சுரம், பஞ்சுரம் என்ற

அடைமொழிகளால் குறிக்கப்படுகிறது.

'வெஞ்சுரம் தேரோட வெஃகிநின் றத்தமாச்
சிந்தையா னிரென்று செத்துத் தவாவோடும்
பண்பி லருஞ்சுர மென்பவா லாய்தொடி
நண்பிலார் சென்ற நெறி'[52]

என்ற கைநிலை பாடலில் பாலையில் வெம்மையைப் பற்றி தலைவி தோழியிடம் கூறுவதாக கூறப்பட்டுள்ளன. மேலும் அகநானூறு பாடல்களில் பாலையின் வெம்மையைப் பற்றிகுறிப்பு காணப்படுகிறது.

'எழுத்துடை நடுக்கல் இன்னிழல் வதியும்
அருஞ்சுரக் கவலை நீந்தி யென்றும்'[53]

என்ற பாடல்வரிகளில் எழுத்துக்களையுடைய நடுகல்லின் இனிய நிழலிலேயிருக்கும். அருஞ்சுரக்கவலை நீந்தி - அரிய பாலையிலே கவர் நெறியினைக் கடந்து என்று பாலையின் வெம்மையை குறிப்பிடுகிறது. ஐந்திணை பாடல்களிலும் குறிப்பு காணமுடிகிறது.

'அருஞ்சுரஞ் செல்வோர்'[54]
'தண்ணிய வாயின் சுரத்திடை ஆறே'[55]

என்ற பாடல் வரிகளில் பாலையின் வெம்மையைப் பற்றி குறிப்பிடும்போது, மரங்கள் இல்லாத பாலை நிலத்தில் கதிரவனின் வெப்பத்தை மிக அதிகமாக உணரலாம். ஆகையால் பாலை நிலத்தில் உணரப்படும் மிகுவெப்பத்தைச் சுரம் என்பதுபோல் உடலில் ஏற்படும் சுரம் எனலாம். சுரம் என்பது தனிநோய் அல்ல என்றும் உடலின் உண்டாகும் மற்ற நோய்களின் குறிகுணமே தவிர வேறல்ல என்ற

இக்காலகருத்துக்கு ஏற்ப சங்க காலத்திலும் உணரப்பட்டதை,

'நோயுங் கைமிகப் பெரிதே மெய்யுந்
தீயுமிழ்தெறலின் வெய்தா கின்றே'[36]

என்ற நற்றிணை அடிகளால் நோய் அளவினும் அதிகமானால் உடம்பும் தீயை உமிழ்கின்ற கொதிப்புள்ள வெப்பம் உண்டாகும் என்று கூறப்படுகிறது. மேலும் நோய் இருந்தால் தூக்கமும் கெடும் என்பதை,

'அருங்கவரு நோயொடு துஞ்சா தேனே'[37]

என்ற அகநானூறு பாடல்வரிகளில் காணமுடிகிறது.

## குட்டநோய்

சங்க காலத்தில் குட்ட நோய் இருந்தது தெரியவருகிறது. அக்காலத்தில் இந்நோய் 'கரக்குறைத் கறைபட்ட நோய்' என்று கூறப்பட்டது. அதாவது கையும் காலும் குறைந்துமுடமாக்கும் நோய் ஆகும். அவ்வாறு குறைந்த பாகங்கள் புண் உண்டாகி ஆறாமலோ அல்லது ஆறியோ தழும்புகளோடு கருப்பு நிறம் அடைந்து அல்லது அழுகிய கரிய நிறமாக இருப்பதைக் கறைப்பட்ட என்ற அடியால் தெரிகிறது. உரையாசிரியர்கள் கருங்குட்டம் என்றனர். இக்கால மருத்துவர்கள் இது பரம்பரை வியாதி அல்லது என்று குறிப்பிடுகின்றனர். எந்த சமுதாயத்திலும் தோன்றும் நோய் என்பதை சங்க காலத்திலேயே அறிந்திருந்தனர். இக்கருத்தைக் கலித்தொகை பாடலால் அறியலாம்.

'திரக் தறைந்த தலையுந்தன் கம்பலுங்
காரக் குறைந்து கறைப்பட்டு வந்துநஞ்
சேரியிற் போகா முடமுதிர் பார்ப்பானைத்'[58]

என்ற பாடல் வரிகளில் அறியலாம்.

## அற்சிரம்

'கடும்பனி அற்சிரம், நடுங்கக் காண்தகக்
கையில் விளைவன் தையுபு சொரிந்த'[59]

என்ற நற்றிணை பாடல் வரிகளில் கடும்பனி, அற்சிரம் முன்பனிக் காலத்தில் உதடுகள் உலர்ந்து வெடிப்புண்டாகி புண் உண்டாகும். இதை அற்சிரம் என்கிறோம். ஆனால் அற்சிரம் என்றால் முன்பனிக்காலம் என்று பொருள். அக்காலத்தில் உதடுகளில் உண்டாகும் புண் அற்சிரம் என்றே அழைத்தனர். நாளடைவில் அது அச்சரம் என்றாயிற்று. எனவே சங்ககால சமூகத்தில் வாழ்ந்த மக்கள் நோய்களைப் பற்றி அறிந்துள்ளனர் என்பதை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

## காப்பியங்களில் மருத்துவச் செய்திகள்

காப்பியங்களில் முதன்மையாக கருதப்படும் சிலப்பதிகாரத்தில் முப்பத்திரண்டு மூலிகைகளைக் குறித்த செய்தி காணப்படுகிறது. சிலப்பதிகார காலத்தில் சமணத் துறவிகள் வாழ்ந்தனர். இச்சமணத் துறவிகள் அறவோர் என்று அழைக்கப்பட்டுள்ளனர். அவர்கள் மக்கள் பணியாக இலவசமாக மருந்தும் செய்தனர் என்பதை,

அறவோர் பள்ளியும் அறனோம் படையும்,
பிறநிலைக் கோட்டத்துப் புண்ணியத் தானமும்'[60]

'அறவோர்க்கு அளித்தலும் அந்தணர் ஓம்பலும்'[61]

என்ற பாடல்வரிகளில் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இக்காலத்தில் போலி மருத்துவர்கள் காணப்படுவதைப் போல் பண்டையக் காலத்திலும் காணப்பட்டனர் என்பதை,

'மந்திரம் தெய்வம் மருந்தே நிமித்தம்
தந்திரம் இடனே காலம் கருவியென்று
எட்டுடன் அன்றே இழுக்குடை மரபிற்
கட்டுண் மாக்கள் துணையெனத் திரிவது
மந்திர பாட்டர் ஆயின் யாவரும்'[62]

என்று சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. கள்வர்கள் மந்திரம், தெய்வம், மருந்து நிமித்தம், தந்திரம், இடம், காலம், கருவி என்னும் எட்டையும் தமக்கு துணையாகக் கொண்டு களவு செய்துள்ளனர். இதனால் போலி மருத்துவர்கள் அக்காலத்தில் காணப்பட்டனர் என்பதை இப்பாடலின் மூலம் அறியலாம். மேலும், மருத்துவம் பார்க்கும் ஆண்பாலரை 'மருத்துவி' என்றும் பெண்பாலரை 'மருத்துவச்சி' என்றும் அழைக்கும் வழக்கம் இருந்திருக்கிறது என்பதை,

'ஆருயிர் மருத்துவி'[61]

என்று மணிமேகலை காப்பியத்தை இயற்றிய சாத்தனார் குறிப்பிடுவதிலிருந்து இருபாலரையும் அறியமுடிகிறது.

மருந்து என்பது நோயை அகற்றும் பொருளாகும். மனித உடலின் குறையை நீக்கி சரிசெய்யும் காரணியாகும். உடலில் உள் உறுப்புகளிலோ அல்லது வெளி உறுப்புகளிலோ நோய்

ஏற்பட்டாலும் குணப்படுத்தும் ஒரே வழி மருந்தாகும். இதனால் அக்கால அரசர்கள் போருக்குச் செல்லுமுன் போர் வீரர்களுக்கு வேண்டிய உணவுப் பொருள்களுடன் மருந்துப் பொருள்களையும் உடன் எடுத்து சென்றனர். பெருங்கதையின் காப்பியத் தலைவனான உதயணன் போர் மேற்சென்ற போது பின்வரும் மருந்தினையும் எடுத்துச் சென்றான் என்பதை,

'அஞ்சனம் மனோசிலை, அணி அரிதாரம்
துத்தம் மாஞ்சி, அத்தவத் திரதம்
திப்பிலி, இந்துப் பொப்புமுறை யமைத்துத்
தாழி மேதை தவாத துவர்ச்சிகை
வெண்ணரிகை வங்கப் பாலையோடு இன்ன
மருத்துறுப் பெல்லாம் ஒருப் படுத்து அடக்கி
இலச்சினை ஒற்றிய தலைச்சுமைச் சரக்கினர்'[64]

என்ற பெருங்கதை பாடலின் மூலம் மருந்தின் முக்கியத்துவம் புலப்படுத்துகிறது. மேலும் மருந்தின் தன்மையையும், அதன் பயன்களைப் பற்றி திருமந்திரப் பாடலின் மூலம் அறியலாம்.

'வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்
நாரி மருந்தென்றும் நந்தி அருள் செய்தான்
ஆதி மருந்தென் றறிவா அகலிடந்
சோதி மருந்திது சொலல் வொண்ணாதே'[65]

அழகுக்கான மருந்து பொருள்களை அக்காலத்தில் கையாண்டுள்ளனர். இதற்கு சான்றாக சிலம்பில் நாட்டிய நாயகி கலைச் செல்வி மாதவி, தன் காதல் தலைவன் கோவலனுடன் உலாவி வர தன்னை ஒப்பனை செய்து கொள்ள நீராடுகிறாள். மாதவி நீராடிய நன்னீரில், 'பத்துவகைப் பட்டவேர்', 'ஐந்து வகைப்பட்ட விரை', 'முப்பத்திரண்டு வகை ஏமாலிகை' ஆகிய நாற்பத்தேழு[66] மருந்துப் பொருள்களும் ஊறிக்காய்ந்தது என்று

சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இவை, அழகுப் பொருளின் கூட்டு போலும் அப்பொருள்கள் ஊறிய நீரில் நீராடிய மாதவி 'நிறம் பெற்றாள்' என்று குறிப்பிடுகிறது. மேலும் மருந்து, நோய்க்கு மட்டும் அல்லாமல் உடல் வளர்ப்பிற்கும் பயன்பட்டிருக்கிறது என்பது புலப்படுகிறது.

மாதர்கள் மேனி பொலிவுக்கு மருந்து ஊறிய நீரில் நீராடுவதைப் போல, அவர்களில் தங்கள் கூந்தலை வளர்க்கவும், பராமரிக்கவும் அதிகக் கவனம் செலுத்துவர். அழகுக்கு அழகூட்டும் சாதனங்களில் கூந்தல் பராமரிப்பும் இடம் பெறுமாகையால், கூந்தல் ஒப்பனையை விரும்புவர்.

நன்னீரில் நீராடிய பெண்டிர் தமது கூந்தலை அகில் புகையால் உலரச் செய்வர். கூந்தலை வளர்க்கவும், நிறங்கொடுக்கவும், பேணவும், மான்மத கொழுஞ்சேறிட்டு அலங்கரித்தனர். மான்மதக் குழம்பு என்று கஸ்தூரிக் குழம்பு என்றும், ஜவ்வாது என்றும்[61] கூந்தல் வளர்ச்சிக்கான மருந்தை குறிப்பிடுவது குறிப்பிடத்தக்கது.

அக்காலத்தில் நோய்களை குணப்படுத்துவதற்கு மூலிகைகளை பயன்படுத்தியுள்ளனர். அவற்றுள் சிறப்புக் குணம் படைத்த மலர்களை கையாண்டுள்ளனர் என்பதை,

'அம்பயம் நீலம் கழுநீர் அணி நெய்தல்
வம்பவிழ் கழுகம் மாதவி மந்தாரம்
தும்பை வகுளம் காபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்தி[62]

என்று திருமந்திரத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இப்பாடலில் குறிப்பிடப்பட்டிருக்கும் மலர்கள் அனைத்தும் மருத்துவப் பண்புகள் நிறைந்தவைகள் ஆகும். மேலும் மூலிகைகளில் முதன்மையாக கருதப்படுகின்றது.

அறுகன், இதைத் தெய்விக மூலிகை என்று சித்தர்கள் பாடியிருக்கிறார்கள். இவற்றைப் பற்றி சிலப்பதிகாரப்பாடலின் மூலம் அறியலாம்.

'அறுகு சிறுபூளை நெல்லோடு தூஉய்ச் சென்
பெறுக கணவனோ டென்றாள்'[69]

என்ற பாடல் வரிகளில் பிரிந்த கணவனைப் பெறுவதென்றால் மனைவியானவள் அறுகு, சிறுபூளை, நெல்லைப் பயன்படுத்தினால் மீண்டும் கணவனைப் பெறுவாள் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. எழுத்துக்களில் அகரம் முதன்மையாக விளங்குவது போல மூலிகைகளில் அறுகன் முதன்மையாக விளங்குகிறது. இதைத் தெய்வீக மூலிகை என்று சித்தர்கள் கூறியுள்ளனர். இதன் சாற்றை ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட அளவு உண்டுவந்தால் உள்ளம் செம்மைபடும் மற்றும் உடலுக்கு அழகினைக் கொடுக்கும். இதைபோலவே சிறுபூளை, நெல்லும் குளிர்ச்சியைக் கொடுக்க வல்லது மற்றும் புத்துணர்ச்சியை கொடுப்பது ஆகும்.

சங்ககாலத்தில் சமூகத்தில் உண்டான நோய்களில் மிகக் கடுமையானது காலகூடம் என்னும் நோய்தான். 'கடும்பிணி' யாகிய அந்நோய்வாய்ப்பட்டோர் வலிதாங்க மாட்டாமல் தங்கள்

உயிரையே விடுவதற்குத் தயாராயிருந்தனர். அந்நோய் உடம்பைச் சிதறடித்து இரத்தப் பெருக்கை ஏற்படுத்திவிடுமாம். நோயின் கடுமை தாங்குவதற்கரியதாயிருக்கும் என்பதை,

'காலக் கரணத்தக் கடும்பிணி கனற்ற
உணங் கதர்ந்து இழிந்த உதிர வெம்புனல்
தான் புறப்பட்டுத் தாங்குதற் கரிதாய்
வாயிற் கறியாங்கு மற்றுத்தன்
நோயின் கடுமை நோக்குபு நவியா
என்னுயிர் விடுவல் இழிந்தனையாகி
நின்னுயிர்க் கோடம் அறிந்தனை நீங்கென்'[70]

என்ற பெருங்கதை பாடல் வரிகளின் மூலம் அறியலாம். இதனை வெந்நோய் என்றும் அழைக்கின்றனர்.

'காலகூடம் என்னும் வெந்நோய் சாலவும் பெருக'[71]

உள்ளத்தில் ஒழுக்கம் கெடுகின்ற பொழுது நமது உடலில் நோய் தோன்றுகின்றன என்பதை,

'பிணிபொறைப் படுவது சாபிற் பிறிதாய்
இயற்கையிற் திரிந்துடம் பிடும்பை புரிதல்'[72]

என்ற மணிமேகலை பாடலின்மூலம் அறியலாம். மேலும் தொழுநோயின் தன்மையைப் பற்றி யசோதர காவியம் பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

'அழுகி நைந்து அஃகு மெய்யவாத்
தொழுகு புண்ணி ருவினை யாயினான்
முழுகு சீயின் முடை பொங்கி மேனியன்
தொழுவல் பல்பிணி நோய்களுந் துன்னினான்'[73]

என்னும் பாடல் வரிகளில் தொழுநோய் உள்ள உடம்பு புண்ணாகவும், உள்ளே இருக்கும் தசையும், நரம்பும், செம்பும் வலியிழந்தும் போதலும், உறுப்புக்கள் ஆங்காங்கு குறைந்து

போதலும் காணப்படும். மேலும், அழுகிய உடம்பு உருகியும் நீர் இடையறாது ஒழுகுவதால் புண்ணிடந்தோறும் ஒழுகும் சீழ் உடல் முழுவதும் படுவதால் நாற்றம் ஏற்படும் என்று தொழுநோயின் தன்மையைக் குறிப்பிடுகின்றனர்.

## அறுவை முறை மருத்துவம்

சங்ககால சமூகத்தில் பலவகையான மருத்துவ முறைகளைக் கையாண்டுள்ளனர். அவற்றுள் அறுவை மருத்துவத்தில் என்னென்ன முறைகள் செய்யப்பட்டன என்பதை விளக்கிக் கூறுவதாக அமைகிறது சீவகசிந்தாமணி.

'நெய்க்கிழி வைக்கப் பட்டார்
நெய்ப் பந்தர் கிடந்தப் பட்டார்
புக்குழி யெஃக நாடி
யிரும்பினாற் போழப் பட்டார்'
'முதுமரப் பொந்து போல
முழுமெய்யும் புண்க ளுற்றார்க்கு
இதுமருந் தென்ன நல்லார்
இழுதுசேர் கவளம் வைத்துப்
பதுமுகன் பரமை மார்பில்
நெய்க்கிழி பயிலச் சேர்த்தி
நுதிமயிர்த் துகிற்குப் பாயம்
புகுலகன நூக்கி னானே'[74]

மரப்பொந்து போல உடல் முழுவதும் ஏற்பட்ட புண்களுக்கு ஏற்ற மருந்து எது? என்பதை அறிந்த மருத்துவர், அம்மருந்தை வாயில் கவளத்தை வைப்பது போல் வைப்பர். நெய்யில் தோய்த்த துணியைப் புண்ணின்மேல் வைப்பர். புண்பட்டாரை நெய்ப்பத்தலில் கிடத்துவர். புண்ணுக்குள் புகுந்த இரும்புத்

துண்டுகளை அறுவை முறையால் அறுத்தெடுப்பர். பின்னர் எலி மயிரால் நெய்யப் பட்ட ஆடையால் போர்த்தி, காற்றுப் புகாதவாறு பாதுகாப்பர் என்று உரைப்பதினால், புண்பட்டார்க்குச் செய்யப்படுகின்ற மருத்துவ முறைகள் தெளிவாக்கப்பட்டுள்ளன.

## குழந்தை மருத்துவம்

பண்டைத் தமிழர்கள் வாழ்வில் இடம் பெற்றிருந்த மருத்துவம், எல்லாவிதமான மருத்துவமாகவும் விரிவடைந்து பரிணாம நிலையில் வளர்ந்து வந்திருப்பதாகத் தெரிகிறது. அவ்வாறு வளர்ந்து வந்த மருத்துவம் குழந்தை மருத்துவத் துறையையும் தன்னகத்தே கொண்டதாகத் திகழ்ந்திருக்கிறது.

இளங்குழந்தைகளுக்குச் செய்யப்படுகின்ற மருத்துவத்தை மிகவும் தேர்ந்த நிலை பெற்றதாகவே கருத வேண்டும். குழந்தைகள், நோயையோ, நோயின் குறியையோ கூறும் நிலையில் இருப்பதில்லை. குறிப்பறிந்தும், சோதித்தறிந்துமே மருத்துவம் பார்க்க வேண்டியிருக்கும். அம்மாதிரியான மருத்துவத்தை மனையுறையும் பெண்டிரே செய்தனர் என்பதற்குச் சீவகசிந்தாமணி சான்றாகிறது.

'காடி யாட் டித் தராய்ச் சாறும்
கன்னல் மணியும் நறு நெய்யும்
கூடச் செம்பொன் கொளத் தேய்த்துக்
கொண்டு நாளும் வாயுறீஇப்
பாடற் கினிய பகுவாயும்

கண்ணும் பெருக உகிர் உறுத்தித்
தேடித் தீந்தேன் திப்பிலி தேய்த்து
அண்ணா உரிஞ்சி முக்குயர்ந்தார்'[75]

பிரமிச்சாறு, கண்ட சருக்கரை, தேன், நறுநெய் ஆகியவற்றுடன் காடியைக் கூட்டி பொன்னினால் தேய்த்துக் குழந்தைகள் உண்ணுகின்ற அளவிற்குப் பக்குவப்படுத்திய மருந்தாக்கித் தினமும் வாய்வழி ஊட்டினர் என்றதனால், குழந்தை மருத்துவத்தினை மகளிரும் அறிந்திருந்தனர் என்பது பெறப்படுகின்றது.

## நீர் மருத்துவம்

கங்கை, காவிரி ஆகிய புண்ணிய நதிகளில் நீராடுதல், குமரிக்கடல், இராமேசுவரக் கடல் ஆகியவற்றில் தலை முழ்குதல் கோயில்களில் உள்ள குளங்களில் குளித்தல் ஆகியவற்றால் உடற்பிணிகளும் உள்ளப்பிணிகளும் போகுமென மக்கள் நம்புகின்றனர். மேலும் குறிப்பாக இன்றும் குற்றால அருவியில் பல நாட்கள் தொடர்ந்து குளித்தால் இப்பிணிகள் நீங்குமென மருத்துவர்களும், அறிஞர்களும் கூறுகின்றனர். கடல், ஆறு, அருவி, குளம் ஆகியவற்றில் நீராடுவது நன்மை தரும் பிணிபோக்கும் என்பதற்கு சிலப்பதிகாரம் சான்றாகின்றன.

'கூனும் குறளும் ஊமும் செவிடும்
அழுகுமெய் யாளரும் முழுகினர் ஆடிப்
பழுதில் காட்சி நன்னிறம் பெற்று
வலஞ்செயாக் கழியும் இலஞ்சி மன்றம்'[76]

என்ற பாடல் வரிகளில் பார்வையின்மை, உறுப்புக்குறையுடைத்

தசைப்பிண்டம், குறள்தேகம், பேச்சின்மை, காதுகேளாமை, விளங்குத் தோற்றம் அறிவில் தெளிவின்மை என்னும் எண்வகையான பிறவிக் குறைபாடு உள்ளவர்கள் இலஞ்சி மன்றத்தில் நாளும் நீராடி அம்மன்றத்தை வலம்வர அப்பிறவிக் குறைபாடுகள் நீங்குவர். அதுமட்டுமின்றி நல்நிறம் பெற்றுப் பொலிவுடன் திகழ்வார்கள். உணவே மருந்தாவது போல நீரில் மூழ்கினால் உடற்பிணிகள் போகும் இதை நீர் மருத்துவம் எனப்படும்.

## ஒத்தடம் மருத்துவம்

காயம், புண் ஏற்பட்டால் அதற்கு வெந்நீரில் துணி நனைத்து வைப்பது ஒத்தடம் மருத்துவம் எனப்படும். இதனால் காயம், புண் ஆகியவற்றின் வலி குறைந்து ஆறிப்போகும். தற்காலத்தில் முடநீக்கியல் மருத்துவத்தில் ஒத்தடம் கொள்ளும் மருத்துவம் பின்பற்றப்படுகிறது. செங்குட்டுவனின் வீரர்கள் பலரின் மார்பில் தந்தம், வில், வேல், வாள், அம்பு இவற்றால் விழுப்புண்கள் ஏற்பட்டன. அவ்வீரர்களின் அவ்விழுப்புண்களை அவரவர் மனைவியர் தம் கொங்கைகளால் (பொருந்தித் தழுவுவது வேது கொள்வது போல ஒடுப்பமுறத் தழுவினார் என்பதை,

'போந்தைக் கண்ணிப் பொலம்பூந் தெரியல்
வேந்துவினை முடித்த ஏந்துவாள் வலத்தர்
யானை வெண்கோடு அழுத்திய மார்பும்,
நீள்வேல் கிழித்த நெடும்புண் ஆகமும்,
எய்கணை கிழித்த மணிப்பூண் மார்பமும்

வைவாள் கிழித்த நெடும்பூண் மார்பமும்,
மைம்மலர் உண்கண் மடந்தையர் அடங்காக்
கொம்மை வரிமுலை வெம்மை வேதுறீஇ"[77]

என்ற சிலப்பதிகாரப்பாடல் வரிகளிலிருந்து வேது கொள்ளும் மருத்துவமுறை அக்காலத்தில் இருந்தன என்பதை இங்ஙனம் உவமை வாயிலாக விளக்குகிறது.

## புராணங்களில் மருத்துவச் செய்திகள்

கம்பராமாயணத்தில் சுந்தர காண்டப் பகுதியில் காட்சிபடலத்தில் கம்பர் அசோக வனத்தில் சிறைப்பட்ட சீதையை வாடிய செடியோடு உவமிக்குமிடத்து,

'கல்மருந்து எழுந்துஎன்றும் ஏர்துளி வரக்காணா
நல்மருந்து எனநலனற வணங்கிய நங்கை"[78]

என்ற செடியை மருந்து என்ற சொல்லாலேயே சுட்டுதல் குறிப்பிடத்தக்கது. எனவே, பண்டைக்காலத்தில் மருந்து என்ற சொல் மரம், செடி முதலானவற்றைக் குறித்தது என்பதும், இம்மரம், செடி முதலான அனைத்தும் பொதுநிலையில் மரம் என்ற சொல்லாலேயே சுட்டப்பெற்றன என்பதும் பெறப்படுகிறது. மரம், செடி, கொடி முதலானவையே தொடக்க காலத்தில் மருந்து பொருளாக விளக்கியிடுதல் வேண்டும் என தெரியவருகிறது. மேலும், கம்பராமாயணத்தில் யுத்தகாண்டப் பகுதியில் மருந்து மலைப் படலத்தில் மருந்தினைக் கொண்டவர அனுமன் புறப்பட்டபோது, மருந்தின் தன்மைகளைப் பற்றி இராமன் கூறுவதாக,

மாண்டாரை உய்விக்கும் மருந்து ஒன்றும்

உடல் வேறு வகிர்களாகக்
கீண்டாலும் பொருந்துவிக்கும் ஒரு மருந்தும்
படைக்கலங்கள் இளைப்பது ஒன்றும்
மீண்டேயும் தம் உருவினை அருளுவது
ஏர் மெய்ம் மருந்தும் உள"[79]

என்ற பாடல் வரிகளில் அறியலாம். மேலும், மருந்தின் முக்கியத்துவத்தைப் பற்றி கம்பர்,

'உய்த்த மாமருந்து உதவ
தெய்வ மாக்குன்று தாங்கி"[80]

என்ற பாடல் வரிகளில் கம்பர் காட்டிச் செல்வதிலிருந்து மருந்தின் முக்கியத்துவத்தைப் புலப்படுத்துகிறார். இக்காலத்தில் அறுவை சிகிச்சை முறைகள் காணப்படுவதுபோல் சங்ககாலத்தில் இம்முறைக் காணப்பட்டது என்பதற்கு ஆதாரமாக,

'உடலிடைத் தோன்றிற் றொன்றை
அறுத்ததன் உதிரம் ஊற்றிச்
சுடலுறச் சுட்டு வேறோர்
மருந்தினால் துயரம் தீர்வார்"[81]

என்ற பாடல்வரிகளில் கம்பர் உடலில் தோன்றுகின்ற ஒன்றை அறுவை முறையால் அறுத்து, கெட்ட உதிரம் நீக்கி, சுட வேண்டியதிருந்தால் சுட்டும் வேறு ஒரு மருந்தினை வைத்துக் கட்டுகின்றனர். இதனைப் போலவே உடலில் கட்டி முதலியன தோன்றினால், அவை அறுவை முறையில் மருத்துவம் பார்க்க வேண்டியதிருந்தால் மருத்துவன் வாளால் அறுக்கின்றான். ஆனால், அவன் மீது கொண்ட அன்பினால் வாளால் அறுக்கும் போதும் குறைவதில்லை என்பதைக் குலசேகராழ்வார் குறிப்பிடுகின்றார்.

'வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால்
மீளாத காதல் நோயாளன் போல்'[82]

என்ற பாடல்வரி குறிப்பிடுகின்றது. எனவே சங்ககாலத்தில் அறுவை மருத்துவத்தில் சிறப்புற்று, இருந்தார்களென்பதை மேற்கூறியபாடலின் மூலம் அறியப்படுகிறது.

உடலில் ஏற்படுகின்ற புண்ணை ஆற்ற மருந்திடுமுன் புண்ணில் புதைந்துள்ள இரும்பு ஆயுதந்துணுக்குகளை வெளியே எடுக்க காந்தத்தைப் பயன்படுத்தி அதனால் புண்ணுக்குள்ளிருக்கும் இரும்பை வெளியே எடுத்த செய்தியைக் கம்பன் கூறக்கேட்கலாம்.

'ஆயில்வேல்... நீங்கலது இப்பொழுதகன்றது
.... காந்தமாம் மணியின்று வாங்க'[83]

என்ற பாடல் வரிகளில் அறியலாம். கண்ணப்ப நாயனார் புராணத்தில் கண்ணப்பர் சிவலிங்கத்தின் கண்களிலிருந்து வடிந்த குருதியை நிறுத்த பச்சிலைகளைப் பறித்து, அவற்றின் சாற்றை மருந்தாகப் பயன்படுத்தினார் என்பதை,

'புனத் திடைப்பறித்துக் கொண்டு பூதநாயகன்பால் வைத்த
மனத்தினும் கடிது வந்தம் மருந்துகள் பிழிந்து வார்த்தார்'[84]

என்ற பாடல்வரிகள் மூலம் அறியமுடிகிறது. மேலும் கண்ணப்ப நாயனார் பச்சிலைச்சாறு பிழிந்துவிட்டும் குருதி நிற்காததைக் கண்டு செய்வதறியாது திகைத்து, 'ஊனுக்கு ஊன்' என்பதை மிகுந்த மகிழ்ச்சியடைந்து தன் கண்ணைப்பெயர்த்து இறைவன் கண்ணில் அனுப்பினார். இதிலிருந்து, ஊனுக்கு ஊன் கொடுத்து நோய் தீர்ப்பதும் அன்று வழக்கில் இருந்துள்ளது. இன்னும் ஒருவர் உடம்பிலே ஏதேனும் ஓரிடத்தில் தசை சிதைவுற்றால்,

இன்னோரிடத்தில் இருந்து தசையை எடுத்து ஒட்ட வைக்கின்றனர். தானங்களில் சிறந்தது கண்தானம் என்பதை வலியுறுத்தி, கண்களில் பார்வை இழந்தவர்களுக்கு, கண் ஒளி கொடுக்கும் பணி இன்றும் நடைபெற்றுவருகிறது என்பதை குறிப்பிடத்தக்கதாகும்.

சங்ககால மக்கள் மருந்தின் மூலம் நோய்களை குணமாக்குவதுபோல், மந்திரத்தின் மூலம் நோய்களை குணமாக்கும்முறையினை கற்றறிந்துள்ளனர் என்பதை

'இம்மையே எழுமை நோய்க்கு
மருந்தினை இராம வென்னும்
செம்மைசேர் நாமந் தன்னைக்
கண்களிற் றெரியக் கண்டான்'[45]

என்ற பாடல்வரிகளில் இராம நாமத்தை மந்திரமென்று கம்பர் அழைக்கிறார். இப்பிறவியிலேயே எழுபிறவிகளாகிய நோய்க்கு மருந்தாக அமைந்து போக்கக் கூடியதும் செம்மை மிகுந்த திருப்பெயராவதும் இராம நாமமே என்று வாலி காண்பதாகத் தன் ஞானக் கண்ணாற் கண்டு களித்துப் பக்தியால் பரவசமுற்றுப் பாடுகிறான்.

சைவ, நாயன்மார்கள் செய்த சமூகத் தொண்டுகளில் நோய் தீர்த்தலும் ஒன்றாகும். திருஞானசம்பந்தர் மதுரையில் அவர் கூன் பாண்டியனின் தீராத வெப்ப நோயை நீக்கி நலம் பெறச்செய்துள்ளார் என்பதை,

'மந்திரமாவதுநீறு வானவர் மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப் படுவதுநீறு

தந்திரமாவதுநீறு சமயத்தி லுள்ளதுநீறு
செந்துவர் வாயுமைபங்கன் திருவாலவயன் திருநீறே'[86]

என்ற பதிகத்தில் தொடங்கி பதினொன்றையும் பக்தியுடனும் நம்பிக்கையுடனும் படித்துக் கொண்டே திருநீற்றில் மந்தரித்துத் தண்ணீரிலிட்டு அருந்தக் கொடுங்கள். திருவருள் துணையால் நோயகலும் என்கிறார். இதனைப் போலவே திருஞானசம்பந்தர் திருச்செங்கோட்டில் தங்கியிருந்தபோது தம்முடன் வந்த அடியார்களுக்கு ஏற்பட்ட விஷ சுரத்தை இப்பதிகம் பாடி நலம் பெறச் செய்தார் என்பதை,

'அவ்வினைக் கிவ்வினையாம் என்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடாதிருப்பதும் உந்தமக்கு ஊன மன்றே
கைவினை செய்து எம்பிரான் கழல் போற்றதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப் பெறா திருநீலகண்டம்'[87]

என்ற பாடல்வரிகளில் திருநீறு மருந்துண்டு பயன்பெறலாம் என்கிறார். இவரைப் போலவே திருநாவுக்கரசர் திங்களூரில் அப்பூதியடிகள் மகன் திருநாவுக்கரசுப் பாம்பு கடித்து இறந்தான். அவனைக் கிடத்திக் கீழ்க்கண்ட பதிகத்தைப் பாடி உயிர்ப்பித்தார். மந்திர சக்தி வாய்ந்த பதிகம் என்கிறார் என்பதை,

'ஒன்றுகொ லாமவர் சிந்தை யுயர்வரை
ஒன்றுகொ லாமுய ரும்மதி சூடுவர்
ஒன்றுகொ லாமிடு வெண்டலை கையது
ஒன்றுகொ லாமவ ருர்வது தானே'[88]

என்ற பாடல் வரிகளில் குறிப்பிட்டுள்ளார். தேவாரத்தில் அப்பர் மழவினைகளால் வந்த நோய்களுக்கு மருந்தில்லை என்ற நம் முன்னோர்களின் சொல்லையும் உறுதிப்படுத்துகின்றனர் என்பதை,

'...மந்திரமும் தந்திரமும் மருந்துமாகி தீராநோய்
தீர்த்தருள வல்லான் தன்னை...'[11]

என்ற பாடல்வரிகள் இறைவனால் வந்த நோய்க்கும் மருந்தில்லை என்ற உலக வழக்கினையும் கூறி, அத்தகைய நோயினை உண்மையான இறைவழிபாட்டால் தான்நீக்க இயலும் எனவும் வலியுறுத்துகின்றார்.

## பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் மருத்துவச் செய்திகள்

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் சில பெயர்கள் மருத்துவ மூலிகையின் அடிப்படையில் அமைந்துள்ளன. மேலும் மருத்துவக் கலை பற்றிய அடிப்படைக் கருத்துக்களைத் தொகுத்துத் தருவதில் உலகப் பொதுமறையாகிய திருக்குறள் முதலிடத்தை வகிக்கிறது என்பர். தமிழ் மறையெனப் போற்றப் பெறும் திருக்குறளில் அமைந்துள்ள மருந்து என்னும் அதிகாரம், தமிழ் மருத்துவ நெறியை வகுத்துரைப்பதாகக் கருதலாம். இந்த அதிகாரத்தில் மருந்து, மருத்துவன், மருத்துவம், மருத்துவ நூலோர், நோய், நோயாளி, நோய்க்கான காரணம், நோயில்லாநெறி, உணவுநெறி ஆகியன விளக்கப்படுகின்றன.

## மருத்துவ முறை விளக்கம்

உற்ற நோயைப் போக்குவதற்குச் செய்யப்படுவது மருத்துவம். அந்நோயைப் போக்குவது மருந்து. மருந்து,

மருத்துவத்தின் பகுதியாகும். மருந்து மட்டும் நோய் தீர்க்கப் பயன்படுவதில்லை. நோயுற்றார்க்கு உற்ற நோய் என்னவென்று உய்த்துணரும் மருத்துவன் வேண்டும். மருத்துவன் குறிப்பிட்டுரைக்கும் மருந்தை நோயுற்றானுக்கு ஊட்டுகின்ற மருத்துவத் துணைவன் வேண்டும். ஆக மருத்துவம் என்பது நோயாளி, மருத்துவன், மருந்து, மருத்துவத் துணைவன் என்னும் நான்கு பகுதிகளைக் கொண்டது. இதனை மருந்து என்னும் சொல்லால் திருக்குறள் உரைக்கும்.

'உற்றவன் தீர்ப்பான் மருந்துஉழைச் செல்வானென்ற
அப்பால் நாற்கூற்றே மருந்து'[90]

என்ற குறளில் உற்றவன்-நோயுற்றவன், தீர்ப்பான்-மருத்துவன், மருந்து-மருத்துவனின் கருவியான நோய்தீர்க்கும் மருந்து, உழைச்செல்வான் - மருத்துவனுக்கும் நோயாளிக்கு துணையாயிருந்து மருந்தூட்டுபவன் எனப் பொருள் உரைக்கிறது.

## மருத்துவன்

மருத்துவன் நோயாளியை நாடி, நோய் வந்ததன் காரணத்தை நாடி, வந்துற்ற நோய் எது என்பதை நாடி, பின்னர் வந்துற்ற நோயைத் தீர்க்கும் மருந்து எது? எவை? என்பனவற்றை நாடி, அன்பின் வகையில் மருந்தூட்ட வேண்டும் என்பதை,

'நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்'[91]

என்ற குறளின்மூலம் அறியலாம். நோயுற்ற நோயாளியின்

அளவு, அதாவது உடல் பருமன், வலிமை, மனநிலை ஆகியவற்றையும், நோயின் அளவு, அதாவது தொடக்கம், இடை முதிர்வு, வன்மை, மென்மை ஆகியவற்றையும், நோயுற்ற காலம், நோய் தொடருங்காலம், மருத்துவம் பார்க்க வேண்டிய காலம், மருத்துவம் பார்க்கும் காலம் ஆகியவற்றையும் அறிந்து மருத்துவம் செய்பவனே, மருத்துவம் கற்றவனாகக் கருதப்படுவான் என்று மருத்துவனுக்குரிய செயற்பாட்டினை விவரிக்கிறது என்பதை,

*'உற்றான் அளவும் பிணியளவும் காலமும்*
*கற்றான் கருதிச் செயல்'*[92]

என்ற குறள்களில் மருத்துவனின் இலக்கணத்தை குறிப்பிட்டுள்ளார் வள்ளுவர்.

## நோய்

*உடம்பார் அழியின் உயிரார் அழிவர் என்பது திருமூலரின் வாக்கு. எனவே உடம்பைப் பேண வேண்டும். மருந்து என்ற அதிகாரத்தில் நோயிற்கான காரணத்தைக் குறிப்பிடுகின்றார் வள்ளுவர். மனிதன் உணவு உண்ணுதல், உறங்கும் நேரம் ஆகியவற்றிற்கு அளவு உண்டு. அவ்வளவின்படி அச்செயல்களைச் செய்தல் வேண்டும். அவ்வாறின்றி அளவைவிடக் குறைவாகவோ, அதிகமாக செய்தால் வாதம், பித்தம், கபம் ஆகியக் கூறுகள் அதிகமாகவும், குறைவாகவும் உடலில் ஏற்பட்டு நோயை உண்டாக்கும் என்பது சித்தர்களின்*

கருத்து. இதனை வள்ளுவர்,

> 'மிகினும் குறையினும் நோய் செய்யும் நூலோர்
> வளிமுதலா எண்ணிய மூன்று'[93]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

ஒருவன் உண்ணுகின்ற உணவு அவனுடைய வயிற்றின் கொள்ளவை விடவும் குறைவாக இருந்தால், உணவு செரிந்து, மீண்டும் பசியை உண்டாக்கும். அதனால் நோய் வரும்வழி தடைப்படும். அவ்வாறில்லாமல் வயிற்றின் அளவைவிடவும் அதிக அளவு உணவை வயிற்றுக்குள் திணித்தால் செரிப்புத் தன்மை குறைந்து நோய் வருவதற்கு வழியேற்படும் என்பதை,

> 'இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
> கழிபேர் இரையான்கண் நோய்'[94]

என்ற குறளில் வள்ளுவர் கூறியுள்ளார்.

## நோயில்லா நெறி

நோயில்லா நெறி என்பது வாழ்வின் பொது நெறி எனக் கொள்ளலாம். இது எல்லா நிலையினருக்கும் எல்லா வயதினருக்கும் பொருந்துமாதலான் பொது நெறியாகக் கருதலாம். மருந்து தேவைப்படுவது நோய் என ஒரு தீமை தோன்றிய பின்னரேயாம். அதனால் நோய் வந்தபின் போக்குவதைவிட, வராமல் தடுப்பதே நல்லநெறி எனப்படும்.

> 'நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம் நோய்செய்யார்
> நோயின்மை வேண்டு பவர்'[95]

என்னும் குறளில் கருத்திற்கொள்ளத்தக்கதாகும். நோயென்பது

வேண்டாம் என்றால், மருந்தென ஒன்றும் வேண்டாம். மருந்து வேண்டாம் என்றால் தாம் உண்ட உணவு செரிமானமடைந்து கழிவாக வெளியே சென்றபின், உணவு உட்கொள்ளும் பழக்கத்தினை மேற்கொண்டால், மருந்தென்பது வேண்டாம் என்பதாகும். வள்ளுவர் இதை

'மருந்தென வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது
அற்றது போற்றி உணின்'[6]

எனக் குறிப்பிட்டுள்ளார். உண்ட உணவு செரித்துக் கழிவாக வெளியே சென்றது என்பதையும், தாம் உண்ண வேண்டிய உணவின் அளவு எவ்வளவு என்பதையும் அறிந்தவரின் உடம்பு நீண்ட நாள்கள் நோயின்றி வாழும் என்பது நோயில்லா நெறிமுறையாகக் கொள்ளத்தக்கவை எனலாம் என்று வள்ளுவர் கூறிப்பிட்டுள்ளார்.

'ஆற்றல் அளவறிந்து உண்க அஃது உடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு'[7]

என்ற குறட்பாவால் அறியமுடிகிறது.

## உணவு நெறி

நோயில்லா நெறியை உணர்த்துவது உணவு நெறியாகும். உணவின் நெறிமுறை தவறினால் நோயில்லா நெறி என்பது பிழையாகிப்போகும். ஆகவே, உணவு நெறியை மேற்கொண்டு வாழும் வாழ்க்கையே நோயில்லா வாழ்க்கையாகக் கருதலாம்.

உண்ணும் உணவில் குற்றமுடைய உணவு, நல்ல உணவிலும் உண்போர் உடலுக்கு ஒவ்வாத உணவு, என்னும்

வகை உணவை நீக்கிவிட்டு, உடலுக்கும் மனத்துக்கும் ஏற்ற உணவை உட்கொண்டு நேர்ந்தார், உடலுக்கு மட்டுமல்ல உயிருக்கு'ம் குற்றம் உண்டாகாது என்று குறிப்பிடுகிறார்.

'மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின்
ஊறுபாடு இல்லை உயிர்க்கு'[98]

என்ற குறட்பாவில் அறியலாம். குற்றமுடைய உணவு என்பது கெட்டுப்போன உணவு என்றும் ஒருவன் உண்ணும் அளவுக்கு மீறி உண்ணப்படுகின்ற உணவையும் குற்ற உணவு என்றும் கொள்ளலாம். இத்தகைய உணவு நோயை உண்டாக்கி உடலுக்குத் துன்பத்தைத் தரும். அதாவது உயிர்க்கு ஊறுவிளைவிக்கும் உணவு என்பது ஒவ்வாத உணவு ஆகும். ஒவ்வாத உணவாவது, சேரக் கூடாத காய்கறிகளை ஒன்று சேர்த்து அமைப்பதால்ஒவ்வாமை தோன்றும் என்று கூறுவர். அதவாது, உணவு நஞ்சு. அத்தகைய உணவு உயிர்க்கு ஊறு விளைவிக்கும் என்பதைக் குறிப்பிட்டே 'ஊறுபாடில்லை உயிர்க்கு என்று உரைக்கப்பட்டுள்ளது.

உணவு உண்ணத் தொடங்கும் முன்னர் உண்ட உணவு முற்ற செரித்துப் பின் பசி முற்றிய நிலையை அடைந்த பின்பே உணவுண்ண வேண்டும் என்று உணவு நெறி வகுக்கப்பட்டுள்ளது என்பதை,

'அற்றதறிந்து கடைப்பித்து மாறல்ல
துய்க்க துவரப்ப சித்து'[99]

என்ற குறளில் வள்ளுவர் குறிப்பிடுகின்றார். பல்லாண்டுகளுக்கு

முன்பே வாழ்க்கைக்குரிய பக்குவங்களை வாழ்க்கை நெறியாக மருத்துவ நெறியாக உணவு நெறி உரைக்கப்பட்டிருப்பது உணரத்தக்கதாக அமைந்துள்ளது.

## திரிக்கடுகம்

மக்களுக்கு அறநெறிகளை வலியுறுத்துகின்ற மூன்று கருத்துக்கள் அடங்கியது திரிகடுகம் ஆகும். மூன்று கருத்துக்களைப் போன்று, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய மூன்று பொருட்களும் சேர்ந்து உருவாக்கப்பட்ட மருந்து, திரிகடுக சூரணம் எனப்படுகிறது. இச்சூரணம் உடல் நோயைப் போக்குகின்றது. சளி, இருமல், மூளை காய்ச்சல் போன்ற நோய்களைக் குணப்படுத்தும் மருந்தாகப் பண்டைக் காலத்திலிருந்து பயன்பட்டு வந்தது என்பதற்கு,

> 'செய்யாப் பாவை வளர்ந்து கவின் முற்றிக்
> கயங்கொண்டன இஞ்சி மாவிருந்து'[100]

என்ற மலைபடுகடாம் பாடல் வரிகள் சிறந்த சான்றாகிறது. திரிகடுகத்தில் சொல்லப்படும் மூன்று அறக்கருத்துக்களும் மனிதரின் அகநோயின் அறியாமை என்னும் நோயைப் போக்கும். இக்கருத்தையே திரிகடுகம் பாயிரச் செய்யுளானது.

> 'உலகில் கடுகம் உடலின் நோய் மாற்றும்
> அலகுஇல் அகநோய் அகற்றும் - நிலைகொள்
> திரிகடுகம் என்னும் திகழ்தமிழ்ச் சங்கம்
> மருவு நல்லாதன் மருந்து'[101]

என்ற பாடல் வரிகளில் தெரியவருகிறது.

அருந்ததி போன்ற கற்புடைய மகளிரின் தோள்களும், பெருமைமிக்க பழமையான குடியில் தோன்றியவரோடு கொள்ளும் நட்பும், சொல்லில் குற்றம் நீக்கவல்ல கேள்வி ஞானம் உடையவர் நட்பும் ஆகிய மூன்றும் ஒருவனுக்கு திரிகடுகம் போலவுள்ள ஒப்பற்ற மருந்தாகும் என்பதை,

*'அருந்ததிக் கற்பினார் தோளும் திருந்திய*
*தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியும் - சொல்லின்*
*அரில் அகற்றும் கேள்வியார் நட்புஇம் மூன்றும்*
*திரிகடுகம் போலும் மருந்து'*[102]

என்று திரிகடுகம் பாடல் வரிகள் கூறப்படுகின்றன. மேலும் இக்காலத்தில் தீர்க்க முடியாத நோய்கள் இருக்கின்றதைப்போல் அக்காலத்தில் மருந்துகளால் தீர்க்க முடியாத நோய்களும் இருந்திருக்கின்றன என்பதை,

*'உருவினை உள்ளுருக்கித் தின்னும் பெரும் பிணியும்'*[103]

என்று திரிகடுகம் பாடல் கூறுகிறது.

## சிறுபஞ்சமூலம்

சிறுபஞ்சமூலம் என்பது கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சிறுமல்லி, பெருமல்லி, நெரிஞ்சில் இலை ஆகி ஐந்து சிறிய வேர்களைக் குறிக்கும். இவ்வேர்கள் அனைத்தும் நாட்டு மருத்துவத்தில் மருந்துப்பொருளாகப் பயன்படுகிறது. மேலும் பண்டைய காலத்தில் வாழ்ந்த மக்கள் நோயாளிகளுக்கு உதவி செய்வதை அறச் செயல்களில் ஒன்றாகக் கருதினார்கள் என்பது கீழ்க்கண்ட சிறுபஞ்சமூலம் பாடல்வழி அறியமுடிகிறது.

'சீக்கர் சிதடர், சிதலை போல் வாயுடையார்
துக்கர் துருநாமர் தூக்குங்கால் - தொக்க
வருநோய்கள் முன்நாளில் தீர்த்தாரே இந்நாளில்
ஒரு நோயின்றி வாழ்வார்'[104]

ஊனமை, பித்தும் கொண்டோர், கண்ணில்லாதவர் போன்றவர்களுக்கு உதவி செய்தால் நோயில்லாமல் வாழமுடியும் என்பது மக்களின் நம்பிக்கையாகும். மேலும், ஐந்து வேர்களால் தயாரிக்கப்படும் மருந்துகள் உடல் நலத்தை பேணுவது போல இந்நூலில் வரும் ஐந்தைந்து கருத்துக்களும், மனித வாழ்க்கைக்கு பயன்படுகின்றன என்பதை,

'மக்கட் பெறுதல் மடனுடைமை மாதுடைமை
எக்கக் குறைதல் உணவமைவு - தொக்க
அலைவலை கல்லாமை பெண்மகளிர்க்கு ஐந்து
தலைமகனைத் தாழ்க்கு மருந்து'[105]

என்ற பாடல்வரிகளில் மக்களைப் பெறுதல், அடக்கம் உடைமை, அழகுடைமை, கணவனது கருத்துக்கு இசைந்து ஒழுகுதல், கணவன் உண்டாலும் உணவை விரும்புதலும் ஆகிய ஐந்தும் பெண்களுக்குரிய குணங்களாக இருக்குமாயின் அவர் கணவனை வணங்கும் மருந்தாகும் என்று இந்நூல் கூறுவதைக் காணமுடிகிறது.

## ஏலாதி

'ஏலாதி' என்பது ஏலம், இலவங்கம், சிறுநாகப்பூ, மிளகு, திப்பிலி, சுக்கு ஆகிய ஆறு பொருள்களின் கூட்டுப்பெயராகும். இந்நூலில் நோய்களின் பெயர்களும் அவற்றின் துன்பங்களும

இடம் பெற்றிருக்கின்றன. கொடிய சிரங்குநோய், வெண்ணிறக்குட்ட நோய், கல்லடைப்பு நோய், வாதநோய், வருத்தும் கழலை நோய், பெரிய வயிற்றெரிச்சல் நோய் என்ற இவற்றையுடையவர்க்கு அவர்களின் பொறுதற்கு அரிய துன்பத்தை தணித்து அவர்களுக்கு உணவை அளித்து அந்த நோயைப் போக்கியவர் மன்னவராய் எல்லோராலும் போற்றப்பட்டு உலகை ஆள்வார். இதை

> 'கருஞ்சிரங்கு வெண்தொழுநோய் கல்வளி காயும்
> பெருஞ்சிரங்கு பேர் வயிற்றுத்தியார்க்கு - கருஞ்சிரம்
> மாற்றியூ ணீத்தவை தீர்த்தா ரரசராய்ப்
> போற்றியூ ணுப்பார் புறந்து'[106]

என்ற பாடலின்மூலம் அறியலாம்.

## ஆசாரக் கோவை

ஆசாரம் என்னும வடசொல், ஒழுக்கம் என்று பொருள்படும். ஒழுக்கமுறைகளை ஒருசேரச் சேர்த்து கூறுவதால் ஆசாரக் கோவை என்ற பெயர் பொருந்தமுடைதாயிற்று என்று குறிப்பிடுவர். இந்நூலில் உலகியல் பற்றிய உண்மைகளும், மனிதனுக்கு துன்பங்கள் ஏற்படுவதால் நோய்கள் உண்டாவது பற்றியும், அதனை நிவர்த்தி செய்வதற்கான வழிமுறைகள் பற்றியும், உணவு பழக்க முறைகள் போன்ற மருத்துவ முறைகளை இந்நூலில் கூறப்படுகின்றன.

## உணவு பழக்க முறைகள்

நோய் உண்டாவதற்கு அடிப்படையானது உணவு பழக்க முறைகளை அறிந்து மேற்கொள்ளாமை. நல்லுணவைத் தேர்தல், செரித்த பின் உண்டல், ஒவ்வாத உணவை நீக்குதல், பசித்தபின் அளவறிந்து உண்டல் முதலியவற்றை உணவு பழக்க முறைகளாக ஆசாரக்கோவை வலியுறுத்துகிறது என்பதை,

'நீராடிக் கால்கழுவி வாய்பூசி மண்டலஞ்செய்து
உண்டாரே உண்டாரெனப் படுவர் என்றும்'
'உண்ணுங்கால் நோக்கும் திசைகிழக்குக் கண்ணமர்ந்து
தூங்கான் துளங்காமை நன்கிரீஇ யாண்டும்
பிறிதியாது நோக்கான் உரையான் தொழுதுகொண்டு
உண்க உகாஅமை நன்கு'[10]

என்ற பாடல்வரிகளில் உணவு உட்கொள்ளும் போது மேற்கொள்ளவேண்டிய நெறிமுறையை இந்நூலில் அறியமுடிகிறது.

## நோய்வராமல் தடுக்கும் முறைகள்

நோய் வராதிருக்க வேண்டுபவர் பாழான வீட்டினுள்ளும், கோயில்களிலும், சுடுகாட்டிலும் ஊர் இல்லாத இடத்தில் உள்ள ஒற்றையான மரத்திடத்தும் யாரும் உறங்க மாட்டார்கள் மனிதனிடத்து வளர்ந்த அக நம்பிக்கை காரணமாகவும், அறிவியலின் காரணமாகவும் மேலே குறிப்பிட்ட இடத்தில் உறங்காமல் தவிப்பது நல்லது என்று அக்காலத்தில் நம்பினர் என்பதை,

'பாழ்மனையுந் தேவ குலனுஞ் சுடுகாடும்

ஊரில் வழியெழுந்த வொற்றை முதுமனூந்
தாமே தமியர் புகாஅர் பகல்வளரார்
நோயின்மை வேண்டு பவர்'[108]

என்ற பாடல்வரிகளின் மூலம் அறியலாம். ஆசாரக் கோவை நோயின்றி நெடிது வாழத் தவிர்க்க வேண்டியவற்றை பற்றி,

'பிறருடுத்த மாகணியுந் தீண்டார்'[109]

என்ற பாடல் வரிகளில் பிறர் உடுத்திய அழுக்கேறிய ஆடையை அணிதல் ஆகாது என்று குறிப்பிடுகின்றன. மேலும் பகல் தூக்கம் நோயை உண்டு பண்டும் ஆதலால் பகலிலே தூங்குவதைத் தவிர்க்க வேண்டும் என்பதை,

'பகல் வளரார் நோயின்மை வேண்டுபவர்'[110]

என்ற பாடல்வரிகள் குறிப்பிடுகின்றன. 'கண் எச்சில் கண் ஊட்டார்'[111] என்ற தொடரில் ஒருவதம் கண்ணோய்க்கு மருத்துவம் பார்த்த கருவியைக் கழுவித் தூய்மை செய்யாமல் மற்றவர்தம் கண்ணோய்க்கு மருத்துவர் பயன்படுத்தமாட்டார் என்ற குறிப்பு இடம்பெறுகின்றன. Needle Sterilizing என்பது அதிலும் பிழைநேருமோ என்ற நிலையில் 'Disposable Syninge'மருத்துவ உலகில் அறிமுகப்படுத்தப் பெற்றுள்ளது என்பதும் இன்றைய மருத்துவ நடப்பியல் ஆகும்.

'கிடந்தாரைக் கால்கழுவார் பூப்பெய்யார் சாந்தும்
மறந்தானும் எஞ்ஞான்றும் பூசார்'[112]

என்னும் பாடலடிகள் நோயைக் கட்டுப்படுத்தவும் மற்றவர்க்குப பரவாமல் தடுக்கவும் இன்றைய மருத்துவர்கள் கொடுக்கும் ஆலோசனைகளை இவைகாட்டுகின்றன. நோயாளியின்

கைகால்களைத் தூய்மை செய்தலும், உடலைத் தூய்மை செய்தலும், குளிப்பாட்டுதலும் அவர்களுக்கு என்பது இப்பாடலின் மூலம் அறியலாம்.

## நான்மணிக்கடிகை

மக்களின் தீய ஒழுக்கம் பலவித நோய்களுக்குக் காரணம் என்பதை 'பொய்ப் சிதைக்கும் பொன் போலும் மேனியை'[113] என்றும், நோய்வாய்ப்படும்போது அதிகம் உண்பது கூடாது என்று பட்டினியிருத்தல் சிலநோய்களுக்கு மருந்தாகிவிடும் என்பதை, 'இரைசுடும் இன்புறா யாக்கையுட் பட்டால்'[114] என்றும் மாந்தசுரம் செரியாமை, முதலிய நோய்கள் பட்டினியிருத்தலால் உடனே குணமாதலை காணலாம். இது தற்போது எல்லா மருத்துவமுறைகளும் ஏற்றுக்கொண்ட உண்மையாகும்.

மனிதன் நோயின்றி ஆரோக்கியமாக வாழ உணவுகளை உண்பதை நிறுத்திவிட்டு, காய், கனி உணவுகளை உண்பது மிக சிறந்தது என்பதை, 'இனிதுண்பானென்பான் உயிர்கொல்லா துண்பான்'[115] என்றும் நோய்வாய்ப்பட்ட காலத்திலும், நலமான காலத்திலும் உண்ணும் உணவு பற்றி நான்மணிக்கடிகைக் குறிப்பிடுகிறது.

### சிற்றிலக்கியங்களில் மருத்துவ செய்திகள்

சிற்றிலக்கியங்களில் சித்தர்களின் பெயர்கள், மருந்தாகப் பயன்படும் மூலிகைகளின் பெயர்கள், மக்களுககு நோய் தோன்றுவதற்கான காரணங்கள், அந்நோய்களைத் தீர்ப்பதற்கான வழிமுறைகள், மற்றும் வழிபாட்டின் மூலமாக நோய்களை நீக்கும்முறைகள், நாட்டு மருத்துவ முறைகள், மருத்துவனின் பண்புகள் போன்ற செய்திகள் காணப்படுகின்றன. சிற்றிலக்கியங்களில் காணப்படும் சித்தர்களைப் பற்றிய விளக்கங்கள் மூலம் சித்தர்களின் வரலாற்றை அறிய முடிகின்றது. முத்தானந்தர் ஞானக் குறவஞ்சி என்ற நூலில் ஆனந்தர், கவுணச்சித்தர், தாசிவகுரு, சித்தாதி சித்தர், சிவயோகமுனி, துதிகை முனி, நவகோடி சித்தர், நவநாதசித்தர், வயிரவர் போன்ற சித்தர்களின் பெயர்கள் ஞானக்குறவஞ்சியில் கூறப்பட்டுள்ளன.

'மச்சமுனிக்கு உச்சிதமாய் மெச்ச ஒரு குறிதான்
வரமாக விளம்பினதால் பரமர் நூலிந்தார்
பச்சமுள்ள போகருக்கு மிச்சமொரு குறிதான்
பண்புடனே ஈந்ததினால் என்பது நூறிந்தார்'[116]

என்ற பாடலில் மச்சமுனி, போகர் ஆகிய சித்தர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்கிறது. மேலும் அறப்பளிச்சர சரகத்தில் 'நிதிரி, கும்பமுனி, தேரர், கொங்கணர், சித்தர் தமது வாகடம் அறிந்து'[117] என்று சித்தர்களைப் பற்றியக் குறிப்புக் காணப்படுகிறது. நாட்டு மருந்தாகப் பயன்படும் மூலிகைகளின் பெயர்கள் சிற்றிலக்கியங்களில் காணப்படுகிறது. அதிகமான

மருத்துவத் தன்மைகள் நிறைந்த மூலிகைகளான 'வியர்மூலி, மருசேந்தி, சீமாமுலி, கவுரி, வெள்ளை, சாணர், கல்லாரை, சாகர்தமுலி, திருவாரை, சஞ்சிவிபாலை, வெண்மிருகமுலி என்பவற்றை முக்தானந்தர் குறவஞ்சி குறிப்பிடுகிறது. மற்றும் சிதம்பரக் குறவஞ்சிதரிசனவேதி, பரிசனவேதி, நவதளவில்வம் போன்ற மூலிகைகளைக் குறிப்பிடுகிறது'"[118] மேலும், சிதம்பரேசுவரர் விறலி விடுதூது மருந்தாகப் பயன்படுகின்ற மூலிகைகளில் பட்டியலைக் குறிப்பிடுகிறது.

'புல்லுருவி லாக்கம் புளித்துமரி பேய்த்துமரி
அல்லிவரை ஆலின்கீழ் ஆலங்காய் - நெல்லிமேல்
கொத்தான் மலைகலக்கி கோபுரம் தாங்கி செடிபெய்
பித்தாக்கும் ஆண்துமரி, பெண்துமரி - கற்றாழை
நன்னாரி வேர் பெரியாநங்கை சிறியாநங்கை
சொன்னாயுருவியோடு தேள்கொடுக்கு - எந்நாளும்
பூனைவணங்கி புலிவணங்கி ஆவதிரை
கட்டாப்பிரமி எட்டாக்கூந்தா ரிலாகரணை
தொட்டால் சுணங்கி, துமமுறுக்கி, முட்ட
சலந்திரட்டி நின்று சிணங்கி பொன் ஊமத்தை
நிம்புரண்டி நீர்மேல் நெருப்பு புலம்பி
அழுகண்ணி வாதமடக்கி முடக்கொத்தான்
தொழுகண்ணி துளசி - ஒழிய
வெதுப்படக்கி பேய்மிரட்டி கோலிதாளில் பாசி'"[119]

என்ற பாடலில் நாட்டு மருத்துவத்தில் மருந்தாகப் பயன்படுகின்ற மூலிகைகளைப் பற்றிக் குறிப்பிடுகிறது.

## நோய் தோன்றுவதற்கானக் காரணங்கள்

நோய்கள் தோன்றுவதற்கான காரணங்களைப் பற்றி குமரேசர் சதகத்தில் கூறப்படுவதைக் காண முடிகிறது.

'கல்லினால், மயிரினால், மீதூண் விரும்பலாய்
கருதியளி சாரத்தினால்
கடுவழி, நடக்கையால், மலலே அடக்கையான்
கனி, பழங்கறி உண்ணலால்
நெல்லினால், உமியினால், உண்டலால், முழ்கலால்
நித்திரைகள் இல்லாமையால்
நீர்ப்பகையினால், பனிக்காற்றில் உடல் நோதலால்
நீர்சருகு இலை ஊறலாய்
மெல்லிநல்லார் கல்வி அதிகம் உள்விரும்பவர்
விழ்மலம் சிக்குகையினால்
மிகுசுமையெடுத்தலால் இளவெயில் காய்தலால்
வன் பிணிக்கு இடமென்பர் காண்'[120]

கல்லினால், மயிரினால், உமியினால் கலந்த உணவை அடிக்கடி உண்பதாலும், அளவுக்கு மேல் உண்பதாலும், நோய்கள் வரும் என்று குறிப்பிடுகிறார். அதிக வெம்மையுடைய வெயிலில் அதிக தூரம் நடப்பதால், மலத்தையும், சிறுநீரையும் அடக்குவதால், அழுகிப்போன பழங்களை உண்பதாலும், ஊசிப்போன உணவினை உண்பதாலும், பகலில் உறங்குவதாலும், இரவில் உறங்காமலிருத்தலாலும், இலை, தழை, விழுந்து அழுகிய நீரை குடிப்பதாலும், மிகுதியான உடல் உறவு கொள்வதாலும், இரவில் தயிர் உண்பதாலும், மனிதனுக்கு நோய்கள் தோன்றுகின்றன. மேலும், தனிப்பாடலில் நோய்கள் வரும் வழியினைப் பற்றி இடம்பெறுவதைக் காணலாம்.

'தன்னைத் தான் பேணாதாதுஞ்
சரீரத்தில் தண்டிப்பாலும்
பின்னுற் விசாரத்தாலும் பின்
சலமலத்தாலும்
சரீரத்தில் வியாதி தோன்றும்'[121]

என்ற பாடல் வரிகளில் தன் உடலைப் பேணாமல் இருந்தாலும்,

அதிகமான கவலைகள் கொள்வதாலும், இயற்கை உபாதைகளை அடக்குவதாலும், உடலில் நோய்கள் தோன்றுகின்றன என்று குறிப்பிடப்படுகிறது. இதனையே இக்கால அலோபதி மருத்துவர்களும் நோயாளிகளிடம் மேற்கண்டவைகளை நீக்குமாறு வலியுறுத்துகின்றார்கள். பேரூர் புராணத்தில் நோய்களின் தன்மையினை உணர்த்துவதை அறியலாம்.

*'குட்ட நோய் பெருநோய் வாதம் குன்மநோய்*
*தொழுநோய் காசம்*
*முட்டிய சலநோய் கண்நோய்*
*முயலகன் முடநோய்'*[122]

என்று கொடிய நோய்களின் பட்டியல் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும், பருவகால வேறுபாட்டினாலும், தட்பவெப்ப மாற்றத்தாலும் நோய்கள் தோன்றுகின்றன. மழைக்காலத்தில் காய்ச்சல், இருமல், சளி முதலியனவும், கோடையில் அம்மை முதலியனவும், பனிக்காலத்தில் சொறி, சிரங்கு முதலியனவும் வருவதாக மும்மணிக் கோவையில் கூறப்பட்டுள்ளன.

*'தீப்பசிச்சிரங்கி நோய்ப் பனிக் கொதுங்கிப்*
*பல்பிணிக் குடைந்து செல்லுங் காலத்து'*[123]

என்ற பாடல் வரிகளின் மூலம் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது. தோன்றும் நோய்களை எட்டுவகைத் தேர்வு முறைகளை ஆராய்ந்து கண்டறிகிறார்கள். இவற்றுள் நாடிபிடித்து ஆராய்தல் என்பது மூவகைப்படும். அவை வாதநாடி, பித்தநாடி, கபநாடி இந்நாடிகளுள் எதேனும் ஒன்று குறைந்தாலும் மிகுந்தாலும் வாத, பித்த, கபம் போன்ற நோய்கள் தோன்றுகின்றன.

முப்பிணிகளில் பித்த நோயினைப் பற்றி காசிக் கலம்பகத்திலும், திருவாரூர் நான்மணி மாலையிலும் குறிப்பிடப்படுவதைக் காணலாம்.

'ஐவளிபித்தென வமைத்து வைத்திருந்த
முத்தலைத் தூண்டி'
'ஐவளி பித்தெனு மலைதலை யெடுப்ப'[124]

என்ற பாடல் வரிகளின் மூலம் பித்தநோயினை அறியலாம். பித்தப் பையில் கிருமிகள் தங்குவதால் வாந்தியும், பசியும் இல்லாமல் இருக்கும். இதனால் மஞ்சள் காமாலை என்னும் நோய் தோன்றும். இந்த நோய்கள் ஏற்படுவதற்கு முக்கிய காரணம் பித்தம் தங்குவதே ஆகும். மேலும் மூவகை நாடிகளுக்கும் உள்ள சுவையைப் பற்றி சிதம்பரம் மும்மணிக் கோவையில் இடம்பெறுகின்றது.

'வளியுண் புளிப்பும் பித்துண் கைப்பும்
ஐயுண் மதரமு மல்லன பிறவும்
நாச்சுவை யறிய நல்கின மேற்சென்று'[125]

என்ற பாடலில் வாதத்தை ஏற்படுத்துவதும் இனிப்புச் சுவையையும் குறிப்பிடுவதை இப்பாடலின் மூலம் காணமுடிகிறது.

## நோய் நீங்கும் வழிமுறைகள்

பண்டைய காலத்தில் வாழ்ந்த மக்கள் இறைநம்பிக்கையுடையவர்கள் நோய்களிலிருந்து சுகம் பெற

சிறப்புடைய மருந்துகள் இருந்தாலும், இறைவன் வழிபாடு செய்வதால் நோயிலிருந்து முழு விடுதலை பெற முடியும் என்பதால் பாடல்களைப்பாடியுள்ளார்கள்.

'ஐயம் படும்காசம் குன்மம் பன்மூலம் அகற்றிமெய்யில்
ஐஅம்படும் சகம் போல் வலியீந்து'[176]

என்பதில் காசம், குன்மம், மூலம் போன்ற கொடிய நோய்கள் நீங்கி, யானையைப் போல் வலிமையை அடைய இறைவனை வேண்டுவதாக கூறப்படுகிறது. இன்றும் மருத்துவர்களால் குணமாக்கமுடியாது என்று கைவிடப்பட்ட நோயாளிகள் இறைவனை வழிபாடு செய்வதால் நோயிலிருந்து விடுதலையும் கிடைக்கின்றது என்பது நம்பிக்கையாக கொண்டுள்ளனர்.

மனிதனுக்கு வருகின்ற நோயினைப் போக்கிக் கொள்ள வேண்டுமானால் நீராட வேண்டும். அந்நீராடுதல் மூலமாக நோய்கள் குணமடையும் என்பதை பண்டைக் காலத்தில் வாழ்ந்த மக்கள் நம்பிக்கையாகக் கொண்டிருந்தனர் என்று தஞ்சைப் பெருவுடையாருலாவில் குறிப்பிடுகின்றனர்.

'தேய்த்த பெருநோய் தீர்த்துச் செம்பியனைக் காத்த புகழ்
வாய்த்த சிவகங்கை மகிழ்ந்தாடி'[177]

என்ற பாடல்வரிகளில் கரிகாலனுக்கிருந்த குட்ட நோயைப் போக்குவதற்குத் தஞ்சையிலுள்ள சிவகங்கை குளத்தில் நீராடிய பின் அந்நோய் நீங்கியதாக இப்பாடலின் மூலம் அறியமுடிகிறது. மேலும் கரிகாலன் மக்களுக்கு இருந்த வலிப்பு நோய் நீங்குவதற்கு

ஒரு குலாலன் மட்டாவை செய்து குறிபார்த்துச் சுட, அவ்வலிப்பு நோய் தீர்ந்தது என்று கொங்கு மண்டலச் சதகத்தில் குறிப்பிடுவதை அறியலாம்.

'கரிகாலச் சோழன் மகளுக்கு வந்த கனவலிப்பு
மெரியா முடலை மயக்க மட் கோவ னிறை மகளைப்
பரிபாலனஞ் செய மட்பாவை யிற்குறி பார்த்துச் சுட
மரியாம லவ்வலி லேகிய தூங்கொங்கு மணடலமே'[128]

என்ற பாடலின் மூலம் அறியப்படுகின்றது. மேலும் நோயின் பெயர்களும், குணமாகும் முறையும் பற்றி கூறப்படுவதை

'குட்ட பெரும்பிணி குருதிக்கால்பிணி
முட்டிய முயலகன் முறுக்கும் வாதநோய்
தொட்டியிர் வழுக்குறும் சூலையாதியும்
குமார தீர்த்தமே'[129]

என்பதிலிருந்து குமாரதீர்த்தம் என்ற குளத்தில் நீராடுவதால் குட்டநோய், முயலிகன், வாதநோய், சூலைநோய் என்பனவை நீங்கும் என்பர். மேலும்,

'திருத்திய கந்தம் சாத்திச் சோடமும்
தீர்த்தம் தானும்
கருத்தினால் கொண்டால் என்று
கடும்பிணி தீர்ந்தன்றே'[130]

என்ற பாடல்மூலம் நீராடுவதால் நோய்கள் தீரும் என்பது இதில் காணமுடிகிறது. இன்றும் மக்கள், தங்கள் பாவங்களிலிருந்து விடுபடவும், நோய் நீங்கி ஆரோக்கியம் பெறவும் கங்கை, குமரி, ராமேஸ்வரம் போன்ற நீர்நிலைகளில் நீராடுவதைப் போல பண்டைக்காலத்தில் வாழ்ந்த பழந்தமிழர்கள் நீராடல் மூலம் நோய்கள் தீரும் என்ற நம்பிக்கைக் கொண்டிருந்தனர் என்பது

தெரியவருகிறது. மேலும் நோய் வரா வழிமுறைகளைப் பற்றி திருவேங்கட சதகத்தில்,

'சனிபுதன் றனிலெண்ணெய் வெந்நீரின் முழ்குவார்
சாருமிள வெயில்விரும்பார்
தம்பயதின் மேலான மங்கை யைச்சேரார்
சதாகாலம் வழிபிணடவார்
பனியிலுங் காற்றிலும் மெய்வருந் தாமலைப்
பள்ளியிற் சேவைகிரார்
பழங்கறி யருந்தா நிரண்டைக் காரொன்று
பலகால முமிவிட்டிடார்
கனியொடு கிழங்குகள் மிகுந்துபசி யாரப்சி
கலந்தன்றி புணைவுசெய்யார்
காய்ச்சுபா லுண்பர்நீர் மோர்கூட்டு வார்திகங்
காவேரி தனரின் முழ்குவார்
மனிதரிவர் பேர்சொன்ன போக்குநோய் போகுமே'[11]

என்ற பாடலில் எட்டு நாளைக்கு இருமுறை எண்ணெய்த் தேய்த்து நீராடல், பதினைந்து நாளைக்கு ஒருமுறை கண்ணுக்குக் கலிக்கம் இடுதல், ஒரு மாதத்துக்கு ஒருமுறை பித்தநீர் போக மருந்து உண்ணுதல், முப்பத்திரண்டு நாளைக்கு ஒரு முறை மகளிர் புணர்ச்சி, மூன்று மதத்திற்கு ஒரு முறை மூக்கில் மருந்திடுதல், ஆறு மாதத்திற்கு ஒரு முறை பேதி மருந்து உட்கொள்ளல், பசி ஏற்பட்ட பின்னர் உண்ணுதல் இவைகளைக் கடைப்பிடித்தால் நோய் வராமல் தடுக்கலாம் என்று இப்பாடலின் மூலம் அறியலாம்.

## மருத்துவனின் பண்புகள்

மருத்துவனைப் பற்றி இலக்கியம், 'பண்டிதன் பரிகாரி நல்வைத்தியனெனப்பேர் கொண்டவன் பரனாம்' என்று

குறிப்பிடுகிறது. எனவே, மருத்துவன் பல கலைகளிலும் அறிந்தவனாகக் காணப்படவேண்டும். மருந்துகளைச் சுத்தப்படுத்தும் முறை, மருந்துகளின் பண்புகள், அவைகளின் வேறு பெயர்கள் ஆகிய மூன்றையும் நன்கு அறிந்தவனாக இருக்க வேண்டும். கடவுள் நம்பிக்கை, பல நூற்களைத் தெளிவாகக் கற்ற அறிவு, மனம், மொழி, உடலின் தூய்மை, பல நோய்களைக் குணப்படுத்தும் ஆற்றல், நோய்களைக் கண்டு அஞ்சாத நெஞ்சுறுதி, நுண்ணிய அறிவு, பெரியோர்களின் நட்பு, பல உயிர்களிடத்திலும் அன்புடைமை முதலியவற்றை மருத்துவன் கைக்கொள்ள வேண்டும். மேலும், உடல், நாடு, காலம், நோய், மருந்து முதலியவற்றை அறிந்து கொள்ளுதல், நோய்க்குத் தக்க உணவுப் பொருட்களின் விதி உணர்தல், உடலுக்கு வலிமை தரும் பொருள் இன்னவை என அறிதல், அவரவர் உடலின் வலிமை உணர்தல், நோயாளியின் பசியின் அளவு அறிதல், உணவு கொடுக்கும் விதி அறிதல் ஆகியவைகளை நன்குணர்ந்தவராய் இருத்தல் வேண்டும் என்பர். மேற்கண்ட பண்புகள் உடையவன் மருத்துவன் என்பதை,

'பரிட்சை வருங்கால தேசத்தோடு
சரீர இலட்சணம் அறிந்து
தன் வந்திரி கும்ப முனி தேரர் கொங்கணர்சித்தர்
தமது வாகடம் அறிந்து
பேதப் பெருகுளிகை சுத்திவகை மாத்திரைப்

பிரயோக மோடு பற்பம்
பிழையாது மண்டூர செந்தூர இலட்சணம்
பேர் பெறும் குணவாகடம்
சோதித்து மூலகாவித நிகண்டும் கண்டு
தூய தைலம் லேகியம்
சொல் பக்குவம் கண்டு, வருமோக நிர்ணயம்
தோற்றிய அமுர்த காரணாய
ஆதி பெரும் கேள்வி உடையாள்"[112]

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.

## அறுவை சிகிச்சை மருத்துவம்

பண்டைக் கால மருத்துவ முறைகளில் அறுவை சிகிச்சை மருத்துவம் என்பது ஒரு வகையாகும். இம்மருத்துவத்தை சங்க காலத்தில் வாழ்ந்த பெண்களும் கற்றறிந்து மருத்துவம் செய்துள்ளனர் என்பதை கொங்கு மண்டல சதகம் குறிப்பிடுவதை,

'குறைவறு தெண்கனீர் நதியணை காந்த புரத்தொடுநல்
விறைமக ளார்மக வினப் பெறாது மேங்க வசிர்
துறைவழி யேற்று மகிழ்வூட்டு மங்கலை தோன்றி வளர்
மறைவழி நேர் நறையூர்நாடு சூழ் கொங்கு மண்டலமே"[113]

என்ற பாடல் வரிகளில் காந்தபுரத்தை ஆண்ட வேந்தன் மகள் பிரசவ வேதனையால் துடிப்பதைப் பார்த்த நறையூர் மருத்துவச்சி வயிற்றைக் கிழித்து குழந்தையை எடுத்தாள். அவள் தம் மருத்துவத் திறமையால் குணப்படுத்தினாள் என்று கூறப்படுவதை அறியமுடிகிறது. எனவே, இக்காலத்தில் அறுவை சிகிச்சை மருத்துவம் பெண்களும் செய்யப்படுவதைப்போல,

சங்க காலத்தில் வாழ்ந்த பெண்களும் இம்மருத்துவத்தை கற்றறிந்து மருத்துவம் செய்துள்ளனர் என்பது தெறியவறுகிறது.

## குழந்தை மருத்துவம்

பண்டையக் காலத்தில் வாழ்ந்த மக்கள் இளங்குழந்தைகளுக்கு ஏற்படும் நோய்களை போக்க மருத்துவம் செய்துள்ளனர். குழந்தைகளுக்கு சளிபிடிக்காமல் இருப்பதற்கும், பசியைத் தூண்டுவதற்கும் வசம்பு நீர் ஊட்டி, பின்னர் தாய்பால் ஊட்டும் வழக்கம் பண்டையக் காலத்தில் இருந்தன என்பதை,

'நறுவசம் பூறலூட்டி
நற்றாயினிள முலைப் பாலமுத மூட்டி'[134]

என்ற பழனிப்பிள்ளை தமிழ் பாடல் வரிகளின் மூலம் அறியலாம். இவை இன்றும் கிராமப்புரங்களில் பழக்கத்தில் உள்ளது. மேலும் குழந்தைகளுக்கு ஏற்படும் வயிற்றுக் கோளாறுகளைப் போக்குவதற்கு வலிய பெருங்காயத்துடன், விளக்கெண்ணெய்யும், பாலும் கலந்து கொடுப்பதை,

'...வன் காயங்கூட்டி
அரைத்திடுஞ் சேனை அருந்தி'[135]

என்ற அழகர் கிள்ளைவிடு தூது பாடலடிகள் புலப்படுத்துகின்றன. குழந்தையின் பசுங்குடல் மருந்தின் வேகத்தைத் தாக்குதல் ஆற்றாது என்பதால் அம்மருந்தினைத் தாய் உண்டு, தாய்ப்பாலின் வழியாக அக்குழந்தை உண்ணுமாறு செய்து நோய் தீர்ப்பான் என்பதனைப்

'பால் உண் குழவி பசுங்குடல் பொறாதென
நோய் உண் மருந்துதாய் உண்டாங்கு'[136]

என்ற மும்மணிக்கோவை பாடல்வரிகளில் குறிப்பிடுவதை அறியலாம்.

## இக்கால இலக்கியங்களில் மருத்துவச் செய்திகள்

தொல்காப்பியர், வள்ளுவர், திருமூலர், சித்தர் போன்ற மெய்ப்பொருளை அறிந்து, ஆய்ந்த அறிவுடையோர், உலகத்தில் வழக்கமாக பொய்ப்பொருள் என்று கூறிய உடம்பை மெய் என்றே கூறியுள்ளார்கள். எனவே, மனிதனின் உடல் பெருமையுடையதும், எல்லாவற்றிற்குமான உலக வாழ்வின் அடிப்படையாகவும் விளங்குகின்றது என்பதை,

'மன்னுமிந்தப் பூவுலகில் மாண்புற்ற பல்பொருளு
ளுன்னுடம்பிற் கொம்பிலை யாமுணர்ந்ததைப் - பன்னும்
பிணியெஃதுஞ் சாராது பேணி வளர்த்தென்றும்
பணியு மறாள்வாய் பரிந்து'[137]

என்ற வ.உ.சியின் பாடல் புலப்படுத்துகின்றது.

சமுதாயப் போராட்டத்திலும், நாட்டு விடுதலை வேட்கையாலும் சமுதாயத்தை மாற்றும் செயல்பாடுகளிலும் ஈடுபட்ட வ.உ.சி., மறைமலையடிகள், பாரதி, சுத்தானந்த பாரதி போன்ற அறிஞர்கள் அதிகமாக வலியுறுத்தி வந்த கருத்து உடலைப் பேணுதலாகும். பாரதியார், மனிதனுக்கு உலகில் தன் உடலே ஒப்பில்லாத பொருள் என்பதை,

'விசையுறு பந்தினைப் போல் - மனம்

வேண்டியபடி செல்லும் உடல் வேண்டும்
நசையுறு மனங் கேட்டேன் - நித்தம்
நவமெனச் சுடர் தருமுயிர் கேட்டேனே'[137]

என்று பாடல் வரிகள் மூலம் உணர முடிகிறது. மேலும், உடம்பினைக் காப்பதற்கான முதற்படி உணவாகும். உணவுதான் உடல் என்னும் இயந்திர இயக்கத்திற்கான எரிபொருள். முறையாக அளந்து பகுத்துண்டால் இடையூறின்றி உடல் இயங்கும். உணவு அளவு குறைந்தாலோ, அதிகமானாலோ நோய் ஏற்படும். இதைக் கருதியே, பொருந்தும் உணவு, பொருந்தா உணவும், நூற்றாண்டு வாழ்வதெப்படி? என்ற நூற்கள் மறைமலையடிகளால் எழுதப்பட்டுள்ளன. மேலும் இருபதாம் நூற்றாண்டின் போற்றத்தக்கக் கவிஞருள் ஒருவரான கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை அவர்கள் உணவினை அளவுடன் உண்ணாமல் அளவுக்குமேல் அதிகமாக உண்டால் உண்டாகும் தீங்குகளைத் தம் கவிதைகளில் குறிப்பிட்டுள்ளார் என்பதை,

'மட்டுக்குணவை உண்ணாமல் வாரி வாரித் தின்பாயேல்
திட்டு முட்டுப் பட்டிடுவாய் தினமும் பாயில் விழுந்திடுவாய்'
'மட்டுக்கு மிஞ்சிடில் வான் அமுதும் - குணம்மாறி
விடமாகிப் போகும்.
'மட்டுக்கு மிஞ்சிப் புசித்ததனாபாடல்ல் - மூச்சு
வாங்கி வருந்தி வயிறூதி
கட்டப் படுவதைச் சுற்றத்தோர் எல்லோரும்
கண்டு ஒரு பண்டிதர்க்கு ஆளும் விட்டார்'[138]

என்ற பாடல் வரிகள் மூலம் அறியலாம். இதனால் உணவை

நன்றாகப் பசித்தப் பின்னர்தான் புசித்தல் வேண்டும். அவ்வுணவும் தூய்மையானதாய் இருத்தல் வேண்டும். இதனைக் கவிமணியவர்கள்,

'தூயகாற்றும் நன்னீரும் கண்டப் பசித்தபின் உணவும்
நோயை ஓட்டிவிடும் அப்பா நூறு வயது தருமய்யா'

என்றும்,

'கண்டப்பசித்துண்ணும் வேளையிலே - பழஞ்
சோறும் சுவையமுது ஆகும்'

என்றும்

'தீய உணவை அகற்றும்'

என்றும் தம் மொழிகளால் தெரிவிக்கின்றார்.[119] மேலும், உடலின் ஆரோக்கியத்தை நன்கு பேண வேண்டும் என்பதை வ.உ.சிதம்பரனார்.

'பார்த்து நன்கு பின்னர் பதார்த்த குண மேற்பவற்றை
யோர்த்துணர்ந்து கொள்ளென்று முன்வைத்ததப் பேர்க்கும்
பிறபொருள்கள் கொள்ளாய் பிணியுற்றாற் கொள்ளாய்
பலபிணிகள் தீர்த்தானைப் பார்த்து'[120]

எனப் பாடியுள்ளார். இதனால் நோயற்ற வாழ்வு வாழ நாம் வாழும் இடத்தைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். அப்பொழுது தான் நோயின்றி நீண்ட நாட்கள் வாழ இயலும் என்பதை கவிமணி அவர்கள்,

'சுத்த முள்ள இடமெங்கும் சுகமும் உண்டு நீ அதனை
நித்தம் நித்தம் பேணுவையேல் நீண்ட ஆயுள் பெறுவாய்'

என்று குறிப்பிடுகின்றார்.[111] மேலும் நோயின் கொடுமைகளை தம் உடலில் நன்கு அனுபவித்த கவிஞர் கண்ணதாசன்,

'உடம்பு தன் சக்தியை இழந்து விடும்போது

*உலகமே மயங்கி தெரிகிறது*
*உணவைக் குறைத்து சாப்பிடுவது போன்ற*
*ஆரோக்கியம் வேறு எதுவும் கிடையாது'*[142]

எனப் பாடியுள்ளார். உண்ணாவிரதம் மேற்கொள்வதால் ஏற்படும் பயன் குறித்து, சுத்தானந்த பாரதியார் தான் எழுதிய அறநூலில்,

*'உண்ணாவிரதம் உடலின் பிணி போக்கித்*
*திண்கருத்து மீயும் திறன்'*[143]

என எழுதியுள்ளார். கவிமணி தேசியவிநாயகம் பிள்ளை ஆஸ்துமாவால் அருந்துயருற்ற காலத்தில் செந்திலாண்டவனாகிய முருகனை நோக்கி,

*'தண்டனை போதுமையா! தாங்கமுடி யாதையா!*
*கொண்ட பிணிநீங்கவருள் கூரையா - கண்டுனது*
*வாசலில் வந்து வணங்கவலி இல்லைஐயா!*
*ஈசனே செந்தில் இறைவா!*[144]

என்றும்,

*'பண்டிதரும் கைவிட்டார் பத்தியமும் தீர்ந்ததியான்*
*உண்ட மருந் தால்குணமோ ஒன்றுமில்லை - அண்டர்*
*அமரா வதிகாத்த அண்ணலே! செந்தில்*
*குமரா! எனையாண்டு கொள்'*[145]

என்று பாடியுள்ளார். மக்கள் நலமுடன் பிணியின்றி வாழ எல்லாம் வல்ல மருத்துவனாகிய இறைவனை இறைஞ்சுவது தமிழர் இயல்புகளாக குறிப்பிடுகின்றார்.

குடும்பத்திற்கு மக்கட்பேறு அவசியம். குடும்பத்தில் பிள்ளைகள் மிகுதியானாலும் குடும்பநலன் பாதிக்கும் இதனால் குடும்பநலன் கெடின் நாடு வளர்ச்சியில் குன்றும். குடும்ப நலனினும் நாட்டு வளர்ச்சியிலும் அக்கறை கொண்ட

புரட்சிகவிஞர் பாரதிதாசனார், 'தவிப்பதற்கோ பிள்ளை! என்னும் தலைப்பில் தற்போதைய உலகிற்குப் பெரிதும் தேவைப்படும் கருத்தை - தற்காலத்தில் நடைமுறைக்கும் வந்துவிட்ட செயற்பாட்டை அறுபதாண்டுகட்கு முன்பே எடுத்தியம்பியுள்ளார் என்பதை,

*'காதலுக்கு வழிவைத்துக் கருப்பாதை சாத்தக்*
*கதவொன்று கண்டறிவோம். இதிலென்ன குற்றம்?*
*சாதலுக்கோ பிள்ளை? தவிப்பதற்கோ பிள்ளை?*
*சந்தானமுறை நன்று தவிர்ப்பதுமுறை தீதோ?'*[116]

என்ற வினாக்கள் தொடுப்பதன் மூலம் தெரியலாகுகின்றது. கெட்ட நடத்தையால் தான் நோய் உண்டாகிறது என்பதனை, 'நோய் தீ ஒழுக்கம்' என்று பாரதிதாசனார் தம் ஆத்திச் சூடியில் அறிவிக்கின்றார். 'நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்' என்பது தமிழர் தம் பழமொழி.

*'நித்தமும் நோயாளி யாகி நூலோ கட்டில்*
*நீங்காது நின்றிடும் மனிதர்க்கு*
*எத்தனை செல்வம் இருந்திடினும் - அதில்*
*யாதும் பயனுண்டோ? சொல்லும் அப்பா'*[117]

என்னும் கவிமணியின் மணிமொழிகள் நோயற்ற வாழ்வின் மேன்மையை உணர்த்துகின்றன. மேலும், உடலில் உயிர் வாழ உடம்பை நலமுடன் பேணிக்காக்க வேண்டும். நோய் வந்த பின் அதனைப் போக்கமுயலுதலைவிட வருமுன்னர் நோய் வாரா வழிமுறைகள் அறிந்து வாழ வேண்டும் என்பதை கவிமணி அவர்கள்,

'அருமை உடலின் நலமெல்லாம் அடையும் வழிகள் அறினயே
வருமுன் நோயைக் காப்பாயே வையம் புகழ வாழ்வாய்'[148]

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம்.

## தொகுப்புரை

இவ்வியலின் முடிவாக சங்க காலத்துப் புலவர்களுள் மருத்துவம் தெரிந்த புலவர்களும் வாழ்ந்தனர் என்பது தெரியவருகின்றது. சங்க காலத்து மருத்துவர் இதனை தொழிலாகக் கருதப்படாமல் ஒரு தொண்டாகக் கருதினான். மருத்துவம் போன்றவைச் சிறப்பாகக் காணப்படுகின்றன. பஞ்ச பூதங்களைப் பற்றியக் குறிப்புகளே தமிழ் மருத்துவத்தின் தொடக்க கால கோட்பாடுகள் எனலாம். குட்டநோய் பற்றி சங்க காலத்திலேயே அறியப்பட்டிருந்தது. சிலப்பதிகாரத்தில் முப்பத்திரண்டு மூலிகைகளைப் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது. திருக்குறளில் மருந்து என்ற அதிகாரம் அமைத்திருப்பது மருத்துவ உலகிற்கு மேலும் பெருமை சேர்க்கின்றது. கீழ்க்கணக்கு நூல்களில் பலவற்றில் மருத்துவச் செய்திகள் காணப்படுகின்றன. நோய் ஏற்படக் காரணங்கள், வராமல் தடுக்கும் வழிமுறைகள் போன்றச் செய்திகள் இக்கால இலக்கியங்களில் காணக்கிடக்கின்றன என்பதும் இவ்வியலின் முடிவாகத் தெரிய வருகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. திருவள்ளுவ மாலை, பா.11
2. நற்றிணை, பா.136.2-3
3. கலித்தொகை,16.17-20
4. கலித்தொகை, 129.23-24, 12.24-25, 139
5. கலித்தொகை, 137.25
6. மேலது, 139.1-2
7. டாக்டர். க.க. சம்பத், தமிழர் மருத்துவம், ப.73
8. புறநானூறு, 34.2-7
9. க. வெங்கடேசன், தமிழ் இலக்கியத்தில் சித்த மருத்துவம் , 1993, பக்.31-32; மருத்துவக்கலை அன்றும் இன்றும், சென்னை-199, ப.18
10. தொல்காப்பியம், பா.111
11. புறநானூறு, 180
12. கட்டுரை, த.இ.ம. ப.434
13. நற்றிணை, 226
14. அகநானூறு., 149.9-10
15. கே.கே.பிள்ளை, தமிழக வரலாறு மக்களும் பண்பாடும், சென்னை-1981
16. மருத்துவக்கலை அன்றும் இன்றும், சென்னை-1999, ப.18
17. பதிற்றுப்பத்து, ஐந்தாம்பத்து, 2.2-5
18. புறநானூறு, 180
19. புறநானூறு, 353.15-16
20. கலித்தொகை,145.25-26
21. புறநானூறு, 281

22. குறுந்தொகை, 180.6-7

23. நற்றிணை செய்யுள், 58

24. தொல்காப்பியம், மரபியல் சூத்திரம்,19

25. புறநானூறு, 2.1-6

26. பரிபாடல், 13.14-22

27. தொல்காப்பியம், சொல்லதிகாரம், பா.340-45,

28. தொல்காப்பியம், பொருளதிகாரம், பா.193-4

29. மேலது, பா.193

30. தொல்காப்பியம், மெய்ப்பாட்டியல், பா.249-6

31. குறுந்தொகை, பா.362

32. அகநானூறு, பா.388-20,21

33. குறுந்தொகை, பா.53-3-4,

34. முல்லைப்பாட்டு, பா.7-10,

35. மதுரைகாஞ்சி, பா.605-610

36. நற்றிணை, பா.288.6-7

37. ஐங்குறுநூறு, பா.245-1,3

38. முருகன், ந., மருந்து திருவள்ளுவர், - ஓமியோபதி ஒப்பிடு, எம்.ஃபில் ஆய்வு, பச்சையப்பன் கல்லூரி, சென்னை, ப.24

39. புறநானூறு, பா.281.1-6

40. அகநானூறு, பா.388-20

41. குறுந்தொகை, பா.263-5

42. புறநானூறு, பா.299-6

43. நற்றிணை, பா.88

44. புறநானூறு, பா.173

45. அகநானூறு, பா.123

46. நற்றிணை, பா.46-11

47. நற்றிணை, பா.126-11

48. மேலது, பா.186-9

49. குறுந்தொகை, பா.136

50. மேலது, பா.229.2-3

51. புறநானூறு, பா.243

52. கைநிலை, பா.24

53. அகம், பா.53

54. ஐந்திணை, பா.322-5

55. ஐந்திணை, பா.301-2

56. நற்றிணை, பா.236-1,2

57. அகம், பா.45-19

58. தமிழ் இலக்கியங்களில் மருத்துவம், ஆய்வு கோவை, ப.58

59. மேலது, ப.53

60. சிலப்பதிகாரம், பா.180

61. சிலம்பு, பா.75

62. மேலது, பா.170

63. மணிமேகலை, பா.17-15

64. பெருங்கதை, பா.145,150

65. திருமந்திரம்-அமுரிதாரணை, பா.348

66. சிலம்பு, பா.76-79

67. மேலது, பா.80

68. குன்றத்தூர் ராமமூர்த்தி, மூலிகை பேசுகிறது, ப.82

69. சிலம்பு, பா.40

70. பெருங்கதை, பா.115

71. மேலது, பா.125

72. மணிமேகலை, ப.

73. யசோதர காவியம், பா.216

74. சீவகசிந்தாமணி, பா.818,819

75. சிந்தாமணி, பா.2703

76. சிலம்பு, பா.118, 120

77. சிலம்பு, பா.9-16

78. கம்பராமாயணம், சுந்தரகாண்டம், காட்சிப்படலம், பா.332

79. கம்பராமாயணம், யுத்தகாண்டம், மருந்துமலைப்படலம், பா.2681

80. மேலது, பா.2770

81. கம்பராமாயணம், யுத்தகாண்டம், பிரமொத்திரப்படலம், பா.2588

82. நாலாயிரதிவ்வியப்பிரபந்தம், தருதுயராதபோயில், பா.691

83. தமிழ் இலக்கியங்களில் மருத்துவநூற் செய்திகள், கட்டுரை, ப.166

84. தமிழில் நாட்டு மருந்து பாடல்கள் - ஓர் திறனாய்வு, பா.68

85. கம்பனின் தத்துவங்கள், ப75

86. மூவர், தேவாரம், திருநீற்றுப் பதிகம், பா.1

87. மேலது, திருநீலகண்டம் பதிகம், பா.1

88. மேலது, விடந்தீர்த்ததிருப்பதிகம், பா.1

89. மேலது, ப.218

90. குறள்.946

91. மேலது, 948

92. மேலது. 949

93. மேலது,941

94. மேலது, 946

95. மேலது,320

96. மேலது,942

97. மேலது,943

98. மேலது,945

99. மேலது,944

100. மலைபடுகடாம், கஅ ரு

101. தமிழர் மருத்துவம், ஆய்வு கோவை, ப.507

102. மேலது, ப.507

103. தமிழ் இலக்கியங்களில் மருத்துவம், ஆய்வு கோவை, ப.376

104. சிறுபஞ்சமூலம், சஅ

105. தமிழர் மருத்துவம், ப.508

106. ஏலாதி, பா.56

107. ஆசாரக்கோவை, பா.கஎ

108. மேலது,ருக

109. மேலது,கக

110. தமிழ் இலக்கியங்களில் மருத்துவம், ஆய்வு கோவை, ப.386

111. ஆசாரக்கோவை, பா.40

112. மேலது, பா..அக

113. நான்மணிக்கடிகை, 23

114. மேலது, 652

115. மேலது, 61

116. மரு.ச. அறங்கராசன், சிற்றிலக்கியங்களில் சித்த மருத்துவம், ப.201

117. மேலது, ப.202

118. மேலது, ப.201

119. மேலது, ப.204

120. மேலது, ப.202

121. மேலது, ப.202

122. மேலது, ப.202

123. தமிழ் இலக்கியங்களில் மருத்துவம், ஆய்வு கோவை, ப.53

124. மேலது, ப.51

125. மேலது, ப.52

126. மரு.ச. அரங்கராசன், சிற்றிலக்கியங்களில், சித்த மருத்துவம், ப.202

127. தமிழ் இலக்கியங்களில் மருத்துவம், ஆய்வு கோவை, ப.131

128. மரு. ச. அரங்கராசன், சிற்றிலக்கியங்களில் சித்த மருத்துவம், ப.202

129. மேலது, ப.203

130. தமிழ் இலக்கியங்களில் மருத்துவம், ஆய்வு கோவை, ப.143

131. மேலது, ப.147

132. மேலது, ப.133

133. மேலது, ப.129

134. மேலது, ப.129

135. மேலது, ப.55

136. வ.உ.சி., மெய்யறிவு உடம்பை வளர்த்தல், ப.27

137. பாரதியார் கவிதைகள், ப.193

*138. தமிழ் இலக்கியங்களில் மருத்துவம், ஆய்வு கோவை, ப.138*

*139. மேலது, ப.40*

*140. மேலது, ப.43*

*141. வ.உ.சி., மெய்யறிவு உடம்பை வளர்த்தல், ப.30*

*142. மேலது, ப.18*

*143. மகாலெட்சுமி.டி.இ சித்த மருத்துவ மணிகள், ப.10*

*144. தமிழ் இலக்கியம், மருத்துவம் ஆய்வு கோவை, 17*

*145. மேலது, ப.23*

*146. மேலது, ப.73*

*147. மேலது, ப.15*

*148. மேலது, ப.101*

# இயல் -3

# நாட்டுப்புறப் பாடல்கள் காட்டும் மருத்துவம்

## நாட்டுப்புறப் பாடல்கள்

நாட்டுப்புறப் பாடல்கள் என்பன கிராமப்புறத்தில் வாழும் படிக்காத மக்கள் தங்கள் உள்ளத்தில் எழுந்த உணர்வுகளை வார்த்தைகளாக்கி, இசைக்கூட்டிப் பாடிய பாடல்களாகின்றன. இவற்றை இலக்கியங்களாக அவர்கள் எழுதவில்லை, பாடவில்லை. அவை வேலை செய்யும்போது உடற்களைப்பினைப் போக்கவும், விழாக்கள் கொண்டாடும் போது மகிழவும், இயற்கை அழகினை வர்ணித்தும் அவர்களாகப் பாடிய பாடல்கள் ஆகின்றன. இலக்கியவியலார் நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றி 'விண்ணையும், மண்ணையும், மலைகளையும், பருவங்களையும், நதிகளையும் வர்ணிப்பதோடு மனித உள்ளத்தெழுகின்ற வெவ்வேறான
வர்ணிப்பதோடு மனித உள்ளத்தெழுகின்ற வெவ்வேறான
உணர்ச்சிப் பாவங்களையும் வெளியிடுகின்றன' எனக் கூறியிருப்பது கருதத்தக்கதாகும்.

நாட்டுப்புற மக்கள் தங்கள் வாழ்வின் ஒவ்வொரு காலகட்டங்களிலும் தொட்டில் முதல் சுடுகாடு வரை இன்ப, துன்பம், ஏக்கம், ஏமாற்றம், என்னல் போன்ற பல்வகை உணர்ச்சிகளிலும் குழந்தைதன்மை, இளமை, முதுமை என்ற எவ்வித பேதமும் இல்லாமல் பாடல்களாக வெளியிடுகின்ற அத்தகு பாடல்களே நாட்டுப்புறப் பாடல்களாகும்.

நாட்டுப்புறப் பாடல்கள் முன்னைப் பழமைக்கும் பழமையாய், பின்னைப் புதுமைக்கும் புதுமையாய் விளங்குகின்ற நாட்டுப்புறப் பாடல்கள் எளியவை, இனியவை, எழுதப்படாதவை, நாவில் பிறந்து செவிகளில் உலாவி காற்றில் மிதந்து கருத்தில் இனிப்பவை. தலைமுறை தலைமுறையாக வாழையடி வாழையாக வளர்ந்து கொண்டிருப்பவை. இவை என்று பிறந்தவை எவரால் பாடப்பெற்றவை என்று எடுத்துச் சொல்ல இயலாத பண்பும் பாங்கும் இவற்றுக்கு உண்டு. நாட்டுப்புறப் பாடல்களில் உணர்ச்சி இருக்கும். ஓசை இன்பம் இருக்கும். தாளக்கட்டு இருக்கும். சொல் தொடை அழகிருக்கும். எனினும் அது இலக்கண வரம்பிற்கு உட்படாமலும் இருக்கும். இதனால்தான் நாட்டுப்புறப் பாடல்களைத் தாமாக மலர்ந்து மணம் வீசும் காட்டு மலருக்கும் மலையினின்று விழும் அருவிக்கும் ஒப்பிடுகின்றனர்.

நாட்டுப்புறப்பாடல்களில் இசைக்குத்தான் முக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. 'பண்ணுடன் பாடப்படாத நாட்டுப்புறப் பாடல்கள் எல்லாம் சிறகில்லாத பறவைகள்' என சத்தியாத்தி கூறுவது குறிப்பிடத்தக்கது.[1] நாட்டுப்புற மக்கள் எந்த மண்ணில் வாழ்ந்தனரோ எந்த வேலையைச் செய்தனரோ எதை உணர்ந்தனரோ எதை மதித்து போற்றினரோ அவை எல்லாவற்றையும் கற்பனை நிறைந்த கவிதைகளாகப் பொழிகின்றனர். எனவேதான், நாட்டின் கலாச்சாரப்

பாரம்பரியத்தின் முக்கிய அம்சம் அந்நாட்டில் வழங்கும் நாட்டுப்புறப் பாடல்களே எனக் கூறப்படுகின்றது.

## நாட்டுப்புறப் பாடல் - பெயர்ப் பொருத்தம்

நாட்டுப்புறப் பாடல்களைப் 'பண்ணத்தி' என்ற பெயரால் தொல்காப்பியர் குறிப்பதாகக் கூறுவர்.[2] பண்ணை நத்தி (விரும்பி) வருவதுடன் பண்ணையே உயிராகக் கொண்ட இப்பாடல்களைப் பண்ணத்தி என்பது மிகப் பொருத்தமானதே ஆகும். தொல்காப்பியர் காலத்தில் இசைப் பாடல்கள் அதிகமில்லாததால் நாட்டுப்புறப் பாடல்களுக்கு இப்பெயர் ஏற்புடையதானது போல் எத்தனையோ வகையான இசைப்பாடல்கள் உள்ள இக்காலத்தில் இப்பெயர் ஏற்புடைத்தன்று.

தமிழில் ஏராட்டு, ஒப்பு, கொம்மி, ஒயில் கொம்மி, மாரியம்மன் பாட்டு, தெம்மாங்கு என்று தனித்தனியாகப் பெயர்கள் வழங்கி வந்தன. ஆனால், இவை அத்தனையையும் இணைத்துக் குறிக்க ஆங்கிலத்தில் வழங்கும் FOLK SONG என்ற சொல்லுக்கு ஈடாகத் தமிழில் ஒரு சொல் இல்லாமல் இருந்தது. அறிஞர்கள் இதைக் குறிப்பிட நான்கு முறைகளில் பெயரிட்டழைத்தனர். அவை

*1. பாடலின் தன்மையால் உருவான பெயர்*

*2. பாடல் தோன்றும் இடத்தால் உருவான பெயர்*

3. பாடலைச் சுட்டும் உருவகப் பெயர்

4. பாடும் மக்களால் உருவான பெயர்

## பாடலின் தன்மையால் உருவான பெயர்கள்

எழுதப்படாமல் வாய்மொழியாக இப்பாடல்கள் வாழ்ந்து வருவதால் வாய்மொழிப் பாடல் என்றனர்.[3] ஆனால் முன்பு எழுதப் படாமைக்குக் காரணம் வசதிக் குறைவுதானே ஒழிய இயலாமையன்று. இன்று இப்பாடல்கள் அச்சிலேறி வருவது இக்கருத்தை உறுதிப்படுத்தும். ஒரு சமுதாயத்தில் உடலுறவு (Sex Relationships) போன்றவை பற்றிய செய்திகள் பல மக்களிடம் வாய்மொழியாகவே வழங்கி வருகின்றன. ஆனால் இவை நாட்டுப்புற இலக்கியங்கள் எனப் போற்றப்படவில்லை. எனவே, வாய்மொழி இலக்கியம் என்ற பொதுத்தலைப்பு மேற்குறிப்பிட்ட வகை. சாதாரண வாய்மொழி வெளியிடுகளைப் பிரித்துக் காட்டும் பெற்றியுடையதாக இல்லை. எனவே, இப்பெயரும் இதன் தொடர்பான 'எழுதார் கவிதை, 'ஏட்டில் எழுதாக் கவிதை' காற்றிலே மிதந்த கவிதை, செவிவழிப் பாடல் போன்ற பிற பெயர்களும்[4] சிறப்பாகப் பொருந்தவில்லை என்றே கூறலாம்.

## பாடல் தோன்றிய இடத்தால் உருவான பெயர்கள்

நாட்டுக்குரிய பாடல் என்ற பொதுமைப் பண்புடன் 'நாட்டுப் பாடல்' என்று அழைத்தனர்[5] ஆனால் நாட்டுப்பாடல் என்ற பெயர்

பெரும்பாலும் நாட்டு வாழ்த்து அல்லது வணக்கப் பாடலையே குறிப்பதால் இப்பெயர் பொருத்தமற்றதாகிவருகிறது. 'நாட்டுகலைகள்' போன்ற தொடரிலும் 'கிராமியக் கலைகள்' என்று தனிமைப்படுத்திப் பொருள் காணமுடியவில்லை. பெரும்பாலும் கிராமங்களில் பாடப்படுவதால் 'கிராமியப் பாடல்' என்றும் ஊர்ப் பாடல் என்றும் அழைத்தனர்.[6] ஊர் என்பது சிற்றூர் பேரூர் என்று இருபொருளைக் குறிப்பதாலும் Village, Folk ஆகிய இரண்டுக்கும் வேறுபாடுகள் இருப்பதாலும் இப்பெயரும் சிறப்பாகப் பொருந்தவில்லை.

## பாடலைச் சுட்டும் உருவகப் பெயர்கள்

இவை இயற்கைச் சூழ்நிலையில் கட்டுப்பாடின்றி வளர்ச்சி பெயப்பட்ட மக்கள் பாடும் பாடல்கள் ஆதலின் இவற்றைக் 'காட்டுமலர்களுக்கும், மலையருவிக்கும் ஒப்பிட்டனர்'' 'காட்டு மல்லிகை', 'காட்டுப் பூ' என்பவையும் உருவகப் பெயர்கள் ஆகும்.[8] இவற்றை உண்மைப் பெயர்களாக எடுத்து கொள்ள முடியாததால் இவை பொருத்தமான, பொதுவான பெயர்களில்லை எனலாம்.

## பாடும் மக்களால் உருவான பெயர்கள்

பொதுமக்களால் பாடப்படும் பாடல்கள் என்ற பொருளில் 'பொதுஜன இலக்கியம்', 'மக்கள் பாடல்' எனவும் வாழ்வைப்

பற்றியது ஆதலின் 'வாழ்வு இலக்கியம்' என்றும் அழைத்தனர்.[9] மக்கள் என்பது, உலக மக்கள் அனைவரையும் குறிப்பது என்பதாலும் பொதுமக்கள் என்று வரையறுக்கப்பட்ட பொருளும் உண்டு. மேற்குறிப்பிட்ட இலக்கியம் சுட்டப்படவில்லை என்பதாலும் மக்கள் இலக்கியங்களாக இன்று பல்வேறு இலக்கிய வகைகள் தோன்றியிருப்பதாலும் வாழ்வு என்பது மிக பொதுமையான தாக இப்பதாலும் இப்பெயர் பொருந்தவில்லை எனலாம்.

நாடோடி மக்களைப் போன்று நாடெங்கும் பரவி - பவனி வருவதாலும், கோடங்கிக்காரன், குடுகுடுப்பைக்காரன், பிச்சைக்காரன், இராப்பாடிக்காரன் போன்ற நாடோடிகளால் பாடப்படுவதாலும் இவற்றை நாடோடிப் பாடல்கள்[10] என்றனர். நாடோடிகளைப் போன்று பரவுவது மிகக் குறைந்தளவே ஆனதாலும், தாய்மார்கள், தொழிலாளர்கள், குழந்தைகள், கலைஞர்கள் ஆகியோரது பாடல்களை நாடோடிப் பாடல்கள் என்பது நாகரிகமன்று என்பதாலும் இப்பெயரும் சிறப்பாக இல்லை எனலாம்.

கல்வியறிவில்லாத பாமரமக்கள் பெரும்பாலும் இப்பாடல்களைப் பாடுவதால் இவற்றைப் பாமரர் பாடல் என்றும் 'பாமரமக்களின் பரம்பரைப்பாடல்' என்றும் அழைத்தனர்[11] பாமரர் என்ற சொல் கல்வியறிவற்றவர்களைக் குறிக்கும் இழிபொருளைத் தருவதாலும், கல்வியறிவுள்ள தாய்மாக்ள், குழந்தைகள்,

தொழிலாளர்கள் போன்ற கற்றவர்களும் பாடுவதாலும் இப்பெயர் சிறப்புக்குறியதன்று எனலாம்.

'Folk' என்ற சொல்லிற்கு நாட்டார் என்ற சொல் மிகப் பொருத்தமான ஒன்றாகும். நாட்டார் கூட்டம் என்று மக்கள் வழக்கிலும் காணப்படுகின்றது. இலங்கைத் தமிழர்களும் நாட்டார் என்ற சொல்லையே கையாளுகின்றனர். இச்சொல், படித்த, படிக்காத மக்கள் அனைவரையும் குறிக்கும். எனவே Folk Songs என்பதற்கு 'நாட்டார் பாடல்கள்' என்ற சொல் மிகப் பொருத்தமானதாகும் என்பார் தே. லூர்து.[12] நாட்டுப் பாடல் போலவே நாட்டார் பாடல்கள் என்பதற்கு நாட்டுப்புற மக்கள் என்ற தெளிவான பொருள் இல்லை. நாட்டார் என்று தமிழகத்திலுள்ள ஒரு தனிப்பட்ட சாதியாரின் பெயராகவும் விளங்குகின்றது.[13] எனவே, இப்பெயரால் இவற்றைக் குறிப்பதில் சிறப்பு இல்லை எனலாம்.

கிராமத்தை குறிக்கும் நாட்டுப்புறத்து மக்களால் பாடப்படுவதால் நாட்டுப்புறப் பாடல் என்ற பெயரே பொருத்தமாக விளங்குகின்றது. இன்றும் நகரமக்கள் கிராம மக்களை 'நாட்டுப்புறத்தார்' என்றும் கிராமப்பகுதிகளை நாட்டுப்புறம் என்றுமே இயற்கையாக வழங்குதல் கருதத்தக்கது. நகர்ப்புறத்தில் இப்பாடல்கள் பாடப்பட்டாலும் இப்பாடல்கள் நாட்டுப்புறத்தில்தான் வாழும் இப்பாடல்களைப் பாடுவதாலும், ஆங்கிலச்சொல் அகராதியின் துணை சான்றாகும்[14] என்ற Folk Songs

என்ற ஆங்கிலச் சொல்லுக்கு நாட்டுப்புறப் பாடல்கள் என்ற சொல்லே பொருத்தமான பெயராக விளங்குகின்றது.

## நாட்டுப்புறப் பாடல்களின் வரலாறு

நாட்டுப்புறக் கதைகளை அறியவும் ஆராயவும் ஆர்வம் கொண்டு, முதன் முதல் 1846இல் வில்லியம் ஜான் தாமஸ் (William John Thomas) என்பார் நாட்டுப்புறவியலைக் குறிக்க Folklore என்ற சொல்லை உருவாக்கினார். இதற்கு முன்னர் நாட்டுப்புறவியலைக் குறிக்க Popular Antiquities என்ற சொல்லே வழக்கில் இருந்தது.[15]

தமிழ் நூல்களிலே இன்றைக்குக் கிடைக்கும் மிகப் பழைய இலக்கண நூலான தொல்காப்பியத்தில் நாட்டுப்புறத் தன்மைகள் குறித்த செய்திகள் கிடைக்கப் பெறுகின்றன. தொல்காப்பியர் நாட்டுப்புறப் பாடல்களைக் குறிக்கப் பண்ணத்தி என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார். 'பாட்டிடைக் கலந்த பொருள வாகிப், பாட்டின் இயல பண்ணத்தி இயல்பே'[16] என்று இச்சொல்லுக்குப் பண்ணைவிரும்புவது எனவும் பண்ணமைந்த பாடல் எனவும் பொருளில் குறிப்பிடுகின்றார்.

ஏழ்மை நிலை பொறுமையின் எல்லையைத் தாண்டியபோது, மக்கள் கிராம சமுதாய அமைப்பை எதிர்த்துப் போராடியுள்ளனர். இத்தகைய போராட்டங்களைப் பற்றி

நாட்டுப்புறப்பாடல்களிலிருந்தும் கல்வெட்டுகளிலிருந்தும் அறிந்துகொள்ள முடிகிறது.[17]

1871இல் சார்லஸ் இ.கோவர் (Gover Charles.E) முதன் முதலில் இந்தியாவிலேயே நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுக்க முனைந்தார். தென்னிந்தியாவிலுள்ள திராவிட மொழிகளிலுள்ள நாட்டுப்புறப் பாடல்களை The Folk Songs of Southern India என்ற பெயரில்[18] ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டார். இதனை அடுத்து இத்துறைக்குச் சிறிய தொண்டாற்றியவர் ஜெர்மன் நாட்டு மொழியியல் அறிஞரான மாக்ஸ் முல்லர் (Max Muller). இவர் இத்துறையில் ஆய்வு நடத்தித் தம் கருத்துக்களை வெளியிட்டதும் ஆண்டிரின் லாங் (Andrew Lang) என்னும் அறிஞர் அவற்றை மறுத்துரைத்தார். இவர்களுக்கிடையே நடந்த தொடர்ச்சியான போராட்டத்தால் நாட்டுப்புறப்பாடல்களிடம் பெரியதொரு செல்வாக்குப் பெறுவதாயிற்று. எங்கும் இதுப்பற்றிப் பேசப்பெற்றது. எல்லோரும் பாடல்களைத் தொகுப்பதிலும் ஆய்வுக் கட்டுரைகளை எழுதி வெளியிடுவதிலும் ஆர்வங்காட்டினர். பின்னர் பிரேசர் என்னும் ஸ்காட்லாந்தின் மானிட வியல் பேரறிஞர் தம் அரும்பெரும் தொண்டினால் நாட்டுப்புறப் பாடல் ஆய்வுத் துறையை உலகளாவிய இயக்கமாக மாற்றினார். இவர் நூற்றுக்கணக்கான இடங்கட்குச் சென்று ஆங்காங்கே பாடப்பட்டு வந்த பாடல்களைத் தொகுத்து 1890இல் 'Golden Bough' என்னும் தொகுப்பு நூலை வெளியிட்டார்.[19]

1943, இல் திரு.மு. அருணாசலம் அவர்கள் தமிழர் என்ற நிலையில் முதலில் 'காற்றில் மிதந்த கவிதை' என்ற நூலை வெளியிட்டார். இதன் பின்னர் 1954இல் இத்துறை வளரத் தொடங்கியது.[20] இலக்கியம் கண்டு ரசிக்கும் போக்கில் கி.வா.ஜகன்னாதன் அவர்கள் இத்துறையில் முனைந்து நின்று பல பாடல்களைத் தொகுத்து விளக்கியுள்ளார். இவரைத் தொடர்ந்து திரு.தமிழண்ணல் அவர்கள் 'தாலாட்டு' தொகுப்பு நூல் ஒன்றினை வெளியிட்டார். பின்னர் நாட்டுப்புறப்பாடல்களின் ஒரு பகுதியான தாலாட்டில் நாட்டஞ்செலுத்தித் திரு.மு. அருணாசலம் அவர்கள் 1958இல் 'தாலாட்டு இலக்கியம்' என்னும் நூலை வெளியிட்டார்.[21]

கலெக்டராகப் பணியாற்றிய பெர்சி மாக்வீனும் முயன்று சேகரித்துப் பாடல்களை பாதுகாத்து வந்தார். பின்னர் அது 1958இல், மலையருவி என்ற பெயருடன் திரு.கி.வா.ஜ. அவர்களின் பதிப்புரையுடன் வெளிவந்தது.[22] இவருக்குப் பின் திரு. ஆர். அய்யாசாமி அவர்கள் நாடோடிப் பாடல்கள் என்னும் நூலை 1959இல் வெளியிட்டுள்ளார்கள்.

1960இல் தமிழில் எல்லாத்துறையிலும் எழுச்சிமிக்க பேரார்வம் வேகம் பெறுவதாயிற்று. பேராசிரியர். நா.வானமாமலை அவர்கள் பல நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுத்துத் தமிழ் நாட்டுப்பாமரர் பாடல்கள் என்னும் நூலை 1960இல் வெளியிட்டார்.[23] பின்னர் 1970இல் திரு.த. இராசாராம்

அவர்கள் தமிழில் அம்மானைப் பாடல்கள் என்னும் நூலை வெளியிட்டுள்ளார்கள்.[24] பின் திரு. ஆறு. அழகப்பன், திரு. பா.ரா.சுப்பிரமணியம், திரு. தே.ஞா.ந்து, திரு.சண்முகசுந்தரம், திரு.மு.வை., அரவிந்தன் போன்ற பலர் முயன்று பல நூல்களை வெளியிட்டுள்ளனர்.

இவ்வாறு நூல்களாக மட்டுமில்லாமல், கலைமகள் தாமரை, செம்மலர், கொங்கு, புதியவானம் போன்ற இதழ்களும் நாட்டுப்புறப் பாடல் தொகுப்பிற்கு உதவி வந்தன. வானொலி நிலையங்களும் வாரம் இருமுறை பாடல்களை ஒலிபரப்பி வருகின்றன. பல்கலைக் கழகங்கள் எம்.ஏ. தமிழ் இலக்கியத்தில் விருப்பப்பாடமாக நாட்டுப்புற இலக்கியத்தை வைத்துள்ளது. எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி போன்ற பட்டங்களைப் பெறவும் பல்லைக்கழகங்கள் அனுமதித்து வருகின்றன. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம், உலகத் தமிழ் மாநாடு, உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், இயலிசை நாடகமன்றம், தமிழிசை மன்றம் போன்றவையும் கருத்தரங்குகள், விழாக்கள் ஆகியவற்றின் மூலம் நாட்டுப்புறப் பாடல்களுக்கு ஆக்கம் அளித்துவருவது குறிப்பிடத்தக்கது. இது வரவேற்க தக்க முயற்சிகளாகவும் வரலாறாகவும் அமைகின்றது.

## நாட்டுப்புறப் பாடல்களின் தன்மைகள்

1. தாய்வழி மகள் செவிவழிகேட்டு வாய்மொழியாகப் பாடப்படுவதுதான் நாட்டுப்புறப் பாடல்கள்.

2. நாட்டுப்புறப் பாடல்களே எழுத்திலக்கியத்தின் தாய் என்று கூறலாம். நாட்டுப்புறப் பாடல்கள் இல்லையென்றால் எழுத்திலக்கியமும் இல்லை. செம்மையுறாத கலைவடிவம் நாட்டுப்புறப் பாடல்கள், செம்மையும் மெருகும் இணைந்த அரிய கலைவடிவமே எழுத்திலக்கியம். வாய்மொழி இலக்கியத்தின் செல்வாக்கினால் எழுத்திலக்கியம் வளர்ச்சிப் பெறுகிறது. என்றாலும் வாய்மொழி இலக்கியம் தன்னைபழித்துக் கொள்ளாமலும் இரண்டறக் கலந்துவிடாமலும் வாழ்ந்து வருகிறது. எழுத்திலக்கியம் இல்லையென்றாலும் வாய்மொழி இலக்கியம் வாழும். வாய்மொழி இலக்கியம் இல்லையென்றால் எழுத்திலக்கியமே இல்லையென்பார்.[25]

3. எப்பொழுது தோன்றியது என்று எவராலும் கூறமுடியாதபடி காலவரையறை அற்றது.

4. ஒரு தலைமுறையில் இருந்து மற்றொரு தலைமுறையினருக்கு வழி வழியாக வழங்கி வளம்பெற்று வந்தவை நாட்டுப்புறப் பாடல்கள்.

5. எளிமையான சொற்களால் பாடப்பட்டவை. படிக்காத பாமரமக்களும் எளிதில் புரிந்து கொள்வர்.

6. இந்நாட்டுப்புறப் பாடல்களைப் பாடிய கவிஞர்கள் கல்லாதவர்கள்.

7. நாட்டுபபுறப் பாடகளில் உயர்வு நவிற்சி அணி இல்லாமல்

இயல்பு நவிற்சி அணியாகத்தான் பாடல்கள் இருக்கும். உள்ளதை உள்ளவாறு கூறும் தன்மையுடையன.

8. வந்த சொற்களோ, வந்த கருத்துகளோ, வந்த சொற்றொடர்களோ மீண்டும் மீண்டும் வரும். அடிவரையறை கிடையாது.

9. நாட்டுப்புறப் பாடல்கள் குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை பாடுகின்ற தன்மையுடையது.

10. இலக்கிய உலகுக்குத் தடையாக விளங்கி வருகின்றவை நாட்டுப்புறப் பாடல்கள் என்றால் மிகையாகாது.

11. ஒரு நாட்டின் கலாச்சார பாரம்பரியத்தின் முக்கிய அம்சம் அந்நாட்டில் வழங்கும் நாட்டுப்புறப் பாடல்கள் உணர்த்தும் தன்மையுடையன.[26]

12. மக்களின் மனத்தில் உள்ள எண்ணங்கள், ஏக்கங்கள், குறிக்கோள்கள், நம்பிக்கைகள் இன்பதுன்பங்கள் ஆகிய அனைத்தையும் இவை பிரதிபலிக்கின்றன.[27]

13. இசையுடன் பாடாத நாட்டுப்புறப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்களே இல்லை. பண்ணுடன் பாடப்படாத நாட்டுப்புறப் பாடல்கள் எல்லாம் சிறகில்லாத பறவைகள்[28]

14. நாட்டுப்புறப் பாடல்களில் புன்னாகவராளி, நாத நாமக்கிரியா, ஆனந்த பைரவி, பைந்தவி, செஞ்சுருட்டி, குறிஞ்சி, நௌரோஜ், நீலாம்பரி ஆகியவை பழக்கப்பட்ட இராகங்களாகின்றன. இதன் இசையில் ஆதி, ரூபக, சாபு

தாளங்கள் பயன்படுத்தப்படுகின்றன. முத்தாளம், திஸ்ரம் ஆகிய தாளங்கள் அதிகமாக வழக்கில் உண்டு என்கின்றனர்.[29]

15. நாட்டில் வழங்கிவரும் கதைப்பாட்டுகள் அந்த நாட்டின் சட்டங்களைவிட முக்கியமானவை.[30]

16. நாட்டுப்புற பாடல்களில் ஒருவர் பாடும் பாடல்கள் தாலாட்டு, உடுக்குப்பாட்டு முதலியன. சிலவற்றை ஒருவரோ, பலரோ பாடலாகப் பாடுவதுண்டு அஃது ஒப்பாரி, விளையாட்டுப்பாட்டு, தொழிற்பாடல்கள் முதலியன ஆகும். சிலவகைப் பாடல்களைக் குழுவினர்தான் பாடுவர். அஃது மாரடிப்பாட்டு, கழிவடிப்பாட்டு முதலியன. தொழிற்பாடல்கள் முன்பாட்டு, பின்பாட்டு எனத் தர்க்க முறையிலும் பாடுவதுண்டு. இது கேட்க, நகைச்சுவை ஏற்படும்.

17. நாட்டுப்புறப் பாடல்கள் இலக்கண வரையறை, பழமை, மரபு இவற்றையெல்லாம் பார்த்துக் கொண்டிருப்பதில்லை. சான்றோர் இலக்கியம் ஒரு வகையில் செயற்கை இலக்கியமே. இலக்கண வரையறை, பழமை, மரபு முதலியவற்றில் சிக்கித்தவிப்பது அதன் இயல்பு. ஆனால் நாட்டுப்புறப் பாடலோ எதையும் பாராது உள்ளத்தெழும் இன்ப-துன்ப உணர்வுகளுக்கு உருதந்து உயிரோட்டத்தோடு வாழும் மக்கள் இலக்கியம் சுதந்திர வானத்தில் தானே பொங்கித்ததும்பும் இன்ப கீதமே நாட்டுப்புறப்பாடல். துளையிடுவார் இல்லாது தானே தோன்றிய ஊற்றுக்களே நாட்டுப்புறப் பாடல்கள் எனலாம். அவற்றுக்கு

இலக்கணம் வகுப்பாரில்லை. உரை கூறுவாரும் தேவையில்லை.[11]

18. இலக்கியத்தில் உள்ள சொல்லமைதி நாடோடிப் பாடல்களில் இல்லாமல் இருக்கலாம். ஆனால் நாடோடிப் பாடல்களில் ஒருவகை மழலைத் தன்மை இருக்கிறது. இலக்கியத்தின் நுட்பம் இருக்கிறது. நாடோடிப் பாடல்களில் குழந்தை உள்ளம் பேசுகிறது. இலக்கியத்தில் அற்புத கற்பனைகள் இருக்கின்றன. கட்டில்லாதக் கவிதையில் பாமரனுக்கு இன்பம் ஊட்டும் எளிய கற்பனை இருக்கிறது. மனித இனத்தின் உன்னத இலட்சியத்தை இலக்கியக் கவிதைச் சொல்கிறது. அன்றன்று மனிதன்படும் இன்ப துன்பத்தை உள்ளபடியே நாடோடிக் கவிதை காட்டுகிறது. மனித குலத்தின் அழகை மாத்திரம் புலவர்கள் தம் கவிகளில் காட்டுகிறார்கள். நாடோடிப் பாவலனோ அழகையும் காட்டுகிறான். அழுக்கையும் காட்டுகிறான்.[12]

19. இருபதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் இருந்தே நாட்டார் இலக்கியத்தைத்தக்க முறையில் சிறப்பித்து வருவது அறியமுடிகின்றது. மரபியல், சமூகவியல், உளவியல், மானுடவியல், வரலாற்று மீட்டுருவாக்கம் ஆகியன நாட்டார் இலக்கியத்தின் மூலம் வளர வழியுண்டு என்பது புலப்படுகின்றது.

## நாட்டுப்புறப் பாடல்கள் உணர்த்தும் கருத்துகள்

நாட்டுப்புறப் பாடல்கள் மக்களின் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையதாகிறது. கதைப் பாடல்களைத் தவிர மற்ற நாட்டுப் பாடல்கள் நாட்டுப்புற வாழ்க்கையின் அன்றாட சம்பவங்களையே பாடு பொருளாகக் கொண்டிருக்கின்றன. அதனால்தான் வாழ்க்கையின் சம்பவங்களான பிறப்பு, குழந்தைப்பருவ நிகழ்ச்சிகள், விளையாட்டுகள், காதல், பொருந்தா மணம், குடும்ப நடைமுறைகள், கிராமத் தொழில்கள், வறுமை, கிராமத் தேவதைகள் முதலியவை நாட்டுப்புறப் பாடல்களின் பாடுபொருள்களாக அமைந்தன. ஏமாற்றுதலும், சோம்பேறித் தன்மையும் கூடாது என்று நாட்டுப்புறப் பாடல்கள் சொல்லித்தருகின்றன. உழைப்பின் உயர்வைப் பல நாட்டுப்புறப் பாடல்கள் போற்றுகின்றன. சோம்பேறிக் கணவனைத் திருத்தி உழைப்பாளியாக மாற்ற நினைக்கும் பெண்களை நாட்டுப்புற பாடல்களில் காணமுடிகிறது. நியாயமாகக் கூலி கொடுக்கும் முதலாளியைப் புகழ்வதும், கொடுமைக்கார முதலாளியை இகழ்வதும் தொழிலாளியின் இயற்கையான எண்ணமாகிறது. இதனை நாட்டுப்புறப் பாடல்களில் காணமுடிகிறது.

தாலாட்டுப் பாடல்களைப் பாடும்போது குழந்தை தாயின் குரல் கேட்டுத்தானும் அதுபோல் நாவசைக்கவும், பேசவும் முயற்சி செய்வதுடன், சிறு குழந்தைகள் ஒற்றுமையாக வளரவும் பகிர்ந்துண்ணும் குணத்தினை வளர்த்துக் கொள்வதையும்

நாட்டுப்புறப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. மேலும், குழந்தைகள் ஓடியாடி விளையாடி மூச்சை அடக்கிப் பாடுவதால் உடல் ஆரோக்கியம் பெறவும் எளிதில் தங்கள் அறிவினை வளர்த்துக் கொள்வதை விளையாட்டுப்பாடல்கள் வெளிப்படுத்துகின்றன.

மக்கள் தங்கள் விருப்பு வெறுப்புகளைப் பாடல்கள் மூலம் வெளிப்படுத்துவதால் நாசூக்காக அதனைப் புரிந்துக்கொண்டு தங்கள் எண்ணங்களைச் சீர்படுத்திக் கொள்ளும் வாய்ப்பை உணர்த்தப்படுகிறது. மேலும், இலக்கியப் பாடல்களைக் கற்காமலேயே நாட்டுப்புற மக்கள் தங்கள் ஒருவர்மேல் வைத்த அன்பினை பிறருக்காக மாற்றிக் கொள்ளாத பண்பினைப் பெற்ற சமுதாயத்தில் காதல் பாடல்களில் உணர்த்தப்படுகிறது. ஒருவர் தன் உள்ளக் குறிப்பை மற்றவர்களுக்குக் குறிப்பாக உற்றார் உறவினருக்கு உணர்த்தவும், கேட்போர் தங்களிடம் தவறு இருப்பின் திருத்திக் கொள்வதையும் இப்பாடல்களின் மூலம் உணர்த்தப்படுகிறதைக் காணலாம்.

## நாட்டுப்புறப் பாடல்களின் அமைப்புகள்

நாட்டுப்புறப் பாடல்கள் அடிவரையறை அற்றவை என்றாலும் கூட இரண்டடிப் பாடல்கள் முதல் 500 அடி பாடல்கள்வரை அமைந்துள்ளன. குழந்தைகள் பாடும் பாடல்கள் அடிவரையறை குறைந்ததாகவும், பெரியவர்கள் பாடும்

தாலாட்டு, ஒப்பாரி, தொழில் பாடல்கள் முதலியன அடிவரையறை அதிகம் கொண்டதாகவும் அமைந்துள்ளன. இதுதான் இயற்கையான இயல்பான அமைப்பாகும்.

நாட்டுப்புறப் பாடல்களுக்குக் குறிப்பிட்ட வடிவம் இல்லை. பாத்திரத்திற்கு ஏற்ப நீர் வடிவம் பெறுவது போன்று பாடுவோர்க்கு ஏற்ப வடிவம் மாறுபடுவதுண்டு. இந்த வடிவ வரையறை கற்சுவர்போல் இல்லாமல் 'படல் வேலி' போல் அமைவதால் பாடலின் உணர்ச்சிகள் எங்கும் முடக்கி ஒடுக்கப்படுவதில்லை.[37] மேலும், நாட்டுப்புறப் பாடல்களில் 'அலங்கார இறுக்கம்' கிடையாது. வட்டார வழக்குச் சொற்களைத் தவிர புரியாத சொற்கள் கிடையாது. மழலை இன்பம் போன்றதொரு மயக்கும் இன்பம் இதிலே கமழ்கிறது. வலிந்து புகுத்தப்படாத, இயல்பான, தாமாகவே பிறப்பெடுத்த எதுகை மோனைகளை கொண்டு அமைந்துள்ளது.

திரும்பவரல் எனும் அமைப்பு நாட்டுப்புறப் பாடல்களை நினைவில் வைத்துக் கொள்ளவும், புதிதாகப் புனைந்து சேர்த்துக் கொள்ளவும் உதவிடும் வகையில் அமைந்துள்ளது. இசையொலிகள் பாடலின் முதல்நிலை, இடைநிலை, கடைநிலை எனும் முந்நிலைகளிலும் வருவதாக அமைந்துள்ளது.

## நாட்டுப்புறப் பாடல்கள் பற்றி தமிழறிஞர்களின் கருத்து

'ஒரு நாட்டில் கலாச்சாரப் பாரம்பரியத்தின் முக்கிய அம்சம்

அந்நாட்டில் வழங்கும் நாட்டுப் பாடல்களேயாகின்றன. கிராம மக்களிடையே அன்றாம் காணும் உணர்வுகளே அவைகளைப் பிரதிபலிக்கும்' என்றும், நாட்டுப்புற இயல் என்பது மக்களின் மரபு வழிப்பட்ட படைப்புகள் எனலாம். நாட்டுப்புறப் பாடல்கள் ஆகாயப் பூக்கள் இல்லை. மண்ணின் மணிகள், மானிடக் கனிகள் இவை வாழ்க்கையில் பிறந்து, வாழ்க்கையில் வளர்ந்து, வாழ்க்கைக்கே பயன்படுகின்றன'' என்றும் 'நாட்டுப்புற இலக்கியம் ஆசிரியர் பெயர் அறிய முடியாதது. எளிய நடையில் வாழ்வோடு பிணைந்த இன்பதுன்ப நிகழ்ச்சிகள் தோய்ந்த வகையில் அவ்விலக்கியம் அமையும். பெரும்பாலும் இரண்டிரண்டாக அமைந்த குறளடிகளால் கேட்போர்க்கும் சொல்வோர்க்கும் எளிமையில் பொருள் விளங்கி மனத்தில் நிலைத்து இடம்பெறுவது''[15] என்றும், நாட்டுப்புறப் பாடல்கள் இசையைக் கட்டாயம் பெற்றனவாகவும், உள்ளபடி கூறி வரும் புரிந்து கொள்ளும் தெளிவுடையனவாகவும் இருக்கும். வரலாறு, பண்பாடு இவற்றினை வெளிப்படுத்துவனவாகவும் வாழ்க்கையில் பல்வேறு சூழல்களில், சூழலுக்கு ஏற்பப் பாடப்படுவனவாகவும், இயற்றியவர் யார் என்று அறிய முடியாதனவையாகவும் வாய்மொழியாக, வழிமுறை வழிமுறையாகக் குழந்தை முதல் பெரியவர் வரைப் பாடப்படுவனவாகவும் விளங்கும்[16] என்றும், நாட்டுப்புறப் பாடல்கள் இயற்கையோடு இணைந்து வாழ்ந்த

மக்களின் உணர்ச்சி வெளிப்பாடாகும். இவை உழவனால் பயிரிடப்பெறாமல் தானே முளைத்து வளர்ந்து மணம் வீசும் காட்டு மலர்களைப் போன்றவை[37] என்றும் தமிழறிஞர்கள் கூறியுள்ளதைக் காணமுடிகிறது.

இசைப் பாடல்களாக அமைந்து, எளிமையானும், இனிமையானும், மக்களின் துன்பத்தைப் போக்கி இன்பத்தை நல்கும் இயற்கைப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல்கள் என்பது புலனாகிறது.

## நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றி வெளிநாட்டவர்கள்

'சேர்மன் நாவலாசிரியர் தாமஸ்மான் என்பவர் நாட்டுப்புறப் பாடலுக்கும் இலக்கியத்திற்கும் உள்ள தொடர்பினைக் கூறும் பொழுது, 'நாட்டுப்புறப் பாடல் என்ற மண்ணிலிருந்து தோன்றிய செடி இலக்கியம்'[38] என்றும் ஒப்பனைகள் அற்ற ஒரு கிராமத்துப் பெண்ணைப் போன்று மெருகும், புனைந்துரையும், ஒப்பனைகளும் பெறாதவை நாட்டுப்புறப் பாடல்கள். அதனால் நாட்டுப்புறப் பாடல்கள் ஒரு நாட்டினுடைய உண்மைத் தன்மைகளையும், அந்நாட்டுக் குடிமக்களின் பண்பாடுகளையும் தெள்ளத் தெளிவாகக் காட்டும் சிறப்பினைப் பெற்றிருக்கிறது[39] என்றும், 'பதினெட்டாம் நூற்றாண்டில் ஆங்கிலப் புலவர்கள் நாட்டுப்புறப் பாடல்களுக்கு இலக்கிய மெருகு கொடுத்து வெளியிட்டிருக்கின்றனர். இதனால் நாட்டுப்புறப் பாடல்களின்

மூலவடிவம் காலப்போக்கில் மறைந்துபோய் இருக்கிறது" என்றும், 'நாட்டுப்புறப் பாடலை நன்றாக வேரோடிய ஒரு காட்டுமரத்திற்கு ஒப்பிட்டு, அம்மரம் புதிய கிளைகளையும் பழங்களையும் பெற்றுக்கொண்டிருக்கும் தன்மை உடையது"[17] என்றும் கூறியுள்ளதை அறியமுடிகிறது.

வெளி நாட்டவர்களின் குறிப்பினைக் கொண்டு அவர்கள் மொழியில் மூல இலக்கியமாக நாட்டுப்புற இலக்கியங்களே விளங்கியமை அறியமுடிகிறது. நம் நாட்டவர்க்கு மட்டுமல்ல, எந்நாட்டவர்க்கும் மூல இலக்கியமாக நாட்டுப்புற இலக்கியங்களே விளங்கியுள்ளன என்பது புலனாகிறது.

## நாட்டுப்புறப் பாடல்களின் வகைகள்

நாட்டுப்புறப் பாடல்களை வகைப்படுத்துதல் என்பது ஒரு வரையறைக்குள் கொண்டுவர வேண்டுமென்பதே ஆகும். பொருள் அடிப்படையில் சான்றோர் இலக்கியத்தை அகம் எனவும் புறம் எனவும் வகைப்படுத்தியுள்ளனர். அகப்பாடல்களை உரிப்பொருளின் அடிப்படையில் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என வகுத்துக் கொண்டனர். அதுபோல நாட்டுப்புறப் பாடல்களை வகைப்படுத்த இயலவில்லை. சான்றோர் இலக்கியம் புனைக்கப்பெற்ற இலக்கியம்; செம்மைப் பண்பு தவழும் செவ்விய இலக்கியமாகத் திகழ்கிறது. ஆனால் நாட்டுப்புற இலக்கியமோ எந்தக் கட்டுப்பாட்டிற்கும்

ஆட்படாமல் தானே தோன்றி மக்கள் வாய் வழியாகவே சார்ந்து வரும் பேறுபெற்றது. எனவே, நாட்டுப்புறப் பாடல்களை வகைப்பாட்டிற்குள் அடக்குவதற்கு பொருள், வடிவம், சூழல் என்ற மூன்று நிலைகளால் வரையறுக்கப்பட வேண்டும். இவற்றை அடிப்படையாக கொண்டு பல ஆய்வாளர்கள் பற்பல வகைப்பாடுகளைக் கண்டு தத்தம் ஆய்வுரைகளை வழங்கியுள்ளனர். அவர்களுக்குள்ளும் ஆய்வியல் முறைப்படி ஆய்வு செய்தோர் நா. வானமாமலை, ஆறு. அழகப்பன், சு. சண்முகசுந்தரம், இ. பாலசுந்தரம், ஆறு. இராமநாதன், ஜே. நிர்மலா ஆகியோர் ஆவர். இந்த அறுவரின் வகைப்பாட்டின் குறைநிறைகளைத் தேர்ந்த பின் செம்மையான வகைப்பாட்டினைக் காணலாம்.

நா.வானமாமலை *(1)* தாலாட்டுப் பாடல்கள் *(2)* விளையாட்டுப் பாடல்கள் *(3)* காதல் பாடல்கள் *(4)* தொழில் பாடல்கள் *(5)* சமுதாயப் பாடல்கள் *(6)* ஒப்பாரிப் பாடல்கள் *(7)* தெய்வப் பாடல்கள் என இவர் பொருள் அடிப்படையில் பாடல்களை வகைப்படுத்தியுள்ளார்.[43]

அவர் வகுத்துக்கொண்ட ஏழு பிரிவுகளில் ஒன்று சமுதாயத்தில் அறிவுக் கருவூலங்கள் தாம். இவ்வாறிருக்க ஒரு சில பாடல்களை மட்டும் சமுதாயப் பாடல்கள் எனப் பெயர் சுட்டல் பொருந்துவதாயில்லை. கும்மிப் பாடல்கள், கோலாட்டப் பாடல்கள் போன்றவற்றை மேற்குறித்த ஏழுப் பிரிவுகளில்

அடக்கவில்லை. இதனால் சில இடர்ப்பாடுகள் எழுகின்றன. எனவே, இவர்தம் பகுப்பில் உள்ள சமுதாயப் பாடல்கள் என்னும் வகைப்பாட்டினை நீக்கிப் புதிய கூறுகள் சிலவற்றை உள்ளடக்கி வேறு ஒரு வகைப்பாட்டினைத் தேடிப் பெறவேண்டுமெனத் தோன்றுகிறது.

ஆறு அழகப்பன் (1) குழந்தைப் பாடல்கள், (2) பக்திப் பாடல்கள் (3) தொழிற்பாடல்கள், (4) கொண்டாட்டப் பாடல்கள் (5) உணர்ச்சிப் பாடல்கள் (6) பன்மலர்ப் பாடல்கள்" என இவர் தனது வகைபாட்டில் தாலாட்டு, ஒப்பாரி என்னும் சொற்றொடர்கள் இடம்பெறவில்லை. குழந்தைப் பாடல்கள் என்னும் தலைப்பின் கீழ்க்குழந்தைப் பெற்றத் தாய், செய்த தவங்கள், குழந்தைப் பெற்ற பின்னர் நுகரும் இன்பம் ஆகியவற்றை விளக்கிச் செல்கிறார். குழந்தைப் பிறப்பு முதல் வளருகின்ற பருவம் வரையில் உள்ள பாடல்கள் அனைத்தையும் ஒன்றாக்கி ஒருதலைப்பில் கீழ்க்கொண்டு வருகிறார். உணர்ச்சிப் பாடல்கள் என்னும் வகைப்பாட்டில் காதற் பாடல்களையும், அழுகைப் பாடல்களையும் அடக்கிவிடுகிறார். பாட்டு என்றாலே உணர்ச்சியின் வெளிப்பாடுதான் என்பதை அறிவோம். உணர்ச்சியில்லாமல் பாட்டுப் பிறப்பதில்லை. காதற் பாடல், அழுகைப்பாடல் ஆகிய இவை மட்டுந்தான் உணர்ச்சிப் பாடல் எனக் கொள்வதுப் பெரிதாகத் தெரியவில்லை பிறவகைப் பாடல்களும் உணர்ச்சியில் பிறப்பனவேயாகும்.

காதல் பாட்டில் பொதிந்துள்ள உணர்ச்சிக்கும் அழுகைப் பாடலில் பொங்கிவரும் உணர்ச்சிக்கும் மிகுதியான வேறுபாடுள்ளமை நன்கு புலனாகும். இன்ப உணர்வுப் பாடல்கள் ஏற்படுத்தும் மனப்பாதிப்பிற்கும், துன்ப உணர்வுப் பாடல்கள் ஏற்படுத்தும் மனப்பாதிப்பிற்கும். இடையே பெரியதொரு வேறுபாடு உள்ளதை நாம் உணர முடியும். இன்ப உணர்வைப் பிறர் பங்கிட்டுக் கொள்ளும்போது இன்பம் பெரிதாகிறது. துன்ப உணர்வைப் பிறர் பங்கிட்டும் கொள்ளும்போது துன்பம் குறைகிறது. மேலும், காதல் பாடல் பாடுவதைக் கேட்டு மகிழ்வோர் ஒரு பிரிவினரே. சிறுவர்களும் முதியவர்களும் காதல் பாட்டில் திளைப்பது அரிது. ஆனால் அழுகைப் பாட்டைப் பாடக் கேட்டால் அனைவருமே வயது வேறுபாடின்றி நெஞ்சைப் பறிகொடுத்து விடுகின்றார்கள். அழுகைப் பாடல் நெஞ்சங்களை ஈர்ப்பதில் இன்பப் பாடலைக் காட்டிலும் முன்னிற்கிறது. எனவே, இன்பப் பாடலையும் துன்பப் பாடலையும் ஒரே வகைப்பாட்டில் அடக்குவது பொருந்துவதாயில்லை. தாலாட்டு, ஒப்பாரி என்றும் பெயர்களை ஒதுக்கி விடுதலும் முறையாகத் தெரியவில்லை

சு. சண்முகசுந்தரம் *(1)* குழந்தைப் பாடல்கள், *(2)* தொழிற்பாடல்கள், *(3)* மணப் பாடல்கள், *(4)* வழிபாட்டுப் பாடல்கள், *(5)* பிணப் பாடல்கள் என வகைப்படுத்தியுள்ளார்.45 ஆறு. அழகப்பனைப் போன்றே இவரும் தாலாட்டு, ஒப்பாரி

என்னும் பெயர்களை ஆள முன்வரவில்லை. காலங்காலமாக மக்களிடத்தில் செல்வாக்குப் பெற்றுள்ள தாலாட்டு, ஒப்பாரி என்னும் சொற்றொடர்களை ஆளாமல் வேறுவகையில் அவற்றை உணர்த்த முயல்வது மரபை மீறுவது போல் தெரிகிறது. இவர்தம் வகைப்பாட்டில் 'பிணப்பாடல்' என ஒரு வகைப்பாடு உள்ளது. இச்சொற்றொடர் செவிக்கு சுகமானதாகவும், கைப்பூட்டுவதாகவும் உள்ளது. 'ஒப்பாரி' என்னும் மக்கள் அறிந்த சொல்லிருக்கப் புதிய சொல்லாட்சி தேவையற்றதாகி விடுகிறது. புதிய சொல்லாக்கம் பழையதைக் காட்டிலும் செம்மையுடையதாயின் ஏற்றுக் கொள்ளப்பெறும். வகைப்பாட்டின் எண்ணிக்கையைக் குறைக்க முயன்று பல கூறுகளை உள்ளடக்கிக் கொள்ள இயலாத நிலையில் இவர்தம் வகைப்பாடு அமைந்துள்ளதால் செவ்விய வகைப்பாட்டைக் காணும் தேவையேற்படுகிறது.

இ. பாலசுந்தரம் அவர்கள் கூறும்போது (1) தாலாட்டுப் பாடல்கள், (2) சிறுவர் விளையாட்டுப் பாடல்கள், (3) தொழிற்பாடல்கள், (4) காதல் பாடல்கள், (5) உணர்ச்சிப் பாடல்கள், (6) கதைக் கூத்துப்பாடல்கள், (7) ஒப்பாரிப்பாடல்கள் என 'ஈழத்து நாட்டார் பாடல்கள்' என்னும் ஆய்வு நூலில் இவர் குறிப்பிடுகின்றார்.[16] கிராமிய மக்களது பொழுதுபோக்கு, கேளிக்கை, கூத்து என்பவற்றுடன் பயன்படும் பாடல்கள்' 'கதைக் - கூற்றுப் பாடல்கள் என்னும் தனிப்பிரிவில்

அடக்கப்பட்டுள்ளன. எனவே நாட்டுப்புறப் பாடல்கள் என்பவை கூத்துக்களில் இடம் பெறாத, தனித் தனியே பாடப்பெற்று வருகின்ற வயல்வெளிப் பாடல்களையும் ஊர்ப்பாடல்களையும் குறிக்கின்றன. கதை தழுவிய பாடல்களை நாட்டுப்புறப் பாடல்களில் கொண்டு வந்து வகைப்பாடு செய்தல் பொருந்துவதாகத் தெரியவில்லை. 'கூற்றுப் பாடல்கள்' என்னும் தனிப் பிரிவினை நாட்டுப்புற இயலில் ஒரு கூறாக எடுத்து ஆய்வு செய்தல் நலம் பயக்கும். சின்னஞ்சிறு பாடல்கூடச் சிலபோது கதைப் பொருண்மை உடையதாய் அமைகிறது.48 கதை தழுவிய பாடல்கள், கூத்துப் பாடல்கள் தமிழில் எண்ணிறந்தன உள்ளன. எனவே, வேறு ஒரு பொருத்தமான வகைப்பாடு தேவையாகிறது.

மேலும், ஆறு. இராமநாதன் (1) தாலாட்டு, (2) குழந்தை வளர்ச்சி நிலைப்பாடல்கள், (3) விளையாட்டுப்பாடல்கள், (4) தொழிற்பாடல்கள், (5) வழிபாட்டுப் பாடல்கள், (6) கொண்டாட்டப் பாடல்கள், (7) இரங்கல் பாடல்கள், (8) இழப்புப் பாடல்கள் என தென்னார்க்காடு மாவட்ட நாட்டுப்புறப் பாடல்கள் என்னும் நூலில் இவர் குறிப்பிடுகிறார்.[49]

குழந்தை வளர்ச்சிநிலைப் பாடல்கள் என்றும் இரு பிரிவுகளையும் ஒரே பிரிவின் கீழ்க் கொண்டுவரல் இயலும். விளையாட்டுப் பாடல்கள் என வகைப்பாடு செய்துக்கொண்டு 'குழந்தை வளர்ச்சிநிலைப் பாடல்கள்' 'விளையாட்டுப்பாடல்கள்' ஆகியவற்றை அதன் உட்பிரிவுகளாகக் கொள்ளலாம்.

கொண்டாட்டப் பாடல்கள் எனத் தனியே ஒரு வகைப்பாடு இருக்கலாம். ஏனெனில் கொண்டாட்டம் பெரும்பாலும் நான்கு நிலைக்கலன்களைக் கொண்டு எழுகிறது. (1) விளையாட்டு, (2) காதல், (3) தொழில், (4) விழா எனும் நான்கின் காரணமாகக் கொண்டாட்டம் வருகிறது. விளையாட்டில் ஏற்படும் மகிழ்வின் முதிர்வே கொண்டாட்டமாகிறது. இதனால் இவற்றை விளயாட்டுப் பாடல்களிலேயே சேர்த்துவிடலாம். காதலிருவர், காதலிற்றோய்ந்து தம்மை மறந்த லயந்தன்னில் கொண்டாட்டம் முகிழ்க்கலாம். அவ்வகைப் பாடல்களைக் காதற்பாட்டில் சேர்த்தல் பொருந்தும். வினைமுற்றிய பின்னர் கொண்டாட்டம் நிகழலாம். இவ்வகைப் பாடல்களைத் தொழிற்பாட்டில் சேர்த்துவிடலாம். தேர்த் திருவிழாக் காலங்களில் மகிழ்ந்து பாடும் பாடல்களை வழிபாட்டுப்பாடல்களில் சேர்த்துவிடலாம். எனவே கொண்டாட்டத்திற்கென ஒரு வகைப்பாடு தேவையில்லையெனத் தெரிகிறது.

இரத்தல் பாடல்கள் எனத் தனியே ஒரு வகைப்பாடு அமைத்துக்கொண்டதும் மிகையென்றே தோன்றுகின்றது. இவ்வகைப் பாடல்கள் மிகுதியாகக் கிடைக்கவில்லை. வேறெந்த ஆய்வாளரும் இவ்வாறான வகைப்பாட்டினைக் கூறவில்லை. பிச்சைக்காரர்கள், ராப்பாடிகள் பாடும் பாடல்கள் எல்லாம் எழுத்தில் வடிக்கப்பெறாத பாடல்கள் எனக் கூறவியலாது. சிலபோது சித்தர் பாடல்களை இவர்கள் பாடி வருகிறார்கள் என அறிகிறோம்.

இதனால் 'இரத்தல் பாடல்கள்' என்னும் வகைப்பாடு மிகையெனக் கூறலாம். மேலும், இவ்வாசிரியர் இழப்புப் பாடல்கள் என்னும் வகைப்பாட்டைக் குறிப்பிட்டு அதன் கீழ் உயிரிழப்புப் பாடல்கள், பிற இழப்புப் பாடல்கள் என இரு உட்பிரிவுகளைச் சுட்டுகிறார். நாட்டுப்புறப் பாடல்களில் தாலாட்டும் ஒப்பாரியும் செல்வாக்குமிக்க பிரிவுகளாகும். ஒப்பாரி என்னும் குறியீட்டை அப்படியே வைத்துக்கொண்டு, பிற இழப்புப் பாடல்களையும் ஒப்பாரியில் அடக்கிக் கொள்ளலாம். உலக வழக்கில், நாம் ஏதாவதொன்றை இழந்துவிட்டு, அடிக்கடி அதுபற்றிப் பேசிக் கொண்டிருந்தால், கேட்போர், உடனே ஏனய்யா 'ஒப்பாரி வைக்கிறீர்' என வினாத் தொடுப்பார். எனவே பொருளிழப்பையும் ஒப்பாரியில் சேர்த்துக் கொள்ளலாம். வழக்கிலுள்ள பழைய சொல் வடிவங்களை அப்படியே போற்றிப் பாதுகாத்தல் நாட்டுப்புறம் பாடலாய்வுக்கு பெருந்துணை புரியும்.

கே.நிர்மலா *(1)* தாலாட்டுப் பாடல்கள், *(2)* விளையாட்டு பாடல்கள், *(3)* தொழிற்பாடல்கள், *(4)* விழாப் பாடல்கள், *(5)* இழப்புப் பாடல்கள் என நாட்டுப்புறப் பாடல்களின் வகைப்பாடு *()* எனும் தமது ஆங்கிலக் கட்டுரையில் இவ்வகைப்பாட்னை குறிப்பிட்டுள்ளார்.[19] காதல் பாடல்கள் இவர் தம் வகைப்பாட்டில் இடம் பெறவில்லை. தொழிற்பாட்டில் அடக்க முயல்கிறார். மேலும் இருவரும் துல் அடிப்படையில் பாடல்களை வகைப்பாடு செய்கிறார். சூழல் அடிப்படையில் பாகுபாடு செய்வதை

விடுத்துப் பொருள் அடிப்படையில் பாகுபாடு செய்து ஆய்வாளர் ஆய்வினை மேற்கொண்டுள்ளார்.

நா. வானமாமலை அவர்கள் பொருள் அடிப்படையில் வகைப்பாடு கண்டார். சு. சண்முகசுந்தரம் சூழல் அடிப்படையில் வகைப்பாடு கண்டார். இ. பாலசுந்தரம், 'பயன்பாட்டை' அடிப்படையாகக் கொண்டு வகைப்பாடு செய்துள்ளார். ஆறு. இராமநாதன், ஜே. நிர்மலா ஆகியோர் சூழலை அடிப்படையாக கொண்டு வகைப்பாடு செய்கின்றனர். ஆறு. அழகப்பன் பொது நிலையில், பெரும்பாலும் பொருளை அடிப்படையாகக் கொண்டு வகைப்பாடு செய்துள்ளார்.

நாட்டுப்புறப் பாடல்களை அறியும்போது வடிவம், பொருள், சூழல் என்னும் மூன்று கூறுகளை அடிப்படையாக கொண்டு ஆய்வதே நலம் பயக்கும். ஆனால் முழுமையான பயனை எதிர்பார்க்க இயலாது. சங்கப் பாடல்களின் பொருள் உரிப்பொருள் அடிப்படையில்தான் பாகுபாடு காண்கிறார்கள். பொருளை வைத்துச் சூழலைக் காண முடியும். பொருளோடு வடிவத்தை இணைத்துப் பார்க்கும் போது பொருட் சிறப்பு மிகுதியாகின்றது. எனவே, நாட்டுப்புறப் பாடல்களைப் பொருண்மை அடிப்படையில் ஆராய்வதே நலம் பயக்கும் எனலாம். மொழி வடிவமும் பாவடிவமும் பொருண்மைக்குச் சிறப்பூட்டும் கூறுகள் என்று கூறலாம். பொருண்மையைக் கொண்டு சூழலையும் அறிந்து கொள்ள முடியும்.

எல்லாவற்றிலும் பொருளே சிறப்புடையதாலும், பொருளடிப்படையாகக் கொண்ட பிறவெல்லாம் இயங்குகின்றன. பொருண்மையை அடிப்படையாகக் கொண்டுப்பாடப்படுவதே சிறப்புக்குரியதாகின்றன. நாட்டுப்புறப் பாடல்களை ஆறு வகைகளாக வகைப்படுத்தப்பட்டு அவற்றுள் மருத்துவம் பெறும்மிடத்தை ஆராயப்படுகின்றன.

1. தாலாட்டுப்பாடல்கள்

2. விளையாட்டுப் பாடல்கள்

3. தொழிற் பாடல்கள்

4. காதற் பாடல்கள்

5. பக்திப் பாடல்கள்

6. ஒப்பாரிப் பாடல்கள்

என வகைப்படுத்தலாம்.

## நாட்டுப்புறப் பாடல்களில் மருத்தவம்

நாட்டுப்புற மக்களின் பண்பாட்டுக் கருவூலமாகத் திகழும் நாட்டுப்புறப் பாடல்கள் பழந்தமிழர் வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் பின்னிப் பிணைந்து விளங்குகின்றன. அவ்வகையான துறைகளுள் மருத்துவம் என்பதும் ஒன்றாகும். நாட்டுப்புற மக்களின் மருத்துவ முறைகளை தெரிந்துக்கொள்வதற்கு அவர்களது பாடல்கள் பெரும்துணைச்

செய்கின்றன. அவை தாலாட்டுப் பாடல்கள், விளையாட்டுப் பாடல்கள், தொழிற் பாடல்கள், பக்திப் பாடல்கள், ஒப்பாரிப்பாடல்கள் போன்றவற்றில் மருத்துவம் பற்றியச் செய்திகள் இடம்பெற்றிருப்பது ஆராயப்படுகின்றன.

ஆதிமனிதனுக்கும் விலங்குகளுக்கும் நோயைத் தவிர்க்கவும், உடல் நலத்தைப் பேணவும் மூலிகைகளே பயன்பட்டன. நாட்டுப்புற மருத்துவம் 'வீட்டு வைத்தியம்' என்ற பெயர் பெற்று, ஒரு பரம்பரையிலிருந்து அதன் இளையபரம்பரைக்குக் கைமாறுகிறது என்று டான் யோடர் கூறுகிறார்.[50] இதற்குக் கை வைத்தியம், பாட்டி வைத்தியம் என்ற பெயர்களும் உண்டு.

மலை, காடு போன்ற இடங்களில் கிடைக்கக் கூடிய மூலிகைகளைக் கொண்டு செய்யப்படும் பொருட்கள் நோய்க்கெதிராக உந்துவதனால் மருந்து என்று பெயர் வழங்கப்பட்டது.[51]

சங்க காலத்தில் கோவேலோர்கள் அரசனுக்குத் துணையாக அரண்மனை மருத்துவர்கள் இருந்தனர். சமூகத்தில் கல்விபுகட்டும் ஆசிரியரும் மருத்துவத்தில் சிறப்புற்றிருந்தனர். சங்க இலக்கியங்களில் மருந்துக் குறிப்புகள் காணப்பட்டாலும் சங்க மருவிய கால நூல்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

இன்றைய அறிவியல் மருத்துவ சிகிச்சை முறைகளில் எவ்வளவோ முன்னேற்றம் கண்டிருந்தும் கிராமப்புறங்களில்

அவற்றின் பயனை எளிதில் பெற முடியவில்லை எனலாம். எனவே, அவர்கள் எளிதாகக் கிடைக்கும் மூலிகைகள், தாதுப்பொருட்கள் மற்றும் விலங்கினப் தீபொருட்கள் முதலியவற்றால் மருந்தினைக் கண்டுபிடித்து, நோய்களின்றும் தங்களைக் காத்துக கொண்டனர். ஆங்கில மருத்துவமுறை நம்நாட்டில் இருநூறு ஆண்டுகளுக்கு முன் கால்கொண்டது. மனித இனம் தோன்றிய நாளிலிருந்து உலகிலுள்ள அனைத்து இனத்திலும் நாட்டுப்புற மருத்துவமுறை இருந்து வருவது குறிப்பிடத்தக்கது.

நாட்டுப்புற பாடல்களில் வைத்தியர், வைத்தியன், பண்டிதர் என்னும் பெயர்கள் மருத்துவரைக் குறிக்கப் பயன்படுத்தப் படுகின்றன. இன்றும் நாட்டுப்புற மருத்துவர்களை வைத்தியர் என்றும், ஆங்கில மருத்துவரை 'டாக்டரையா' என்றும் அழைக்கப்படுவதைக் கணலாம். நாவிதப் பெண்கள் பேறுகால மருத்துவத்தில் சிறந்து விளங்குவதை இன்றும் காணலாம். கிராமப்புறங்களில் சில இனத்து முதிய பெண்கள் பிள்ளைப்பேறு பார்ப்பதில் சிறந்து விளங்குகின்றனர். இவர்கள் 'மருத்துவச்சி' என்றே அழைக்கப்படுகின்றனர்.

உள்ளூர், அயலூர் வைத்தியர் குறித்தும், மதுரை, செஞ்சி வைத்தியர் குறித்தும் பாடல்கள் சுட்டுகின்றன. உள்ளூர் வைத்தியர் சரியில்லை என்று அயலூர் வைத்தியரை அழைக்கும் வழக்கம் நாட்டுப்புற மக்களிடம் இருந்துள்ளது என்பதை,

‘உள்ளூர் வைத்தியரும்
உண்மைகளும் சொல்லலியே
அசலூரு வைத்தியர்க்கு
அசலே தெரியவில்ல
ஆளனுப்பித் தேடினாரே?’[52]

என்று நாட்டுப்புறப் பாடல்களில் குறிப்பிடுவதை காணலாம். மேலும், உள்ளூர் வைத்தியர் நோயாளிக்கும் குடும்பத்திற்கும் தெரிந்தவராக இருப்பாரென்றால் பணம் பறிக்கும் நோக்குடன் இறுதிவரை இழுத்துப் பிடித்துக் கொண்டு இருத்தல் கூடும் என்றும், அயலூர் மருத்துவர் தன் புகழ் பரவ வேண்டும் என்பதற்காக நன்கு கவனிப்பார் என்றும் பாடல்கள் சுட்டுகின்றன என்பதை,

‘உள்ளூரு வைத்தியரு
உண்மை வார்த்தை சொல்லமாட்டான்
அசலூரு வைத்தியரும்
அமர்ந்து வார்த்தை சொல்லுவாரு
வரத்தெண்ணெய் - கண்ணே
கண்ணோ அரிக்குதின்னு
தென்காசி எண்ணெய்க்கு - என் ஐயா
சீட்டெழுதி போட்டாரு’[53]

மேலும், சிலர் தம்பிள்ளையோ யாரேனும் பட்டணத்து மருத்துவர் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தைத் தாலாட்டில் குறிப்பிடுவதை காணலாம்.

‘கண்ணான கண்மணியே - நீ
கலியுகத்து மருத்துவரோ
செல்வச் செழுங்கனியே - நீ
சீமை மருத்துவரோ’[54]

என்று பாடலின் மூலம் அறியலாம். மேலும், கிராமத்து மக்கள் பட்டணத்து டாக்டர்களிடம் மருத்துவம் பார்ப்பதனைச் சிலர்

பெருங்குறையெனவும் கருதுகின்றார்கள் என்பதை,

'சென்டரல் ஆஸ்பத்திரியில - அவர்
சீக்காய் இருக்கையிலே
பட்டணத்து டாக்டரும்
பாங்குடனே வந்தனல்லோ
கையைப் புடிச்சுப் பார்க்க
தோஷம் பிறந்துச்சே'[55]

என்ற பாடலில் வெளிப்படுத்தியுள்ளனர். இதனால் கிராமத்து மக்கள் கிராத்து வைத்தியரே பெரும்பாலும் விரும்புகின்றன எனலாம்.'[56] நாட்டுப்புறப் பாடலில் மருந்து என்ற சொல்லாட்சி சிலவிடங்களில் காணப்படுகிறது. அது பொதுவான பொருளிலும், சில பொழுது வேறுபொருளிலும் வழங்கப்படுவதை பாடல் குறிப்பிடுவதை காணலாம்.

'குடுத்த மருந்து எல்லாம் - உங்களைக்
கொல்லவோ காத்ததோ
தந்த மருந்து எல்லாம் - உங்களுக்குத்
தலைக்கே இருந்ததோ'[57]

என 'மருந்து' எல்லாவகை மருந்துகளையும் உள்ளடக்கியப் பொருளில் குறிப்பிடுகிறது. மேலும், இக்காலகட்டத்தில் வசியமிடுதல் என்ற வழக்கம் உள்ளது. இதற்குக் கை மருந்திடுதல் என்று கூறுவர். ஆண்களை மயக்கப் பெண்களும், பெண்களை மயக்க ஆண்களும் இம்மருந்தினைப் பயன்படுத்துவதுண்டு. தாசிகளிடம் செல்வோர் தங்கள், மனைவி, குழந்தைகள், மனையெல்லாம் மறந்து தங்களிடமே இருக்கவேண்டும் என்பதற்காகத் தாசிகள் மருந்து வைப்பதாக நம்பப்படுகின்றது. இதனை வசிய மருந்து, மாய மருந்து என்பர்.

ஒருத்தி மருந்திட்டதனைப் பாடல் குறிப்பிடுகிறது.

'பச்சைப் புடலங்காய் பாசமும் நேசமும்

பால் கிணறும் சத்திரமும்

பாலும் விலகப் பாவி மருந்திட் ட ாளோ'

எனப் பாடலில் அறியப்படுகிறது. மேலும், தாசி மருந்திட்டதனைப் பாடல் கூறுகிறது.

'தாசி வச்ச கைமருந்து
தங்கச்சி பொந்தியிலே
தாசி மறப்பதெப்போ நீங்க
தாவி வந்து சேர்வதெப்போ'[16]

என்ற பாடலால் அறியலாம். மேலும் இம்மருந்து செய்முறையைப் பற்றிய பாடல் குறிப்பிடுகிறது.

'காடைக் கழுத்தறுத்து
கவுதாரி பித்து எடுத்து
கோழிக் குடலெடுத்து
கூட்டுறாளாம் கைமருந்து
... ... ...
சாதிக் கோழி புடிச்சி - குட்டி
சாறு எல்லா காச்சி வச்சு
நல்லெண்ணெய் கூட ஊற்றி
நடத்துறாளாம் கைமருந்து'[17]

என்ற பாடலில் காடைக்கழுத்து, கவுதாரிப்பித்து, கோழிக்குடல், இவற்றாலும், கோழிச் சாறு, நல்லெண்ணெயிலும் செய்யப்படுகிறது என்று இப்பாடல் குறிப்பிடுகின்றன.

## தாலாட்டுப் பாடல்களில் மருத்துவம்

தாய்மை உணர்வின் வெளிப்பாடாகவே தாலாட்டு

மலர்கின்றது. அத்தகைய சிறப்பு வாய்ந்த தாலாட்டுப் பாடல்களைதான் மனிதன் கேட்கும் முதற்பாட்டு எனக்கருதப்படுகிறது. தொட்டில் தான் மனிதனின் ஆரம்பப்பள்ளி, அவன் தாய் தந்தைதான் முதல் ஆசிரியர்கள் என்பர் அறிஞர். தாயின் நாவசைவில் தாலாட்டு என்னும் நன்முத்து பிறக்கிறது. எனவேதான் 'தாய்மை உலகிற்கு வழங்கிய முதல் இலக்கியப் பரிசுதான் தாலாட்டு என்பார் தமிழண்ணல். அத்தகைய தாலாட்டுப் பாடல்களில் மருத்துவச் செய்திகள் இடம்பெற்றிருப்பதைக் காணலாம்.

ஒரு தாய், தன் குழந்தையைத் தூங்க வைப்பதற்காகத் தொட்டிலில் போட்டுத் தாலாட்டுகிறாள். குழந்தைத் தூங்காமல் அழுது கொண்டிருக்கிறது. இவ்வாறு குழந்தை அழுவது, அக்குழந்தை ஒரே இடத்தில் படுத்திருப்பதால் உடல் வலியை ஏற்படுத்தலாம் அல்லது வயிற்று வலியினால் அழலாம். உடம்பு வலியாக இருந்தால் ஏலமும், இஞ்சியும் கலந்த சாற்றில் எட்டுச் சொட்டைப் பாலில் கலந்து கொடுக்கலாம். இம்மருத்துவ முறையை தாலாட்டு பாடலில் இடம் பெற்றிருக்கிறது.

'உடம்பெல்லாம் நோகுதம்மா - கண்ணே
உனக்கு ஒத்தடம் கொடுக்கட்டுமா?
ஏலமும் இஞ்சிச் சாறும் கண்ணே உனக்கு
எட்டுச் சொட்டு கொடுக்கட்டுமா?
எண்ணெயிலே ஒத்தடமும் - கண்ணே
வெந்நீரில் ஒத்தடமும்
இன்னம் வேற ஒத்தடமும் - கண்ணே
உனக்குக் கொடுக்கத் தாதி உண்டு'[60]

உடல்வலி ஏற்பட்டால் எண்ணெய், வெந்நீர், தவிடு முதலியவற்றால் ஒத்தடம் கொடுக்கும் முறை இன்றும் நடைமுறையில் காணப்படுகிறது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

வறுமையில் வளருகின்ற குழந்தைகள் ஊட்டச்சத்து குறைவான உணவுகளையே உண்டு வாழ்கிறார்கள். எனவே, தேவையான அளவு இரத்தம் இல்லாமல் குழந்தையின் கை, கால்கள் வீங்கிச் சோகை, காமாலை போன்ற நோய்கள் தோன்றுவதற்கு வாய்ப்பு ஏற்படுகின்றன. இந்நோய்களைக் கணை எண்ணெய்யால் குணப்படுத்த முடியும் என்பர். ஒரு துண்டு வசம்பையும், சிறிது மூக்கிரட்டை வேரையும் இடித்துத் தூள் செய்து ஆமணக்கெண்ணெயில் கலந்து காய்ச்சி வடிகட்டி கணை எண்ணெய் தயாரிக்கப்படுகிறது. வாரம் ஒருமுறை இவ்வெண்ணெயில் சிறிது குழந்தைகளுக்குக் கொடுக்க வேண்டும். இச்செய்தியை,

*'கைகாலு வீக்கத்துக்கு - கண்ணே உனக்கு*
*கணை எண்ணெய் வாங்கித்தாரேன்*
*மலை போல வந்தாலும் - கண்மணியே*
*பனி போல விலகிடும்மா'*[1]

என்று தாலாட்டில் இடம் பெறுகின்றது. மருத்துவச்செய்திகள் பற்றியப் பாடல்கள் சிறப்பாக அமைவன.

## தொழிற்பாடலில் மருத்துவம்

தமிழ்நாட்டில் பெரும்பாலோர் ஈடுபட்டுள்ள தொழில் உழவுத் தொழிலே ஆகும். நாட்டுப்புற மக்கள் தொழிலில் ஈடுபடும்போது வேலைச்சுமை தெரியாதிருக்கவும், வேலையின் வேகம் அதிகரிக்கவும் பல்வேறு பாடல்களை பாடுகின்றனர். இப்பாடல்கள் உழைப்பவரின் உடல்வலியினை போக்கவும் உழைக்கும் கரங்கட்கு உயிரூட்டும் மருந்தாக அமைந்துள்ளன. படகோட்டிகள் படகு ஓட்டும்போது பாடும் பாடலில் மருத்துவ செய்திகள் இடம்பெறுவதை காணலாம்.

*'சீக்குக்காரருக்கு ஏலேலோ*
*சீமைச் சாராயம் ஐலேசா*
*கொடுத்திடுவார் ஏலேலோ*
*கொய்னாத்தானாம் ஐலேசா'*[62]

என்ற பாடலில் மக்கள் காய்ச்சலால் பாதிக்கப்பட்டால் ஒயின் போன்ற மதுவையும், மலேரியாக் காய்ச்சலுக்குக் கொய்னா என்ற ஒருவகை மருந்தையும் நாட்டுப்புற மக்கள் பயன்படுத்துவதைப் பாடல் குறிப்பிடப்படுகிறது. இன்றும்கூட ஆஸ்துமா நோயினாலும், சன்னியினாலும் பாதிக்கப்பட்டப் பெண்களுக்குச் சாராயம் கொடுப்பதைப் பார்க்களாம். கர்ப்பமான பெண்களுக்கு எளியபிரசவம் 'புளித்தக்கீரை' யைக் கொடுப்பதுண்டு.

## பக்திப்பாடலில் மருத்தவம்

பக்திப் பாடல்களில் பக்தியே பொருண்மையாய் அமைகின்றது. பல்வேறு தெய்வங்களைச் சிற்றூர் மக்கள்

முதலியவை பறந்தோடும் என நம்பிக்கைவைத்து வழிபாடு செய்கின்றனர் என்பதை,

உன்பேர் நினைந்தால் பில்லிபிசாசு பறந்தோடுமம்மா

சூனியமும் வைப்பும் சூழன்றலைந் தோடுமம்மா

பாதாள வஞ்சகமும் பறந்திடும்உன் பேர்நினைந்தால்'[65]

என்ற பாடலில் குறிப்பிடப்படுகின்றன.

## விளையாட்டு பாடலில் மருத்துவம்

விளையாட்டுப் பாடல்கள் பெரும்பாலும் சிறுவர் சிறுமியர்களால் பாடப்பெறுகின்றன. விளையாட்டின் மகிழ்ச்சியும் ஆரவாரமும் எல்லோரிடமும் இருக்க வேண்டும்மென்பதற்காகவே பாடல்களும் பாடப்பெறுகீன்றன. விளையாட்டு உயிர்ப்பின் வெளிப்பாடு, அதனால்தான் பாரதியும் 'ஓடி விளையாடு பாப்பா - நீ ஓய்ந்திருக்கலாகாது பாப்பா' எனப் பாடிக் களிக்கின்றார். விளையாடாத குழந்தை நோயுள்ள குழந்தை என மருத்துவர்கள் கூறுகிறார்கள். மேலும், பெரியோர்களும் இவ்விளையாட்டில் ஈடுபடுகின்றனர். இதனால் தமிழகம் வீர விளையாட்டுக்களுக்குப் புகழ் பெற்ற நாடாகும். சிலம்பம், சடுகுடு, மல்யுத்தம், களரி போன்றவை தமிழக வீரவிளையாட்டுகளில் தலைசிறந்தவையாகும். அவற்றில் ஒன்று தட்டுக்கரம் தட்டுதலில் மருத்துவம் இடம்பெறுவதை காணலாம்.

'வலது காலெத்தினால் வலுக்குறைந்து போகுமென்று
இடது காலாலே எத்திவிட்டார் சின்னாண்டார்
முன்றரை நாழி தலையூருக் காளிமகன் மூர்ச்சையாகிப் போனானே
அய்யோ சிவனே என்று வெட்டுவர் அலறிப்புலம்பியே தான்
சுக்குப்பொடி காதினில் வைத்துத் துரிதமாக ஊதினார்கள்
மூர்ச்சை தெளிந்து தலையூருக் காளிமகன் முழித்துமே பார்த்தானே'[66]

என்ற பாடலில் மருத்துவம் பற்றி செய்தி குறிப்பிடப்படுகின்றன.

## காதல் பாடலில் மருத்துவம்

காதல் என்பது மனிதனது பருவ காலங்களின் வசந்தப் பாடல். மொட்டவிழ்ந்து மலராகும்பொழுது அவனது பருவ உணர்வுகள் மணம் பரப்புகின்றன. ஆண்டவனது படைப்புகளில் ஆண்-பெண் என்ற தத்துவத்தின் வித்தாகவும், அவற்றின் வாழ்வுக்கும் வளமைக்கும் அடிப்படை சத்தாகவும் இக்காதல் அமைவதுண்டு. அனைத்து உயிர்களிலும் இக்காதலைக் காணமுடிகின்றது. ஆதாம் ஏவாள் தொடங்கி அடுத்தாத்து அம்புஜம் வரை இக்காதலை உயிராக எண்ணி வருகின்றனர். காதலை எல்லோரையும் போலவே நாட்டுப்புற மக்களும் அனுபவிக்கிறார்கள். அக்காதல் உணர்வால் அவர்கள் தாம்பாடும் பாடல்களின்மூலம், தங்களை, தங்கள் விருப்பு வெறுப்புகளை வெளிப்படுத்திக் கொள்கிறார்கள். அவற்றுள் மருத்துவச் செய்திகளைக் கொண்ட பாடல்களும் இடம்பெறுகின்றன என்பதை,

'படுத்தா உறக்கமில்லே பாய்விரிச்சா தூக்கமில்லே
சண்டாளன் தலைமயிரை தலைக்குவச்சா தூக்கமுண்டு'[67]

என்ற பாடலில் தலைவனை பிரிந்த தலைவி காதல் நோயினால் துயர்யடைந்து உறக்கமில்லாமலும், உணவில்லாமலும் தோள்கள் மெலிவடைந்தும் காணப்படுகிறாள். இந்நோயினை போக்க தக்க மருந்து தலைவனே என்பதை,

*மறந்தாலும் மறந்திடுவேன்*
*மருந்து தின்னால் ஆறிடுவேன்*
*மறந்தே இருப்பதற்கு - சண்டாளா*
*மதி இருக்கக் கூடுதில்லை'*[68]

என்ற பாடலில் தலைவியின் நோய்க்கு மருந்து தலைவனே என சுட்டப்படுகின்றது.

## ஒப்பாரி பாடலில் மருத்துவம்

இறந்தவர்க்காக இருப்பவர்கள் பாடும் பாசமிக்க பாடல்கள் தாலாட்டில் போற்றப்படும் வருணனை - கற்பனை மீண்டும் ஒப்பாரியில் செல்வாக்குப் பெற்றுச் சிறக்கின்றன. ஒப்பாரியும், தாய்க்குலம் உலகிற்கு வழங்கிய கொடையாகும். குழந்தைக்காகத் தாயும், கணவனுக்காக மனைவியும், தாய்க்காக மகளும் அண்ணனுக்காகத் தங்கையும் வைக்கும் ஒப்பாரிப் பாடல்கள் பல சிறப்பு வாய்ந்ததாக இன்றும் தமிழகத்தில் உள்ளன. அவற்றுள் மருத்துவ செய்தகிளை கொண்ட பாடல்களும் பல காணப்படுகின்றன.

செயற்கை கருக்கலைத்தல் இக்காலத்தில் சட்டப்படி தவறில்லை என்று ஆகிவிட்டது. ஆனால் இந்த எண்ணமும் செயலும் முன்பே இருந்திருக்கின்றன என்பதை நாட்டுப்புற

மக்கள் தம் பாடலின்வழி வெளிப்படுத்தியுள்ளனர் என்பதை,

'கருக மணிபோல - பாவி வயித்திலே
கருத்தரிக்கும நாளையில
கடையில சரக்கெடுத்து
கடத்திவிட மாட்டாம
கண்ணகியா பொன் பொறந்து
கஷ்டத்துக்கு ஆளானேன்'[69]

என்ற பாடலில் சுட்டப்படுகின்றன. மேலும், தாய் இறந்த போது, புகுந்த வீட்டின் கொடுமைக்கு ஆளான பெண்ணொருத்தி பாடும் பாடலில் கருக்கலைத்தலை பற்றிக் குறிப்பிடப்படுகின்றது.

'உடையானன் ஒரு சரக்கு ஒருபமைத்து மேஞ்சரக்கு
என்னைபெத்த அம்மா நீ
ஒரைச்சி குடிச்சிருந்தா - நான் - உருவழிஞ்சி
போயிருப்பேன்'[70]

என பாடலில் வெளிப்படுத்தியுள்ளனர். மேலும், நாட்டுப்புறங்களில் மருந்து இடுதல், மருந்து போடுதல், மருந்து வைத்தல் ஆகியவை காணப்படுகின்றன. ஒருவரை நிலையாக நினைக்க வைக்க மறக்கவைக்க என்ல மருந்துகள் நினையூட்டப்படுகின்றன என்பதை,

'மாபாவி காலன் - மகனை மறப்பதற்கு
மருந்து கொண்டு வந்தானோ
பிள்ளை மறப்பதற்கு
பெருமருந்து போட்டானோ'[71]

என தாயின் ஒப்பாரியில் மருந்து வைக்கும் முறையினை வெளிப்படுத்தியுள்ளதைக் காண முடிகிறது.

## இயற்கை மருத்துவம்

நோய்வருவதற்கு முன்பே அது வராமல் காத்துக் கொள்ளக் கூடிய அறிவு நாட்டுப்புற மக்களுக்கு இருந்தது என்பதனைப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. மக்கள் கைக்கொள்ளும் பழக்கங்களான உணவு, நீராடுதல் இவற்றில் மருத்துவ முறைகள் காணப்படுகின்றன.

எண்ணெய்க்குளியல் உடற்சூட்டைத் தணிக்கவும், கண்ணெரிச்சல், வயிற்றுவலி நீங்கவும், மேனியழகினை மேம்படுத்தவும், நல்ல உறக்கத்தினை மேற்கொள்வது இன்றியமையாதது என நம்பப்படுகின்றது. தாலாட்டுப் பாடல்களில் எண்ணெய்க் குளியல் சிறப்பாகக் கூறப்பட்டுள்ளன. தாய்மாமன் எண்ணெய்க்குச் சீட்டெழுதி விட்டதனைப் பாடல் குறிப்பிடுகின்றன.

'காஞ்சி வரத்தெண்ணெய் - கண்ணே
கண்ணோ அரிக்குதின்னு
தெங்காஞ்சி எண்ணெய்க்கு - என் ஐயா
சீட்டெழுதி விட்டாக'[71]

மேலும், நல்லெண்ணெயுடன், பிறமணப்பொருட்களும் தேய்த்துக் குளிப்பதனைப் பாடல்கள் குறிப்பிடுவதை காணலாம்.

'கொத்தோட சீயக்காயோ - மீனாளுக்கு
கொடத்தோட நல்லெண்ணெ
அள்ளிக் குளிப்பாளோ - மீனா
அத்தனையும் பூமணக்க'[72]

என்று நாட்டுப்புறப் பாடல் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் எண்ணெய் தேய்த்து நீராடுதல் உடலுக்குக் குளிர்ச்சியூட்டும்

என்பதனைப் பாடல்கள் காட்டுகின்றன என்பதை,

'ஈஸ்வரியா உள்ளறுதி
எண்ணைக் குளிச்சியூட்டும்
ஏலக்கா வாசமூட்டும்'[11]

மாம்பழம், கரும்பு, வெல்லம், எள் உடலின் சூட்டைத் தணிக்கும் என்றும் பால், தயிர், வெண்ணெய் போன்றவை குளிர்ச்சியை ஏற்படுத்தும் என்றும் நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர். எனவே, எண்ணெய்க் குளியல் கண்ணுக்கும் உடலுக்கும் குளிர்ச்சி தந்து நல்ல உறக்கம், மேனி பளபளப்பு அளித்துச் சூட்டின் காரணமாக ஏற்படும் வயிற்றுவலி, சளி முதலியவற்றைத் தடுக்கவல்லது என்று நம்புகின்றனர்.

உணவு முறைகளிலும் சுகாதாரம் கடைப்பிடிக்கப்படுகின்றது. பட்டினியிருந்து பின் உண்ணல், வயிற்றைத் தூய்மை செய்யவும், புலனடக்கத்திற்காகவும் சினம் போன்ற வேண்டா உணர்ச்சிகளை அடக்கவும் பயன்படும். புரதச்சத்து அதிகம் இல்லாத வகையில் அகத்திக்கீரையும், நெல்லிக்காய்ப் பச்சடியும், சுண்டக்காய்வற்றல் குழம்பும், பாசிப்பருப்பும் உண்பதால் வயிற்றில் காற்றினால் ஏற்படும் தொல்லைகளும் துன்பங்களும் குறையும் என்பதனை ஏகாதசிவிரதம் உணர்த்துகிறது. இந்த ஏகாதசியன்று சுருக்கம் கண்டிருக்கும் வயிற்றுக்குத் துன்பம் ஏற்படா வண்ணம் பத்திய உணவு உண்ணல் பழக்கமாக உள்ளது என்பதைப் பாடல் குறிப்பிடுவதை அறியலாம்.

சரவணம் ஒரு த்வாதசி - நாங்கள்
சமைக்க மாட்டோமோ

அற்பம் ஒரு த்வாதசி - நாங்கள்
ஆக்கிட மாட்டோமோ
... .... ... ..
ஆத்தி வதக்கிலயோ - நான்
அரிநெல்லிக் காய் சமக்கலியோ
சுண்ட வத்தக் குழம்பு
சுண்டப் பண்ணி வக்கலியோ
பாசிப் பருப்பு உனக்குப்
பாங்காய்ச் சமைக்கலியோ'[74]

என்ற பாடலின் மூலம் அறியலாம். நாட்டுப்புற மக்கள் வாழ்வில் மிக்க ஈடுபாடு கொண்டவர்கள். அதேபோல் தங்களைத்தாங்களே ஆட்கியாள வேண்டும் என இயற்கை மருத்துவத்தில் நம்பிக்கை கொண்டவர்கள் எனலாம். உண்ணத் தொடங்கியதும் வயிறு இயற்கையான நிலையை அடைந்த பிறகு அடுத்து வரும் நாட்களில் சத்துள்ள உணவை உண்டனர் என்பதை,

'பூக்க உளுந்தரச்சி பூப்போல தோச வாத்து - உனக்கு
கருக்கப் பொடி பொடிச்சு காரமது போல வச்சி
சுக்குப் பொடி பொடிச்சு தொன்ன வச்சு நெய்வார்த்து
பசிச்சுவரும் போது உனக்குப் பலகாரம் வைக்கலியோ[75]

என்று பாடல் குறிப்பிடுகின்றது. மேலும் உணவு சிறந்ததும், பிணி போக்குவதுமாக சிறந்த அரிசியைத் தேர்ந்து சமைத்து உண்டனர். உணவுக்கு ஆகும் அரிசியைத் தனியாகப் பிரித்திருக்கின்றனர் எனத் தெரியவருகிறது என்பதை,

பலினூறுச் சம்பா வாங்கி
பாங்கா வடிச்செறக்கி
சீரகச் சம்பா சீக்குப் பிணி ஆகுமின்னு
அரும்பரும்பா ஆக்கி வச்சி'[76]

என்று நாட்டுப்புறப் பாடல் சுட்டுகின்றன. மேலும், வாழையிலையில் உண்ணலைச் சிறந்ததெனக் கருதி

வந்துள்ளனர் என்பதை,

'தலவாழை எல விரிச்சு
சாதம் படச்சு வச்சி'[77]

என்ற பாடல் குறிப்பிடுகின்றன. மேலும் உணவு சூடாக சுவையாக இருக்கவேண்டும் என்று விரும்பும் விழைவையும் உணர்த்துவதாக வெங்கலப்பானையில் சமைக்கும் வழக்கம் தெரிவிக்கிறது. வெங்கலம் கனமான உலோகம் அதில் சோறு வெகுநேரம் சூடாக இருக்கும், சூடான பொருளை ஈ, எறும்பு போன்றவை சுவைக்கமாட்டாது ஆதலின் அது சுத்தமாக இருக்கும். எனவே, சுவை, உடல்நலம் ஆகிய இரண்டின் அடிப்படையில் அமைந்தது. வெங்கலப்பானைச் சமையலாகும் சிறந்தது என்பதை,

'வெங்கலப் பானையில் - நல்ல
வெந்தசோறு திங்கலியோ - உனக்கு
வேகாத சோறு தந்து வேகவைச்சாங்களோ'[78]

என்ற பாடல் குறிப்பிடுகின்றன.

## மூலிகை மருத்துவம்

இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழும் நாட்டுப்புற மக்கள் தங்களுக்கு ஏற்படும் நோய்களைப் போக்கிக்கொள்ள, அதற்கான மருந்து தங்களைச் சுற்றி இயற்கையில் கிடைக்கக்கூடிய மரம், செடி, கொடி, இலை, போன்ற மூலிகைகளை பயன்படுத்தி மருத்துவம் செய்தனர். இம்மருத்துவ முறையினை மூலிகை மருத்துவம் என அழைக்கப்பர். இம்மருத்துவத்தில்

மூலிகைகளுக்கு மட்டுமேமுக்கியத்துவம் அளிக்கப்படுகின்றது. இம்மருத்து வத்தினை நாட்டுப்புற மக்கள் பெரிதும் நம்பினர்.

வேம்பு தீய சக்திகள் எதுவும் குழந்தையை அனுகிடக்கூடாது என்பதற்காக வேப்பம் மரத்தைச் சுற்றுதல் நடைபெறும். குழந்தைக்கு ஏழு அல்லது ஒன்பதாம் நாள் காப்பிடும் சடங்கில் ஐம்பொன்காப்புடன் வேப்பிலைக் காப்பும் சூட்டப்படும். நோய் வராது காத்தல் நோக்கமாகவே இக்காப்பு அணிந்திருக்கலாம் என்பதை,

'வேப்பிலையும் காப்புமாய்
விசும்பியெறி கண்ணார்க்கு'[79]

என்ற பாடல் குறிப்பிடப்படுகின்றன. மேலும் வேப்பிலையும் வேம்பின் பிற பாகங்கள் பலநோய்களைக் குணப்படுத்துகின்றன. வேம்பும் அரசும் கலந்து நிலையில் அதனடியில் அமர்ந்த வினாயகனையும் சேர்த்து வலம் வந்தால் குழந்தை பேறு கிட்டும் என்று நம்புகின்றனர் என்பதை,

'வேம்பரைச் சுத்தி விநாயகனைத் தெண்டனிட்டு
சாம்பசிவன் பூசை பண்ணித் தரணியாள வந்த கண்'[8]

என்று நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுகின்றன. அரசமரம் மலட்டுத்தன்மையைப் போக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் அமந்ததே இப்பழக்கமாக இருக்கலாம்.

குழந்தை பிறந்தவுடனேயே, அக்குழந்தையை ஏதாவது நோய்கள் தாக்கும் என்பதால், அதனை தடுப்பதற்காக வேப்பிலையைப் பிடியாகச் சேர்த்துக்கட்டி வீட்டின்

வாயிற்படிக்கு நேராகக் கூரையில் செருகினால் தலைவாசல் வழியாக எந்த நோயும் வீட்டினுள் வராது என்று நாட்டுப்புற மக்கள் தம் பாடலின் மூலம் குறிப்பிடுவதை அறியலாம்.

*'கட்டி வைச்சோம் தெய்வத்துக்கு*
*பெருநோய் வருமென்று*
*பிடிச்சி வச்சோம் வேப்பிலையை'*[81]

என்ற பாடலில் உணர்த்தப்படுகிறார்கள். துளசி 'ஹரிப்ரியா' என்றும் பெயர் பெற்றுத் திருமாலின் மனைவியாகவே கருதப்படுகின்றது. இது நுரையீரல், மூச்சுக்குழாய் ஆகியவற்றிற்கு நன்மை செய்யவல்லது. இது சளி, காய்ச்சல், இருமலினால் வரும் நோய்க்காக கைகண்ட மருந்தாகும். துளசி காசநோயைத் தீர்க்கும் வல்லமை பெற்றுள்ளது. துளசியைப் பற்றி நாட்டுப்புறப்பாடல்கள் குறிப்பிடுகின்றன என்பதை,

*'ஒசந்த தொளசின்னு ஒரு கரையோ நீட்டு வச்சோம்*
*ஒரு சாமப் பூசக்குமே - நான்*
*ஒசந்து வந்து சேரலியே'*[82]

என்ற பாடலில் குறிப்பிடப்படுகின்றன. மேலும் துளசியை தெய்வமாகப் போற்றப்பட்டதனையும் பாடல் கூட்டுகின்றன.

*'தொண்ணூறு பூவெடுத்து*
*தொளசிமடம் கட்டி வச்சோம்'*[83]

என்று நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுகின்றன. அல்லி முளையும், முல்லை முளையும் தின்று ஐம்பது நாள் தவமிருந்து குழந்தைப்பேறு பெற்றதாக நாட்டுப்புறப்பாடல் கூறுகிறதை அறியலாம்.

*'அல்லி மொளதின்னு*
*அம்பதுநாள் தவமிருந்து*

முல்லை மொளதின்னு
முப்பதுநாள் தவமிருந்து'[84]

அல்லி, வெள்ளல்லி, செவ்வல்லி, கருநெல்லி எனப் பல வகைப்படும். இவை கருவுற்றிருக்கும் பெண்களுக்கு மருந்தாகப் பயன்படுத்தப்படுவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

பூண்டுகளில் வெள்ளைப்பூண்டு மிக முக்கிய மருந்துப்பொருட்களாக நாட்டுப்புற மருத்துவத்தில் காணப்படுகின்றது. இது வாயுப்பிடிப்புக்கு மிகச் சிறந்த மருந்தாகும். கருவுற்ற பெண்களுக்குப் பூண்டை உரித்துப் பாலில் வேகவைத்து, சர்க்கரை, ஏலப்பொடி, நெய் கலந்து கொடுப்பர். தாய்க்கும் கருவில் உள்ள குழந்தைக்கும் பெரும்பலம் அளிக்கும் என்பர். தன் மகளுக்குச் செய்த பூண்டு மருந்தினைப் பற்றித் தாயொருத்தி பாடலாக கூறுகிறாள் என்பதை,

'பூமியிலே மொளச்சதொரு
பூடுவகைதான் பிடுங்கி'[85]

என்ற நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுகின்றன. தும்பையிலைச் சாறு 'ஆத்திசுரம்' என்ற குளிர் நடுக்க நோய்க்கும், வயிற்றுப் போக்குக்கும் மருந்தாகிறது. தும்பையிலை வைத்தியமும் துளசி இலை வைத்தியமும் நாட்டுப்புறப் பாடலில் குறிப்பிடுகின்றன.

'துளசி தண்ணி தெளிச்சி
தும்பைப்பூ சாறு குடிச்சு
மகிழம்பூ பந்தலிலே - நான்
மடியிலே படுத்திருந்தா - மாமா என்
குளூறுசொரம் நீ போக்க வாவா'[86]

என்ற பாடலில் வெளிப்படுத்தியுள்ளனர். மேலும், உயர்ந்த தும்பையினைத் தான் நட்டு வளர்த்ததைப் பெண்ணொருத்தி ஒப்பாரியில் பாடுகிறாள்.

'ஒசந்த தும்பையின்னு ஒருகரையோ நட்டு வச்சேன்
ஒருசாமப் பூசைக்குமே - நான்
ஒசந்து வந்து சேரலியே'[87]

என்ற பாடலில் தும்பையின் முக்கியத்துவத்தை குறிப்பிடுகின்றன. மேலும்,

'தும்பையிலை பூத்து சூரியர்க்கும் பொன்னொறந்தேன்
தும்பையழும் சத்தம் - நீங்க
சூரியரும் கேக்கலியே'[88]

என்று பாடல்களின் மூலம் அறியலாம்.

இஞ்சி நாட்டுப்புற மருத்துவத்தில் சிறந்த மருந்தாக பயன்படுத்தப்பட்டு வருகின்றன. பித்தவாந்தி, மயக்கம் ஆகிய பித்தத்தோடு தொடர்புள்ள நோய்கள் அனைத்திற்கும் இஞ்சி மிகச் சிறந்த மருந்தாகும். இஞ்சிச்சாற்றில் எலுமிச்சம் பழம் பிழிந்து, சீனியும், தேனும் கலந்து காலையில் வெறும் வயிற்றில் குடித்தால் பல நோய் குணமாகும் என்பர். இஞ்சியைப் பற்றிப் பாடல்கள் சுட்டுகின்றன.

'காலம்பற கட தொறந்து
காப்பலம் இஞ்சி வாங்கி
இடிச்சி சாரெடுத்து
இஞ்சிதான் தட்டுங்களேன்
இருமலைப் போக்குங்களேன்
அந்தி நேரம் கட தொறந்து
அரச்சேரு இஞ்சி வாங்கி
வைத்தியரு வந்திட்டாரு
அரைச்சி சாரெடுத்து, அலசல போக்குங்களேன்'[89]

என்ற பாடலில் இஞ்சியின் மருத்துவகுணத்தை வெளிப்படுத்தியுள்ளனர். கொழுந்து செடிகளிலும் இலைகளிலும் மருத்துவகுணம் காணப்படுகின்றது. சமைத்த நிலையிலும், சமைக்காத நிலையிலும் அவற்றின் இலைகள் பசியுணர்வை ஏற்படுத்த வல்லனவாக இருப்பதோடு, நாட்டுப்புற மருந்தின் அடிப்படையான பல நல்ல சத்துக்கள் அடங்கியவையாகவும் இருக்கின்றன என்பர் டாக்டர் கொர்லில். பல செடிகளின் கொழுந்திலைகளைப் பறித்து இடித்து மருந்தாக்கிப் பெரிய நோய்கட்குக் கொடுப்பதனை நாட்டுப்புறத்தில் காணலாம். கொழுந்திடித்தலைப் பற்றி நாட்டுப்புறப் பாடல் குறிப்பிடுவதை அறியலாம்.

'கோட்டைத் தலை வாசல்ல
கொழுந்திடிக்கும் மாளிகையாம்
கொழுந்தை இடிப்பியளோ
கோதை வந்தா சேம்பியளோ'[90]

என்று பாடலில் குறிப்பிடுகின்றன. குழந்தையின் வயிற்றுப்போக்குக்கு வசம்பினைச் சுட்டுதேனில் குழைத்துக் கொடுப்பதை நாட்டுப்புறப் பாடலில் காணமுடிகின்றது.

'செம்பொன் மேனிப் பாலாடைக்குத்
தேனமிர்தம் கொண்டாந்து'[91]

என்ற பாடலில் வெளிப்படுத்தியுள்ளனர். உலர்த்தப்பட்ட நிலையில் சில மருந்து மூலிகைகள் மருந்தாகப் பயன்படுத்தப்பட்டதனைப் பாடல்கள் சுட்டுகின்றன.

நாட்டுப்புறப்பாடல்களில் 'கடைமருந்து' என்று கூட்டப்படும் பொருளில் ஏறக்குறைய இருபதுபொருட்கள் இருக்கும். இவையனைத்தும் உலர்த்தப்பட்டவையாகும். இதில் சுக்கு, சித்தரத்தை, சதகுப்பை, வாயுவிளங்கம், திப்பிலி, வசம்பு, அதிமதுரம், மிளகு போன்றவும் பிறவும் அடங்கும். தெய்வத்துணை இருப்பின் கடை மருந்து தேவையில்லை என்று மக்கள் நம்புவதையும் பாடல் குறிப்பிடுகிறது.

'கந்தையா உன் காவல் - என் கண்மணியே
  கடைமருந்து நானறியேன்
வேலையா உன்காவல் - என்கண்மணியே
  வேறுபிணி அண்டாமல்'[2]

என்ற பாடலில் குறிப்பிடுகின்றனர். குழந்தைக்கு மட்டுமின்றிப் பிரசவித்த தாய்மார்களுக்கும் இரண்டு மாதங்கள்வரை கடைமருந்துகள் அனைத்தையும் வறுத்து இடித்து வஸ்திரகாயம் செய்து அப்பொடியைத் தேன், நெய், வெல்லம் போன்ற ஏதாவதொன்றில் கலந்து லேகியமாக்கிக் காலை நேரத்தில் ஒரு உருண்டை உண்டால் பசி எடுக்கும் என மக்கள் நம்பி, அவ்வாறே செய்கின்றனர். இடி மருந்து, இடிகாயம், பொடிமருந்து என்றெல்லாம் பாடல்களில் கூட்டப்படுகின்றன. தாய்மார்களிடமிருந்து மருந்துப் பொருட்கள் பெற்றதனைப் பாடலில் காணலாம்.

*'சிறுமிளகும் சீரகமும் சீதவெந்தயம்போ(ன்)*
*சீரிடும் தாயைச் சீமைக்கனுப்பியாச்சே*
*வால்மிளகும் சீரகமும் வரிசை வெந்தயம்போ(ன்)*
*வரிசையிடுதாயை வளர்த்துக்கனுப்பியாச்சே'*[3]

என்று பாடலில் குறிப்பிடுகின்றன. மேலும் கழுத்து பிடரி வலிக்குப் பொடி மருந்து பயன்படுத்தப் பட்டதனைப் பாடல்கள் சுட்டுகின்றன.

'பொடனி வலிக்குதுன்னா - எனக்கு
... ... ...
பொடனிக்கு ஒத்த
பொடி மருந்தும் கூடவரும்'[94]

என்று நாட்டுப்புறப் பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளனர். செயற்கைக் கருச்சிதைவு இக்காலத்தில் சட்டப்படி தவறில்லையென்றாகிவிட்டது. ஆனால் இந்த எண்ணம் முன்னரே மக்களிடம் இருந்தது என்பதனை பாடல் உணர்த்துகின்றன.

'கருகமணிபோல - பாவி வயித்தில
கருத்தரிக்கும் நாளையில்
கடையில் சரக்கெடுத்து
கடத்தி விட மாட்டாம
கண்ணாகியா பொன் பொறந்து
கஷ்டத்துக்கு ஆளானேன்'[95]

என்று பாடல்களில் வெளிப்படுத்தியுள்ளனர்.

## ஆங்கில மருத்துவம்

ஆங்கில மருத்துவத்தின் அடிப்படைப்பொருளான சுரமானியாகிய 'தர்மாமீட்டரும், ஊசியும், எக்ஸ்ரேயும் சுட்டப்படுகின்றன. சீமை வைத்தியர், டாக்டர் என்பன ஆங்கில மருத்துவரைக் குறிக்கும். சுரமானி கொண்டு சுரம் அறிந்து ஊசி போட்டதனைப் பாடல் குறிப்பிடுகின்றன.

'சின்ன மதுரையில் சிறுமருதைப் பேட்டையில
சின்ன பிசிரி வச்சு சீக்கறிஞ்சு - ஊசிபோட

திராத நோய்வுண்டு - கொலைகாரன் சீமையில
திருப்படவிட்டான் காயிதத்த"[96]

என்று நாட்டுப்புறப்பாடல் உணர்த்தப்படுகின்றன. மேலும், டாக்டர் உடம்மை பல சோதித்து ஊசி போட்டதனைப் பற்றி நாட்டுப்புற தொழில்பாடலில் குறிப்பிடப்படுகின்றன.

ஆவடி டாக்டரு அருமையாத் தான்பேசி
உடம்பெல்லாம் பாக்கணுமின்னு
திரையெல்லாம் இழுத்து உடம்பெல்லாம் சோதிச்சு
அனுப்பினார் கப்பலுக்கு
மாலைபோட்டு மாட்டைப் பொங்கலவைச் சாப்போல
ஆளையெல் லாம்கூப்பிட்டு
ஆளுக் கொருஊசி அருமையாத் தான் ஏத்தி
அடுக்கினான் கப்பலுக்கு"[97]

என்று பாடலின் மூலம் வெளிப்படுத்தியுள்ளனர். மக்கள் இப்போதுள்ள அறிவியல் மருத்துவத்தினையும் அறிந்துள்ளனர் என்பதை எக்ஸ்ரே பற்றிக்கூறும் பாடல் மூலம் அறியலாம்.

'பங்குனி மாத்தையிலே
படம் புடிச்சுப் பாக்கையிலே
படத்துக்கு அமையாதின்னான்
பாடைக்கு அமையுமின்னான்'"[98]

என்று நாட்டுப்புறப்பாடலில் வெளிப்படுத்தியுள்ளனர். நாட்டுப்புற மக்கள் நாட்டுப்புற மருத்துவம் மட்டுமின்றி ஆங்கில மருத்துவத்தையும் கையாண்டனர் என்பதைப் பாடல்கள் சுட்டுகின்றன. அறிவியல் வளர்ச்சியின் காரணமாக டாக்டரை நாடி ஆங்கில மருத்துவத்தையும் ஆங்கில வைத்திய முறையையும் மேற்கொள்கின்றனர் எனப் பாடல்கள் மூலம் அறியமுடிகிறது.

## நம்பிக்கை மருத்துவம்

ஒரு சமுதாயத்தில் பின்பற்றப்படும் நம்பிக்கைகள் அச்சமுதாயத்தின் பண்பாட்டினை வெளிப்படுத்த நம்பிக்கைகள் துணை செய்கின்றன. நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு அம்மக்கள் சமுதாயத்தால் பாதுகாக்கப்படுகின்றன. நம்பிக்கைகள் அச்ச உணர்வின் அடிப்படையாகத் தோன்றியதாகக் காட்சியளித்தாலும் இயற்கைக்கு அப்பாற்பட்ட செயல்களை உணராத பொழுதும், மனிதவாழ்வில் ஏற்படும் சில நிகழ்ச்சிகளுக்குக் காரணம் கற்பிக்க இயலாதபோதும் மனித மனமானது சிவற்றைப் படைத்துக் காரணம் கற்பிக்கக் கொள்கின்றது. அவைகளே நம்பிக்கைகளாக உருவாகின்றன.[99] நாட்டுப்புற இக்கியங்கள் நம்பிக்கைகளின் கொள்கலமாக விளங்குகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை பலவித நம்பிக்கைகளை மக்கள் கொண்டிருக்கக் காணலாம். நம்பிக்கைகளே மனித வாழ்வினை இயக்குகின்றன என்று கூறுமளவிற்கு அவை வாழ்வில் பெரும்பங்கு வகிப்பதையும் காணலாம். நம்பிக்கைகளுக்கு காரணம் காணமுடியா விட்டாலும் மனித சமுதாயம் நம்பிக்கைவயப்பட்டுச் செயற்படுவதைக் காணமுடிகிறது. எனவே நாட்டுப்புற மக்கள் தம் வாழ்வில் கொண்டுள்ள நம்பிக்கைகள் எண்ணற்றவையாகும். அவற்றுள் மருத்துவம் தொடர்பான நம்பிக்கைகள் நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுவதை ஆராயப்படுகிறது.

## இறைவழிபாடு செய்தல்

இறைவனை வழிபட்டால் நோயில்லாமல் வாழலாம் என்ற நம்பிக்கை நாட்டுப்புற மக்களிடம் காணப்படுகின்றன என்பதை,

'ஒத்தப்பனிக் குள்ளிருக்கும்
உறுதியுள்ள கோட்டையய்யாவே
வயித்துவலி தீத்துவிடு - நான்
வந்திடுவேன் உன் சந்நதிக்கே'[100]

என்ற நாட்டுப்புறப்பாடலில் வயிற்றுவலியினை நீக்க கோட்டைய்யா தெய்வத்திடம் வழிபாடு செய்தலை குறிப்பிடுகிறது. மேலும், நாட்டுப்புற மக்கள் கோயிலுக்குச் சென்று வழிபடும்போது, வழிபாட்டின் நினைவாகவும், உடல்நிலை பாதிக்கப்பட்ட போது இறைவனை வேண்டியும் திருநீறு குங்குமம்(சிவப்பு) துளசி, மந்திரித்த கயிறுகள், தீர்த்தங்கள் ஆகியவற்றைப் புனிதப் பொருளாகக் கொள்கின்றனர். குழந்தைக்கு உடல்நிலை சரியில்லாதபோது பூசாரி திருநீறால் தீர்த்துவிடும் என்று சொல்லி தாயிடம் திருநீறு கொடுத்ததை,

'திருப்பரந்தார் பூசாரி
திருநீறால் திருமின்னான்'[101]

என்ற பாடல் குறிப்பிடுகின்றது. சகோதரன் இறந்தபோது அவனின் பெருமைகளைக் கூறி அழும்போது சகோதரி தனக்கு ஏதேனும் உடல்நோகுதென்று சொன்ன உடனேயே சகோதரன் காமாட்சி தீர்த்தத்தையும், மீனாட்சித் தீர்த்தத்தையும் கொண்டு வந்து குணப்படுத்துவான் என்பதை,

'காலவலிக்கு தின்னு

கட்டிலே போய்சாஞ்சா
காமாட்சி தீர்த்தம்வரும்
மேல வலிக்குதின்னு
மெத்தையில் போய்சாஞ்சா
மீனாட்சி தீர்த்தம்வரும்'[102]

என்ற பாடல் சுட்டப்படுகின்றன. எனவே, நாட்டுப்புற மக்கள் திருநீறு, தீர்த்தத்தை புனிதப் பொருளாகவும், நோயினை போக்க மருந்துபொருளாகவும் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

## கண்ணேறு கழித்தல்

கண்ணேறு கழித்தால் உடல்நிலை சரியாகிவிடும் என்ற நம்பிக்கை நாட்டுப்புற மக்களிடத்தில் உள்ளது. இவை இருமுறைகளில் கண்ணேறு கழிக்கின்றனர். அவை தட்டி சுற்றல், ஆரத்தி எடுத்தல் ஆகியனவாகும்.

மூன்று விடுகளில் இருந்து கூரையைப் பிய்த்து, முச்சந்தி மண்எடுத்து, ஒற்றைப்படை எண்ணில் மிளகாய் எடுத்துச் சிறிது உப்பும் கடுகும் சேர்த்துக் கையில் வைத்துக்கொண்டு கண்ணேறுபட்டவர்களை அமரவைத்து மூன்று முறை மேனியில் தடவுவர். தலையை மும்முறை சுற்றித் திட்டி கழிப்பதை ஒரு பாடல் விளக்குகிறது.

உத்தாரு கண்ணு, பெத்தாரு கண்ணு
ஊராது கண்ணு, பேராரு கண்ணு
கொல்லிக் கண்ணு, கோணக் கண்ணு
நாய்க்கண்ணு, பேய்க்கண்ணு
ஆட்டுக் கண்ணு, மாட்டுக் கண்ணு

உப்போட சுத்தி அடுப்புல பே '[103]

என்ற பாடல் குறிப்பிடுகின்றன. மேலும், சிலருடைய கண்பார்வையே பிறருக்குத் தீங்கு விளைவிக்கும் என்று நம்புகின்றனர். தாய் தன் அழகான குழந்தைக்குக் கன்னத்தில் கருப்புப் பொட்டு வைப்பது பிறர் கண்படாமல் இருப்பதற்கே. சிலரின் கண்பட்டுக் குழந்தை உடல் நலக்குறைவடைவதுண்டு. இதற்குக் கண்ணேறு கழிப்பார். இதனை நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுவதை அறியலாம்.

'கண்ணான கண்ணனுக்கு
கண்ணேறு வராம
சுண்ணாம்பு மஞ்சளுமா
சுற்றியெறி கண்ணனுக்கு'[104]

## சீர் அண்டுதல்

குழந்தை பிறந்த வீட்டுக்குக் கருக்கலைந்து தூய்மையில்லாத பெண்களும், கணவனுடன் உடலுறவு கொண்ட பின் குளிக்காமல் இருக்கும் பெண்களும் வருவார்களே ஆயின் பிள்ளைக்கு 'சீர் அண்டும்' என்று நம்பினர். இதனை தலையில் விழும்குழி, பால் வாந்தி எடுத்தல், வயிற்றுப்போக்கினாலும் அறிவர். இதனை நாட்டுப்புறத்தில் சீர்தட்டுதல் என்பர். இதற்கு மந்திரித்தல் சரியாகும் என்று நம்புகின்றனர்.

### பச்சை குத்துவதில் மருத்து நம்பிக்கை

பாதுகாப்புணர்ச்சியைத் தரும் என்பதற்காகப் பச்சை குத்தப்படுகிறது. பிணிகளை வரவிடாமல் தடுக்கும் வலிமை பச்சைக்குத்துவதால் ஏற்படுகிறதென நாட்டுப்புறத்தார் நம்புகின்றனர். பச்சை குத்தி கொண்டால் உடல்வலி நீங்கும், பித்தத்தைப் போக்கும், தோல் வியாதியை குணமாக்கும், காலில் நீர் இருந்தால் முழங்காலில் பச்சை குத்திக்கொண்டால் நீரினால் ஏற்படுகின்ற தொல்லைகள் தொலையும் வாதத்தைக் குணமாக்கும், நெற்றிப் பொட்டில் பச்சை குத்திக்கொண்டால் தீராத தலைவலியும் தீரும், பிடரி வலிக்குப் பிடரியில் பச்சை குத்திக் கொண்டால் அது நீங்கும். மூளை பாதிப்பு, நரம்புத்தளர்ச்சி போன்றவை குணமாகும் என்பதை நாட்டுப்புறப் பாடலொன்று வெளிப்படுத்துவதைக் காணமுடிகின்றது.

எனுக்கு நெத்தில பச்சகுத்தி -எம்மா
எனுக்கு நீலான்னு பேரு வெச்சி
இந்த நீலா உதிக்கும் கண்ணீர்
ஒரு நீலி தோட்டம் பாயுதம்மா
எனக்கு கன்னத்தில் பச்ச குத்தி
எனக்கு கமலான்னு பேருவெச்சி
இந்த கமலா உதிக்கும் கண்ணீர்
ஒரு கரும்புத் தோட்டம் பாயுதம்மா'[105]

என்று குறிப்பிடப்படுகின்றது.

### மந்திர மருத்துவம்

மந்திரித்தல் என்பது நோய் நீங்கும் பொருட்டு என்பது

நாட்டுப்புற மக்களின் நம்பிக்கை ஆகும். அதே எண்ணத்துடன் முழுமையான நம்பிக்கை கொண்டு உள்ளம் உருகிப் புலம்பும் ஒருவகை வேண்டுதலாகவும் கருதப்படுகிறது என்பதை,

நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப'[106]

என்ற நூற்பாவில் மந்திரம் பிறர் புரியாதவாறு இறைவனை வணங்கும் செயலாகும். இரகசியமாகக் கூறும் மறைமொழியே மந்திரம் எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. இம்மருத்துவ முறையினை நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுவதை காணலாம்.

மகனை இழந்த தாய் அம்மகன் நோய் வாய்ப்பட்டுக் கிடந்தபோது அவனைக் குணப்படுத்துவதற்காக தான் மேற்கொண்ட பல்வேறு செயல்களையும் கூறி அழுகின்றபோது,

'மாயாரத்து மாந்திரிகன்
மந்திரத்தால் தீருமின்னான்'[107]

என்று நாட்டுப்புறப்பாடலில் குறிப்பிடுகின்றாள். இது வட்டார நாட்டுப்புற மக்கள் மந்திரத்தின் மீதுகொண்டுள்ள நம்பிக்கையைக் காட்டுகிறது. இன்றும் நாட்டுப்புற மக்களிடத்தில் ஏதேனும் நோய் ஏற்பட்டால், அதற்கு மந்திரிப்பதும், மந்திரக்கயிறு அணிந்து கொள்வதும், மந்திரம் செய்த திருநீற்றைப் பத்திரமாக வைத்துக் கொண்டு வாயில் போட்டுக்கொள்வதும், பூசிக்கொள்வதும், பெண்களுக்கு உடல் பாதிக்கப்பட்டால் பேயாட்டுபவர்களை அழைத்து மந்திரம் செய்வதும் வழக்கில் காணமுடிகிறது. இம்மருத்துவத்துடன் தொடர்புடையதாக அமைவது பில்லி சூனியம் ஆகும். இதனை

விளக்குவதாக நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுவதைக் காணலாம்.

'ஆண்டியும் வந்தானே அரகரா இண்டானே
ஆண்டிக்கைத் திருநீறு அறியாம வாங்குனேனே
அறியாம வாங்கி அனேகசனம் சேதமில்லை'[108]

என்ற பாடலில் அறியாதவர்களிடம் திருநீறு, குங்குமம் போன்ற பொருட்களைப் பெற்றுக் கொள்ளக்கூடாது என்றும் அவர்கள் மந்திரித்து வைத்திருக்கக் கூடும் என்றும் நம்புகின்றனர். அப்பொருட்களைப் பெற்றுக்கொள்வோர் தீய பலனடைந்து நோய்வாய்பட்டு இறக்க நேரிடும் என்றும் குடும்பத்திற்கே கேடு விளையும் என்றும் நம்புகின்றனர்.

## நாடி பார்த்தலும் மருத்துவமும்

நாட்டுப்புற மருத்துவத்தில் நாடி பார்த்தல் என்பது ஒரு முறையாகும். இவை கைப்பிடித்து நாடிபார்த்தல், பட்டுத்துணிபோட்டு நாடி பார்த்தல் போன்றவையாகும். இவற்றைப் பற்றி நாட்டுப்புறப்பாடல் குறிப்பிடுவதை அறியலாம்.

'வைத்தியரு வந்துட்டாரு
வலது கை தாது பார்க்க
எடது கையைப் பட்டெடுத்து
எடது கையில் தாது பார்த்தான்
தாதுக்கள் ஓடாம
அலுப்புடனே ஒக்காந்தாரு'[109]

என்று குறிப்பிடப்படுகின்றது.

## நாட்டுப்புற பாடல்களில் நோய்களும் மருத்துவமும்

### உடம்புவலி

ஒரு தாய், தன் குழந்தையைத் தூங்க வைப்பதற்காகத் தொட்டிலில் போட்டுத் தாலாட்டுகிறாள். குழந்தைத் தூங்காமல் அழுது கொண்டிருக்கிறது. இவ்வாறு குழந்தை அழுவது, அக்குழந்தை ஒரே இடத்தில் படுத்திருப்பதால் உடல் வலியை ஏற்படுத்தலாம் அல்லது வயிற்று வலியினால் அழலாம். உடம்பு வலியாக இருந்தால் ஒத்தடம் கொடுக்கலாம். வயிற்று வலியாக இந்தால் ஏலமும், இஞ்சியும் கலந்த சாற்றில் எட்டுச் சொட்டைப் பாலில் கலந்து கொடுக்கலாம். இம்மருந்துகள் தாலாட்டுப் பாடலில் இடம் பெறுகிறது.

'உடம்பெல்லாம் நோகுதம்மா - கண்ணே
உனக்கு ஒத்தடம் கொடுக்கட்டுமா?
ஏலமும் இஞ்சிச் சாறும் கண்ணே உனக்கு
எட்டுச் சொட்டு கொடுக்கட்டுமா?
எண்ணெயிலே ஒத்தடமும் - கண்ணே
வெந்நீரில் ஒத்தடமும்
இன்னும் வேற ஒத்தடமும் கண்ணே
உனக்குக் கொடுக்கத் தாதி உண்டு'[110]

உடல் வலி ஏற்பட்டால் எண்ணெய், வெந்நீர், தவிடு முதலியவற்றால் ஒத்தடம் கொடுக்கும் முறை இன்றும் நாட்டுப்புறங்களில் நடைமுறையில் காணப்படுகிறது.

### தலைவலி

குழந்தைகளுக்கு தலைவலி வந்துவிட்டால், அதற்குக்

கோரோசனை மாத்திரையைத் தாய்ப்பாலில் இட்டு அரைத்து உள்ளுக்கு புகட்டுவார்கள். குழந்தைகள் பெரும்பாலும் தண்ணீரில் விளையாடிக் கொண்டிருப்பதால் நீர்க்கோர்வை, தலைவலி போன்ற நோய்கள் ஏற்படும். இந்நோய்களை போக்க 'கோரோசனை' எனப்படும் மாத்திரையைப் பயன்படுத்தி அவற்றை விலக்குவர். கோரோசனை மாத்திரை என்பது சித்த மருத்துவர்களால் தயாரிக்கப்படுவதாகும். கோரோசனை மாத்திரை கிடைக்காத போது நீலகிரித் தைலம் பயன்படுத்துவர்.

இச்செய்தியை நாட்டுப்புறப் பாடல் குறிப்பிடுவதை காணலாம்.

மண்டையடி பொறுக்கலையோ - கண்ணே
உனக்கு மருந்தரைத்துப் போடட்டுமா?
கோரோசனை கொடுக்கட்டுமா?
மண்டையிடித்தைலம் கூட - கண்ணே
உனக்கு மாமன் வாங்கி வாராரு
தொந்தரவு செய்யாலமே - கண்மணியே
தொட்டிலிலே தூங்கிடம்மா?[111]

மேலும் தலைவலி அதிகமாக இருக்கும் நேரங்களில் ஈரமண், பச்சைமண் ஆகியவற்றை நெற்றியில் பூசிக்கொண்டு படுத்துவிட்டால் தலைவலி சரியாகும்யென்று நாட்டுப்புற மக்கள் இம்மருத்துவ முறையினை கையாண்டுள்ளனர் என்பதை

'ஈரமண்ணைப் பூசி - நான் பெத்த மகராசி
இருந்தா சுகமறிவேன்
பச்சை மண்ணைப் பூசி - நான்பெத்த மகளே
படுத்தா சுகமறிவேன்'[112]

என்று பாடுவதிலிருந்து அறியமுடிகின்றது.

## கை கால் வீக்கம்

வறுமையில் வளருகின்ற குழந்தைகள் ஊட்டச்சத்து குறைவான உணவுகளையே உண்டு வாழ்கிறார்கள். எனவே, தேவையான அளவு இரத்தம் இல்லாமல் குழந்தையின் கை, கால்கள், வீங்கிச் சோகை, காமாலை போன்ற நோய்கள் தோன்றும். இந்நோய்களைக் கணை எண்ணெயால் குணப்படுத்த முடியும் என்பர். ஒரு துண்டு வசம்பையும், சிறிது மூக்கிரட்டை வேரையும் இடித்து தூள் செய்து ஆமணக்கெண்ணையில் கலந்து காய்ச்சி வடிகட்டி கணை எண்ணெய் தயாரிக்கப்படுகிறது. வாரம் ஒருமுறை இவ்வெண்ணெய் சிறிது குழந்தைகளுக்குக் கொடுக்க வேண்டும். இச்செய்தியை நாட்டுப்புற பாடல் குறிப்பிடுவதை காணலாம்.

'கைகாலு வீக்கத்துக்கு - கண்ணே உனக்கு
கணை எண்ணெய் வாங்கித்தாரேன்
மலைபோல வந்தாலும் - கண்மணியே
பனி போல விலகிடும்மா
பல்லைக் காட்டாதேயப்பா
படார்னு குடித்திடப்பா'[11]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## காய்ச்சல்

நொச்சியைத் தலையில் ஆவிபிடித்து, தும்பைப்பூ கொழுந்தரைத்து நெற்றியில் பத்துப் போட்டால் குளிர்காய்ச்சல் சரியாகும் எனப் நாட்டுப்புறப்பாடல் சுட்டப்படுவதை அறியலாம்.

நொச்சித்தழை யொடிச்சு
நசுக்கி நல்லா வேதுபுடிச்சு
குங்குமப்பூ கொழுந்தரைச்சு
குழமையான பத்துப் போட்டா போதுண்டி
குளுருசொரம் பறந்து போகுண்டி
குங்குமப்பூ கொண்டாங்கடி-இடிக்க
கொழுந்த நாரைக் கூப்பிடுங்கோடி[114]

மேலும் காய்ச்சலுக்குச் சீமைச்சாராயம், கொய்னா போன்றவற்றை உட்கொள்கின்றனர். இவை காய்ச்சலுக்கு ஏற்ற மருந்தாகக் கருதப்படுகின்றன. சீமைச்சாராயம் என்பது 'பிராந்தி' 'ஒயின்' போன்றன. கொய்னா என்ற மரத்தின் இலையில் இருந்து கசாயம் தயாரித்தனர். இது மலேரியாக் காய்ச்சலுக்கு ஏற்ற மருந்து என்று மருத்துவர்கள் கூறுகின்றனர். குளிர்ச்சியைச் சூடான சீமைச்சாராயம் முறிக்கிறது.

சீக்குக் காரருக்கு ஏலேலோ
சீமைச்சாராயம் ஐலசா
சீசாவிலே ஏலேலோ
தந்திடுவார் ஐலசா
காட்டுக்கு போகாத - ஏலேலோ
காய்ச்சல் காரருக்கு ஐலசா
கொடுத்திடுவார் ஏலேலோ
கொய்னாதானும் ஐலசா

என்பதில் இடம் பெற்றுள்ளதை அறியமுடிகிறது.

## வயிற்றுவலி

பசி ஏற்படுவதற்கு முன் அதிகமான உணவை உண்பதின் காரணமாகவும், உண்ட உணவு செரிக்காமல் இருப்பதாலும் வயிற்றுளைச்சல் ஏற்பட்டு வயிற்றில்வலி உண்டாகும்.

இவ்வலிகுணமடைய வெற்றிலைக் காம்பினை மென்று உண்டால் உமிழ்நீர் பெருகி உணவு எளிதில் செரித்து விடுமென்பது தாலாட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன.

'வயிற்றுளைச்சல் மிஞ்சிப் போய் - கண்ணேலே
உனக்கு வயிற்றுவலி வந்திடுச்சா?
வெற்றிலையும் உப்பும் வச்சு - கண்மணியே
வெறும் வயிற்றில் தின்னும்மா
வெந்த சோறு ஜீரணிக்கும்
மந்த புத்தி பறந்துபோகும்'[115]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் வயிற்றுப் போக்கிற்கு மாவிலைக்கொழுந்து, மாதுளம்பிஞ்சு, தென்னம்பிஞ்சு மூன்றையும் சம அளவில் அரைத்துச் சுண்டைக்காயளவு குழந்தைக்குக் கொடுத்தால் வயிற்றுப் போக்கு நீங்கும் எனப் பாடல் ஒன்று சுட்டுகிறது.

'மாதுளம் பிஞ்சு தென்னம் பிஞ்சு - நல்ல
மாவிலைக் கொழுந்துடன் தான் அரைத்தே
ஆதுளைப்பிள்ளைக் கருத்த கழிச்சல்
அகலும் என்றே கும்மியடி'[116]

மேலும் முற்றிய தேங்காயைத் திருகி அத்துடன் பற்பாகம் என்னும் மூலிகையும் கலந்து வேகவைத்து மருந்து செய்து தினமும் இருவேளை உண்ண வயிற்றுவலி போகும் எனப்பாடல் ஒன்று சுட்டுகிறது.

'பருத்த தேங்காயைத் திருகிப்போட்டு சேர்ந்து
பற்பாகத்த உரலாக்கி திருத்தமாகவே தின்றால்
இருவேளை வயிற்றுவலி
திருமென்றே கும்மியடி'[117]

மேலும் 'முட்காவேளை' என்ற ஒரு மூலிகையின் வேரைக் கலந்து இடித்து ஒரு குவளை நீர்விட்டு நன்றாகக் காய்ச்சி வற்றியபின்

காலை மாலை உண்டால் வயிற்றுவலி நீங்கும் எனப் பாடல் ஒன்று சுட்டுகின்றது.

அத்துடன் முக்கா
வேளை இரண்டையும்
சுகமாய்க் காய்ச்சி அருந்தவே
பக்க வல வாங்கும்
வாய்ப்புகள் போகுமென்று
பகர்ந்து கும்மியடிங்கடி[118]

## குடல் ஒற்றம்

தவழும் குழந்தைகளுக்கு சில நேரங்களில் குடலேற்றம் ஏற்படும். தாழ்வானப் பகுதியில் தலைவைத்துப் படுத்தாலோ, தலைக் குப்புறக் கீழே விழுந்தாலோ, குடல் தன் நிலையிலிருந்து மாறுவதாலோ வயிறு இரைச்சலுடன் பேதியும் ஏற்படும். அவ்வாறு குழந்தைகளுக்குக் குடலேற்றம் ஏற்பட்டால் குழந்தையைக் குப்புறக் படுக்க வைத்து நடுமுதுகில் சாம்பல் பூசி, இடுப்புப் பகுதியிலிருந்து கழுத்துப் பகுதிவரையுள்ள முதுகு சதையினை இரண்டு விரல் அளவு இடைவெளியிட்டு, இரண்டு கைகளால் மடித்துத் தூக்குவர். அவ்வாறு தடவி தூக்கினவுடனே குழந்தையின் வயிற்றிரைச்சலும், பேதியும் குணமாகிவிடும் என்பது,

குப்புற நீ விழுந்து
குடலேற்றம் ஏற்பட்டாலும்
குடலை உருட்டி பிரட்டி
குணமடைவாய் கவலைப்படாதே[119]

என்று நாட்டுப்புறப்பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## கண்வலி

கண் வலிக்கு பாசிப்பயிற்றை வறுத்து உடைத்துப் பருப்பாக்கி வேகவைத்து முற்றிய தேங்காய்த் துருவலுடன் கலந்து உண்டால் கண்வலி குணமாகும் என்பர். இச்செய்தியை நாட்டுப்புறப்பாடலின் குறிப்பிடப்பட்டுள்ளன.

தென்னங்காயைத்
திருகிவிட்டுச்
சிறுபயிற்றைப் பருப்பாக்கி
சேர்த்துண்ண கண்வலி
தீருமென்று கும்மியடி[170]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## தொண்டைவலி

தொண்டை வலிக்கு கிராமத்து மக்கள் சாராயம் குடிக்கின்றனர். குளிர்ச்சியினால் தொண்டை கம்மல் உண்டாகத் தொண்டை வலி உண்டாகிறது. தொண்டை வலிக்குச் சுடான வெந்நீர்மருந்தாகும். அளவுடன் சாராயம் பயன்படுத்தினால் நல்ல மருந்தாகும் என்ற நம்பிக்கை கிராமப்புறமக்களிடையே உள்ளதைப் பாடல் மூலம் அறியலாம்.

கொண்டவனை அடிக்கற பெண்டுகளா - உங்கள்
தொண்டைக்கு என்னாங்கடி கம்மலு
தொண்டை வலிக்குச் சாராயம் - அந்தத்
தொண்டைவலிக்கு வெந்நீரு[171]

## பிரசவ வேதனை

பிரசவ வேதனைக்கு மருந்தும் மருத்துவ முறைகளும் பாடலில் சுட்டப்படுகின்றன. பிரசவத்திற்கான முன்னேற்பாட்டையும் மருத்துவச்சியை அழைத்தலையும் பாடல்கள் சுட்டுகின்றன.

*'சீரான பெண்ணுக்கு*
*சிறுவயிறு நோகுதின்னு*
*வாராலோ மருத்துவச்சி*
*பழனி ரதமேறி*
*கசாயம் குடிக்காமல்*
*கடைச்சரக்கு வாங்காமல்*
*வெந்நீர் குடுக்காமல்*
*வேந்தனைப் பெற்றெடுத்தாள்'*[122]

## சளி கபம்

சளி, கபம் போன்றவற்றிற்குக் கண்டங்கத்திரி மருந்தாகக் கூறப்பட்டுள்ளது என நாட்டுப்புறப்பாடல் புலப்படுத்துகிறது.

*கண்டங் கத்திரியிலே*
*கரும்செம் பொட் பூப்பூக்கையிலே*
*கலந்தரச்சி நான்குடுக்க*
*ஒஞ்சளியும் கபமும் நாவிரட்ட*[123]

## இடுப்புவலி, வாய்வு

'மூக்காவேளை' என்பது நீலநிறப் பூக்களையும், கொத்தவரை போன்ற சிறிய காய்களுடன் எல்லா இடங்களிலும் காணப்படக்கூடிய இச்செடியின் வேரையும், சக்கையும் இடித்து ஒருகுவளை நீர்விட்டுக் காய்ச்சி அரைக்குவளையாக வற்ற

வைத்துக் காலையில் குடித்தால் இடுப்புவலி, வாய்வு கோளாறுகள் போன்றவியாதிகள் குணமாகிவிடும் என்பதை.

'சுக்குடன் முக்கா வேளை இரண்டையும்
சுகமாய்க் காய்ச்சி அருந்திட வே
பக்கவலி வாங்கும் வாய்வுகள் போகுமென்று
பகர்ந்து கும்மி அடியுங்கடி'[174]

என்று பாடல் புலப்படுத்துகிறது.

## கரப்பான் நோய்(சிரங்குநோய்)

கரப்பான் எனக் அழைக்கப்படும் சிரங்கு நோயை போக்க ஏலக்காய், சுக்கு, சீரகம் மூன்றையும் இடித்து துணியில் முடிந்து வைத்து நல்லெண்ணெயில் ஊறவைத்து சொறி சிரங்கின்மீது பூசினால் குணமாகும் என்ற செய்தியை நாட்டுப்புற பாடல் குறிப்பிடுவதை காணலாம்.

ஏலம் சுக்கு சீரகம் மூன்றையும்
ஏற்ற நல்லெண்ணெயிற் பொடித்திட்டுப்
பால சூரியன் முன் வைத்துப் பூசப்
பறக்கும் கரப்பான் என்றே கும்மியடியுங்கடி[175]

என்று பாடல் புலப்படுத்துகிறது.

## காய்ச்சல்

காய்ச்சலுக்குரிய மருந்தாகத் தும்பை, துளசித் தண்ணீர் கூறப்படுகின்றன. மிளகு நீரும் காய்ச்சலுக்கு மருந்தாகின்றது என்பதை நாட்டுப்புற பாடலின் மூலம் அறியலாம்.

துளசி தண்ணி தெளிச்சி
தும்பைப்பூ சாறு குடிச்சு

மகிழம்பூ பந்தலிலே - நான்
மடியிலே படுத்திருந்தா - மாமா என்
குளுறுசொரம் நீ போக் வாவா
மிளகு தண்ணி நீ குடிக்க
மிளகரச்சு நான் கொடுக்க
... ... ...
குளிறு சொரம் விட்டுப் போகும் வடி.[126]

என்று காய்ச்சலைப் பற்றிக் குறிப்பிடப்படுகின்றது.

## தொகுப்புரை

இவ்வியலின் முடிவாக நாட்டுப்புறவியலின் ஓர் பிரிவாக விளங்கும் நாட்டுப்புறப் பாடல்களில் பல மருத்துவச் செய்திகள் உள்ளடக்கி விளங்குகின்றன என்பது தெரியவருகின்றது. பொதுவாக எல்லா மக்களிடையேயும் நாட்டுப்புறப் பாடல்கள் புழக்கத்தில் உள்ளன. நாட்டுப்புறப் பாடல்களே எழுத்திலக்கியத்தின் தாயாகக் கருதப்படுகின்றன. நாட்டுப்புறப்பாடல்கள் மக்களின் வாழ்க்கையோடு ஒன்றி பின்னிப் பிணைந்துள்ளன. பெரும்பான்மையான பாடல்கள் அடிவரையற்றவை. நாட்டுப் பாடல்களின் ஒவ்வொரு வகையிலும் மருத்துவச் செய்திகள் காணப்படுகின்றன. பொதுவாகப் பெண்களுக்கேயுரிய நாட்டுப்புறப் பாடல்களில் மருத்துவச் செய்திகள், பெரும்பான்மையாகவும், சிறப்பாகவும் காணப்படுகின்றன என்பது தெரியவருகின்றன.

## அடிக்குறிப்புகள்

1. டாக்.சு. சக்திவேல், சக்திவேல், நாட்டுப்புறவியல் ஓர் அறிமுகம், ப.25
2. தொல்காப்பியம்
3. அ.மு. பரமசிவானந்தம், வாய்மொழி இலக்கியம் (நூல்)
4. செ. அன்னகாமு, ஏட்டில் எழுதாக் கவிதைகள் (நூல்)
5. மு.வை. அரவிந்தன், தமிழக நாட்டுப் பாடல்கள் (நூல்)
6. இராசா. இராசக்குமார், கிராமியப் பாடல்கள், கொங்கு மலர் 1975
7. பா.சு. சண்முகசுந்தரம், திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புறப் பாடல், ப.7
8. மேலது, ப.8
9. டா.கமெ. சுந்தரம், வாழ்வு இலக்கியம், தமிழ்ப்பாவை, 1966, ப.76
10. ஆர். அய்யாசாமி, நாகை வட்டப் பாடல்கள்(நூல்)
11. அழ வள்ளியப்பா, மலை மக்களின் பரம்பரைப் பாடல்கள் (நூல்)
12. திருநெல்வேலி நாட்டுப்புறப் பாடல்கள், பா.சு. சண்முக சுந்தரம், ப.8
13. ந.மு. வேங்கடசாமி நாட்டார் போன்ற வழக்குகளை நோக்குக(நூல்).
14. திருநெல்வேலி நாட்டுப்புறப் பாடல்கள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம்-1980, ப.3

16. தொல்காப்பியம், செய். நூற்பா.482

17. Richard M. Dorson, Introduction Folklore and Folk life, P.1
18. டாக். சு. சண்முகசுந்தரம், தமிழக நாட்டுப்புறப் பாடல்கள், ப.13
19. டாக். மா. கோதண்டராமன், நாட்டுப்புறவியலும் பண்பாடும், ப.12
20. டாக். சு. சண்முகசுந்தரம், தமிழக நாட்டுப்புறப் பாடல்கள், ப.12
21. டாக். மா. கோதண்டராமன், நாட்டுப்புறவியலும் பண்பாடும், ப.13
22. டாக். சு. சண்முகசுந்தரம், தமிழக நாட்டுப்புறப் பாடல்கள், ப.13
23. டாக். மா. கோதண்டராமன், நாட்டுப்புறவியலும் பண்பாடும், ப.13
24. மேலது, ப.14
25. S. Sakthivel, Folklore Literature in India, P.10
26. சாம்பமூர்த்தி. பி. நாடோடிப் பாடல்கள், ப.6
27. மு. அருணாசலம், தாலாட்டு இலக்கியம், ப.6
28. செ. அன்னகாமு, ஏட்டில் எழுதாக் கவிதைகள், ப.18
29. பி. சாம்பமூர்த்தி, நாடோடிப் பாடல்கள், ப.7
30. ஏட்டில் எழுதாக் கவிதைகள், ப.201
31. கோதண்டராமன். மா., நாட்டுப்புறப் பாடல்கள், ப.9
32. ஜகன்நாதன்.கி.வா., மலையருவி., ப.3
33. முத்தப்பன். பழ., நாட்டுப்புற இலக்கியம், ப.7
34. மேலது, ப.10

35. மேலது, ப.12

36. மேலது, ப.15

37. மேலது, ப.18

38. Literary History of the United States, p.727

39. Apelpaul/ H., The Message of Music, P.198

40. Oxford Junior Encyclopedia, Vol-I, 179

41. The Science of Folklore, P.154

42. டாக்டர். சி. சண்முக சுந்தரம், நாட்டுப்புறவியல் ஆய்வு நெறிமுறைகள், ப.57

43. N. Vanamanalai Stadies in Tamil Folk Literature Madras, Pp.5,6

44. அறு அழகப்பன், நாட்டுப்புறப் பாடல்கள் திறனாய்வு, சென்னை-1973, பக்.10-13

45. சு. சண்முகசுந்தரம் திருநெல்வேலி மாவட்ட நாட்டுப்புற பாடல்கள், ஆய்வேடு

46. டாக். இ. பாலசுந்தரம், ஈழத்து நாட்டார் பாடல்கள், சென்னை 1979, ப.54

47. மு.வை. அரவிந்தன், தமிழக நாட்டுப்புறப் பாடல்கள், சென்னை-1979, ப.57

48. ஆறு. இராமநாதன், தென்னார்க்காடு மாவட்ட நாட்டுப்புற பாடல்கள், ப.12

49. மா. கோதண்டராமன், நாட்டுப்புறப்பாடல்கள், ப.23

50. வி. சரசுவதி, நாட்டுப்புறப்பாடல்கள் சமூக ஒப்பாய்வு, ப.76

51. லலிதா.பதி, மருந்து செய்முறைகள், ப.16

52. நாட்டுப்புற பாடல்கள் சமூக ஆய்வு, 519

53. 53லிருந்து 126வரை உள்ள அடிக்குறிப்புகள் களஆய்விலிருந்து சேகரிக்கப்பட்ட பாடல்களாகும்.

# இயல் - 4

## நாட்டுப்புற மருத்துவத்தின் சிறப்புக் கூறுகள்

### முன்னுரை

மனித வாழ்வின் இன்றியமையாக் கூறுகளான உணவு, உடை, இருப்பிடம் ஆகிய அடிப்படைத் தேவைகளோடு ஒருங்கு வைத்து எண்ணத்தக்க முதன்மையுடையது நாட்டுப்புற மருத்துவமாகும். மனிதன் தன் இயல்பினாலும், தன்னைச் சுற்றியுள்ள இயற்கையை உற்றுநோக்கிப் பெற்ற அறிவினாலும், தன்னுடைய நோயைப் போக்கிக் கொள்ளும் வழிவகைகளை அறியத் தொடங்கினான். அதனால் இந்நிலையிலேயே நாட்டுப்புற மருத்துவக்கலை தோற்றம் பெற்றது எனலாம்.

மனிதன் தனிமனித நிலையினின்று மாறி, சமுதாயமாகக் கூடி வாழத் தலைப்பட்ட நாளில் உலகில் பல நாகரிகங்கள் தோன்றின என்று கூறுவர். மனித இன வாழ்வோடு இணைந்து தோன்றிய நாட்டுப்புற மருத்துவம் நாகரிகத்தோடு தன்னைப் பிணைத்துக்கொண்டு வளர்ந்தது என்று கூறலாம். அவ்வகையில் உலகில் தோன்றிய தொன்மையான மருத்துவ முறைகளுள் நாட்டுப்புறமருத்துவம் முதன்மையானது ஆகும். இதில் பெரும்பாலும் மரங்கள், செடிகள், கொடிகள், இலைகள், வேர்கள், விதைகள், பழங்கள், காய்கள் போற்றவற்றிலிருந்து மருந்து நமக்கு எவ்வாறு பயன்படுத்தப்படுகின்றன? எவ்வாறு பதப்படுத்தப்படுகின்றன என்று ஆராயப்படுவது இவ்வியலின் நோக்கமாக கருதப்படுகின்றது.

## மரம் செடி கொடிகள் பற்றிய பொது நோக்கு

பரந்து விரிந்த இவ்வுலகின்கண் எண்ணற்ற பொருள்கள் இருக்கின்றன. அவையாவும் இயற்கை, செயற்கை என்ற இருவகைப்பாட்டில் அமைந்து கிடக்கின்றன. மனிதனுடைய முயற்சியில் உருவாக்கப்பெற்ற பொருட்கள் 'செயற்கை' என்று கூறுவர். மற்றவை அனைத்தும் மனித முயற்சியின்றித் தாமே உருவான இயல்பினவாதலின் இயற்கைப் பொருட்கள் என்று குறிப்பிடுவர். இயற்கைப் பொருட்கள் யாவும் உயிருள்ளன, உயிரல்லன என்ற இருநிலைகளில் அமைகின்றன. இவற்றைத் திணை அடிப்படையில் வகைப்படுத்தும்போது மனித இனம் ஒன்றே உயர்திணை என்ற பகுப்பில் அமைந்துள்ளது. மற்ற உயிருள்ளனவும் உயிரல்லாததும் அனைத்துமே அஃறிணையாக கருதப்படுகின்றன. நன்னூலார் மக்களொடு தேவர், நரகர் என்ற இனங்களையும் இணைத்து உயர்திணை எனக் குறிப்பிட்டாலும் அவ்விரு பிரிவினரும் முறையே மக்களுள் உயர்ந்தோர், தாழ்ந்தோர் எனும் இருபிரிவினரைச் சுட்டும் என்பது குறிப்பிடத்தக்கதாக விளங்குகின்றது.[1]

## மனிதனும் இயற்கையும்

மனிதன், தானே சிந்தித்துச் செயற்படும் ஆற்றல் உடையவன் ஆவான். சூழ்நிலைக்கேற்பத் தன்னை

மாற்றிக்கொள்வதோடு, சூழ்நிலையையே தனக்கேற்றவாறு மாற்றியமைத்துக்கொள்ளும் வலிமை பெற்றவன். இத்தகைய வலிமை பெற்றவனாக மனிதன் விளங்குவதற்குக் காரணமாக அமைவது அவனுடைய பகுத்தறிவே எனலாம். பகுத்தறிவைப் பெற்ற காரணத்தினாலேயே அவன் பிற உயிரினங்களின்று மாறுபட்டு அவற்றைவிட உயர்ந்தவனாக விளங்குகின்றான். இக்காரணம் பற்றியே மனிதன் உயர்திணையாகப் போற்றப்பெறுகிறான். இவ்வாறு மனிதன் இயற்கையினின்று மாறுபட்டு விளங்கினாலும், அவன் இயல்பினால், சார்ந்து வாழும் தன்மை உடையவன். அவனால் இயற்கையின் உதவியின்றித் தனித்து வாழ இயலாது. உணவு, உடை, உறையுள் மற்றும் வாழ்வியல் தேவைகள் அனைத்திற்கும் அவன் இயற்கையையே சார்ந்து வாழ்கின்றான்.

மனித வாழ்க்கைக்கு அடிப்படையாக விளங்கும் இயற்கைப் பொருட்கள் தாதுவர்க்கம், உயிர்வர்க்கம், தாவரவர்க்கம் என முற்கூறிய பிரிவுகளாகப் பிரிக்கப்படுகின்றன. இம்மூவகையுமே மனித வாழ்வுக்கு உதவுவன. எனினும், அவற்றுள் மிக இன்றியமையாததாக விளங்குவது தாவர இனம் என்று கூறலாம்.

உலகிலுள்ள உயிரினங்களுள் தாவர இனம் தவிர ஏனைய அனைத்துமே இடம்விட்டு இடம்பெயரும் இயல்புடைய இயங்குதிணைக்குரியன. தாவர இனம் ஒன்றே இவற்றினின்று

மாறுபட்டு ஓரிடத்திலேயே நிலையாக நிற்கும் இயல்புடைய நிலைத்திணைப் பொருளாகும். உயிரினங்கள் அனைத்துள்ளும் தாவர இனம் மட்டுமே தன் உணவைத் தானே தயாரித்துக்கொள்ளும் இயல்புடையது. காற்றுவெளியிலுள்ள கரிமிலவாயு, சூரிய ஒளி மற்றும் நீர் ஆகியவற்றைக் கொண்டு தனக்குரிய உணவைத் தானே தயாரித்துக்கொள்கிறது. இவ்வாறு அது தனக்குரிய உணவைத் தயாரித்தற்கு அதன்கண் அமைந்துள்ள, பச்சையம் எனும் குளோரோபில் உதவுகின்றது.[2] ஏனைய விலங்கு முதலான உயிரினங்களனைத்தும் தாவரங்களையும், அத்தாவரங்களை உண்டுவாழும உயிரினங்களையுமே உணவாகக் கொள்கின்றன. தமக்குரிய உணவைத் தாமே தயாரித்துக்கொள்ளும் ஆற்றல் அவற்றுக்கு இல்லை எனலாம். எனவே, தாவர இனமே பிற உயிரினங்களின் அடிப்படை உணவுப்பொருளாகும். இவ்வுலகில் தாவர இனம் இன்றேல், மனிதனோ மற்ற விலங்கு முதலான உயிரினங்களோடு உயிர்வாழ இயலாது. தாவர இனத்தின் இச்சிறப்பினால், 'சதையனைத்தும் தாவர அடிப்படையினவே' என்ற முதுமொழி வழங்கப்பெறுகின்றது.[3]

## பண்டைத் தமிழர்களின் மருத்துவ நோக்கு

பண்டையத் தமிழர்களின் மருத்துவ நோக்கைக் காணும்போது தொல்காப்பியமும், சங்க இலக்கியங்களும் நன்கு

புலப்படுத்துகின்றன. வளரியல்பு அடிப்படையிலான நாட்டுப்புறமருத்துவ வகைப்பாட்டைத் தொல்காப்பியம் குறிப்பிடவில்லை. மாறாக தாவரங்களின் உள்ளமைப்பு நிலையிலான வகைப்பாட்டை அது விளக்குகின்றனது. தாவரங்கள் அவற்றின் உள்ளீட்டு நிலையில் 'புல், மரம்' என்ற இருபேரினங்களாகப் பிரிக்கப்படுகின்றன.[4] இவற்றுள், மரம் என்பது அகத்தே 'காழ்'எனப் பெறும் வலிமை வாய்ந்த உள்ளீடாகிய வைரத்தைப் பெற்றது. அத்தகு உள்ளீட்டை அகத்தே பெறாது, புறத்தே பெற்று விளங்குவது புல் என்னும் பிரிவாகும்.[5]

'புல்லும் மரனும் ஓரறி வினவே
பிறவும் உளவே அஃறிணை பிறப்பே'[6]

என்ற தொல்காப்பிய நூற்பாவில் 'பிற' என்ற குறிப்பு நீர்த்தாவரங்களைக் கருதியது என்பர் உரையாசிரியர். அவை அமைப்பாலும் இயல்பாலும் நிலத்தாவரங்களினின்று மாறுபட்டன என்பது இவண் குறிப்பிடத்தக்கது.

புல் என்ற வகைப்பாட்டிற்கு, உரையாசிரியர் தெங்கு, பனை, கமுகு, மூங்கில் முதலாயின என்று சான்று காட்டுகின்றனர்.[7] வளரியல்பாலும் வலிய தன்மையாலும் மர இனமாகக் கூறப்படுபவையாகும். இச்சான்றுகளை நோக்க, 'புல்' என்ற பாகுபாடு பொதுநிலையில் மரமல்லாத ஏனைய அனைத்துத் தாவரங்களையும் உள்ளடக்கியது என்றாலும், சிறப்புநிலையில்,

குறிப்பாக, தொல்காப்பியர் நோக்கில் அது மர இனத்துள்ளும் அகவுயிர்ப்புப் பெறாத மர இனத் தாவரங்களைச் சுட்டும் பிரிவாகவே எண்ண இடந்தருகின்றது. 'புறக்காழனவே புல்லென மொழிப' என்ற நூற்பாவுக்குப் பொருள் கூறவந்த பேராசிரியர், 'புறக்காழன' எனவே அவ்வழி வெளிறென்பது அறியப்படும். அவை, பனையும் தெங்கும் கமுகும் முதலாயின புல் எனப்படும். இருப்பையும் ஆச்சாவும் முதலாயின மரம் எனப்படும். இங்ஙனம் வரையறை கூறிப் பயந்தென்னை? புறத்தும் அகத்தும் கொடி முதலாயின காழ்ப்பின்றியும், அகில் மரம் போல்வன இடையிடை பொய்ப்பட்டும் புல்லும் மரனும் வருவன உள"[8] என்று விளக்கம் தருகிறார். மேலும் அவர், 'மரனொடு வரூஉம் கிளவி' என்ற மிகையான், புறக்காழனவும் அகக்காழனவுமின்றி அவற்றோடு தழுவிக் கொள்ளப்படுவனவாகிய ஊகம்புல், சிழகம்புல், பஞ்சாய், புழற்கால், ஆம்பல் முதலான புல்லினங்கள் இவற்றுக்கு உரியன'9 என்று கூறியுள்ளமையை நோக்க, மரம், புல் என்ற பாகுபாடு மர இனமல்லாத பிறவற்றை நேரே குறிக்கவில்லை என்பது பெறப்படுகிறது. ஆனால், 'நெல்லும் புல்லும் நேரார் ஆண்டே'[10] என்ற நூற்பாவில் குறிப்பிடப்பெறும் புல்லினம் புல்வகைத் தாவரங்களே என்பதை அவற்றோடொத்த நெல்லையும் குறிப்பிட்டிருப்பதால் அறியலாம். ஆதலின், 'புல்' என்ற பாகுபாடு உள்ளீடு பெறாத மர இனத்தையே குறிக்கும் என்ற கருத்து முழுமையாகக் கொள்ள இயலாது.

புல்லினத்தின் உறுப்புகள் தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை முதலாயின என்றும், மர இனத்தின் உறுப்புகள் இலை, முறி, தளிர், தோடு, சினை, குழை, பூ, அரும்பு, கனி முதலானவை என்றும் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.[11]

உரையாசிரியர்கள் புல், மரம் என்ற பாகுபாட்டிற்கு இவ்வுறுப்புப் பெயர்களையும் காரணிகளாக்குகின்றனர். 'தோடே மடலே' என்ற நூற்பாவிற்கு இளம்பூரணர் தனது உரையில், 'இதனானே புறவயிர்ப்பும் அகவயிர்ப்பும் இல்லாதனவற்றுள் ஒருசாரன இவ்வகைப்பட்ட உறுப்புப் பெயருடையனவாகி இவையும் புல்லெனப்படும் என்றவாறு. வாழை, ஈந்து, தாமரை, கழுநீர் என்றற்றொடக்கத்தன' என்று எழுதுகிறார்.[12] அவ்வாறே, மரவுறுப்புகளைப் பற்றிக் கூறுகையில், 'இதனானே புறவயிர்ப்பும் உள்வயிர்ப்பும் இல்லாதனவற்றுள் ஒருசாரன இவ்வுறுப்புப் பெயர் உடையன மரமெனக் கொள்க. அவை முருக்கு, தணக்கு முதலாயின' என்கிறார்.[13]

இவற்றை நோக்க, தொல்காப்பியர் குறிப்பிடும் உள்ளீடு அடிப்படையிலான, 'புல், மரம்' என்ற பாகுபாடு மர இனத்தை மட்டுமே குறித்தது என்று கொள்ளாது, அகத்தே வலிமைபெற்ற 'காழ்' உடையன மரஇனம், என்றும், அகத்தே 'காழ்' பெறாதன, புறத்தே வலிமை பெற்று மர இனத்தோடு ஒத்து விளங்கினாலும் அவை புல் வகையினவே என்றும் கொள்ளுதல் ஏற்புடைத்து.

ஆகவே, தொல்காப்பியம் கூறும் உள்ளீடு அடிப்படையிலான தாவர வகைப்பாடு பொதுநிலையினதாகக் கருதுவதைக் காட்டிலும், பொதுநிலையினின்று வேறுபட்ட, ஒரு சிறப்புநிலை வகைப்பாடாகக் கொள்வதற்கு இடம் ஏற்படுகின்றது.

தொல்காப்பியத்தில் வளரியல்பு அடிப்படையிலான தாவர வகைப்பாடு பற்றி வெளிப்படையான குறிப்பு இல்லை. ஆயினும் மரம், செடி, கொடி, புல் முதலான தாவரங்களைப் பற்றிய செய்திகள் அதன்கண் இடம்பெற்றுள்ளன. அவற்றுள் மரவகைத் தாவரங்கள் மட்டுமே பெரும்பாலும் மரம் என்ற இனச்சுட்டு அடைமொழி சேர்க்கப்பெற்று, 'ஒதிமரக்கிளவி, சேமரக்கிளவி, ஆண்மரக்கிளவி' என்றவாறு குறிப்பிடப் பட்டுள்ளன.[14] ஏனைய செடி, கொடி முதலான தாவர வகைகளைச் சுட்டுமிடத்து, அவற்றின் இனநிலையைச் சுட்டாது, பெயர்களை மட்டுமே தனித்துச் சுட்டிச் செல்லும் மரபு காணப்படுகிறது. சான்றாக, ஆவிரைச் செடியை 'ஆவிரைக்கிளவி' என்றும்[15] பீர்க்கங்கொடியைப் 'பீரென்கிளவி' என்றும்,[16] புல்லோடொத்த நெல்வகையை, 'நெல்' என்றும்[17] அவற்றின் இனச்சுட்டின்றியே செடி, கொடி, புல் வகைகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இதனால் தொல்காப்பியர் காலத்தே வளரியல்பு அடிப்படையிலான தாவர வகைப்பாடு இல்லையெனக் கொள்ளவியலாது. ஏனெனில், வளரியல்பு அடிப்படையிலான வகைப்பாடே தொடக்ககால வகைப்பாடாக இருந்திருக்க வேண்டும் என்பது முன்னர் கூறப்பட்டது.

தொல்காப்பியத்திற்கு முன்னும் பின்னுமாகத் தோன்றிய சங்க இலக்கியத்துள்ளும் தாவரம் பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன. அவையும், இனச்சுட்டின்றித் தனித்த நிலையிலேயே மிகுதியாகச் சுட்டப்பெறுகின்றன. சான்றாக, அத்தப்பாதிரி,[18] எரியிதழலரி,[19] வேம்பினொண்பூ,[20] பொரிப்பூம்புன்கு,[21] பாசிலைக் கவிழ்தும்பை[22] முதலான தாவரப்பெயர்கள் அடைபுணர்த்துக் கூறப்பெற்றாலும் இனம்சுட்டிக் கூறப்பெறவில்லை. ஆயினும், சிறுபான்மை அவை இனம் சுட்டப்பெற்றும், வருணனைவழி, குறிப்பால் உணர்த்தப்பெற்றும் அவ்விலக்கியங்களுள் அமைந்துள்ளன. சான்றாக, 'நறுங்காழ் ஆரம்'[23] என்றவிடத்து, 'காழ்' என்ற குறிப்பு அகக்காழுடைய மர இனத்தைச் சுட்டுகின்றது. அவ்வாறே 'புறாரை நெல்லி'[24] 'கருங்கோட்டுப் புன்னை'[25] 'தண்கயக் குவளை'[26] என்றவாறு குறிப்பாகவும், 'இவர்கொடிப் பீரம்'[27] என்றவாறு நேரடியாகவும் உணர்த்தப்படுகின்றன. எனவே, தாவரங்களை அவற்றின் பெயரைச் சுட்டிச்செல்லும் போக்கே, அக்காலத்தே மிக்கு விளங்கியதால் வளரியல்பு அடிப்படையிலான இனப்பாகுபாடு வழக்கிலிருப்பினும் இலக்கியத்தில் பெரும்பாலும் இடம்பெறவில்லை என்பது பெறப்படுகின்றது.

மரம்

வளரியல்பு அடிப்படையில் அமைந்த வகைப்பாட்டில் முதன்மை பெறுவது மர இனமாகும். பொதுவாக மர இனம் அதன்கண் அமைந்திருக்கும் வலிமையுடைய உள்ளீட்டைக் கொண்டே வரையறுக்கப்படுகிறது. உள்ளீட்டை உடையதும் பல்லாண்டுகள் வாழ்வதும், அடிமரம் உள்ளதும் பதினைந்திலிருந்து இருபது அடி உயரமேனும் வளர்வதுமாகிய தாவரம் மரம் என்று தாவரவியலார் குறிப்பிடுவர்.[28]

விதைத் தாவரப் பிரிவினுள் ஒன்றாகவே மர இனம் வரையறுக்கப்படுகிறது. தாவரவியல் நோக்கில், விதையுண்டாக்குவனவும் விதையினின்று உண்டாவனவுமான மர இனங்களே உண்மையான மரங்களாகக் கருதப்படுகின்றன. 'ஸ்போர்கள்' எனப்படும் விதைத்தூள்கள் மூலம் இனம் பெருக்கும் 'பெர்ன்' இனத்தாவரங்களுள் சில, மரம் போலவே வளர்ந்து விளங்கினாலும், அவை விதைத் தாவரமின்மையால் மரமாக ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.[29]

மரம் என்பது தனிப்பொருளன்று, உயிரணுக்கள் பலவற்றின் கூட்டுப்பொருள் என்பர் தாவரவியலார்.[30] மரத்தில் அமைந்துள்ள உயிரணுக்களின் எண்ணிக்கைக்குத்தக, அம்மரத்தின் பருமையும், உருவமும் அமையும், மரத்தைப் பிற தாவரங்களினின்று வேறுபடுத்திக் காட்டுவது அதன் வலிய அடிப்பகுதியே ஆகும். இவ்வடிப்பகுதி, மரப்பட்டை, மரத்திசு,

சேமிப்பணு அல்லது சோறு, வயிரவணு எனும் நன்மைதரும் பொருள் ஆகியவற்றை உள்ளடக்கியது.[11]

மரப்பட்டையை அகப்பகுதி, புறப்பகுதி என்று இரண்டாகப் பகுப்பர். புறப்பகுதி, இறந்த தக்கைப்பொருள் என்றும், அகப்பகுதி உயிருள்ள தோல் என்றும் கூறுவர். அவ்வாறே மரத்திசுவும் புறத்தே அமைவது மென்திசு என்றும், அகத்தே உள்ளன உள்திசு என்றும் வழங்கப்படுகின்றன. மேலும், இம்மரத்தின் நடுவே மென்சோறு, வச்சிரவணு முதலிய திசுக்கள் அமைந்து விளங்குகின்றன.[12]

மரத்திசுக்கள் நார்போன்ற அமைப்பு என்பர். இந்நார்ப்பகுதியே மரத்திற்கு வன்மை தருகின்றது. மேலும், சோற்றுப் பகுதியிலிருந்து மரத்தின் பல்வேறு பகுதிகளுக்குச் சாறு செல்லும் வழியாகவும் இந்நார்கள் விளங்குகின்றன. இத்திசு நார்களுக்கு நேர்க்கோணத்தில் அமைந்துள்ள உயிரணுத் தொகுதி மரத்திசுக் கதிர்கள் எனப்படும். அவையே சோற்றுப்பகுதியிலிருந்து பெறும் சாற்றை மரத்திசு நார்கள் வழியே பிறபகுதிகளுக்குச் செலுத்தும் பணியைச் செய்கின்றன.[13] இம்மரத் திசுக்களுக்கும் மரப்பட்டைக்கும் இடையே 'வளர்படை' என்ற மிகமெல்லிய தோற்பொருள் உள்ளது. இவ்வுறுப்பின் வளர்ச்சியே மரப்பட்டையும் திசுவும் பருமையடையக் காரணம் என்று கூறுவர். எனினும், மரத்தின் பருமை இவ்வுயிரணுக்களின் பருமையைக் கருதியதன்று. புதிய உயிரணுக்களின் அடுக்குகள் உருவாதலினாலேயே மரம் பருமையடைகின்றது.[14]

மரங்கள் அளவு மற்றும் வயது முதலியவற்றால் வேறுபட்டபோதும், சில அடிப்படைப் பண்புகள் அனைத்திற்கும் பொதுவானவையே. குறிப்பாக, மரத்திசுக்களும், மரவுறுப்புகளும் ஆற்றும் பணிகள் அனைத்து மரங்கட்கும் பொது. மரங்களை வகைப்படுத்தும்போது முறையே விதைமூடாத் தாவரம், ஒற்றை விதையிலைத் தாவரம், இரட்டை விதையிலைத் தாவரம் என மூன்றாகப் பகுப்பர்.

குவிந்த காய்காய்க்கின்ற, ஊசி போன்ற இலைகளையுடைய பசுமை மாறாத மரவகைகள் விதைமூடாத் தாவர இனமாகும். குறிப்பிட்ட பருவந்தோறும் இலையுதிர்க்கக்கூடிய, அகன்ற இலைகளை உடைய கடின மரப்பகுதிகளை உடைய, மர வகைகள் விதைமூடிய தாவர வகைக்குரியனவாகும். இவ்விதைமூடிய தாவரவகை ஒற்றை விதையிலைத் தாவரம், இரட்டை விதையிலைத் தாவரம் என இருவகையாகப் பிரிப்பர்.[35] இவ்விருவகை மரங்களும் உள்ளமைப்பு நிலையிலும் முறையே மென்மரம், வன்மரம் என்று பிரிக்கப்படுகின்றன. தண்டுப்பகுதியில் உட்புறம் வன்மையுடையதாக விளங்குவது வன்மரம், அவ்வுட்புறத்தே மென்மையான தன்மையுடையது மென்மரம். இதற்கான அறிவியல் காரணத்தை ஆராய்வோமானால், வன்மரத்தில் மரத்திசு நார்கள் தடித்த உறையுடையனவாயும் பலதிறப்பட்ட வகையினவாகவும் விளங்குகின்றன. மென்மரத்திலோ அவை மிக நீண்டமைந்த இருமுனை நார்களாகக் காணப்படுகின்றன.[36]

பொதுவாக, தாவரங்களனைத்தும் தமிழர் வாழ்வோடு நெருங்கிய தொடர்புடையனவாக விளங்கினாலும், அவற்றுள் சிறப்பிடம் பெறுவது மர இனமே. தொடக்ககாலத்தில் 'மரம்' என்னும் பெயரே மர இனத்திற்கு மட்டுமன்றி, தாவர இனமனைத்திற்கும் பொதுப்பெயராக விளங்கியமை முன்னர்க் கூறப்பட்டது. எனவே, பண்டைத் தமிழகத்தில் மர இனம் பெற்றிருந்த சிறப்பு குறிப்பிடத்தக்கதாகும்.

மரம் என்ற சொல்லுக்குப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி 'உள்வயிரமுள்ள தாவரம், அறுக்கப்பட்ட மரம், மரக்கலம், நிலத்தை மென்மையுறுத்தற்குப் பயன்படுத்தப்படும் பலகை அல்லது உருளை' என்றவாறு பொருள் கூறுகின்றது.[17] இவற்றால் மரத்திகுப் பொருளின் அடிப்படையிலேயே மரம் எனும் பெயரீடு அமைந்திருத்தல் பெறப்படுகிறது. 'அகக்காழனவே மரமெனப்படுமே' என்ற தொல்காப்பிய நூற்பா இக்கருத்தை உறுதிப்படுத்துகின்றது.

மர இனத்தைக் குறிப்பதற்கு உரிய பெயர்களாக அகம், அகலியம், அங்கிரி, தரு, தாரு, தாவரம், துருமம், பாபதம், மூலம், விருக்கம் என்ற சொற்களைப் பிங்கல நிகண்டு எடுத்துரைக்கின்றது.[18] மரம் என்ற சொல் பற்றி ஆராய்வோமானால், மரம், கட்டை, அறுக்கப்பட்ட மரம் என்ற பொருள்களில் தமிழில் வழங்குவதோடு, திராவிட மொழிக் குடும்பங்களில் மரம், மானு, மர, மேன், மர்ம், மாக், மக்

என்றவாறு ஏறக்குறைய அதே பொருள்நிலையில் சிற்சில ஒலித்திரிபுகளுடன் வழங்குகின்றது.[39] எனவே, மரம் என்பது திராவிட இனத்திற்குரிய மூலச்சொல்லாகவும், தொன்மையான சொல்லாகவும் விளங்குவதோடு இன்றும் மரபுவழியே போற்றப்பட்டு வருகின்றது.

மரவகைக்குக் கூறப்படும் மேனாட்டாரின் தாவரவியல் வருணனைகள் பழந்தமிழ் இலக்கியத்துள்ளும் காணப்படுகின்றன. 'புல்லிலைப் பராரை நெல்லி'[40] என்றவழி மரப்பொருளுடைய அரை குறிப்பிடப்பட்டுள்ளது. 'மிமிசைச் சாந்தின்'[41] 'தேம்பாய் மாஅத்து ஓங்குசினை'[42] என்ற குறிப்புகள் மரத்தின் உயரத்தை உணர்த்துகின்றன. அவ்வாறே, 'தொல்முதாலம்'[43] என்றவாறு மரத்தின் நெடுநாள் நிலைத்திருக்கும் இயல்பும் கூறப்பட்டுள்ளது.

**செடி**

தாவர இனங்களுள் இரட்டை விதையிலை வகையைச் சேர்ந்த சிறு தாவரங்கள் செடிகள் எனப்படுகின்றன. பொதுவாக, சிறுசெடிகளையும் குற்று மரங்களையும் செடி என்றே வழங்குவர். இவற்றில் உடலில் மரத்திசு சிறிதளவே இருப்பதால் தண்டுப்பகுதி வலிமையின்றி மென்மையாக இருக்கும். பொதுவாக, செடிகளை அவற்றின் வாழ்நாள் அடிப்படையில் ஒருபருவச் செடி, இருபருவச் செடி, பலபருவச் செடி என மூன்று பிரிவாகப் பகுப்பர்.[44]

ஒருபருவச் செடி, ஒரு குறிப்பிட்ட ஒரு பருவத்தில் தோன்றி, சில வாரம் அல்லது மாதங்களில் இலையும் பூவும் கனியும் உண்டாகி விதை முற்றி அப்பருவத்திலேயே பட்டுப்போகும். இருபருவச் செடியில் முறையே உணவு சேமித்து முதிர் பருவத்திலும், சேமித்த உணவைக்கொண்டு பூவும் கனியும் உண்டாக்குதல், இரண்டாம் பருவத்திலும் நிகழும். இரண்டாம் பருவத்தின் முடிவில் அத்தாவரம் முழுதும் பட்டுப்போகும். பலபருவச் செடியில் ஒருமுறை செடி தோன்றியபின் அது வளர்ந்து பூ, கனிகளை உண்டாக்கியதும் மேற்புறமிருக்கும் தண்டுக்கிளை மட்டுமே அழிந்துபோகும். நிலப்பரப்பின் உட்புறம் உள்ள கிழங்கு அல்லது மட்டத்தண்டுக்கிழங்கு முதலியவற்றிலிருந்து புதிய தண்டுக்கிளை முளைத்து வளரும். இத்தகைய வளர்ச்சிமுறை மூன்று அல்லது நான்கு ஆண்டுகள் வரை தொடர்ந்து நிகழும். பின்னர் செடி முழுதும் அழிந்துவிடும்.[45]

## செடி-சொல்லாய்வு

செடி என்ற சொல் செடிகள் அடர்ந்த புதரைக் குறிக்கும். இந்த வழக்கைப் பிங்கல நிகண்டில்தான் காணமுடிகிறது. அந்நிகண்டும் செடி எனும் அச்சொல்லுக்கு ஒளி என்று வேறொரு பொருளையும் வழங்குகின்றது.[47] சூடாமணி நிகண்டு இச்சொல்லுக்கு நெருக்கம், தீமை என்ற பொருட்களைக் குறிக்கின்றதேயொழிய சிறுதாவர வகையைச் சுட்டவில்லை.[48]

செடி எனும் சொல்லாட்சி தேவாரத்திலும் திருவாசகத்திலும் இடம்பெற்றுள்ளது. தேவாரத்தில் 'செடிபடு நோய் அடியாரைத் தீர்ப்பார் போலும்' என்றவிடத்து, செடி என்பது துன்பத்தைக் குறித்தது.[49] 'செடிநாய் குரைக்க' என்றவிடத்து செடி, இழிவைச் சுட்டி நின்றது.[50] 'செடிகொள் வான்பொழில் சூழ்' என்ற திருவாசகத்தொடர் தாவரத் தொடர்புடையதாயினும் இவண் செடி எனும் சொல்லுக்கு நெருங்கி விளங்கும் தன்மையையே பொருளாக அமைகின்றது.[51] 'செடிபடுந் துணியுடைச் சீரை' என்று திருவாலவாயுடையார் புராணமும் 'இழிமணம்'என்ற பொருளிலேயே செடி எனும் சொல்லை வழங்குகின்றது.[52]

எனவே, 'செடி' என்ற சொல், 'இழிவு, அடர்தல், துன்பம்' என்ற பொருள்நிலைகளிலேயே இடைக்காலத்தில் வழங்கியது என்பது பெறப்படுகிறது. சிறுபான்மை, செடியினம் அடர்ந்து விளங்கும் புதரைக் குறிக்கவும் கையாளப்பெற்றது என்பதை நிகண்டு கொண்டு அறியலாமெனினும், அதற்கு இலக்கியச் சான்று கிடைக்கவில்லை. இதனை உற்றுநோக்க, 'அடர்தல்' அல்லது 'நெருங்கியிருத்தல்' என்ற பொதுவான பொருள்நிலையே அவ்வாறு அடர்ந்து - நெருங்கி விளங்கும் செடிகளின் கூட்டத்திற்கும் குறிப்பால் ஆகிவந்தது என எண்ண இடந்தருகின்றது.

செடி கொடிகள் அடர்ந்த நிலையைக் குறிக்க, 'செடித்தல்' எனும் வினைச்சொல் இருந்தமையைத் தமிழ் லெக்சிகன்

உரைக்கின்றது.[53] இன்றும் வழக்கில் செடி என்ற சொல் ஒரு தனித்தாவரத்தைக் குறிப்பதோடு, செடிகள் அடர்ந்திருத்தலாகிய நிலையைச் சுட்டவும் சிறுபான்மையாகக் கையாளப்படுகிறது. எனினும் செடிகள் அடர்ந்து விளங்கும் நிலைக்குப் 'புதல்' என்ற சொல் இன்று வழக்கில் உள்ளது. எனவே, 'செடி' எனும் சொல் இழிவு என்ற பொருளுடையதாக, சிறுமை எனும் பண்பைக் குறித்து, அதன்வழி, அளவில் சிறியதாக விளங்கும் தாவரங்களைக் குறிப்பில் உணர்த்தவும் வாய்ப்புள்ளது. மேலும், 'செடி' எனும் சொல் திராவிட மொழிக் குடும்பத்தில் செடி, செட்டு, செட், கிடா, கிடு, கட்டா, கிர்ள், கிட்ப் என்றவாறு சிற்சில ஒலித்திரிபுகளுடன் அமைந்து பொருள் நிலையில் செடிகளையும் குற்று மரங்களையும் புதரையும் மரம், கொடி ஆகியவற்றையும் குறித்து நிற்கின்றது.[54] எனவே, செடி எனும் வழக்கு தமிழுக்குப் பிறமொழியினின்று வந்த சொல்லன்று, தமிழுக்கு உரிய சொல்லே என்பது தெளிவுபடுத்துகிறது. இச்சொல் தேவார காலம் முதற்கொண்டே இலக்கியத்துள் இடம்பெறுகின்றது. ஆயினும் இது, 'செடி இனத்தைக் குறிக்க' வழங்கிய நிலையைப் பிங்கல நிகண்டே முதற்கண் குறிப்பிடுகின்றது.

## 'செடியும் புதலும்' - பெயர் வழக்கு

பண்டைக்காலத்தில் செடி என்னும் வழக்கு இல்லை. ஆனால் செடியினத்தைக் குறிக்கும் சொல்லாக, 'புதல்' என்ற

வழக்கு சங்க இலக்கியத்தில் காணப்படுகின்றது. கோட்டுப்பூ முதலான நால்வகை வகைப்பாட்டுள் புல்லினம் தனித்துக் கூறப்படவில்லை. மேலும், 'புதற்பூ' என்ற 'நிலப்பூ' என்றும் குறிக்கப்படுகிறது. இதனால், புதல் எனும் வழக்கு புல்லினத்தையும் உள்ளடக்கியதே எனக் கருத இடமுள்ளது. மேலும், 'புதல், புல் என்பன புற்பிறப்பாகும்' என்று திவாகர நிகண்டு புதலையும், புல்லையும் புல்வகையினுள் ஒன்றாகவே குறிப்பிடுகின்றது.[55] மரம், கொடி, நீர்த்தாவரம் ஆகியவற்றை வகைப்படுத்திக் கூறிய பண்டைத்தமிழர், புல், செடி ஆகியவற்றைப் பிரித்து நோக்கும் வகைப்பாட்டிற்கு முதன்மை தரவில்லை. அன்றியும் 'புதல்' என்ற சொல் செடியைக் குறித்தவிடத்தும், செடிகளின் கூட்டத்தைக் குறித்ததேயன்றித் தனியொரு செடியைக் குறிக்கவில்லை. 'நீர்வார் பைம்புதல்'என்ற குறுந்தொகைத் தொடருக்கு உ.வே. சாமிநாதையர் அவர்கள் 'புதல் - செடிகளின் அடர்ந்து வளர்ந்த செறிவு. இஃது இப்பொழுது புதரென வழங்கும்' என்று பொருள் கூறுகின்றார்.[56] பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி 'புதல்' என்ற சொல்லுக்கு தூறு, புற்சாதி, அரும்பு முதலிய பொருள்களைத் தருகின்றது.[57] இவற்றுள் தூறு என்பது புதரைக் குறிக்கும். புற்சாதி என்பது திவாகர நிகண்டின் கருத்தைக் கொண்டு கூறப்பட்டுள்ளது. நிலத்தோடு காணப்படும் சிறுதாவரம் என்பதே இதன் குறிப்பு. 'அரும்பு' என்ற பொருளுக்கு அகராதி காட்டும் சான்று, 'பூத்த முல்லைப் புதல்சூழ் பறவை'

என்ற பதிற்றுப்பத்தின் தொடராகும்'[58] இங்கு, 'பூத்த முல்லை' என்ற குறிப்பே மலரைச் சுட்டுகின்றபடியால், 'அரும்பு' என்ற பொருள் மிகையாகத் தோன்றுகின்றது. மேலும், 'முல்லைப் புதலிடத்தே' என்று முல்லைக்கொடி செறிந்த புதர் அல்லது அக்கொடி செறிந்து விளங்கும் புதர் என்பதுதான் இத்தொடரின்வழி அறியப்பெறும் பொருள். எனவே, 'புதல்' எனும் சொல்லுக்கு, 'அரும்பு' எனும் பொருள் இந்த இடத்தில் பொருந்தவில்லை.

புதர் என்பது செடி, கொடி, புல் முதலியன அடர்ந்து விளங்குதலே இயல்பு. எனவே, அப்பொருளுடைய புதல் என்றும் சொல் இம்மூன்றும் கலந்த நிலையையே குறித்தல் இயல்பு. இருப்பினும் சங்க இலக்கியத்துள் புல்லினம் தனித்தே சுட்டப்பெறுகின்றது. அவ்வாறே, செடிகளும் கொடிகளும் தம்முள் கலந்து காணப்பெறும் காட்சியைக் கூறுமிடத்து, புதலையும் கொடியையும் வேறுபிரித்தே கூறுகின்றனர்.

'புன்கொடி முசுண்டைப் பொறிப்புற வான்பூப்
பொன்போற் பீரமொடு புதற்புதன் மலர'[59]
'பனிப்புத லிவர்ந்த பைங்கொடி யவரை'[60]
'இவர்கொடிப் பீர மிரும்புதன் மலரும்'[61]

என்றவாறு செடிகளும் கொடிகளும் மயங்கிய நிலையைக் குறிப்பிடும்போது, செடியை வேறுபடுத்தியும் கொடியை வேறுபடுத்தியும், மயங்காது கூறும் சங்க மரபு அறியப்படுகிறது.

'புல்லும் மரனும் புதலும் பூடும்
வல்லியும் பெயர்பெறு மருந்துச் சஞ்சீவி'

என்ற மருந்துநோக்கு வகைப்பாடு உணர்த்துகின்றது.

சங்க இலக்கியத்துள் புதல் பற்றி வரும் குறிப்புகளின்வழி செடியினத்தின் இயல்புகளை அறியலாம். செடிகள் கார்காலத்திலேயே தழைத்து வளர்ந்து பூக்கும் இயல்பின. இதனை, 'கொண்டன் மலர்ப்புதன் மானப்பூ வேய்ந்து'[62] என்று மதுரைக்காஞ்சி குறிப்பிடுகின்றது. 'பாசிலைப் பொதுளிய புதல்' என்ற குறிப்பு இப்புதல், புல்லினத்தை விலக்கிச் செடி இனத்தையே குறித்தது என்பதற்குச் சான்றாகும்.[63] ஒரு குறிப்பிட்ட செடியின் இனமே அடர்ந்து காணுதலையும் 'புதல்' என்று வழங்குவதை, 'தண்புதற் பகன்றை' என்ற குறிப்பு உணர்த்துகின்றது.[64] அன்றியும், பல்வேறு செடிகளும் தம்முள் கலந்து விளங்கும் நிலையைச் சுட்டுதல், 'சேணாறு பிடவமொடு பைம்புத லெருக்கி' என்ற முல்லைப்பாட்டுக் குறிப்புவழி பெறப்படுகிறது.[65] புதர்களின்மீது கொடிகள் படர்ந்து விளங்கின.[66] இப்புதர்கள் வருவார் ஒழிந்த மன்றங்களிலும், புற்றுகளிலும், பொதியில்களிலும் வளர்ந்து செறிந்திருந்தன.[68] மேலும், 'ஆண்மான், கார்காலம் தந்த மயக்கத்தில் பெண்மானைத் தழுவியபடி புதரிடத்தே மறைந்தொதுங்கும்' என்றவழி, மான்களை மறைக்கும் இயல்பினால் புதர்கள் ஓங்கி வளர்ந்திருக்கும் நிலை சுட்டப்படுகிறது.[69] 'புதல்போற் குரம்பை' என்பதனால், 'குடிசைபோன்ற புதர்' என்று அதன் உயர்ச்சியும் அடர்வும் விளக்கப்படுகின்றன.[70]

## கொடி

தாவர இனங்களுள் மிகவும் நீண்டு வளரக்கூடிய ஆனால் தாமாகவே தனித்து நிற்கும் ஆற்றலின்றி மரம் முதலான பிறபொருள்களைச் சார்ந்து வளரும் தாவரம் கொடி இனமாகும். இவற்றின் தண்டுகள் மிகமெல்லியனவாக, கயிறு போன்று அமைந்திருக்கும். இவை தம் வளர்ச்சிக்கு வேண்டிய காற்றையும் சூரிய ஒளியையும் பெறுவதற்காகப் பிற மரம் செடிகளின்மீதேறிச் சுற்றிப் படர்ந்து வளர்கின்றன.

கொடிகளை அவற்றின் வளரியல்பின் அடிப்படையில் வேர்க்கொடி, படர்க்கொடி, பற்றுக்கம்பிக்கொடி, சுற்றுக்கொடி, பெருங்கொடி என்று ஐவகையாகப் பிரிப்பர்.[11] கணுக்கள் தோறும் வேர்களை உண்டாக்கி, அவ்வேர்களைக்கொண்டு தம்மைத் தாங்குகின்ற பொருள்களின்மீது தம் தண்டுப் பகுதியைப் பதியவைத்துக்கொண்டு வளர்வன வேர்க்கொடிகள். கிளைகளின்மீது தோன்றும் முட்களின் துணைகொண்டு பிற மரஞ்செடிகளில் படரும் கொடியினம் படர்க்கொடியாகும். இவற்றுள் முழுமையும் முட்கள் நிறைந்தன, கிளைகளே முட்களாக மாறும் இயல்பின. பூங்கொம்புப் பகுதியே முட்களாக மாறும் தன்மையன என பலவகைகள் உள்ளன.

சார்புப்பொருளைப் பற்றுதற்குத் தனியே உறுப்புகளின்றி, தாமே சுற்றிப்படரும் கொடியினம் 'சுற்றுக்கொடி' எனப்படும். சாட்டை நுனி போன்ற நீண்ட தண்டுகளையுடைய இக்கொடி,

ஒரு குறிப்பிட்ட உயரம்வரைச் செங்குத்தாகவே வளரும். அதன்பின்னர் மெதுவாகச் சுழலத்தொடங்கி, பற்றுக்கோடு கிடைத்தவுடன் அதனைச் சுற்றி வளரும். இவ்வகையுள் வலஞ்சுற்றுவன, இடஞ்சுற்றுவன என இருவகை உண்டு. இச்சுழற்சித்தன்மை புவியீர்ப்பு விசை அடிப்படையினது என்பர்.[72] சார்புப்பொருள்களைப் பற்றிப்படர்தற்கு, பற்றுக்கம்பிகள் எனும் மெல்லிய உறுப்புகளைத் தோற்றுவிப்பன 'பற்றுக்கம்பிக் கொடிகள்' ஆகும். இதன் கம்பிகள் உற்றுணர்வு உடையனவாய், ஏதேனும் சார்பு தன்மேல் பட்டதும் வெகுவிரைவாகப் பிடிப்பைச் சுற்றிச் சுருண்டுகொள்ளும் இயல்பின. இக்கம்பி நெருக்கமான சுருள்களாக அமைந்துவிடுவதால் கொடிகள் தம் சார்புபொருளைக் கெட்டியாகப் பிடித்துக்கொள்கின்றன. மேலும் இக்கம்பிகள் மின்சக்தியுடையனவாய் விளங்குதலின் எவ்வகைப் பெருங்காற்றிலும் தம் பற்றுக்கோட்டினைவிட்டுப் பிரிந்துவிடாது நிற்கும். சார்புப்பொருள் சுவராக இருப்பின் சுருள்களை வில்லைகளாக மாற்றிக்கொண்டு பதிய வைக்கும் ஆற்றலும் அவற்றுக்கு உண்டு. 'பெருங்கொடிகள்' என்பன மற்ற கொடிகளைவிட மிகுந்த உயரமாக வளர்வதோடு, தண்டுகள் பருத்திருக்கும் இயல்பாகும். இவற்றின் தண்டுகள் சில நாடாக்களை ஒத்தும், சில தோரணம் போன்றும், இன்னும் சில மலைப்பாம்பைப் போலவும் காணப்பெறும். இவற்றின்

நீர்க்குழாய்கள் பிற மரம் செடி கொடிகளைவிட மிகப்பெரியனவாக இருக்கும் என்பர்.[73]

தாவர இனப் பெயரீட்டுள் 'மரம்' போன்றே, 'கொடி' எனும் பெயரும் பழமையானது. பழந்தமிழ் இலக்கியங்கள் கொடியினம் பற்றிக் கூறியுள்ளன. கொடி என்ற சொல்லுக்குப் பல்வேறு பொருள்களைப் பேரகராதிகள் சுட்டுகின்றன. அவை கொடுமை, படர்க்கொடி, சித்திரமூலம், ஆடை புலர்த்துங்கொடி, கொப்பூழ்க்கொடி, கழுத்தணி வகை, அரைஞாண், ஏற்றத்தில் காணும் கயிறு அல்லது கோல், கண்ணில் காணும் வரி, புருவம், நீளம், சிறுகிளை, வாய்க்கால், கொடிக்கம்பம், காற்றாடி, பிரமதண்டங்கொடி என்னும் காலத்துவக போகம், கேது, காக்கை, கிழக்குதிசை, பக்க அடுப்பு, அவிட்டம் என்பனவாகும்.[74] இவற்றுள் அவிட்டம், கிழக்குதிசை, காக்கை காலத்துவசபோகம் என்பன நீங்கலாக, பிற அனைத்தும் அடிப்படையில் ஒற்றுமையுடையனவாக கருதப்படுகின்றன.

கொடி என்னும் சொல்லுக்கு அகராதிகள் கூறும் பொருள்களை நோக்க, அவை தாவரக்கொடியைச் சுட்டுவதோடு, நீண்டு மெலிந்த தன்மை, வளையும் தன்மை, தொடர்ச்சியறாத் தன்மை, குழாய் போன்ற அமைப்பு போன்ற பண்புகளின் அடிப்படையில் பிறபொருள்களையும் குறித்து நிற்றல் பெறப்படுகிறது. இத்தன்மைகள் யாவும் கொடியினத்தில் இருத்தல் தெளிவுறுத்தப்படுகின்றது. எனவே, தாவர இனமாகிய

கொடியினத்தைக் குறித்த 'கொடி' என்னும் சொல்லே பின், அமைப்பாலும் பண்பாலும் அதனோடு ஒப்புமையுடைய பிறபொருட்களுக்கும் ஆகி வந்தது என்று கொள்ளலாம்.

கொடியின் அமைப்பு கயிறு போன்று மெலிந்து நீண்டிருக்கும். இவ்வமைப்பு ஒப்புமை கொண்டு ஆடை யுலர்த்தும் கொடி அப்பெயர் பெற்றது. கொப்பூழ்க்கொடி மென்மை, நீட்டம் ஆகியவற்றோடு உட்துளையும் உடையது. கழுத்தணி வகையும் மென்மையும் நீட்டமும் கொண்டு கயிறு போன்ற அமைப்பினது. அரைஞாணும் அத்தகையதே. மெலிந்து வளைந்த தோற்றமுடையது புருவம். ஏரியிலிருந்து நீர் கொண்டுச் செல்லும் வாய்க்காலும் நீளம் மற்றும் தொடர்ச்சி பற்றி கொடி எனப்பட்டது. சிறுகிளை போன்ற அமைப்பும் கொடி எனப்படும். அதுபோன்றே கண்வரியும், சிறுகிளை போலப் பிரியும் தன்மையால் அப்பெயர் பெற்றது. அவ்வாறே தொடர்ச்சி எனும் பொருளால் கொடி எனும் பெயர் பக்க அடுப்புக்கும் ஆகி வந்தது. பிறவும் இவ்வாறே கொடிக்குரிய தன்மை பற்றியே இப்பெயர் பெற்றிருத்தல் வேண்டும் என்பது இதன் கருத்தாக அமைகின்றது.

திராவிட மொழிக் குடும்பத்திலும், இக்கொடி எனும் சொல் கொடி, கொரி, க்விரி, குரி என்றவாறு சிற்சில ஒலித்திரிபுகளுடன் அமைந்து, கொடியினம், கொப்பூழ்க்கொடி, நீண்டதும் மெல்லியதுமாகிய பொருள்கள் முதலான பொருள் நிலைகளில் வழங்குகின்றது.[75]

சங்க இலக்கியத்தில் கொடியினம் பற்றிய செய்தி இடம்பெறும் நிலையில் பெரும்பாலும் அக்கொடிகளின் பூத்து விளங்குந் தன்மையும், சிறுபான்மை அவை கொம்பைச் சார்ந்திருக்குந் தன்மையுமே சுட்டப்பட்டுள்ளன. அவ்வாறு கொடிகள் பூத்து விளங்குதந்தன்மை இடம்பெறினும், பூ அடிப்படையில் அமைந்த கோட்டுப்பூ முதலான நால்வகை வகைப்பாட்டினுள் ஒன்றாகிய 'கொடிப்பூ' என்ற வழக்கு சங்க இலக்கியத்துள் இடம்பெறவில்லை என்பது முன்னர்க் கூறப்பட்டது. கொடியினம் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்துள், 'கொடி' என்ற இனச் சுட்டுடனேயே பெரும்பாலும் காணப்பெறுகின்றன. மேலும், 'கொடி' என்ற அவ்வினச் சுட்டுப்பெயருடன் அவ்வக் கொடியினங்களின் அடை புணர்த்துக் குறிப்பிடும்போது அக்கொடிகளின் இயல்பு புலனாதல் காண்கிறோம்.

'நுண்கொடி', 'புன்கொடி', 'மென்கொடி' என்பன மெலிந்த தண்டுப்பகுதியுடைய கொடிகளைச் சுட்டுவனவாகும்.[76] 'பருஉக் கொடி' என்ற அடைமொழி, பருத்த தண்டினை உடைய கொடியினத்தை உணர்த்தும்.[77] 'நெடுங்கொடி', 'மாக்கொடி' என்பன கொடியின் நீட்சியை உரைப்பனவாகும்.[78] 'கொழுங்கொடி', 'பூங்கொடி', 'ஏர்க்கொடி' என்பன கொடியின் வளமான நிலையைக் கூறுவனவாகும்.[79] அவ்வாறே 'வெண்கொடி', 'கருங்கொடி', 'செங்கொடி', 'பைங்கொடி' என்ற

அடைகள் அக்கொடிகளின் நிறங்களை உணர்த்தி நிற்கின்றன'[80] மேலும், கொடிகளின் படரியல்பு அடிப்படையிலான வகைப்பாடாகிய 'படர்க்கொடி', 'சுவர்க்கொடி' என்பவற்றை, முறையே தவழ்கொடி, கொம்புசேர்க்கொடி என்ற அடைமொழிகள் எடுத்துரைக்கின்றன.[81]

கொடிகள், தண்டுப்பகுதியால் தம் சார்புப்பொருளைப் பற்றிக்கொண்டு சுற்றும் நிலையில், அவை சுற்றும் இயல்பில், வலஞ்சுற்றுதல், இடஞ்சுற்றுதல் என்ற இருவகை நிலைகள் காணப்படுகின்றன. இவற்றுள் வலமாகச் சுற்றும் கொடியை மலைபடுகடாம் குறிப்பிடுகின்றது.[82] தமக்குரிய உணவைத் தாமே தயாரித்துக்கொள்ளாது, பிறதாவரங்களினின்று பெறும் சாறுண்ணிவகைத் தாவரங்களுள் கொடியினங்களும் இடம்பெற்றுள்ளமையை,

> 'செல்லுநீ ளாற்றிடைச் சேர்ந்தெழுந்த மரம்வாடப்
> புல்லுவிட் டிறைஞ்சிய பூங்கொடி'[83]

என்ற கலித்தொகை வரிகள் உணர்த்துகின்றன.

பாலை நிலத்தில் பசுமை காணாத் தாவர இனங்களிடையே இக்கொடி மட்டும் பூக்குந்தன்மையதாக உள்ளது என்பதால், இக்கொடி சாறுண்ணிக்கொடி என்பது பெறப்படுகிறது. எனவேதான், அக்கொடிய பாலை நிலத்தின்கண் உரனுடைய மரம் வறட்சியைத் தாங்கி நின்ற நாள்வரை, தானும் பொலிவுடன் விளங்கிப் பின்னர் அம்மரம் வாடும்போது அக்கொடியும் பசுமையற்று வாடத்தொடங்குகிறது.

## புல்

பூ அடிப்படையில் அமைந்த நால்வகை வகைப்பாட்டினுள் 'புல்' இடம்பெறவில்லை. எனினும் சங்க இலக்கியத்துள் இது தனித்த வகைப்பாடாகவே சுட்டப்பெறுகின்றது. தாவரவியலடிப்படையில் நோக்க, 'புல்' ஒற்றைவிதையிலைக் குடும்பத்தைச் சேர்ந்தது.[84] புல்லினம் பூக்குந்தன்மையது. எனினும் இதன் பூங்கொத்து தனிப்பூவன்று, சிறு கதிராக விளங்குவது. ஒவ்வொரு சிறுகதிரிலும் ஒரு பூ அல்லது சில சிறுபூக்கள் இருக்கும். எனினும் பொதுவாக ஐந்து பூக்களுக்குமேல் இருப்பதில்லை. இவை ஒரு சிறு பூத்தண்டு அல்லது அச்சிலேயே விளங்கும்.[85] எனவே புல்லினம் பூக்குந்தாவரமே எனினும் அதன் பூவைப் பூவெனக் கொள்ளாது, அப்பூ இணைந்த தண்டுப்பகுதியையும் சேர்த்துக் கதிரென்றே கொள்ளுவதால் இதனைச் சங்கத்தமிழர் பூவகையுள் இணைக்கவில்லை என்பது பொருத்தமானதாகும்.

புல்வகையுள் பெரும்பாலானவை அளவில் சிறியனவாகும். ஒருசில புல்லினங்களே மிக உயரமாக வளர்கின்றன. இவ்வினத்தைப் பொதுவாக ஒரு பருவம் வாழ்வன, பல பருவம் வாழ்வன என இரண்டாகப் பிரிப்பர்.[86] பல பருவப் புல்லினங்கள் பெரும்பாலும் அவற்றின் கணுக்களினின்றே கிளைகள் உண்டாகி வளர்கின்றன. மேலும் இவற்றுக்கு மட்டத்தண்டுக்கிழங்கு உண்டு. எனவே, தண்டிலேயே

கணுக்கள் விளங்குகின்றன. அதனால், தண்டின் மேலுள்ள பகுதி பருவந்தோறும் அழிய, தண்டிலிருந்து புதிதாக இலைகள் முளைத்து வளரும்.

புல்லினங்களின் தண்டுகள் குழாய் வடிவினவாகும். இலைகள் மாற்றொழுங்கிலும் சிறுபான்மை நேர்வரிசையிலும் அமைந்து விளங்கும். இலையின் அகன்ற அடிப்பகுதி உறைபோன்று, தண்டைச் சுற்றி மூடியிருக்கும். இலையின் அடிப்பகுதியிலேயே வளர்திசு அமைந்திருப்பதால், இலைகள் மேற்பகுதி விலங்குகளாலும் மனிதராலும் அழிவுற்றபோதும், மீண்டும் வளர்ந்துவிடும் இயல்பினவாக அவை திகழ்கின்றன.[87]

புல் என்ற சொல்லுக்குப் பல்கலைக் கழகத் தமிழ்ப்பேரகராதி புன்மை, புறக்காழன, திரண சாதி, புதர், தாவரவர்க்கம், புன்செய்த் தானியவகை, மருந்துச்செடி வகை, விலங்குகட்கு உணவாகும் பூண்டுவகை, பனை, தென்னை, சிறுமை, அனுடம், செந்நிறம், புணர்ச்சி, சிவல், புலி என்றினைய பொருள்களை வழங்குகின்றது.[88] இப்பொருள் நிலைகளைக் காண 'புல்' என்ற வழக்கு, பெரும்பாலும் தாவர இனச் சுட்டாகவே விளங்கியமை பெறப்படுகிறது. எனினும், இன்று 'புல்' என்பது புல்வகையினங்களையே குறிக்கும்.

சங்க இலக்கியத்துள் புல்லினம் பற்றிக் குறிப்பிடும்போது ஊகம், அறுகை, நரந்தம் முதலிய வகைகளை இனச்சுட்டின்றிச் சுட்டும் நிலை காணப்படுகிறது.[89] அன்றியும், பசும்புல், நுண்புல்,

முற்றா இளம்புல், முளிபுல் என்றவாறு பெயர் சுட்டாது, பொதுநிலையில் இனம் சுட்டிச் செல்லுந் தன்மையும் அமைந்து விளங்குகின்றது.[90] 'புல்லுடை வியன்புலம்'[91] மான் முதலியன மறைந்து விளங்கும்படியாக உயர்ந்து விளங்குதல்[92] 'யானை முதலியன நடத்தலின் புல் சாய்ந்த நிலை'[93] முதலிய குறிப்புகள் புல்வகையையே குறித்ததாகப் பொதுவாகக் கொண்டாலும், சிறுபான்மை புல்லினங்களும், சிறுசெடிகளும் வளர்ந்து செறிந்த நிலையைச் சுட்டுதற்கும் இடமுண்டு. ஏனெனில், 'புல்லும் புதலும் புற்சாதி' என இரண்டையும் ஒன்றாகவே கருதும் போக்கை நிகண்டுகள் காட்டுகின்றன. அவற்றுக்கேற்ப, அறுகும் நெருஞ்சியும் சேர்ந்து விளங்கும் மன்றக் காட்சியைச் சங்க இலக்கியம் காட்டுகின்றது.[94] எனவே, புல்லைத் தனிநிலையில் சுட்டும்போதே, அது புல் வகையைக் குறித்தது என்பதும், புல் செறிந்த நிலையைக் கூறுமிடத்து, அது புல்வகையை மட்டுமன்றிப் பிற செடியினங்களும் கலந்து விளங்கும் புதர்நிலையைச் சுட்டுந் தன்மையது என்பதும் இவண் கருதத்தக்கது.

## பூடு

பூடு என்ற சொல்லுக்குச் 'சிறுசெடி' என்றும், பூண்டு என்பதற்குப் பூடு, உள்ளிப்பூடு, சிற்றடையாளம் என்னும் அகராதி பொருள் தருகின்றது.[95] எனவே, பூண்டு, பூடு என்ற

இரண்டுமே ஒரு சொல் என்பதாகும்.

'புல்லாகிப் பூடாகி' என்ற திருவாசகக் குறிப்பு பூண்டினத்தைப் புல்லினின்று வேறுபடுத்திக் காட்டுகின்றது.[96] எனவே, புல்லோடு ஒத்த ஆனால் அமைப்பில் வேறுபட்ட சிறு செடியினத்தையே மாணிக்கவாசகர் குறித்திருத்தல் கூடும். கம்பராமாயணம், 'ஓர் பூடும் ஆடுதலில்லை இப்புவியில்' என்று பொதுநிலையில் தாவரத்தைச் சுட்டுகின்றதேயன்றி வளரியல்பில் அதன் வகையைச் சுட்டவில்லை.[97]

எனவே, பூடு என்பது செடியினத்தைக் குறித்தது எனினும், செடி, புதல் என்ற சொற்களுடன் இதற்குள்ள வேறுபாடு சொல்லளவினதா அல்லது பொருளளவினதா என்றோர் ஐயம் எழுகிறது. பிங்கல நிகண்டு,

'புல்லும் மரனும் புதலும் பூடும்
வல்லியும் பெயர்பெறு மருத்துச் சஞ்சீவி'

என்று புல், புதல் ஆகியவற்றோடு பூடு வகையையும் சுட்டுகின்றது. திவாகர நிகண்டும் இவ்வாறே கூறுகின்றது. இவற்றை நோக்க, புதல் என்ற சொல் பெருஞ்செடிகளைக் குறிக்க, 'பூடு' என்பது சிறு செடியினத்தைச் சுட்டிற்று என்று கொள்ளலாம். ஆனால் புதல் என்ற சொல் செடிகளின் செறிவைச் சுட்டும் சொல்லாகவே இலக்கியத்துள் வழங்கியமை முன்னர்க் கூறப்பட்டது. மேலும், இச்சொல் இன்று 'புதர்' என மருவி அதே பொருள்நிலையில் வழங்குவதும் இவண் கருதத்தக்கது. 'செடி' என்ற சொல்லின் பொருள் நிலையை நோக்க, தனியொரு

செடியைக் குறிக்கும் சொல்லாக இன்று வழங்குகிறதெனினும், இடைக்காலத்தில் இச்சொல்லும் செடிகள் செறிந்த நிலையையே சுட்டுகின்றது. சான்றாக, 'செடியார் பெண்மை', 'செடிகொள் வான்பொழில்' முதலான வழக்காற்று நிலைகளை நோக்கும்போது, செடிகள் அடர்ந்த நிலையையே பெறப்படுகிறது. ஆனால் பூடு என்ற சொல் செடிகளைத் தனிநிலையில் சுட்டுதல் இவண் கருதத்தக்கது. மேலும், செடி என்ற சொல் தொடக்ககாலத்தில் தாவரத்தைக் குறிப்பதைக் காட்டிலும், நெருக்கம், இழிவு முதலான பொருள்களைக் குறித்தலே, பெரும்பான்மை. எனவே புதல், பூடு என்பன செடிக்கு முற்பட்டு வழங்கின. இவற்றுள்ளும் 'புதல்' என்ற சொல்லே தொன்மையானது. எனினும் அச்சொல் செடிகளின் செறிவை மட்டுமின்றி, புல், கொடி, செடி முதலியன தம்முள் மயங்கி அடர்ந்த நிலையையும் சுட்டியமை முன்னர்க் கூறப்பெற்றது. இந்நிலையிலேயே செடியினத்தை வேறுபடுத்தி அறியவும், தனியொரு செடியைச் சுட்டவும் 'பூடு' எனும் சொல் தோன்றியிருக்க வேண்டும். பின்னர், புதர் என்ற சொல் தாவரங்கள் செறிந்த நிலையைச் சுட்டும் சொல்லாகப் பொருள் மாற்றம் பெற்ற நிலையில் இழிவு, நெருக்கம் என்ற பொருளுடைய செடி எனும் சொல் இவ்வியல்புகளைப் பெற்ற செடியினத் தொகுதியைச் சுட்ட வழங்கலாயிற்று. அதன் பிறகு, செடி என்ற சொல்லே, செடிகளின் செறிவை மட்டுமின்றி, தனியொரு

செடியையும் குறித்து வழங்கிய நிலையில் பூடு என்ற சொல் செடியினத்துள்ளும் மிகச்சிறிய வளர் இனங்களையும் குறுகிய வாழினங்களையும், வகையறியப்பெறாத செடிகளையும் சுட்டும் சொல்லாக விளங்கலாயிற்று. இன்றும் பெயரளவில் மட்டுமே அறிந்த தாவரத்தை அகராதிகள் 'ஓர் பூர்' என்று குறிப்பிடக் காண்கிறோம். அன்றியும் புல்லினத்துள்ளும் ஒருசார் பூடு எனக் குறிக்கப்படுகிறது. உள்ளியைப் (வெள்ளைப் பூண்டு) 'பூண்டு' என்றே வழங்குதல் உலக வழக்காக கருதப்படுகிறது. இஃது அமைப்பில் புல்லினச் சார்பினதாக அமைகிறது.

எனவே, பூடு என்ற வழக்கு, தொடக்ககாலத்தில் செடியைக் குறித்துப் பின்னர் செடியினத்துள்ளும் சிறுதாவரங்களைக் குறித்து, அதன்பின் சிறு செடிகளையும் பெரும்பான்மை புல்லினங்களையும் குறிக்கலாயிற்று. இன்றைய வழக்கில், சிறுசெடி, குறுகிய வாழ்வுடைய செடி, பெயர் அறியாத செடி, பெயரளவில் அறிந்த ஆனால் அடையாளம் காணமுடியாத செடி முதலியவற்றைக் குறிக்கப் 'பூடு' எனும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர்.

## மருந்தாக்க நிலையில் மரம் செடி கொடிகள்

மருந்தாக்க நிலையில் மரம், செடி, கொடிகளாகிய இத்தாவரங்களை நோக்கும்போது அவை பொடித்தல், சாறெடுத்தல், ஊறவைத்தல், புடமிடுதல், காய்ச்சுதல்,

வேகவைத்தல் என்ற நிலைகளில் முறையே நேரடி மூலப்பொருட்களாகவும், மருந்தாக்கத் துணைநிலைக் காரணிகளாகவும் அமைகின்றன. சான்றாக குறிப்பிடும்போது குப்பைமேனி, நிலவாகை, கையாந்தகரை, சிறுசெருப்படை முதலியவற்றாலாகிய தூள் மருந்தில் அவை அனைத்தும் நேரடி மூலப்பொருட்களாகவே அமைகின்றன என்று கூறலாம். பாதிரிவேர், உப்பு, மிளகு, வெற்றிலைச்சாறு ஆகியவற்றைக்கொண்டு இயற்றப்பெறும் மருந்தில் பாதிரிவேரும், மிளகும் நேரடி மூலப்பொருளாக அமைகின்றது. வெற்றிலைச்சாறு, அவற்றை வேகவைத்தற்குரிய காரணியாக விளங்குகின்றது. இவ்வாறு அரைத்தல், வேகவைத்தல் என்ற நிலைகளேயன்றி, மருந்துப்பொருள்களைப் பூசுவதற்கு உரிய குகையாகத் தாவரப்பொருளாகிய தேங்காயையே பயன்படுத்துதல் இவண் நோக்கத்தக்கதாகும்.

## ஆடவர் நோய்கள்

மனிதப் பிறவியில் ஆண் - பெண் என்ற இனப்பாகுபாடு பிறப்பு உறுப்புகளின் அடிப்படையினது என முற்கூறியவாறு போன்றே பெண்களிடமிருந்து வேறுபட்டு அமைகின்றனர். ஆடவர்க்கென்றே குறிப்பிடக்கூடிய நோய்கள் இவ்வுறுப்பு சார்ந்தே அமைவனவாக இருக்கின்றது. அவ்வகையில் ஆணிடத்தே நேரும் ஆண்மைக் குறைபாடு, விரைவாதம்,

ஆண்குறியிடத்தே தோன்றும் புண் மற்றும் புற்றுநோய் முதலானவற்றை ஆடவர்க்கே தோன்றும் நோய்களாக் குறிப்பிடலாம்.

## ஆண்மைக் குறைபாடு

ஆணும் பெண்ணும் கூடி வாழும் தன்மையை, இல்லறம் என்று போற்றுவது நம் பண்பாடு. மனிதப்பிறவியின் படைப்பே ஆணும் பெண்ணும் கூடி வாழ்வதற்கேற்ற தன்மையுடையதாக அமைகின்றது. அவ்வாறு இருவரும் கூடுங்கால் பெறும் இன்பத்தைப் பிறர்க்கு விளக்கிச் சொல்ல ஒண்ணாது. தம் நெஞ்சத்திலுள்ளேயே கருதி மகிழும் தன்மை உடையதாகயிருக்கிறது. இக்காரணம் பற்றியே இதனை 'அகம்' என்று வரையறுத்தனர் நம் தமிழ்ச்சான்றோர்.[98] இத்தகைய இன்பத்தை முன்வைத்து உயிரினங்களைச் செயலாற்றச் செய்வதே இனப்பெருக்கத்திற்கு இயற்கை வகை செய்கிறது. எனவே, ஆண்-பெண் கூட்டத்தின் புறக்காரணம் இன்பமாக இருப்பினும் அகக்காரணம் இனப்பெருக்கமாகவே அமைகிறது.

ஆணின் பிறப்புறுப்பில் உற்பத்தியாவது 'விந்து'. இது சுக்கிலம் என்றும் அழைப்பர். இவ்விந்து, பெண்ணின் கருப்பையில் உருவாகும் 'கருமுட்டை'யுடன் இணைவதால் 'கரு' உண்டாகிறது. அவ்வாறு ஆணின் விந்து பெண்ணின் கருமுட்டையுடன் இணைவதற்கு அடிப்படையாகவே ஆண்-

பெண் கூட்டம் அமைகின்றது. அக்கூட்டத்தின்போது ஆண்குறியின் வழியே, ஆணின் விந்துவானது பெண்ணின் கருப்பைக்குள் செலுத்தப்படுகிறது. இப்புணர்ச்சிக்காலத்தில் குருதியானது நாளங்களின் வழியே ஆண்குறியிடத்தே ஒருசேரப் பாய்ச்சப்படுதலின், குறியெழுச்சி நிகழ்கிறது. விந்து வெளிப்பாட்டின் முடிவில் குறியில் பாய்ந்த குருதியோட்டம் நின்றுவிடுவதால் அது தன் முன்னிலையை அடையும்[99] என்று கூறுவர்.

கூட்டவின்பத்தின்போது, போதிய அளவு குறியெழுச்சி ஏற்படவேண்டும். மேலும், அவ்வெழுச்சி, சில நிமிடங்கள் வரை நீடிக்கவேண்டும். அப்போது தான் கூட்டத்தில் ஒத்த இன்பத்தை இருவருமே பெறவியலும். புணர்ச்சியின்கண் ஆணுக்குரிய இச்செயற்பாட்டுத் தன்மை 'ஆண்மை' எனப்படுகிறது.[100] இவ்வாண்மைத்தன்மை, ஆடவர்தம் விந்தாற்றலையே அடிப்படையாகக் கொண்டது. மனிதனுடைய அழகு, அறிவு, வீரம், நெஞ்சுரம் ஆகியவற்றுக்கு விந்தாற்றலே மூலமாக விளங்குகின்றது. எண்பது துளி குருதியின் சாரமே ஒருதுளி விந்து என்பர்.[101]

ஆண், இணைவிழைச்சில் மிகுதியாக ஈடுபடுவதாலும், தீய சிந்தனைகளாலும், தகாத நடத்தைகளினாலும், விரைந்த விந்தொழுக்கு, கனவு விந்தொழுக்கு முதலியன ஏற்பட்டு, சுக்கிலம் நட்டப்படுதலோடு, விந்தாற்றல் குன்றிப்போய்விடும்,

ஆண்குறியின் நரம்புகள் தளர்ந்து, கோசவெழுச்சிக்கு ஆதாரமாகிய, உடலின் குருதியோட்டத்தை, அக்குறியிடத்தே ஒருசேர நிற்கச்செய்கின்ற சக்தி இல்லாமற் போகும். இதனால் கூட்ட இன்பத்தில் நாட்டம் குறையும். மேலும் இரைப்பை, ஈரல், இதயம், சிறுநீரகம், சுக்கிலக்குழல், விதைகள், ஆண்குறி ஆகிய உறுப்புகள் வலிமை இழந்துவிடும்.[102]

இவ்வாறு உடலுறுப்புகள் கேடுற்று அதன் காரணமாக, தலைவலி, மறதி, மயக்கம், உற்சாகமின்மை, அறிவு மந்தம், மனக்கவலை, ஊக்கமின்மை, உரமின்மை, சோம்பல், அயர்ச்சி, அஜீரணம், வயிற்றுவலி, நெஞ்செரிவு, பாரிசவாயு முதலியன தோன்றுவதற்கு வாய்ப்பு ஏற்படும். வாழ்க்கையின்மீது வெறுப்பும், பெண்களைக் கண்டால் நடுக்கமும் உண்டாகும். மேலும், கண்கள் ஒளி மங்கும். முதுகுத்தண்டின் உறுதி நீங்கிப்போவதால், இடுப்புவலி, நீரடைப்பு, கல்லடைப்பு, காக்கைவலி, மஞ்சட் காமாலை, இளைப்பு முதலான நோய்கள் தோன்றவும் வாய்ப்பு ஏற்படுகிறது. இவ்வாறு விந்தாற்றல், மனிதனுடைய ஆண்தன்மைக்கு மட்டுமன்றி, அவனுடைய நல்வாழ்வுக்கும் ஆளுமைக்கும் மூலமாக விளங்குகின்றது. இக்காரணம் பற்றியே, 'விந்து விட்டவன் நொந்து கெட்டான்' எனும் பழமொழி நம் நாட்டில் வழங்கப்பெறுகின்றது. இவ்வாறு விந்தாற்றல் குன்றி, கூட்டத்தில் ஆற்றலும் நாட்டமும் இல்லாமற்போகும் நிலையையே ஆண்மைக்குறைபாடு என்றழைப்பதுண்டு.[103]

## ஆண்மைக் குறைப்பாட்டை நீக்கும் மூலிகைகள்

ஆடவர்க்கு ஏற்படக்கூடியனவாகிய விந்துநட்டம், விரைந்த விந்தொழுக்கு, கனவுவிந்தொழுக்கு, ஆண்கட்குத் தளர்ச்சி, கூட்டத்தில் ஆற்றலின்மை, நாட்டமின்மை முதலிய காரணிகளை தன்னுட்கொண்ட இவ்வாண்மைக் குறைபாட்டைப் போக்கி, வாழ்வினை நல்குவனவாகப் பல மூலிகைகள் தமிழ்மருத்துவத்தில் உள்ளன.

விந்து நட்டம் போக்குவனவாக வைத்திய சதகம் குறிப்பிடும் மூலிகைகளாக கோட்டம், இஞ்சி, சுக்கு, குளிரிவேர், செந்நெய்தல், நிலைப்பனைக்கிழங்கு, அமுக்கரா, சோளம், கூகைநீறு, கச்சோலம், இலவமரத்தின் சாறு, பிசின், குங்குமப்பூ, கடுக்காய், கொத்தமல்லி, இலுப்பைப்பூ, தண்ணீர்விட்டான்கிழங்கு, கோதுமை, வெள்ளைப்பூண்டு, சந்தனம், நெல், ஓரிதழ்த்தாமரை, சீந்தில், சீந்திற்சர்க்கரை, நெல்லி, அதிமதுரம், நன்னாரி, நெருஞ்சில், இளநீர், எள், பேரிச்சம், மகிழ், முந்திரி, வாழை, தும்பிலி, இலந்தை, திப்பிலி, சாரணை, முசுட்டை விதை, கற்கண்டு, சர்க்கரை, உளுந்து, தாமரைப்பூ, முருங்கை இலை, பூ, எனும் சிறுநாகப்பூ என்பனவாகும்.[104]

வைத்திய சாஸ்திரம் உடலுக்கு உறுதியுண்டாகும் வகையில் விந்துவை வலிமைபெறச்செய்து, புணராற்றலை வளர்க்கும் மூலிகைகளை உறுப்பு வாரியாகக் குறிப்பிடுகின்றது. அவை வருமாறு,

## விதை வகைகள்

சேங்கொட்டை, எட்டிக்கொட்டை, விழிவிதை, நத்தைச்சூரி விதை, முருங்கை விதை, தகரை விதை, தேற்றான் விதை, தாமரை விதை, வாலுழுவை விதை, விராலி விதை, கல்லால் விதை, ஆவாரை விதை, திருநீற்றுப்பச்சை விதை, நீர்முள்ளி விதை, அத்தி விதை, அரசு விதை, மருத விதை, பிராயின் விதை, கருவேலின் விதை, கருஊமத்தையின் விதை, இசுபக்கோல் விதை, ஆடுதின்னாப்பாளை விதை போன்வையாகும்.

## கிழங்கு வகைகள்

கருணைக்கிழங்கு, அப்பைக்கோவைக்கிழங்கு, கருடன்கிழங்கு, நிலப்பனைக்கிழங்கு, தாமரைக்கிழங்கு, தண்ணீர் விட்டான்கிழங்கு, கோரைக்கிழங்கு, அமுக்குராக்கிழங்கு, அல்லிக்கிழங்கு, கொடிக்கிழங்கு, காட்டுவள்ளிக்கிழங்கு, பழுப்பாகற்கிழங்கு, பூமிசர்க்கரைக்கிழங்கு, கல்லாரைக்கிழங்கு.

## பூ வகைகள்

செங்கொன்றைப்பூ, பாதிரிப்பூ, பன்னீர்ப்பூ, முருங்கைப்பூ, செவ்வல்லிப்பூ, அல்லிப்பூ, மைக்கொன்றைப்பூ, நாவற்பூ, மலுமிச்சம்பூ, நெருஞ்சிற்பூ, சிறுநாகப்பூ, குங்குமப்பூ, ஆவாரைப்பூ, நீலோற்பலப்பூ, இலவங்கப்பூ ஆகிய கிராம்பு, வெண்டாமரைப்பூ, தாமரைப்பூ, செங்கழுநீர்ப்பூ, காட்டத்திப்பூ,

யானைநெருஞ்சிப்பூ, நந்தியாவட்டம்பூ, மதனகாமப்பூ, செண்பகப்பூ, செம்பரத்தம்பூ, செம்பருத்தியின் பூ, செவ்வகத்திப்பூ, கடுக்காய்ப்பூ, துத்திப்பூ, தூதுவளைப்பூ, காட்டுமல்லிகைப்பூ, நாரத்தம்பூ, அரிநெல்லிப்பூ.

## பருப்பு வகைகள்

பேதனாப்பருப்பு எனும் சீமைமாதுளை விதை, வாதுமைப்பருப்பு, முந்திரிப்பருப்பு, சாரைப்பருப்பு எனும் காட்டுமாவின் பருப்பு என்பவையாகும்.

## கடைச்சரக்கு வகைகள்

உளுந்து, அபினி, கோட்டம், நெல்லிவற்றல், சீந்திற்சர்க்கரை, அதிமதுரம், மிளகு, சோம்பு எனும் பெருஞ்சீரகம், ஏலம், மராட்டி மொக்கு, கஸ்தூரி மஞ்சள், பொற்கடுக்காய், திப்பிலி, அபினியின் விதையாகிய கசகசா, பறங்கிப்பட்டை, குரோசாணியோமம், இலவங்கப்பட்டை, சாதிப்பத்திரி போன்றவையாகும்.

## கடைச்சரக்கு அல்லாத பச்சிலை வகைகள்

பாற்குரண்டி, கருவேல், பொற்றலைக்கையாந்தகரை எனும் மஞ்சட்கரிசாலை, பொன்முசுட்டை, வேங்கை, சீந்தில், கஞ்சா, சர்க்கரைவேம்பு, செங்கற்றாழை, கனிப்பிரண்டை, சிவகரந்தை,

புளிச்சக்கீரை எனும் செடிக்காசரை, செங்கத்தாரி, வல்லாரை, ஓரிலைத்தாமரை, எலிச்செவிக்கீரை.

### வேர் வகைகள்

அவுரிவேர், நன்னாரிவேர், அறுகின்வேர், விழிவேர், பனங்கோவைவேர், கட்டுக்கொடிவேர், பிரமிவேர், சிவனார்மூலி எனும் சிவனார்வேம்புவேர்.

### பிசின் வகைகள்

இலவம்பிசின், வாகைப்பிசின், விளாம்பிசின், முருங்கைப்பிசின், கருவேற்பிசின், கருங்காலிப்பிசின் போன்றவையாகும்.

### கனி வகைகள்

கர்ச்சூர் எனும் பேரிச்சம் கனி, முந்திரிப்பழம், விளாம்பழம், சமுத்திராப்பழம், வில்வப்பழம் போன்றவையாகு.

### பால்வகைகள்

ஆதளை எனப்பெறும் காட்டாமணக்கின் பால், பருத்தி விதைப்பால் ஆகியன[105]

விந்துநட்டம், விந்துவிளைவின்மை, கூட்டத்தில் ஆற்றலின்மை மற்றும் நாட்டமின்மை முதலிய

குறைபாடுகளைப் போக்கும் பண்பினவாகப் பல மூலிகைகளைப் பதார்த்தகுண விளக்கம் குறிப்பிடுகின்றது. அவைகள், அக்ரோட்டுப் பட்டை, அதிமதுரம், அத்திப்பால், அமுக்கிரா, அரசவித்து, அழுகண்ணி, அறுகீரை, ஆடுதின்னாப்பாளை, ஆமணக்குநெய், ஆலம்பால், இரேவல்சின்னி, இலவங்கப்பட்டை, இலை, பூ, இலுப்பைவேர், உருளைக்கிழங்கு, உளுந்து ஒட்டிக் கொட்டை, எலிச்செவியிலை, ஓரிதழ்த்தாமரை, அபினியின் விதையாகிய கசகசா, கடுக்காய்ப்பூவாகிய கற்கடகசிங்கி, கத்தக்காம்பு, கஸ்தூரிமஞ்சள், கமலா, கருங்காலிப்பிசின், கருவூமத்தை, கற்றாமரை, கறுப்புபலா, கலி மது, முருங்கையின் பூ, காய், வித்து, பிசின், வாதுமையின் பருப்பு, நெய், பிசின், வாழைப்பூ, வெண்குன்றிவிதை, வெந்தயம், வெண்நாவல், வேர்க்கடலை ஆகியனவாகும்.[106]

இவைபோயன்றி, அத்திப்பால், அபினி, ஆவாரை, ஆளிவித்து, இத்தி, ஊமத்தை வித்து, ஓரிலைத்தாமரை, கஞ்சா, கடலை, கருவேலம்பிசின், பருத்திப்பூ, பிரமதண்டு, பிரமி, பெருங்காயம், பானைநெருஞ்சில்முள், வெண்டைக்காய், வெற்றிலை என்பனவும் அமைந்து, இவ்வாண்மைக்குறைவினை நீக்குவனவாகக் கூறப்பெறுகின்றன.[107]

## மர இனம்

அக்ரோட்டு, அத்தி, அரசு, அரிநெல்லி, ஆல், இலவங்கம், இலந்தை, இலுப்பை, எட்டி, ஓதளை, கடு, கமலா, கருங்காலி, கருவேல், கல்லால், காட்டுமா, குங்கிலியம், கொய்யா, சந்தனம், சர்க்கரைவேம்பு, சாதிக்காய், சிறுநாகப்பூ, சீமை மாதுளை, செண்பகம், செவ்வத்தி, செவ்வாழை, சே, தாழை, தும்பிலி, தென்னை, தேற்றான், நாகேசுரம், நாவல், நெல்லி, பலா, பலாசு, பனை, பன்னீர்மரம், பாதிரி, பாலை பிராய், பிஸ்தா, பூனைக்கண்குங்கிலியம், பேரீச்சை, மகிழ், மரமஞ்சள், மருது, மலைவேம்பு, மா, மாதுளை முந்திரி, முருங்கை, வாதுமை, வாகை, வாழை, வில்வம், விளா, வெண்ணாவல், போன்றவையாகும்.

## செடியினம்

அரிசி, அமுக்குரா, அவுரி, அழுகண்ணி, அறுகீரை, ஆமணக்கு, ஆவாரை, ஆளி, இஞ்சி, இசுபக்கோல், இரேவல்சின்னி, உருளைக்கிழங்கு, உழுந்து, ஊமத்தை, எள், ஏலம், ஓரிதழ்த்தாமரை, ஓரிலைத்தாமரை, கஞ்சா, கடலை, கஸ்தூரிமஞ்சள், கரும்பு, கருவூமத்தை, கருப்புப்பலா, கல்லாரை, கற்றாமரை, காட்டத்தி, காட்டாமணக்கு, காட்டுவள்ளி, கார்போகி, காராக்கருணை, குரோசாணியோமம், குன்றி, கூகைநீறு, கையாந்தகரை, கொட்டி, கொத்தமல்லி, கோட்டம்,

சமுத்திராகோசி, சாலாமிசிரி, சிங்கரா, சிவனார்வேம்பு, சிறு அம்மான் பச்சரிசி, சிறுகீரை, சீமைக்கீரை, சீமை மாதுளை, செங்கத்தாரி, செடிக்காசரை, செம்பரத்தை, செம்பருத்தி, செருப்படை, தகரை, தண்ணீர்விட்டான், திருநீற்றுப்பச்சை, துத்தி, நத்தைச்சூரி, நந்தியாவட்டை, நாயுருவி, நீர்விடம், நிலக்குமிழ், நீர்முள்ளி, நெருஞ்சில், நெய்ச்சட்டிப்பூண்டு, பருத்தி, பன்னீர்செடி, பாற்சூரண்டி, பிரமதண்டு, புத்திரசீவி, பூனைக்காசலி, பூலா, பெருங்காயம், பெருஞ்சீரகம், வேர்க்கடலை ஆகியவை குறிப்பிடப்படுகின்றன.

## கொடியினம்

அப்பைக்கோவை, அதிமதுரம், அல்லி, ஆடுதின்னாப்பாளை, எலிச்செவி, கட்டுக்கொடி, கருடன்கொடி, கல்லாரை, களிப்பிரண்டை, குன்றிமணி, கொடிக்காசரை, சாரணை, சிறுபசளை, சீந்தில், செந்நெய்தல், செவ்வல்லி, தாமரை, திப்பிலி, தூதுவளை, நன்னாரி, நிலப்பூசணி, நெய்தல், பறங்கி, புல், பூ, காய், கனி, வித்து, பிசின், பால் முதலியவற்றால் பயன்தரும் பாங்கினதாகும்.

## பத்திய நோக்கில் மரம், செடி, கொடிகள்

தமிழ் மருத்துவத்தில் மருந்திற்குரிய முதன்மை பத்தியத்திற்கும் உண்டு. பத்திய முறையைக் காத்தலினாலேயே

மருந்து பலனுடையதாக அமையும்.[108] இப்பத்தியம் தவறினால் மருந்து பலனற்றுப்போவதுடன் நோய்கள் முன்பைக் காட்டிலும் அதிகமாக விரைந்து பரவும்.[109] மனிதனுக்குத் தோன்றக்கூடிய ஏழுவகை தோஷக்குற்றங்களில் பத்தியக்கேட்டினால் விளையும் குற்றமும் ஒன்றாகச் சுட்டப்பெறுதல் ஈண்டு நோக்கத்தக்கதாகும்.[110]

## பத்திய வகை

*பத்திய நிலையை அதனைக் கடைப்பிடிக்கும் முறைகளைக்கொண்டு இருவகைப்படுத்துவர். அவை இச்சா பத்தியம், கடும் பத்தியம் என்பனவாகும்.*[111] இவற்றுள் முறையே இச்சா பத்தியத்தை இலகு பத்தியம் என்றும், கடும்பத்தியத்தை, 'உப்பிலாப்பத்தியம்' என்றும் வழங்குவர்.[112] மிகுகடும்பத்தியம், பட்டினிப்பத்தியம் போல்வன தனி வகைகளாகவும் உள்ளன. இவைகள் இப்பத்திய நிலையில், உட்பிரிவுகளாக விளங்குகின்றன.

## இச்சா பத்தியம்

இச்சை என்ற சொல் விருப்பத்தைக் குறிக்கும். இதனைப் பொதுநிலையில் பொருள்கொள்ளாது, காமவிருப்பமாகக் கருதி, மருந்துண்ணுங்காலத்தே புணர்ச்சியைத் தவிர்த்தலே 'இச்சா பத்தியம்' என்பார்.[113] ஆனால், ஐம்புல ஆசைகளைக்

கட்டுப்பத்துதல் - குறிப்பாக உடலுறவு தவிர்த்தல் இருவகைப் பத்தியத்திற்கும் பொதுவானது.

'மருந்து தின்றிடின் பத்தியம் வகுத்திடா விடினும்
அருந்த வாகிடாப் பொருள்களை யகற்றலே வேண்டும்
பொருந்தி டாதுபெண் போகமோர் மருந்துக் கும்புவியல்
வருந்து வோருட லறிந்துபத் தியந்தனை வகுப்பாய்'[114]

என்றவழி பொதுவாகவே மருந்துண்ணுங்கால் பெண்போகம் விலக்கப்படுதல் அவசியம். கருவுற்றப் பின்புகூட கற்பமுண்ணுங்கால் சில மாதங்கள் வரை புணர்ச்சியை விலக்குதல் அவசியமாகின்றது. மேலும், இச்சா பத்தியம் இலகு பத்தியம் என்றும் கூறப்படுகிறது. இதனை விளக்கும் நிலையில் கடுகு, நல்லெண்ணெய், மா, கத்தரி, அகத்தி, மீன் முதலான மருந்து முறிவுப் பொருள்களை விலக்குதலைக் கூறி பின் போகத்தை விலக்குதல் என்ற விதியும் உண்டு என்று சாம்பசிவம்பிள்ளை அகராதி கருத்துரைக்கின்றது.[115] கடுகு, கடலெண்ணெய், அகத்திக்கீரை, சிறுகீரை, பூசணிக்காய், கொத்தவரை, காபி, தேயிலை, புகையிலை இவற்றை விலக்குதலே இச்சா பத்தியம் என்று கூறுவர்.[116] இவற்றால் இச்சா பத்தியம் உணவில் விரும்பியவற்றை விலக்குதலையே குறிப்பது தெளிவு. புணர்ச்சியை விலக்குதல் பத்தியத்தின் ஒரு கூறேயன்றி, தனியொரு வகையாகாது. எனவே, இச்சா பத்தியமாவது, கடும்பத்தியம்போல் பிணியாளரின் சுவை விருப்பு முழுமையையும் விலக்காது, கடைப்பிடித்தற்கு எளிய

முறையாகும். தாது பலம் குறைந்தால் நோய் அதிகமாவதற்கு ஏதுவாகும் என்பதால் புணர்ச்சியை விலக்குதல் இப்பத்தியத்திலேயும் கடைப்பிடிக்கப்படுகிறது என்றும், கடும்பத்தியத்திற்கு இன்றியமையாததாக விளங்குகிறது என்றும் கொள்ளுதல் ஏற்புடைத்ததாகக் கருதப்படுகிறது.

## கடும்பத்தியம்

இச்சா பத்தியத்தில் கூறியவற்றோடு உப்பு, புளி முதலியவற்றையும் விலக்குவது கடும்பத்தியமாகும்.[117] உணவிற்குச் சுவை தருவனவற்றுள் இன்றியமையாதது உப்பும், புளியுமே ஆகும். இவற்றையும் விலக்குதலின் இது கடும்பத்தியம் எனப்பட்டது. புளி, காரங்களைவிட உப்பே உணவிற்கு இன்றியமையாதது. இதனாலேயே, 'உப்பில்லாப் பண்டம் குப்பையிலே' என்ற பழமொழி எழுந்தது என்று கூறலாம். இத்தகு உப்பையும் விலக்குவதால் இதனை உப்பிலாப் பத்தியம் என்றும் வழங்குவர்.[118] தமிழ்மருத்துவத்தில் மருந்துகள், மூலிகைகளோடு, உலோக பாடாணங்கள் முதலானவற்றையும் கொண்டு மருந்தியற்றப்படுவதால் அம்மருந்தின் பலனை அடைய சிலநேரங்களில் கடும்பத்தியம் தேவைப்படுகிறது.

கடும்பத்தியத்தில் உப்பு, புளி ஆகியவற்றை வறுத்துச் சேர்க்கலாம் என ஒருசாராரும், அவற்றை முழுமையாக நீக்கிப் பத்தியம் காத்து, எண்ணெய் முழுக்கெடுத்தப்பின்

மறுபத்தியத்தில் வறுத்துச் சேர்க்கலாம் என்று பிறிதொரு சாராரும் கூறுவர்.[119] இப்பத்தியத்தில் பகல் தூக்கம் கூடாது. ஏனெனில், அத்தூக்கத்தினால் ஏற்படும் வெப்பம், சூரியவெப்பம், மருந்தின் வெப்பம், பத்தியத்தின் வெப்பம் ஆகியன உடலில் கூடி அளவற்ற நோய்களை உண்டாக்கும்.[120]

கடும்பத்தியத்திலேயே மிகுகடும்பத்தியம் என்றொரு நிலையும் கூறப்படுகிறது. இதன்கண் அரிசியைப் புதுமட்கலத்தில் உப்பின்றிச் சமைத்து உண்ண வேண்டும். உப்புநீர், கடற்காற்று, புளியமர நிழல் முதலியன உடல்மீது படவும் கூடாது. உவர்மண்ணைக் கையாலும் தொடக்கூடாது என்ற விதிகள் கூறப்படுகின்றன.[121]

உணவை முழுவதுமே விலக்குதலாகிய பட்டினி நிலையும் பத்திய வகையுள் கூறப்படுகிறது. இதனைப் பெரும்பாலும் வெப்பநோய்கட்கே விதிப்பர்.[122]

'உற்ற சுரத்திற்கும் உறுதியாம் வாய்வுக்கும்
அற்றே வருமட்டும் அன்னத்தைக் காட்டாதே'[123]

என்பார் மூலர். இதுவும் கடுமையான விதியாதலின் இப்பட்டினிப் பத்தியத்தையும் மிகுகடும்பத்தியத்துள் ஒரு பிரிவாகக் கொள்ளலாம்.

## பத்தியக்கால விதி

பத்தியத்தைக் கடைப்பிடித்தற்கு, மூன்று நாட்கள் முதல் ஒருமண்டலம் வரை காலம் விதிக்கப்பெறும். பட்டினிப்பத்தியம்

இருபத்தைந்து நாட்களுக்குமேல் நீட்டிக்கக்கூடாது என்பர்[124] எனினும், நோயின் நிலைக்கேற்பப் பத்தியத்திற்குரிய காலம் கூடவோ குறையவோ செய்யும். பத்தியத்திற்குரிய கால அளவேயன்றி, அக்கால எல்லையில் உணவு கொள்வதற்குரிய கால அளவும் கூறப்படுகிறது. சான்றாக, வாதசுரத்திற்கு, ஒன்பது நாழிகைக்குள் சிறு உணவு கொள்ளுதல் வேண்டும். பித்த சுரத்திற்குப் பத்து நாழிகைக்குள்ளும், ஐய சுரத்திற்குப் பன்னிரண்டு நாழிகைக்குள்ளும் உணவு கொள்ளவேண்டும்.[125] நோயின் தன்மைக்கேற்பப் பத்தியம் இருந்து, நோய் நீங்கிய நிலையில் அப்பத்தியம் முடிக்கப்பெறும். இவ்வாறு பத்தியம் முடிக்கும்போது, எண்ணெய் தேய்த்துத் தலைமுழ்கிப் பின்னர் விலக்கிய உணவுகளை மீண்டும் சேர்த்துக்கொள்ளுமாறு கூறப்படுகிறது.[126] நோய் முழுமையும் நீங்கா நிலையிலும் நோய் நீங்கியபோதும் உடல் நலன் கருதி, பத்தியம் தேவைப்படும் நிலையிலும் பத்தியம் மீண்டும் விதிக்கப்பெறும். இதனையே மறுபத்தியம் என்பர். சான்றாக,

'கடுமை யொன்றிடு பத்திய முளர் மறுத் துண்டல்
அடை வி லாமறு பத்தியத்துவர் வறுத் தருந்தல்
கொடுமை செய்புளிதன்னைச் சுட்டுக்கூட்டிட லன்றிப்
படியில் சுத்திரி சிக்குருப் பிஞ்சினைப் பருகல்'[127]

என்றவாறு, முதல்பத்தியம் கடுமையாகக் கடைப்பிடிக்கப் பெறுதலும், தொடர்ந்து அதனைக்காட்டிலும் சற்றே எளிதான முறையில் மறுபத்தியம் விதிக்கப்பெறுதலும் சுட்டப்பெறுகிறது.

## பத்தியத்தில் இடம்பெறும் பொருட்கள்

நம் அன்றாட வாழ்வில் இடம்பெறும் உணவு வகைகளை நோயின் தன்மை, மருந்தின் வன்மை, நோயாளரின் உடல்நிலை முதலானவற்றைக் கருதி ஒழுங்குபடுத்துதலே பத்தியம் ஆதலின், நாம் உணவாகக்கொள்ளும் தாது, உயிர், மூல வர்க்கப்பொருட்களே பத்தியத்திலும் கூறப்படுகின்றன.

## பத்திய நிலையில் மரம் செடி கொடிகள்

தாது முதலான மூவர்க்கப் பொருட்களும் பத்திய நிலையில் பெரிதும் சுட்டப்பெறுவது தாவரவர்க்கமே ஆகும். மேலும், பத்தியம் என்பது உணவு அடிப்படையில் ஆனது என்பது முன்னர்க் கூறப்பட்டது. இவ்வுணவு அடிப்படையில் நோக்க, 'உப்பு' ஒன்றே, நமது அன்றாட உணவில் இடம்பெறும் தாதுப்பொருள் ஆகும். இறைச்சி, மீன், பால், நெய் முதலான உயிர்வர்க்கப் பொருட்கள் சிலவும் நமது உணவில் இடம்பெறினும் அவை துணைப் பொருட்களாகவே அமைகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

தாவரப்பொருட்களே முதன்மை உணவுப்பொருட்களாய்க் கருதப்படுகின்றன. அவ்வகையில் உணவில் கட்டுப்பாட்டை விதிக்கும் பத்திய நிலையிலும் இத்தாவரப்பொருட்களே முதன்மை பெறுகின்றன. இவ்வாறு பத்திய நிலையில் முதன்மைபெறும் இத்தாவரங்கள் மருந்திற்கு ஏற்றன, ஏலாதன என்ற இருநிலைகளிலும் விளக்கப்பெறுகின்றன.

### மருந்திற்கேற்றனவாக அமைவது

அத்திப்பிஞ்சு, அப்பைக்கோவை, அவரைப்பிஞ்சு, இலந்தை, எலுமிச்சை, ஏலம், கண்டங்கத்திரி, கத்திரிப்பிஞ்சு, கருவாழைப்பிஞ்சு, பூ, காணா, கிள்ளுக்கீரை, கீரை, கொடிவழுதுணைக்காய், கோவை வற்றல், சிறுகீரை, சிறுபயறு, சிறுவழுதுணை, சீரகம், சுக்கு, சுண்டைக்காய், சுரைக்கொழுந்து, சுள்ளிக்கொழுந்து, தவசிமுருங்கை, துவரை, தூதுவளை இலை, மொட்டு, காய், நெற்பொரி, பரட்டைக்கீரை, பீர்க்கு, புடலம்பிஞ்சு, பெருங்காயம், பொன்னாங்கண்ணி, மணத்தக்காளி வற்றல், மாம்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, காய், கீரை, முள்ளிப்பிஞ்சு ஆகியன மருந்திற்கேற்ற உணவுப் பொருட்களாகச் சுட்டப்படுகின்றன.[128]

### மருந்திற்கு ஒவ்வாதனவாக அமைதல்

பொதுவாகவே மருந்துண்ணும் காலங்களில் கொள்ளு, குமட்டிக்காய், கொம்புப்பாகல், முற்றின அவரைக்காய், காராமணிக்காய், மாங்காய், மாதுளங்காய், தேங்காய், இளநீர், பாலைக்கீரை, சேப்பங்கிழங்கு, வள்ளிக்கிழங்கு முதலான கிழங்கு வகைகள், மா, பலா, வாழை ஆகிய முப்பழங்கள், புளி, கடுகு, பெருங்காயம், மாப்பண்டம், ஈச்சங்கள்ளு, பனங்கள்ளு, காடி ஆகியன விலக்கப்பட வேண்டும். பத்தியம் விதிக்கப்பெறாத நிலையிலும் இன்னின்னவற்றை விலக்கவேண்டும் என்று

கூறப்பெறுவனவற்றுள், மா, பலா, வாழை, புகையிலை ஆகியன குறிப்பிடத்தக்கன.[129] மேலும், இச்சா பத்தியத்தில் விலக்கப்படுவன, அகத்தி, எள்நெய், கடலை, கடுகு, கள், கொள்ளு, தேங்காய், பயற்றம்பருப்பு, பலா, பாகல், புளி, பூசணிக்காய், பெருங்காயம், மாங்காய், பூண்டு, வெல்லம் ஆகியனவாகும்.[130] கடும்பத்தியத்தில் உவர்ப்பிற்கு அடிப்படையான புளி, கார்ப்புடைய மிளகாய் மற்றும் இவ்விரு சுவைகளையும் உடைய பிறபொருட்கள் ஆகியவற்றையும் விலக்கவேண்டும். மிருகடும்பத்தியத்தில் புளியமர நிழல்கூட உடல்மீது படக்கூடாது என்ற விதி முன்னர்க் கூறப்பட்டது.

பத்தியநிலையில் விலக்கப்படுவனவற்றில், உணவுப்பொருட்கள் மட்டுமின்றி, உவர்ப்பிற்குபின் கொள்ளப்பெறுதலாகிய வெற்றிலை, பாக்கு முதலியன இணைந்த தாம்பூலம், புகைத்தற்குரிய புகையிலை ஆகியனவும் சுட்டப்படுகின்றன.[131]

## முக்குற்ற நோக்கில் பத்தியம்

பத்தியமாவது, நோயாளர் மருந்துண்ணுங் காலத்தே அறுகைக் காரணிகளை ஆய்ந்து விதிக்கப்பெறும். எனினும், இயல்பாகவே வாத உடலினர், பித்த உடலினர், கப உடலினர் ஆகியோர்க்கு ஏற்ற உணவுகள் இவையிவை என்றவாறு தமிழ்மருத்துவத்தில் வகுக்கப்பெற்றுள்ளன.

## வாத உடலினர்க்கு ஏற்றன

வாத உடலினர்க்கு ஏற்ற கறிவகைகளாவன, சாம்பற்பூசணிக்காய், கத்தரிக்காய், மா, முருங்கை, வெள்ளை அவரை, நாட்டுப்பாகல்பிஞ்சு, நற்கருணை, காட்டுக்கருணை ஆகியனவாகும். கீரை வகைகளில், குப்பைமேனி, முன்னை, ஆரை, நல்வேளை, மணத்தக்காளி, யானைநெருஞ்சில், முசுமுசுக்கை, அப்பை, மூக்கிரட்டை, நற்பசளை ஆகியன உகந்தன. இரச வகைகளில், சக்கரவர்த்திக்கீரை, வெள்ளைச்சாரணை, பாகல், முருங்கை, முளைக்கீரை, தூதுவளை, பொன்னாங்கண்ணி ஆகியவற்றின் இலைகளை ரசம் வைத்து உண்ண ஏற்றவை. வற்றல் வகைகளில் சுண்டைக்காய், பேய்ப்புடல், தூதுளங்காய், நெல்லிக்காய், ஆதொண்டை, மணத்தக்காளி, தூதுவளை, நெல்லி, வெள்ள அவரை, முள்ளி, நாட்டுப்பிரண்டை ஆகியனவும், ஊறுக்காய் வகைகளில் நாரத்தை, தான்றி, கடு, தேற்றான், பருங்களா, சிறுகளா, இஞ்சி ஆகியனவும் ஏற்றவைகளாகக் கூறப்பட்டுள்ளன.[132]

## பித்த உடலினர்க்கு ஏற்றன

பித்த உடலினர்க்கு ஏற்றனவாகக் கூறப்படுவன. கறிவகைகளில் வெள்ளரி, கொம்புப்பாகல், மிதிபாகல், புடல், பீர்க்கு, அவரை, ஆற்றுமுள்ளி, கலியாணப்பூசணி, கத்தரி, முருங்கை, பருங்களா, வாழை, வள்ளிக்கிழங்கு, வெங்காயம்,

வாழைப்பூ, வாழைத்தண்டு ஆகியனவாகும். கீரை வகைகளில், புளியாரை, கோவை, முருங்கை, பசளை, பொன்முசுட்டை, மிளகு, அப்பைக்கோவை, ஓரிதழ்த்தாமரை, பாலை, காட்டுமுசுமுசுக்கை, தூதுவளை, சுரை, வல்லாரை, சிறுகீரை, மணத்தக்காளி ஆகியனவாக கருதப்படுகிறது. இரசவகைகளில், குத்துப்பசளை, கொடிப்பசளை, அகத்தி, பிரமியவழுக்கை, தைவேளை, தரா ஆகியவற்றின் வேகவைத்த சாறுகள், வற்றல் வகைகளில் முள்ளி, பேய்ப்புடல், தூதுவளை, காட்டுக்கண்டை, கண்டங்கத்தரி, பயற்றங்காய், தாமரை, வல்லாரை ஆகியவற்றின் காய்களின் வற்றல்கள் போன்றவை பித்த உடலினர்க்கு ஏற்றனவாக அமைகின்றன.[111]

### கப உடலினர்க்கு ஏற்றன

கப உடலினர்க்கு ஏற்ற கறிவகைகளாவன, கத்தரி, பேய்ப்புடல் அவரை, கொம்புப்பாகல், மிதிபாகல், பருங்கனா, கண்டங்காரி, அத்தி ஆகிய காய்வகைகளும், பலா, பயற்றங்காய், அரை, ஆல், பீர்க்கு ஆகியவற்றின் பிஞ்சுகளும், கருணைக்கிழங்கு, வாழைத்தண்டு, வாழைப்பூ, முள்ளங்கி, முருக்கின் அரும்பு, பூசணி, வெங்காயம், வள்ளிக்கிழங்கு ஆகியவற்றை உணவில் சேர்த்துக் கொள்ள வேண்டும். கீரை வகைகளுள், காரை, அப்பைக்கோவை, வரிக்கோவை, முன்னை, கருஞ்செம்பை, பேய்ப்புடல், துயிலி, பிரமியவழுக்கை,

நெருஞ்சில், ஆரை, புளியாரை, முல்லை, மருதம், நெய்தல், குப்பைமேனி, வல்லாரை, பொன்னாவாரை, முசுமுசுக்கை, பெருபிண்ணாக்கு, சிறுபிண்ணாக்கு, பண்ணை, மணலி, முளைக்கீரை, முசுட்டை, காராமணி, உளுந்து, கடலை, புளிப்புள்ள மலைக்களா, வேளை, மணத்தக்காளி, பொன்னாங்கண்ணி, சக்கரவர்த்தி, பீளை, பசளை, இஞ்சி, கற்றாழை, நாய்வேளை, வேளை ஆகியனவாகும். இவற்றுள் முல்லை, மருதம், நெய்தல் ஆகியவற்றின் இலைகள் கீரைகளாகச் சுட்டப்பெறும் வழக்கில் அவை கீரைகளாகக் கொள்ளப்பெறுவதாகத் தெரியவில்லை. இரசவகைகளில், ஓமம், செங்கடுகு, சதகுப்பை, வெந்தயம், கொத்தமல்லி, வேளை, இஞ்சி, அகத்தி, குறிஞ்சி, பாகல், தும்பை ஆகியவற்றின் இலைகளை அவித்த சாறுகளை உபயோகப்படுத்தலாம். வற்றல் வகைகளில் சுண்டைக்காய், மணத்தக்காளிக்காய், தூதுளங்காய், பிரண்டை, கோவை, முள்ளி, பேய்ப்புடல், ஆதொண்டை, அவரை, கண்டங்கத்திரி ஆகிய காய்களும், நெல்லி, காட்டுநாரத்தை ஆகியவற்றின் பிஞ்சுகளும் சேர்த்துக் கொள்ளலாம். ஊறுகாய்களில் பசுமஞ்சள், மிளகு, சுண்டை, வாழையின் இளந்தண்டு, மாம்பிஞ்சு, அத்திப்பிஞ்சு, தூதுவேளை மிதிபாகற்பிஞ்சு ஆகியன ஏற்றவை.[134]

உணவுநிலையில் மூவகை உடலினருமே தத்தம் உடல்நிலைக்கேற்ப கண்டு கூறப்பெற்ற கறி, கீரை, இரசம்,

வற்றல் முதலியவற்றை உட்கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு உடலடிப்படையில் மட்டுமின்றி, சிறுபொழுது அடிப்படையிலும் சில உணவுப்பொருட்கள் பகுத்துக் கூறப்பெற்றுள்ளன. அவ்வகையில் காலை, நண்பகல், இரவு எனும் மூன்று பொழுதுகளிலும் உண்ணும்போது சேர்த்தற்கு உரியனவாகச் சுட்டப்பெறுவன, காலைப்பொழுதில் உண்ண காராமணி, உளுந்து, கடலை, துவரை, எள்ளு, மொச்சைக்கொட்டை, தட்டைப்பயறு, கடுகு, மிளகு, சுக்கு, பெருங்காயம் ஆகியன ஏற்றவை. பகற்பொழுதுக் கேற்ற உணவுப்பொருட்களில் கிழங்கு வகைகள், பழங்கள், வாதம், மந்தம் ஏற்படுத்துவன, மணமும் குளிர்ச்சியும் பொருந்திய இலைக்கறிகள் முதலியனவாகும். இரவுப்பொழுதுக்கு அவரைப்பிஞ்சு, அத்திக்காய், முருங்கைப்பிஞ்சு, துவரைப்பருப்பு, ஆற்றுமுள்ளங்கி, காட்டுத்தூதுளங்காய் ஆகியன ஏற்றனவாக அமைகிறது.[115]

> 'கங்குல் உணவிற்கும் கறிக்கும் முறைகளுக்கும்
> பொங்குதிரி தோடத்தோர் புண்சுரத்தோர் தங்களுக்கும்
> கண்முதிரைப் பில்லநோய்க் காருக்கும் காழுறையா
> வெண்முதிரைப் பிஞ்சாம் விதி'[116]

என்று அவரைக்காயின் பிஞ்சுநிலை இரவு உணவிற்கு உரியதாகவே கூறப்பெறுதல் கண்டு நோக்கத்தக்கது. இவ்வாறு, மூன்று பொழுதிலும் அவ்வற்றின் ஜீரண காலம் கருதி உணவுகள் வகுக்கப்பட்டுள்ளன. சான்றாக, நண்பகலில் கொள்ளும்

உணவுகளில் வாதம், மந்தம் ஏற்படுத்தும் உணவுகள் இடம்பெற்றாலும், சூரியவெப்பத்தாலும், தேக உழைப்பினாலும் அவை எளிதில் ஜீரணமாகிவிடும்.[137]

## நோய்க்கேற்ற பத்தியம்

நோயாளர்தம் உடல்நிலை கருதி மட்டுமன்றி அவர்தமக்கு வந்துற்ற அவ்வந்நோய்களுக்கு ஏற்ற உணவு வகைகளையும் பத்தியத்திற்கேற்றனவாகத் தமிழ் நாட்டுப்புற மருத்துவம் குறிப்பிடுகின்றது. வாத நோயாளர்க்குச் செங்கழுநீர்க்கிழங்கு, கோஷ்டம், குறிஞ்சித்தேன், மிளகு, எள்நெய், பெருங்காயம், தழுதாழையிலை, சிற்றாமணக்கெண்ணெய், உளுந்து ஆகியன ஏற்றனவாகக் கூட்டப்படுகின்றன.[138]

பித்த நோயாளர்க்கு, கொளுஞ்சி நாரத்தை, வாழையிலை சுட்ட கரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, சந்தனம், நெல்லிமுள்ளி, சம்புநாவல், பெருமரப்பட்டை, கோரைக்கிழங்கு? செம்பருத்தி, தென்னம்பூ, கருப்புதாமரைப்பூவின் தாது, செங்குவளைக்கேசரம் ஆகியன ஏற்றனவாக அமைகின்றன. மேலும், வெள்ளைக் கடலை, பெருங்காரமணி, உளுந்து, ஏலம், வெந்தயம், கன்னைக்காய், இஞ்சி, அப்பைக்கோவைக்காய், கருவேப்பிலை, சீரகம், முதலியன பித்தத்தைச் சமன்செய்வனவாகக் குறிப்பிடப்பட்டுள்ளன.[139] கப நோயாளர்க்குப் பேராத்தை, முள்ளங்கி, தூதுவளைச்சமூலம், மலைத்தேன்,

வெள்ளைச்சர்க்கரை, துளசிவிதை, விளாம்பழம் ஆகியன கபரோகத்தைப் போக்கும் உணவுவகைகளாகச் சொல்லப் பட்டுள்ளன.[140] மேலும், பொதுவாக முக்கோண நிலைகளில் மாறுபாடு ஏற்பட்டவழி, அம்மூன்றையுமே சமன்செய்வனவாக, மஞ்சள், சீரகம், பெருங்காயம், சுக்கு, ஏலம், வெந்தயம், வெள்ளைப்பூண்டு ஆகியன கூறப்படுகின்றன.[141]

மேலும், மூலநோய் போக்கும் உணவுப்பொருள்களாக, மருட்கிழங்கு, வெண்சாரணைச்சமூலம், கருணைக்கிழங்கு, பிரண்டை, காட்டுக்கருணை, புளிநறளை, காராக்கருணை, மொருகன்கிழங்கு, வெள்ளறுகு, வெண்சித்திரமூலம் முதலியன கூறப்படுகின்றன.[142] பேதியைக் கட்டுகின்ற உணவுவகைகள், வாழைப்பிஞ்சும், அத்திப்பிஞ்சும் ஆகும்.[143]

இவ்வாறு நோய் நோக்கிலும் பொதுநிலையில், வாதநோய், பித்தநோய், கபநோய்கள் என்றவற்றுக்கும் குறிப்பாக மூலநோய், பேதி ஆகியவற்றுக்கும் பத்திய உணவுகள் கூறப்பட்டுள்ளன. மேலும், நஞ்சுமுறிவு நிலையிலும், பேய்ச்சுரை, பேய்க்கொமட்டி, பேய்ப்பீர்க்கு, தூமட்டி, பேய்ப்புடல், புங்கு, அழிஞ்சில், காட்டவுரி, மலைவேம்பு, சிவனார்வேம்பு, வெள்ளெருக்கு, வெள்ளறுகு, ஆகியன நஞ்சைப் போக்கும் உணவுகளாகக் கூறப்பட்டுள்ளன.[144]

## மருந்துகளுக்கான பத்தியத்தில் மரம் செடி கொடிகள்

பொதுவாக, உடலியல்பு, முக்குற்றவியல்பு, நோயின் இயல்பு என்பவற்றோடு மருந்து அடிப்படையிலும் மருந்துண்ணும் காலங்களில் ஏற்பன ஏலாதன என்று தாவரங்களைப் பகுத்துள்ளனர். எனினும், சில குறிப்பிட்ட மருந்துகட்கு, இவை ஏற்பன இவை ஏலாதனவென்று குறிப்பாகவும் சுட்டப்பெறுகின்றன. சான்றாக, தைலங்கள் தேய்த்து மூழ்கும் நிலையில் அவை நேரடியாகவே மூளையில் வேலை செய்வன. ஆகவே, இந்நாட்களில் பகலுறக்கம், இரவில் உறக்கமின்மை, இளைவிழைச்சு, இறைச்சி, மது ஆகியவற்றோடு புளி, பாகற்காய், கீரைகள் முதலிய உணவாகும் தாவரப்பொருட்களையும், புகையிலையையும் நீக்கவேண்டும். பாதரசங்கட்கும் அது தொடர்பான தைலங்கட்கும் தலைமூழ்கும் நாளில் ஓமப்பாலிட்டு மூழ்கவேண்டும்.[115] பொதுவாக, அனைத்து மருந்துகளுக்குமே பத்தியம் விதிப்பதில்லை. பத்தியம் கூறப்பெறாத மருந்துகளும் உள்ளன. சான்றாக, வயிற்றிரைச்சல், இரத்தக்கிருமி ஆகியவற்றுக்கு, நீர்முள்ளி, எழுத்தாணிபிலை, ஏலம், நெய், சர்க்கரை முதலியவற்றைக் கூட்டிச் செய்யப்பெறும் மருந்திற்குப் பத்தியம் விதிக்கப்பெறவில்லை என்பது கண்டு சுட்டத்தக்கது.[116] எனினும் தமிழ் நாட்டுமருத்துவத்தில் எளியனவும், எளியநோய்கட்கு உரியனவுமாகிய மருந்துகளே பெரும்பாலும் பத்தியமற்றன. பிற யாவும் பத்தியமுறையுடன்

கூடிய மருந்துகளேயாகும். அவ்வகையில் சில மருந்துகட்குக் கூறப்பெறும் பத்தியங்களைப் பற்றிக் காண்போம்.

1. குன்மவாந்தி, இருமல், ஏப்பம் முதலானவற்றிற்கு ஏலம், நெல்லிமுள்ளி, நெற்பொரி, பச்சைப்பயறு, வில்வம், இளநீர் ஆகியவற்றைக்கொண்டு செய்யப்பெறும் கியாழம் மருந்தாகும். இக்கியாழத்தை உட்கொள்ளும் நாட்களில் பத்தியமாக, பாசிப்பயிறு, தூதுவளை, பொன்னாங்கண்ணி ஆகியவற்றை உட்கொள்ளலாம்.[117]

2. சோகை, காமாலை, வீக்கம், நீர்க்கோவை, வெளுப்புநோய், பெருவயிறு, பீலிகை ஆகியவற்றுக்கு நீர்முள்ளி, கீழாநெல்லி, விழிவேர் முதலான பல மூலிகைப் பொருட்களைக்கொண்டு இயற்றப்பெறும் கியாழத்தை மருந்தாகக் கூறுவர். இதனை உட்கொள்ளும்போது ஆறுநாட்கள் பத்தியமிருக்க வேண்டும். இந்நாட்களில் உப்பை விலக்கி, ஏழாம்நாள், உப்பிட்ட பருப்பைச் சேர்க்க வேண்டும். எட்டாம்நாள் புளி சேர்க்கவேண்டும்.[118]

3. குடல்வாயு, விதைவாயு ஆகியவற்றுக்கு கழற்சியிலைத்தைலம் எனும் மருந்தை உட்கொள்ளும் நிலையில், பழையபுளி, அவரைப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு ஆகியன உண்பதற்கேற்றனவையாகும்.[119]

4. கைகால் முடக்கு, கருங்குட்டம், அரையாப்பு, லிங்கப்புற்று முதலான நோய்கட்கு மருந்தாக விளங்குவது

'மேகநாதத்தைலம்'. இதனை உண்ணுங்கால் மொச்சை, பாசிப்பயிறு, துவரை, முளைக்கீரை ஆகியனவே முதல் ஐந்து நாட்களில் கொள்ளுதற்குரியனவாகும்.[150]

5. கிரந்தி, அரையாப்பு ஆகியவற்றுக்கு, சங்கு, சங்கங்குப்பி, கருநொச்சி, கிரந்திநாயகம் முதலான மூலிகைகளைக்கொண்டு இயற்றப்பெறும் எண்ணெயை உட்கொள்ளும் காலத்தில் ஆறுநாள் பத்தியமிருக்கவேண்டும். ஏழாம்நாள் தலைமூழ்கி, உப்பிட்ட பருப்பை உணவில் சேர்க்கலாம். நாற்பது நாட்களுக்கு கடுகு கூடாது. மேலும், வழைக்காய், வாழையிலை ஆகியவற்றை விலக்கவேண்டும்.[151]

6. இருமலுக்கு மருந்தாக, பொன்னாங்கண்ணிச்சாறு, நெய், தேன் முதலானவற்றைக் கூட்டிச் செய்யப்பெறும் இலேகியத்தை உட்கொள்ளும் நாட்களில் பொன்னாங்கண்ணி, கத்திரி, பாசிப்பயறு, வல்லாரை, பாகுவெல்லம் ஆகியன பத்தியவுணவாகக் கொள்ளற்குரியனவாக அமைகின்றன.[152]

7. சுரநோய்களுக்கு, வெள்ளைப்பாட்ஷாணம், காவிக்கல், வெற்றிலைச் சாறு ஆகியவற்றால் இயற்றப்பெறும் இராமபாணக்குளிகை என்ற மருந்தை உட்கொள்ளும்போது ஆறுநாட்கள் பத்தியமிருந்து, ஏழாம்நாள் தலைமூழ்கிப் பின், சிறுகீரை, மிளகு, அரிசி ஆகியவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கசாயத்தைக் குடித்துப் பத்தியத்தை முடிக்கவேண்டும். பின் எட்டாம்நாளில் புளி சேர்க்கலாம்.[153]

8. குட்டம், கிரந்தி, சூலை முதலான நோய்களைப் போக்குதற்குரியதாக இடிவல்லாதி குழம்பு விளங்குகிறது. செங்கொட்டையை மூலமாகக்கொண்ட இம்மருந்தை உட்கொள்ளும் நாட்களில் துவரம்பருப்பு, பாசிப்பயறு, அவரை, பொன்னாங்கண்ணி ஆகியவற்றை உண்ணலாம். பத்தியத்தை முடிக்கும் நாளில் விளக்கெண்ணெய் தேய்த்து தலைமுழுக வேண்டும்.[154]

9. இரசபூபதி எனும் மாத்திரை இரசம், கந்தகம் முதலான தாதுவர்க்கப் பொருட்களால் மட்டுமே இயன்றது. சன்னி, குளிர்சுரம், சூலை முதலான நோய்களை நீக்கும் இம்மருந்தை உட்கொள்ளும் காலத்தே, எள், கடுகு, புளி மற்றும் மாமிசம், ஆகாது. உப்பிட்ட வற்றல் ஏற்புடையது.[155]

10. உடலுக்குப் பலக்குறைவை ஏற்படுத்தும் நோய்களுக்கு மருந்தாக அயபற்பம் கூறப்பெறுகிறது. இதனை உண்ணுங்காலை எள், கடுகு, கொள், புளிப்புடைய பொருட்கள் முதலியனவற்றை விலக்கவேண்டும்.[156]

11. அசதிவெப்பம், சீதவெப்பம், இரத்தகாசம், மாந்தை முதலானவற்றைப் போக்குதற்குரிய காந்தபற்பத்தை உண்ணும் நாட்களில் இச்சாபத்தியம் கூறப்பெறுகிறது. இதன்கண் பூசணிக்காய், கொள்ளு, கடுகு, சோளம் ஆகியன விலக்கப்பெறுகின்றன. கோதுமைமாவு சிறப்புடையதாகவும் நெல் மாவு ஏற்புடையதாகவும் அமைகின்றன.[157]

12. பித்தசுரம், கபசுரம், உன்மாதம் முதலானவற்றிற்கு உரிய வெள்ளிய பற்பத்தை உண்ணும் நாட்களில், புளி, கடுகு, அகத்திக்கீரை ஆகியன விலக்கப்படவேண்டும்.[158]

13. அ) வாதம், பித்தம், சேத்துமம், சயம், வெளுப்பு முதலான நோய்களுக்கு உரியதாகிய தாம்பிரபற்பத்தை உட்கொள்ளும்பொழுது, விலக்குதற்குரியன புளி, அகத்திக்கீரை, கடுகு, கொள், எள் ஆகியனவாகும். மேலும், எலுமிச்சம்பழம், நெல்லி ஆகியனவும் ஆகாப்பொருட்களாம். பாகற்காய், பலாப்பழம், வாழைப்பழம், சர்க்கரை முதலியன ஏற்புடைய உணவுகளாம்.[159]

ஆ) கொங்கை சிலந்தி, வாத, பித்த, சேத்தும நோய்கள், முடக்குவாதம் ஆகியவற்றுக்கு மருந்தாக தாம்பிரபற்பத்தை உட்கொள்ளுமாறு தேரையர் யமகவெண்பா கூறுங்காலை, எலுமிச்சம்பழம், மாம்பழம், மாதுளம்பழம், கிச்சிலிப்பழம், நாரத்தம்பழம், நாவற்பழம், வெள்ளரிப்பழம், நெல்லிப்பழம், தமரத்தம்பழம், நாவற்பழம், வெள்ளரிப்பழம், நெல்லிப்ழம், தமரத்தம்பழம், காச்சொறிக்கீரை, பீர்க்கங்காய், இலந்தைப்பழம், களாக்காய், விளங்கனி, பாகற்காய் முதலியவற்றை விலக்குமாறு சுட்டுகின்றது.[160]

14. மேகரணங்களுக்கு மருந்தாகச் சூதசெந்தூரம் கூறப்படுகிறது. இதனைப் புறமருந்துநிலையில் புகையை உடல்மீது படுமாறு செய்வர். இக்காலத்தில், பாலும், பாற்சோறும்

உண்ணவேண்டும். மூன்றுநாட்களுக்கு உப்பு கூடாது. நான்காம்நாள் வெந்நீருடன் நீர்முள்ளிச்சமூலத்தைப் போட்டுக்காய்ச்சியபின் ஓமம் இட்ட நீரில் குளிக்கவேண்டும். அதன்பின் இறைச்சி மற்றும் பால் முதலியவற்றோடு மிளகுநீரையும் உட்கொள்ளுமாறு கூறுவர். இருபத்தியோராம்நாள் ஓமம் தேய்த்து, விளக்கெண்ணெயில் தலைமுழ்க வேண்டும்.[161]

15. பட்டினிப்பத்தியம் விதிக்கப்பெற்ற நோய்களுக்கு, அப்பட்டினி நிலையில் ஏற்பட்ட இளைப்பு நீங்க, நாயுருவி முட்களைச் சுட்டு எடுத்தசாம்பலைக் குடிநீராக்கிக் கொடுக்கவேண்டும்.[162]

சுட்டிக்கூறப்பெற்ற சில குறிப்பிட்ட மருந்துகளுக்கு விதிக்கப்பெற்றுள்ள பத்தியவிதிகளை நோக்க, அவற்றுள் ஏற்பன, ஏலாதன என்ற இருநிலைகளிலும் மூலிகைத்தாவரங்களான மரம் செடி கொடிகள் காணப்படுகின்றன என்பதைக் இங்கு நோக்கத்தக்கதாகும்.

## தொகுப்புரை

இவ்வியலின் முடிவாக, நாட்டுப்புற மருத்துவம் மற்ற மருத்துவ முறைகளைக் காட்டிலும் சிறப்பு வாய்ந்தது என்றும், பண்டைய மனிதன் இயற்கையான ஒரு பிரிவில் மரம், செடி, கொடி, போன்றவற்றோடு சேர்ந்து வாழ்ந்ததால் அதனையே

நோய்தீர்க்கும் மருந்தாகப் பயன்படுத்தினான் என்றும் அறியப்படுகின்றன. தாவர இனங்களுள் புல், பூண்டுகளும் மருத்துவ துறையில் சிறந்து விளங்குகின்றன. மேலும் விதைகள், பூ, கிழங்கு, வகைகளின் மருத்துவ குணங்களும் அறியப்பட்டன. வேர், காய், கனி, பால், பிசின் வகைகளின் மருத்துவகுணங்களும் தெரியவருகின்றன. பத்தியம் நாட்டுப்புற மருத்துவத்தில் முக்கியத்துவம் வாய்ந்ததாகக் கருதப்பெறுகின்றது. நோய்கள், அதற்கான மருந்துகள், விலக்கவேண்டிய பொருட்கள் போன்றவையும் இறுதியில் அறியப்பட்டன.

## அடிக்குறிப்புகள்

1. நன்னூல், நூ.261
2. N. Kandaswamy Pillai, History of Siddha Medicine, P.14
3. Ibid.
4. தொல். மரபியல், நூ.23
5. மேலது, நூ.86,87
6. மேலது, இளம்பூரணர் உரை, ப.560
7. மேலது, ப.571
8. தொல்காப்பியம், பொருளதிகாரம், பேராசிரியர் உரை, ப.471
9. மேலது, இளம்பூரணர் உரை, ப.572
10. மேலது, நூ.25
11. மேலது, நூ.88,89
12. மேலது, ப.572
13. மேலது, ப.572
14. மேலது, உயிர்மயங்கியல், நூ.60,76, புள்ளிமயங்கியல், நூ.9
15. மேலது, உயிர்மயங்கியல், நூ.81
16. மேலது, புள்ளிமயங்கியல், நூ.70
17. மேலது, மரபியல், நூ.25
18. அகநானூறு, பா.191.1
19. மேலது, பா.19.2
20. புறநானூறு, பா.371.7
21. நற்றிணை, பா.9.5
22. புறநானூறு, பா.283

23. நற்றிணை, பா.5.4
24. அகநானூறு, பா.69.7
25. நற்றிணை, பா.76.5
26. குறிஞ்சிப்பாட்டு, அடி.63
27. ஐங்குறுநூறு, பா.464.2
28. கலைக்களஞ்சியம், தொகுதி-8, ப.108
29. மேலது.,
30. மேலது, ப.118
31. மேலது.,
32. மேலது., தொகுதி-5, ப.593
33. மேலது, தொகுதி-8, ப.118
34. மேலது,
35. மேலது,
36. மேலது,
37. Tamil Lexicon, Vol.V, P.3086
38. பிங்கல நிகண்டு, நூ.2791
39. D.E.D. P.416
40. அகநானூறு, பா.69:6-7
41. நற்றிணை, பா.1:4-5
42. அகநானூறு, பா.341:3
43. குறுந்தொகை, பா.15:2
44. கலைக்களஞ்சியம், தொகுதி,-5, ப.163
45. மேலது,

46. மேலது,

47. பிங்கல நிகண்டு நூல், நூ.3566

48. சூடாமணி நிகண்டு, நூ.70

49. தேவாரம், சுந்தரர், பா.30:7:1

50. மேலது, பா.43:7:1

51. திருவாசகம், பா.29:5

52. திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணம், 54:19:4

53. Tamil Lexicon, Vol.V, P.1584

54. D.E.D., P.176

55. சேந்தன் திவாகரம், ப.91

56. குறுந்தொகை, உ.வே. சாமிநாதையர் உரை, ப.204

57. Tamil Lexicon, Vol.V, P.2763

58. பதிற்றுப்பத்து, பா.66:16

59. நெடுநல்வாடை, அடி.13-14

60. குறுந்தொகை, பா.240:1

61. ஐங்குறுநூறு, பா.217:6

62. மதுரைக்காஞ்சி, அடி.568

63. அகநானூறு, பா.217:6

64. மேலது, பா.255:11

65. முல்லைப்பாட்டு, அடி.25

66. ஐங்குறுநூறு, பா.464:2

67. அகநானூறு, பா.2:15

68. மேலது, பா.307:11

69. குறுந்தொகை, பா.319

70. அகநானூறு, பா.315:16

71. கலைக்களஞ்சியம், தொகுதி-4, ப.234

72. மேலது, பக்.234-238

73. மேலது, ப.238

74. Tamil Lexicon, Vol.III, P.1133

75. D.E.D., P.186

76. அகநானூறு, பா.237:2, மலைபடுகடாம், அடி.101, குறுந்தெகை, பா.186-2

77. மலைபடுகடாம், அடி.216

78. ஐங்குறுநூறு, மிகைப்பா, 6:1, குறுந்தொகை, பா.25:1

79. சிறுபாணாற்றுப்படை, அடி.66, நற்றிணை, பா.242:2, ஐங்குறுநூறு, பா.101:2

80. ஐங்குறுநூறு, பா.456:3, மலைபடுகடாம், அடி.521, ஐங்குறுநூறு, பா.25:3, பெரும்பாணாற்றுப்படை, அடி.337

81. கலித்தொகை, பா.102:2, குறுந்தொகை, பா.66:4

82. மலைபடுகடாம், அடி.216

83. கலித்தொகை, பா.3:13

84. கலைக்களஞ்சியம், தொகுதி-7, ப.457

85. மேலது,

86. மேலது,

87. மேலது, ப.458

88. Tamil Lexicon, Vol.V, P.2750

89. பெரும்பாணாற்றுப்படை, அடி.122, குறுந்தொகை, பா.256:1, பதிற்றுப்பத்து, பா.21-21

90. புறநானூறு, பா.98:8, பெரும்பாணாற்றுப்படை, அடி.94, குறுந்தொகை, பா.204:3

91. புறநானூறு, பா.538:9

92. அகநானூறு, பா.129:3-5

93. மேலது, பா.65:15

94. பட்டினப்பாலை, அடி.256

95. Tamil Lexicon, Vol.V, P.2830

96. திருவாசகம், பா.1:26

97. கம்பராமாயணம், யுத்த காண்டம், சேதுபந்தனப் படலம், பா.63

98. தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, ப.3

99. டாக்டர் கே. வெங்கடராமன், தாயும் சேயும், ப.156

100. டி.வி.எஸ். அகராதி, தொகுதி-1, ப.346

101. டாக்டர் சித்ரா, ஆண்மை அழிவும் அதை மீண்டும் பெறுதலும், சித்த மருத்துவம், செப்டம்பர்'87, ப.3

102. மேலது, பக்.4-5

103. மேலது,

104. வைத்திய சதகம், பா.99

105. வைத்திய சாஸ்திரம், பா.55-76

106. ப.கு.வி, பக்.8,13,20,9,27, 47,50

107. க.ச.முருகேசன் முதலியார், மு.கு.நா, ப.685

108. தேரையர் வெண்பா, பா.449.2-3

109. மேலது, பா.599

110. அகத்தியர் இரண்டாயிரம்(முதல் பாகம்), பா.30

*111.* T.V.S. Dictionary, Vol.5, P.3176

*112.* Ibid

*113.* *கழகத் தமிழகராதி, ப.97*

*114.* *டாக்டர் க.சு. உத்தமராயன், சித்தமருத்துவாங்கச் சுருக்கம், பக்.265-266*

*115.* T.V.S. Dictionary, Vol.5, P.3176

*116.* Ibid, Pp.3176-3177

*117.* *ஜே. சீதாராம் பிரஸாத், மு.கு.நூ., ப.265*

*118.* T.V.S. Dictionary, Vol.5, P.3176

*119.* Ibid, *டாக்டர் க.சு. உத்தமராயன், மு.கு.நூ., ப.265*

*120.* *டாக்டர். க.சு. உத்தமராயன், மு.கு.நூல்., ப.226*

*121.* *மேலது, ப.267*

*122.* *டாக்டர் க.சு. உத்தமராயன், மு.கு.நூ., ப.267*

*123.* *மேலது,*

*124.* *மேலது. ப.265*

*125.* *மேலது, பா.435*

*126.* T.V.S. Dictionary, Vol.5, P.3117

*127.* *டாக்டர் க.சு. உத்தமராயன், மு.கு.நூ., ப.265*

*128.* *ப.கு.சி., பா.1268 அ, ஆ.*

*129.* *மேலது, பா.1272 ஆ, டாக்டர் க.சு. உத்தமராயன், மு.கு.நூ., ப.266*

*130.* T.V.S. Dictionary, Vol.5, Pp.3176-3177

*131.* *ப.கு.சி., பா.1266, 1302*

*132.* *மேலது, பா.1286-1290*

133. மேலது, பா.1291-1295

134. மேலது, பா.1296-2000

135. மேலது, பா.1280-1283

136. ப.கு.வி., ப.41

137. ப.கு.சி., பா.1282

138. மேலது, பா.1273

139. மேலது, பா.1274

140. மேலது, பா.1276

141. மேலது, பா.1279

142. மேலது, பா.1276

143. மேலது, பா.1269

144. மேலது, பா.1277

145. ஆர். வித்யாசாகர், சித்தமருத்துவ அனுபவங்கள், ப.67, ப.கு.சி., பா.1226, T.V.S. Dictionary, Vol.5, P.3177

146. புலிப்பாணி வைத்தியம் 500, பா.320

147. தேரையர் வைத்திய காவியம் 1500, பா.412

148. புலிப்பாணி வைத்தியம் 500, பா.68-69

149. சித்த வைத்தியத் திரட்டு, பா.520

150. மேலது, பா.548, பக்.331-335

151. புலிப்பாணி வைத்தியம் 500, பா.141

152. தேரையர் வைத்திய காவியம் 1500, பா.191

153. புலிப்பாணி வைத்தியம் 500, பா.322-323

154. மேலது, பா.230-231

155. சித்த வைத்தியத் திரட்டு, பா.9-12

156. மேலது, பா.177

157. மேலது, பா.182

158. மேலது, பா.189

159. மேலது, பா.206

160. தேரையர் யமக வெண்பா, பா.98

161. புலிப்பாணி வைத்தியம், பா.451-453

162. தேரையர் வெண்பா, பா.613

# இயல் -5
# நாட்டுப்புற மருத்துவத்தில் நோய்களும் மருந்துகளும்

## நோய் - பொருள் விளக்கம்

நோய் என்பது துயரம் துன்பம் குற்றம் என்னும் பொருள்களைத் தருவதாக அமையும் என்பர். நோய்க்கு உரிய செயல்களைச் செய்தல் குற்றம். அக்குற்றம் செய்வதனால் வருகின்ற பயனே துன்பமும் துயரமும் ஆகும். இன்பமும் துன்பமும் பிறர்தர வாரா என்பது ஆன்றோர் வாக்கு. துன்பமும் துயரமும் தருகின்ற நோய் பிறரால் தரப்படுவதில்லை. நமக்கு நாமே ஏற்படுத்திக் கொள்வதென்றோ தருவித்துக் கொள்வதென்றோ பொருள் கொள்ளலாம்.

நோய் என்னும் வார்த்தையை ந்+நோய் நோய் எனப் பிரிக்கலாம். அதற்கு விளக்கமாவது நோயென்றால் 'ந்' ஆகிய நகாரம் ஓய்வெடுத்துக் கொள்வதாகும். நகாரம் என்பது இடுப்பிலிருந்து பாதம் வரையுள்ள பகுதியைக் குறிக்கும். ஆகவே நடந்து இயங்கமுடியாத ஓய்வெடுக்கின்ற நிலை ஏற்படுகிறதோ அல்லது நகாரம் என்பது சிற்றின்ப நுகர்ச்சிக்கு உண்டான இடம் என்றும் கூறலாம். 'ஓய்' என்பது ஓய்ந்து விடுவது. சிற்றின்ப நுகர்ச்சிக்கான இடம் ஓய்ந்து விடுவதால் உடலில் நாடி நரம்புகள் தளர்ந்து நொய்மை அடைந்து விடுகிறது என்று பொருள் கொள்ளலாம்.[1] நோய் என்பது தளர்ச்சி, மெலிவு என்றும் நொய்மை செய்வது என்றும் பொருள்படும்.

'அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு' என்னும் பழமொழி, அளவுடன் இருப்பதே அமிர்தம் எனப் பொருள் தருகிறது. அமிர்தம் என்பது நோயற்றிருத்தல் என்றாகும். நாம் உண்ணுகின்ற உணவும் செய்கின்ற செயலும் எண்ணுகின்ற எண்ணமும் அளவுக்கு மிஞ்சியும் இயற்கையின் தன்மைக்கு மாறாகவும் இருக்குமேயானால் அவையே நோயின் மூலங்களாகிவிடுகிறது. எனவே, நாம் செய்யும் செயல்களில் எவையெல்லாம் நோயைத் தரும் செயல்கள் என்பதை அறிவுறுத்தி அதன்வழி நடக்கச் செய்வதே மருத்துவ நீதியாகும். நீதிக்குப் புறம்பாக நடப்பது எவ்வாறு நாட்டில் குற்றமாகக் கருதப்படுகின்றதோ அதைப் போலவே மருத்துவ நீதிக்குப் புறம்பாக நடப்பது உடலுக்குக் குற்றமாகும். இவ்விரண்டு நீதிகளுக்கும் புறம்பாக நடந்தால் தண்டனை உண்டு. ஒன்று, நீதிதரும் தண்டனை, இரண்டாவது சிறை என்று குறிப்பிடுவர்.

## பண்டைக் காலத் தமிழர்களின் நோக்கில் நோய்

பண்டைக் காலத் தமிழர்கள் பசியையும், நீர் வேட்கையையும் நோய் என்றும், மனிதனைப் பிணித்து அடிமைப்படுத்துவதை பிணி என்றும் கூறினார்கள். பிற மக்களின் பசிப்பிணியைப் போக்க விரும்பியவர்கள் பசிப்பிணி மருத்துவர் என்று பாராட்டப்பட்டனர் என்பது,

'பசிப்பிணி மருத்துவனில்லம் அணித்தோ
செய்த்தோ கூறுமின் எமக்கே'[2]

என்ற புறநானூற்றுப் பாடல்வழி புலனாகிறது. காதலும் ஒரு நோயாவதுண்டு. காதலியின் பார்வை காதலனுக்கு நோய் தரக்கூடியது. அதே பார்வை அந்நோயைத் தீர்க்கும் மருந்தாகவும் விளங்குகிறது என்பதை தலைவன் கூற்றாக

'இரு நோக்கிவளுண் கணுள்ள தொருநோக்கு
நோய் நோக்கொன்றந் நோய்மருந்து''

என்று குறிப்பறிதல் அதிகாரத்தில் வள்ளுவர் குறிப்பிடுகிறார். மனிதனுக்கு நோய் ஏற்பட்டால், அது இன்னின்ன காரணத்தினால் வந்தது என்ற அடிப்படையைக் கண்டறிந்து, அதன்பிறகு அதைக் குணப்படுத்துவதற்கு மூன்று வகையான முறைகளைக் கையாளுவர் என்பதை,

'நோய்நாடி நோய்முதல் நாடியது தணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்''

என்பார் வள்ளுவர். நோய்நாடி என்பது வைத்திய முறைகளைக் கற்றறிவதும், தனது வைத்திய அனுபவத்தால் உணர்ந்து கொள்வதும், நோயாளிக்கு வந்திருப்பது இன்னநோய் என அந்நோயின் நிலைகளோடு அறிந்திடும் முறை ஆகும். நோயாளிக்கு அந்நோய் வந்த காரணங்களின் அடிப்படைகளைத் தெரிந்து கொள்ளும் வகையே நோய் முதல் நாடி ஆகும். நோயாளி வைத்தியரிடம் பேசும்போது நோயின் தன்மையை அறிய முடியும். நோயாளியிடம் வைத்தியர் பேசும்போது, நோயாளியின் உடம்பிலுள்ள வாத பித்த, கபங்களின் தன்மையை அறிந்து கொள்வது வாய்நாடி எனப்படும். மனிதனின் உடலில் வாதம், பித்தம், கபம் ஆகிய

மூன்றும் அளவோடு காணப்படவேண்டும். மனிதன் உண்ணும் உணவின் சுவைகளின் வேறுபாட்டாலும், உணவின் அளவு குறிப்பிட்டதை விட மிகுதியானாலும், குறைவானாலும் நோய் உண்டாகிறது. வள்ளுவர் உணவைப் பற்றி, மிகினும் குறையினும் நோய் செய்யும் என்று குறிப்பிட்டுள்ளார்.

நோய் நொடியின்றி வாழவேண்டும் என்பதுபெரியோர் வாக்கு. உலகில் வாழ்கின்ற அனைவரும் நோயில்லாமல் வாழவேண்டும் என்றுதான் விரும்புகின்றனர். ஓமியோபதியின் தந்தை டாக்டர். ஹானிமேன் அவர்கள் நோயைக் குருகிய கால நோயென்றும், நீடித்த நோயென்றும், கூறுகின்றார். குருகிய கால நோயென்பது எவ்வித முன் அறிவிப்புமின்றி, திடிரெனத் தோன்றி குணம் அடைவது அல்லது மிகுந்த உச்ச நிலையினை அடைந்து குணம் பெறுவது அல்லது மரணம் ஏற்படும் நிலைக்குச் சென்று குணம் பெறுவது. மாறாக மரணத்தை ஏற்படுத்துவதாகும். இந்தக் கூற்றுக்கிணங்க சில நோய்களைக் குறிப்பிடலாம். அவை முறையே, தலைவலி, காய்ச்சல், வாந்தி, வயிற்றுப்போக்கு, டிப்திரியா, மஞ்சள் காமாலை போன்றவையாகும்.[5] மேற்கண்ட நோய்கள் ஒன்றுமுதல் மூன்று நாட்கள் மட்டும் இருந்தால் குணமாகக் கூடிய நோயாகும். ஒருவாரம் அல்லது ஒருமாதம் வரை நோய்களால் பிடிக்கப்பட்டால் குறுகிய கால நோய் என்று அழைக்கப்படும். குறுகிய கால நோய்களாக காணப்படுவதில் திடிரென்று மரணத்தை ஏற்படுத்துவது வாந்தி, பேதி,

மஞ்சள்காமாலை போன்றவையாகும். நீடித்த நோய் என்பவை ஆஸ்துமா, நீரழிவு, தொழுநோய் ஆகியவை ஆகும். என்பர். இவைகள் அதிக நாள் குணமாகாமல் நீடித்து இருப்பதாலேயே பிணி என்றும் வியாபித்து இருப்பதால் வியாதி என்றும் அழைக்கப்படுகிறது.

## நோய்கள் தோன்றுவதற்கான காரணங்கள்

சுவரின்றிச் சித்திரம் வரைதல் முடியாது. அதுபோல உடல் நலமின்றி மனிதன் வாழவும் முடியாது. மனிதன் தோன்றிய நாள் முதலே நோய்களும் தோன்றி வளர்ந்து வந்துள்ளன. இந்நோய்கள் மக்களைத் தாக்காமல் தவிர்ப்பதிலும், தாக்கினால் போக்குவதிலும், நோய்கள் பிறருக்குப் பரவாமல் தடுப்பதிலும் மனிதன் நடவடிக்கை எடுத்து வந்துள்ளான். எனவே, காரண காரியத்தத்துவத்தின்படி வினைகள் என்னும் காரணத்தினால் நோய்களென்னும் காரியம் தோன்றுகின்றன என்பது சித்த மருத்துவச் சிந்தனையாகும். எந்த நோயும் இயற்கையாக வந்ததில்லை என்பர்.

மனித உடல், எழுவகையான உடற்தாதுகளால் அமைந்தது. அவற்றுக்கு ஒழுங்கினமான உணவு வகைகளை உணவாக அளிப்பது. வளி, அழல், ஐயம் என்னும் மூன்று உடல்சக்திகள் குறையவும் மிகவும் காரணமாகின்ற தொழில்களைச் செய்தல் உணவு முறைகளால் உடல் சக்திகள்,

உடலுக்குள்ளிருந்து போராடச் செய்தல், ஆகாத உணவு முறைகளால் தாதுக்களையும் உடல் சக்திகளையும் பழுதடைய செய்தல், தாதுக்களின் செயலையும் சக்திகளின் செயலையும் மாறுபடச் செய்தல் போன்ற குற்றங்களினால் உடலின் தோன்றும் குணங்களின் காரியமே நோய்களாக தோன்றுகின்றன என்று கூறலாம்.[6]

> 'தன்வினை புறவினை தாழினும் மிகினும்
> உடலைப் பிணிக்கும் உண்மையிது தாமே'[7]

என்னும் மருத்துவக் குறிப்பும் இதனையே வலியுறுத்தும். மேலும் 'மனித உடலானது அறுபத்தி நான்கு தத்துவங்களைக் கொண்டது. தத்துவங்கள் என்பது கருவி, காரணாதிகள், காரணங்கள், உயிர்த் தத்துவங்கள் ஆகியவற்றைக் குறிக்கிறது. உயிர்த் தத்துவங்கள் என்பது வாத, பித்த, சிலேத்துமம் ஆகும். வாத, பித்த சிலேத்துமம் என்ற முப்பிணி தத்துவங்களின் மெய்பாடுகள் மாறுகின்றபோது நோய் தோன்றுகின்றன. ஏனென்றால் மனித உடலுக்கு வாத, பித்த, சிலேத்துமங்கள் உயிர்ப் பொருளான ஆதார நிலைகள் ஆகும்.[8] மனிதன் உண்ணுகின்ற உணவு, நீர், காற்று ஆகியவைக் குடலில் சீரணமாகி அன்னப்பாசையாக மாறி உடலைத் தேற்றிடும். எனவே உடல் ஆரோக்கியமாகக் காணப்படும். மனித உடலில் சூட்சும சக்திகள் மனித மூளை மற்றும் முதுகெலும்புத் தண்டுடைய கணுக்குள்ளும் அமைந்திருக்கின்றன. இதுவே மனிதன் உயிர் வாழ்ந்திட தேவையான பிராண சக்தியாகும்.

இப்பிராண சக்தியுடன் இருந்திடும் வாத, பித்த, கபங்கள், தன் நிலைகளில் இருந்து மாறுபடும் போதும், வேறுபடும் போதும் நோய்கள் தோன்றுகின்றன என்று சித்த மருத்துவம் கூறுகிறது. மேலும், நோயானது மனிதனின் மனதின் தன்மையையும் சார்ந்து தோன்றுகின்றன. மனிதனின் மனம் ஆரோக்கியமாக, தெளிவாக இருக்குமானால் அது உடலையும் ஆரோக்கியமான முறையில் நடத்திச் செல்லும். மனம் ஆரோக்கியமாக இல்லாமல் இருந்தால் வியாதி ஏற்பட்டு உடலுக்கு நோய் தோன்றுகின்றன. எல்லாவித நோய்களுக்கும் அடிப்படைக் காரணம் இதுவே என்று கூறலாம்.

## நல்வாழ்வு

மக்கள் சமுகம் நோயின்றி வாழ்வதே நல்வாழ்வு என்றதொரு நினைப்பு உலக மக்கள் அனைவரிடமும் காலங்காலமாக நிலவிவரும் எண்ணமாகும். ஆனால் நலத்தைப் பாதிக்கக்கூடிய நோய்களுக்குரிய காரணங்களை ஆய்ந்து சிந்திக்கும் போதுபலவகைப்பட்ட செய்திகள் தெரியவருகின்றன.

நல்வாழ்வு குறித்த உயிர் மருத்துவக் கோட்பாடு (Bio-Medical Hypothesis) என்றழைக்கப்படும் நினைப்பு மனிதவுடலை ஒரு இயந்திரமாகவும் அந்த இயந்திரம் பழுதுபடும் போது நோய்கள் தோன்றுவதாகவும் கூறுகிறது. ஆனால் சூழியியல் கோட்பாட்டினைக் ( Ecological Theory) கூறியவர்கள் நல்வாழ்வினைச் சூழலுக்கும் உடலுக்கும் இடையே ஏற்பட்டு நிலவுகின்றதொரு

லாவகமான சமன்பாடு என்று நிர்ணயித்தார்கள். இவை எவ்வாறு இருப்பினும் மனிதவுயிர்க்கும் ( Humanorganism), சூழலியலுக்கும் (Ecological) இடையே ஏற்படும் சீரின்மையே நோய்கள் தோன்றுவதற்கான காரணங்கள் என்பது உண்மையாகிறது என்று மருத்துவக் களஞ்சியம்[7] கூறுகிறது.

நடைமுறை வாழ்க்கையில் உடல்நலம், சமூகம் மற்றும் பண்பாட்டுத் திருப்பங்கள் ஏற்படச் சூழியல் கோட்பாடு உயிர்மருத்துவக் கோட்பாட்டுடன் சேர்ந்து சுகாதாரத்தின் மீதான விளைவுகளை உண்டாக்குகின்றதென்பதை உலகம் உணர்ந்து கொண்டுள்ளது. அதனால் நலவாழ்வினை ஒரு உயிரியல் சார்ந்த சமூகவியல் செயல்பாடு என்றே கருதலாம். இவ்வாறு நலவாழ்வினை ஒரு உயிரியல் சூழியல் கோட்பாடுகள் அழுத்தமாகக் கூறுவதையே அறிவியல் என்கிறோம். அறிவில் வல்லவர்கள் அல்லாத நாட்டுப்புற, பழங்குடி மக்கள் போன்றோர் ஒவ்வொரு நோயும் வருவதற்கெனக் காரணமிருப்பதாகக் கூறுகின்றனர். அவ்வாறு கூறப்படும் காரணங்கள் அம்மக்களின் நம்பிக்கையில் அடிப்படையில் கூறப்பட்டாலும், அவை உயிரியல் சூழியல் கோட்பாடுகள் அழுத்தமாக கூறுவதையொட்டியே அமைகின்றன.

## நாட்டுப்புற மக்கள் கூறும் காரணங்கள்

நாட்டுப்புற மக்கள் அறிவியல் கோட்பாடுகளை அறிந்திராத நிலையிலும், அவற்றின் அடிப்படையிலேயே

நோய்கள் தோன்றுவதற்கான காரணங்களை பின்வருமாறு கூறுகின்றனர்.

## மூடநம்பிக்கைகள்

உயிரியல் சூழியல் காரணமாக ஏற்படுகின்ற மிகச்சிறிய பிரச்சினைகளினாலும் உடல் பாதிப்புக்கு உள்ளாகும்போது, அதற்கு வேண்டியன செய்யாமல் மூட நம்பிக்கையினுள்ளேயே நாட்டுப்புற மக்கள் பலர் மூழ்கிக் கிடக்கின்றனர். அத்தகையோர் தங்களது வாழ்வியல் நிகழ்வுகளுக்கிடையில் பல பின்விளைவுகளுக்கு உள்ளாகி துன்புறுகின்றனர். அத்தகைய பின்விளைவுகளும் துன்பங்களும் மன உளைச்சலோடு கூடிய நிம்மதியின்மை, உடல்வழியான நோய்கள் ஆகியவற்றை ஏற்படுத்தி பாதிப்படையச் செய்வதோடு நாளடைவில் பெருநோயாளிகளாக மாறுகின்றனர்.

## அதிக அலைச்சல்

ஒரு மனிதன் தன்னுடைய சக்திக்குமீறி அலைதல், கடுமையான வேலைகளில் ஈடுபடுதல், தேவையான அளவு உணவு உட்கொள்ளாமலும், நீர் அருந்தாமலும் வேலைசெய்தல் போன்றவை. பலவீனத்தை ஏற்படுத்தி, அதன் காரணமாகச் சோர்வு தளர்ச்சி, உணவெடுக்க மனமின்மை, வயிற்றுவலி போன்ற நோய்களை ஏற்படுத்துகின்றன.

### அதிகமான உடலுறவு

அதிக அளவில் உடலுறவு கொள்வதால் ஆண்கள் மிகப்பலவீனமடைவார்கள் என்றும், உடல் ஆரோக்கியம் கெட்டு, பலமிழந்து, அதன் காரணமாகக் காசநோய், எலும்புருக்கிநோய், மூத்திரத்தில் சீழ்வடிதல் போன்ற பெருந்துன்பங்களைத் தருகின்ற நோய்கள் ஏற்பட வாய்ப்புகள் உள்ளதாகவும் நாட்டுப்புற மக்கள் கூறுகின்றனர். இதுபோல் பெண்களுக்கும் இழப்பு, பக்கவாதம், வெள்ளைப்போக்கு, மூத்திரச் சூடு போன்ற நோய்கள் உருவாகலாம் என்றும் அம்மக்கள் கூறுகின்றனர்.

### பிறகாரணங்கள்

மேடு பள்ளங்களில் ஏறி இறங்கும்போது கை, கால் ஒடிதல், பிறழ்தல், நச்சுத்தன்மையுடைய உயிரினங்கள் கடித்தல், பரம்பரையான தொற்றுவியாதிகள் போன்ற காரணங்களாலும் நோய்கள் உண்டாவதாக நாட்டுப்புற மக்கள் கூறுகின்றனர்.

### கிருமிகளினால் உண்டாகும் நோய்கள்

குடலில் உருவாகும் பூச்சிகள் நோய்களை உண்டாக்கும் கிருமிகள் என்று குறிப்பிடப்படுகின்றன. அவை, குடலில் உண்டாகும் நோய்களின் மூலமாகவும், கெட்ட உணவுகளின் மூலமாகவும் உண்டாகும். அவை பூநாகம், தட்டைப்புழு,

கொக்கிப்புழு, சன்னப்புழு, வெள்ளைப்புழு, செம்மைப்பூ, கீரைப்புழு, கர்ப்பப்புழு, திமிர்ப்பூச்சி எனப் பலவாகும். இவை துர்நாற்றமடைந்த மலத்தினாலும், சிறுநீர், இரத்தம், விந்து, சீழ், சளி, வியர்வை ஆகியவற்றிலும் உற்பத்தியாகும்.

குடலில் உண்டாகும் கிருமிகளினால் உடல் நிலை பாதிக்கப்பட்டு அதன் விளைவாக நோய்களை ஏற்படுத்தும். அவை உடல்திறம் மாறும், கடும், வயிற்றுவலி, மார்புநோய், வெளுப்பு நோய், ஊதல் நோய், இருமல், வாந்தி, சயநோய், அருசி, அஜீரணம், பேதி, வாய் நீரூறல், பிரமை, ஆனை, தொப்புள் சுற்றி வலி, வயிறு உப்பல், தூக்கத்தில் பல்கடித்தல், மாலைக்கண், குழந்தைகளுக்குத் தெற்கத்திக்கணை, குழந்தை இசிவு, மூக்கில் புண் ஆகிய நோய்களைத் தோற்றுவிக்கும். குடற் கிருமிகளினால் கிராணி, பவுத்திரம், மூலம், மலக்கட்டு, தேக காங்கை, சுரம், மயிர் உதிர்தல், குட்டம், சொறி சிரங்கு, படை, கரப்பான் முதலிய நோய்களை தோற்றுவிக்கும்" என்று கிருமிகளினால் உண்டாகக் கூடிய உடல்பாதிப்பு விரித்துரைக்கப்படுகிறது.

## விந்து கெட்டால் வரும் நோய்கள்

உடல் தாதுகளில் ஒன்றான விந்து, மனித உடலைப் பாதுகாப்பதில் முக்கியப் பங்கு வகிக்கிறது. 'விந்து கெட்டால் நொந்து போவான்' என்னும் பழமொழி விந்தின் சிறப்பை

குறிப்பிட்டுக் காட்டும். விந்து உடலில் இருக்கும் வரை உடலில் உயிரும் இருக்கும் என்பர். அத்தகைய விந்து அழிந்து விட்டாலோ அல்லது ஆற்றல் குறைந்து நீர்த்துப் போனாலோ மேக நோய் வந்தடையும். விந்து அழிந்தால் உடல் மிகுந்த வெப்பத்தை அடையும். அதனால் வாயுநோய் வரும். அதனைத் தொடர்ந்து சூலை, குட்டம், கிரந்தி, புற்று, ஒட்டியப்புண், கரப்பான், சிரங்கு? குன்மம், நீர்க்கட்டு, மலக்கட்டு, இளைப்பு நோய், இருமல், கொடிய பேதி, கிராணி, பாண்டு, காமாலை, பிசாசங்கள் ஆகியவை மேலும் பல நோய்களும் வந்து சேரும். அல்லது உடலைத் தாக்கி அழிக்கும். மேக நோயுடன் கபமும் பித்தமும் சேர்ந்தால் கண்களைத் தாக்கக் கூடிய கண்ணோய்கள் அனைத்தும் தோன்றும். பித்தம் அதிகமானால் காய்ச்சல் தோன்றும். மேக நோய் வந்தடைந்தால் அதன் துணைநோய்களான குடல்வாதம், திமிர்வாதம், குண்டல வாதம், சூழல்வாதம், பச்சை வாதம், உள்நடுக்கம், நரித்தலை வாயு, பலவித புண்கள் எல்லாம் தோன்றும் என்று கூறுவர்.[11]

### வாத பித்த ஐய நோய்கள்

வாத பித்தம் ஐயம் என்னும் மும்மலங்களினால், பொறியிலும் சிரசிலும் சூடுண்ணாகும். அதனால் கனன்று எழுகின்ற வாயுவினால் சூலை நோய் தோன்றுகின்றன. வாதத்தினால் மேகநோய், விரணம், சுரமும் வரும். பித்தத்தினால்

மேற்கண்ட உணவும் உணவின் கலப்பும் வாதநோய்யை தோற்றுவிக்கும் என்பதனால், அவை உணவுப்பொருள் என்பதையும் முற்றிலும் விலக்குதற்கு உரிய பொருள்களல்ல என்பதையும் கருத வேண்டும். இவ்வகை உணவுகள் புளிப்புச் சுவைக்குரிய உணவுகள் எடைத்தெரிவதால், அவை அளவாகவும் புளிச்சுவை மாற்றக்கூடிய உணவுகளை உண்டால் அது சமநிலையடைந்து நோயை தோற்றுவிக்காமல் இருக்கும் என்றும் கூறலாம்.

## பித்த நோய்

பித்த நோய்கள் 48 வகைகள் ஆகும். அவை, மனம், செயல், உணவு என்னும் வழிகளால் நோய் தோன்றுகின்றன. அவை, காதல், காமம், கோபம், பழி, மன உளைச்சல், வருத்தம், துயரச் செய்தி, மரணச் செய்தி, வஞ்சகம், பகை, பயம் என்னும் மனம் சார்ந்த உணர்ச்சிகளும், உறக்கமின்மையும், பட்டினி, செய்வினை, நடை, அலைச்சல், கடற்பயணம், நீண்ட உறக்கம், மருந்திடுதல், அபின், கஞ்சா, நீர், மலம், அடக்கல் என்னும் செயல்களும், மிளகாய், பெருங்காயம், கஞ்சி, உப்பு, வெள்ளுள்ளி, காரம், வெப்பெண்ணெய், இலுப்பை எண்ணெய், தேங்காய் எண்ணெய், மிளகு, வற்றல், திப்பிலி, கடுக்காய், மஞ்சள், போன்றவை[11] பித்தத்தை தோற்றுவிக்கும் பொருள்களாகக் கூறப்படுகின்றன.[11]

பித்தம் உடலைக் காக்கும் செயலைச் செய்வது என்று கூறப்பட்டுள்ளது. மேற்கண்ட பொருள், செயல் ஆகியவை பித்தத்தை தோற்றுவிக்கனவாக இருப்பதனால் அதனால் உடலுக்கு நன்மையாகத்தானே இருக்க முடியும் என்றால் நன்மைதான் எந்த அளவு என்றால் வாதம் ஒன்று பித்தம் அரை ஐயம் கால் என்னும் அளவில்தான் இருக்க வேண்டும். அந்த அளவில் மீறினால்தான் நோய்கள் தோன்றுகின்றன.

## ஐய நோய்

ஐய நோயின் எண்ணிக்கை 96 வகைகள் எனப்படுகிறது. ஐயம் நீர்த்தன்மையுடை யதாக இருப்பதனால் குளிர், குளிர்ந்த பொருள் குளிர்ச்சி என்று ஐயம் தோன்றுகின்றன. அவை, பனி, பலவகை நீர் காலையில் குளிக்காதது, காமம், மருந்திடு, மணம், சயம், மருவல், சுத்தி செய்யாத மருந்து, புளித்த தோசம், தோசபானம், மழையில் நனைதல், தூக்கம், விஷம், போகம் மிகுதி, அலைச்சல், மந்தம் போன்றவை ஐய நோயினை தோற்றுவிக்கின்றன என்று கூறுவர்.[15]

ஐயம் அழிக்கும் தொழிலுக்குரியதாகையால், வாதத்தின் அளவில் கால் அளவே ஐயம் இக்க வேண்டும் என்கிறது நாடி நூல். எனவே கெடுதல்/அழிதல் குறைவாக இருந்தால் தானே பாதுகாத்துக் கொள்ளவும் உயிர்வாழவும் முடியும்? அதனால் தான் உடலில் சேரும் பொருளும் கெடுதலைத் தாக்கூடிய

பொருள்களாக இருக்கக்கூடாது என்று கருதினர். மேற்கண்ட பொருள்களில், சுத்தி செய்யாத அமிழ்தம், பழித்த தோசம், தோசபானம் ஆகியவை 'ஒவ்வாமை'யைக் குறிப்பதாகும். ஒவ்வாமை உடலுக்குக் கேட்டினை விளைவிக்கும் என்பதனை அறிந்ததே. தமிழ் மருத்துவம் சுததி என்னும் தனிப்பிரிவையே மருந்துதயாரிப்பில் வைத்துள்ளது. 'சுத்தியில்லையேல் சித்தியில்லை' என்பது குறிப்பிடத்தக்கது. சுத்தம் என்னும் பழக்கமும் ஐயத்திலிருந்து விடுபடச் செய்யும் 'ஒவ்வாமை எல்லாம் ஒவ்வாது என்பதும் ஒவ்வாதது சிறய அளவு இருந்தால் தான், அது இன்பம்; அதனால் அது சிற்றின்பம் அளவு மிகுந்தால் பேரும் துன்பம் எனக் கூறுவதாகக் கருத வேண்டும்.

## நோய்களின் எண்ணிக்கை

வாத பித்த ஐயங்கள் அவற்றினால் உண்டாகும் நோய்களும் அவை அல்லத வேறு பல காரணங்களினால் தோன்றும் நோய்களை தொகுத்துக் கூறப்படுகிறது.

'குறியுல கேத்தி தானே குறித்தநா லாயிரத்தி
நறிவரு நானூற்று நாற்பத் தெட்டன'

என்று மனித உடலில் தோன்றக் கூடிய நோய்களின் தொகை 4448 என சித்த மருத்துவம் கண்டறிந்துள்ளது.[16]

## நோய்களின் வகைகள்

வாதம் பித்தம், ஐயம், தொந்தம் என்னும் பிரிவுகளினால் உருவாகும் நோய்கள் சுமார் 4448 என்று தொகையாக உரைக்கப்படுகிறது. அவை பல்வேறு குழுக்களாகக் கூறப்படுகின்றன. ஒவ்வொரு நோய்க் குழுவிலும் எத்தனை எத்தனை நோய்கள் இருக்கின்றன என்பது கூறப்பட்டுள்ளது. உதாரணமாக, கண்நோய் என்பது 96 எனக் கூறப்படுகிறது. அதற்கு மேல் கண்ணில் நோய் கிடையாதா என்றால் இருக்கலாம் அல்லது இல்லாமலும் போகலாம். சித்த மருத்துவம் தோன்றிய நாளில் எத்தனை நோய்கள் கண்டறியப்பட்டு மருத்துவம் காணப்பட்டதோ அவை மட்டுமே நோயின் குழுத் தொகையாகக் கூறப்பட்டுள்ளன எனக் கொள்வது சிறப்பாக இருக்கும். அவ்வாறு கூறப்பட்டுள்ள நோய்களின் குழுத்தொகை வருமாறு,

| | | |
|---|---|---|
| வாத நோய் | - | 84 |
| பித்த நோய் | - | 48 |
| ஐய நோய் | - | 96 |
| தனுர் வாயு | - | 300 |
| காசநோய் | - | 7 |
| பெருவயிறு | - | 8 |
| ஆலை நோய் | - | 200 |
| பாண்டு | - | 10 |
| கண்நோய் | - | 96 |
| சிலந்தி நோய் | - | 60 |

குன்மம் நோய் - 8

சந்தி நோய் - 76

எழுவை, கழலை நோய் 95

சுரம் - 85

மகோதரம் - 7

தலையில் விக்கம் - 5

உடம்பில் விக்கம் - 16

பிளவை நோய் - 10

படுவன் - 11

தொப்புள் நோய் - 7

பீலி நோய் - 8

உறுவசியம் - 5

கரப்பான் - 90

கெண்டை - 10

குட்டம் - 20

கதிர், விச்சுநோய் - 4

திட்டை (பல்விறுநோய்) 6

சோகை - 16

இசிவு - 6

மூர்ச்சை நோய் - 7

படு(குலைநோய்) - 46

மூலநோய் - 9

| | | | |
|---|---|---|---|
| அழல்நோய் | - | | 10 |
| பீனிசம் | - | | 76 |
| கடிவிஷம் | - | 76 | |
| நலக்கு, பல்நோய் | | | 76 |
| கிராணி | - | | 25 |
| மாலைக்கண் | - | | 20 |
| அதிசாரம் | - | 25 | |
| கட்டி | - | 12 | |
| கிருமி | - | | 6 |
| முட்டு(கில்)நோய் | - | 30 | |
| முதிர்வு நோய் | - | | 20 |
| சத்தி (வாந்தி) | - | | 5 |
| கல்லடைப்பு | - | | 80 |
| வாயு நோய் | - | | 90 |
| திமிர் நோய் | - | 10 | |
| விப்புருதி | - | 18 | |
| மேகநீர் | - | | 20 |
| நீர்ரோகம் | - | 5 | |
| விஷபாகம் | - | 16 | |
| காதுநோய் | - | 10 | |
| விக்கல் | - | | 10 |
| ஊ ரோகியம் | - | | 5 |
| | | | 349 |

| | | |
|---|---|---|
| மூக்கு நோய் | - | 10 |
| கடிதோஷம் | - | 500 |
| காயம்குத்துவெட்டு | - | 700 |
| கிரந்தி | - | 48 |
| பொறி(பறவை) விஷம் | - | 800 |
| புறநீர்க் கோவை | - | 200 |
| துடி (உதடு)நோய் | - | 100 |
| பிள்ளை நோய் | - | 100 |

என்னும் எண்ணிக்கையில் நோய்களின் குழுக்கள் குறிப்பிடப்படுகின்றன. இவற்றின் கூட்டுத்தொகை 4482 எனவரும். ஆனால், நோய்களின் தொகை எண்ணிக்கை எனக்கூறும் 4448ஐ விட வும் 34 அதிகமாக இருக்கிறது. என்றாலும் நோய் எனக் கொள்வதில் இவ்வளவு தான் நோய் என்று மருத்துவத்துறை வரையறை செய்திட இயலாது. நோய்கள் நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டிருப்பவை. 4448 என்பதுஒரு குறிப்பிட்ட காலத்தில் கூறப்பட்ட எண்ணிக்கையாக இருக்கலாம். பின்னர் அவை வளர்ந்திருக்கலாம். அதற்கு உதாரணமாக பதினெண் சித்தர் என்பதையே காட்டாகக் கூறலாம். ஒரு காலத்தில் சித்தர்கள் எண்ணிக்கை பதினெட்டு ஆக இருந்தது. பின்னர் அந்த எண்ணிக்கையில் மாற்றங்கள் நேர்ந்தன. சித்தர்கள் பலர் பின்னாளில் உருவானதே அதற்குக் காரணம் அதே போல நோய்களின் தொகை நாளுக்கு நாள் வளர்ந்து

கொண்டே இருக்கும். மேலும், குத்து வெட்டு என்னும் தொகை 700 என்கிறது. இவை நோயல்ல, இத்தனை காயமும் குத்து வெட்டும் இப்போது நிகழுமா? என்று வினா எழலாம். நிகழலாம். நிகழாமலும் போகலாம். அதுபோல், பறவை விஷம் 800 என்று இருக்கிறது. இதுவும் விளங்கவில்லை. பறவைகளினால் உண்டாகக் கூடிய தோஷங்கள் என்னென்ன என்பதை விளக்கும் நூல்கள் கிடைக்காததால் நூல்விபரங்கள் இல்லாததால், அறிவது கடினமாக இருக்கிறது. என்றாலும், நோயின் தொகை மருத்துவம் பார்க்கப் பயன்படாது. நோயின் குறி, குணங்களைக் கொண்டே மருத்துவம் பார்க்க முனைவர் என்றாலும், மருத்துவ நூல் கூறுவதைக் கொண்டு தொகுத்துக் காட்டவே எடுத்துக்காட்டப்பட்டது என்று கூறலாம்.[17]

## எண்வகைத் தேர்வு முறை

பொதுவாக நாட்டு மருத்துவர்கள் மனிதனின் உடலில் தோன்றும் நோய்களை கண்டறிவதற்கு எட்டுவகைத் தேர்வு முறைகளில் ஆராய்ந்து கண்டறிகிறார்கள். அவை நாடி, பரிசம், நாக்கு, நிறம், மொழி, விழி, மலம், மூத்திரம் என்பனவாகும். இவை எட்டும் மருத்துவரின் கருவிகளாகக் கூறப்படுகின்றன. இதனையே சித்த மருத்துவத்திலும் நோய் தேர்வு செய்யும் முறையாக கூறப்படுகிறது.

'நாடிப்பரிசம் நாநிறம் மொழிவிழி
மலம் மூத்திரமிவை மருத்துவ ராயுதம்'என்றும்

'மெய்க்குறி நிறந்தொனி விழிநா விருமலம் கைக்குறி'[18]

என்னும் குறிப்பிடுவர். எண்வகைத் தேர்வு என்பது பிணியை அறியும் முறையைக் குறிக்கிறது. உடலைப் பிணிப்பது நோய் என்பதனால், நோயைப் பிணி என்றும் சொல்லும் குறிப்பிடுவர். நோயறிதல் என்பது, நோயைப் பற்றித் தெரிந்துகொள்ளும் முறை எனலாம்.

## நாடி

நாடி, தாது என்னும் பெயராலும் வழங்கப்படும் நாடி, வாதம், பித்தம், ஐயம் ஆகிய பொருளில் ஆளப்படும். உயிர்த்தாது, உடற்தாதுகளைக் குறிப்பிடவும் தாதுஎன்னும் சொல்பயன்படும். சுருங்கக் கூறின், நாடியைக் குறிக்கும் தாது உடலில் உயிர் தங்கியிருப்பதற்குக் காரணமான ஆற்றல் எதுவோ? அதுவே நாடி அல்லது தாது எனப்படும்.[19] தாது ஒன்றாயினும் அதன் தொழில் காரணமாக மூன்று பிரிவுகளாக அல்லது ஒன்றாய்க் கூடிய மூன்று பிரிகளாக கருதப்படுகின்றன. அவையே வாதம், பித்தம், ஐயம் எனப்படும். இவையே அண்ட ரெண்டமெல்லாம் நால்வகை பிறப்பு, எழுவகைத் தோற்றம், எண்பத்தி நான்கு நூறாயிரமாகிய எவ்வுயிருக்கும் பொருந்தும்[20] என்பர்.

## நாடிகளின் எண்ணிக்கை

உடலில் உள்ள நாடிகளின் எண்ணிக்கை 72,000ஆகும்.

அவற்றில் கரு உருவாகும் போது உடன் தோன்றுகின்ற குண்டலி என்னும் மலத்தைப் பற்றிக் கோடாகக் கொண்டு தோன்றுகின்ற நாடிகள் பத்து ஆகும்.[21] அவை இடகலை, பிங்கலை, சுழிமுனை, காந்தாரி, குரு, சங்கினி, அசனி, அலம்புடை, புருடன், சிங்குவை என்பனவாகும். இப்பத்து நாடிகளிலும் மேலும் சிறந்தனவாகக் கருதப்படுவன மூன்று. அவை இடகலை, பிங்கலை, சுழுமுனை என்பதாகும்.[22]

## நாடிகளும் இயங்கும் இயக்கமும்

நாடிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு இடங்களில் பொருந்தி ஒவ்வொரு முறையில் இயங்கிக் கொண்டிருப்பது தெரியவருகிறது. அவை,

| | |
|---|---|
| இடகலை | - வலக்காலின் பெருவிரலிருந்து கத்தரிக் கோல்போல் இடது மூக்கைச் சென்றடையும். |
| பிங்கலை | - இடதுகாலின் பெருவிரலிருந்து கத்தரிக் கோல் போல வலது மூக்கைச் சென்றடையும் |
| சுழுமுனை | - மூலாதாரத்தைத் தொடர்ந்து எல்லா நாடிகளுக்கும் ஆதாரமாய் நடுநாடியாக சிரசு வரை முட்டி நிற்கும். |
| சிங்குவை | - உள் நாக்கில் நிற்கும். |
| புருடன் | - வலது கண்ணில் நிற்கும் |
| காந்தாரி | - இடது கண்ணில் நிற்கும் |
| அசனி | - வலது காதில் நிற்கும் |

அலம்புருடன் - இது காதில் நிற்கும்

சங்குனி - குறியில் நிற்கும்

குரு - அபானத்தில் நிற்கும்

என்று[23] நாடிகள் ஒவ்வொன்றும் உடலில் பொருந்தி இயங்கும் இடங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

## உயிர்த்தாதுக்கள்

நாடிகள், தாதுகள் உடலை இயக்கும் ஆற்றல்களாக அமைந்துள்ளன. இத்தாதுகள் உடலில் குறைந்தால் உடலின் இயக்கத்தில் குற்றம்(நோய்) தோன்றும் என்பதால் இவை உயிர்த்தாதுகள் என அறியப்படும். அவை, இரசம், இரத்தம், தசை, கொழுப்பு, என்பு, மச்சை, விந்து என்பனவாகும். இவை ஒவ்வொன்றும் வெவ்வேறு வகையாக உடலில் இயங்குகின்றன.[24]

இரசம் - உடலுக்கும் உள்ளத்துக்கும் நிறைவு தரும்
இரத்தம் - உயிரைக் காக்கும்
தசை - உடலைத் தாங்கும் அசைவு, பலந்தரும்
கொழுப்பு - உடலிலுள்ள தசைச் சந்துகளையும் எலும்புச் சந்துகளையும் தூர்த்து நிரப்பும் நெய்ப்பசை பூட்டும்
எலும்பு - உடலை உயர்த்தி நிறுத்தித் தாங்கும்
மச்சை - உடலை உயர்த்தி நிறுத்தித் தாங்கும்
விந்து - இனப் பெருக்கத்தை ஏற்படுத்தும்

என்று ஏழு தாதுக்களின் இயக்கம் உரைக்கப்பட்டது. இவற்றினால் தாதுக்கள் உடலுக்கு வந்த அளவுக்குச் சிறந்ததாகக் கருதப்படுகிறது என்பது விளங்கும்.

## நாடி, தாது - தொடர்பு

நாடிகள் பத்துள் இடகலை, பிங்கலை, சுழுமுனை ஆகிய மூன்றும் சிறப்புடையன. இடகலை வாத நாடியாகவும், பிங்கலை பித்த நாடியாகவும், சுழுமுனை ஐய நாடியாகவும் குறிப்பிடப்படும். அதேபோல தாதுக்கள் ஏழின் குணங்களையும் நலன்களையும் அறிய வேண்டுமானால், வாத பித்தம் ஐய நாடிகள் எவ்வாறு இயல்பாகவும் இயல்புக்கு மாறாகவும் இயங்குகின்றன என்பதைக் கொண்டே அறிந்திட இயலும். எனவே நாடி, தாதுக்கள் ஆகியவை உடலை இயக்கவும், காக்கவும், தாக்கவும், அழிக்கவும், ஆக்கவும் காரணிகளாக அமைகின்றன என்பது பெறப்படுகிறது. இவற்றின் இயக்கம் சீராகவும் முறையாகவும் அமைந்தால் உடல் நோயற்று இருக்க வகையேற்படும். அவை சீராக அமையாமல் முறை தவறினால் நோயோ நோய்க்குரிய பிற குற்றங்களோ உடலுக்கு நேர் வழியேற்படும்.

## நாடிகளில் மூன்று

நாடிகளில் வாதம், பித்தம், ஐயம் என்னும் மூன்று நாடிகள் சிறப்பாகக் கூறப்படுகின்றன. இம்மூன்று நாடிகள் உடலுக்கு உற்ற நோய் துன்பத்தினைக் கண்டறிய உதவும்.

'மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று'[25]

என்று திருக்குறள் மூன்று நாடிகள் குறைந்தாலும் மிகுந்தாலும் நோயை உண்டாக்குமென்று உரைக்கக் காண்கிறோம். அவ்வாறே மருத்துவ நூல்களும் வாதம் முதலாக உடைய மூன்று நாடிகளாலும் நோய்கள் தோன்றும் என்கின்றனர்.

மூன்று நாடிகளும் உடம்பிலிருந்து வெவ்வேறு நற்றொழில்களைச் செய்யும் இன்றியமையாக் கூறுகளேயன்றி, நோய்களல்ல. மூச்சும் பேச்சும் உட்பொருள் இடமாற்றமும், வெளியேற்றமும், தளித்தும், பிற தாதுக்களோடு கூடியும் நிகழ்த்துவது வாதத்தின் தொழில்கள் ஆகும். உண்ட பொருளின் செரிமானத்திற்கு உதவுவது பித்த நீர். தசைகளின் மழமழப்பான இயக்கத்திற்கு உயர்வு நெய் போல் பயன்படுவது ஐயம். இவை, உணவின் செயல்களினாலும், ஒவ்வாமையாலும், இயற்கை மாறுபாட்டினாலும், மிகுதலும், குறைதலும் நேரும்பொழுது, அவற்றின் விளைவாக நோய்கள் உண்டாகும். அவை நாட்டு மருத்துவர்கள் வாதம் முதலிய மூன்று நாடிகளையும் இரத்தம் ஐயம், பித்தம், கரும்பித்தம் என நான்கு வகைகளாகப் பகுப்பர்[26] என்றதனால், மேலை நாட்டு அறிஞர்களும் மருத்துவ வல்லுநர்களும் ஏற்றுக் கொள்ளத்தக்க முறையில் சித்த மருத்துவ முன்னோர்களால் நாடி முறைகள் அறியப்படுகின்றன.

## நாடிகளின் செயல்கள்

நாடிகள் மூன்றும் உடலைக் காக்கவும், அழிக்கவும் செய்ய வல்லன என்பதை மருத்துவ உலகம் விளக்குகிறது. வாதம் படைப்புத் தொழிலுக்கும், பித்தம் காக்கும் தொழிலுக்கும், ஐயம் அழிக்கும் தொழிலுக்கும் உடையதாகக் குறிப்பிடுவதை இயைபுடைதாகச் சித்த மருத்துவர் இரா.தியாகராசன்[77] கருதுகிறார்.

சூழ்ந்தது சுக்கிலத்திற்
சுரோணிதங் கலங்குமன்று
பூந்திடும் வியாதி மூன்றும்
பொருந்திய குமிழி போல[78]

என்று மூன்று நாடிகளும் உயிரின் கருத்தோன்றும் போதே உயிரோடு சேர்ந்தே தோன்றுவதாகக் குறிப்பிடப்படுகிறது.

## நாடியை ஆராயுமிடங்கள்

மருத்துவர்கள் நாடிகளைக் கண்டறிந்து, ஆராய்ந்து நோய்களை அறிந்திடக் கூடிய இடங்களாகப் பத்து இடங்கள் குறிப்பிடப்படுகிறது. அவை முறையே, கதிகால், சந்து, உந்தி, கை, மார்பு, கழுத்து, புருவமத்தி, காது, மூக்கு ஆகிய பத்து இடங்களைச் சார்ந்த உறுப்புப் பகுதி நரம்புகளில் மூன்று நாடிகளும் நடந்து கொண்டிருப்பதனால் அவ்விடங்களில் நாடியைக் கண்டு உடலின் குண நலனை ஆராயலாம்[79] என்றுரைக்கப்படுகிறது.

## ஆடவர் பெண்டிர்க்கு நாடியை அறியுமிடங்கள்

நாடிகளை அறியுமிடங்களில் ஆண்களுக்கும்

பெண்களுக்கும் வேறுபாடுகள் காணப்படுகின்றன. ஏனெனில் நாபிக்கூர்மமானது பெண்களுக்கு மேல் நோக்கியும், ஆண்களுக்குக் கீழ் நோக்கியும் இருக்கின்றமையால், கைகளில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபாடு தோன்றும் என்று கூறலாம். அதனால், ஆண்களுக்கு வலது கையிலும் பெண்களுக்கு இடது கையிலும் நாடி பார்க்க வேண்டுமென்று குறிப்பிடப்பட்டுள்ளது.[10] இது, நுட்பமான அறிவியல் உண்மையாகும். நாடிகளை ஆராயும் போது, கையின் பெருவிரலுக்குக் கீழே ஒரு அங்குலத்திற்கும் அப்பால் மூன்று விரல்களால் அழுத்திப் பார்க்க, முதல் விரலான ஆள்காட்டி விரலில் வாத நாடியும், இரண்டாம் விரலான நடுவிரலில் பித்த நாடியும், மூன்றாம் விரலான மோதிர விரலில் ஐய நாடியும் அறியச் செய்யும்.

| நாடி | வேளை | நேரம் |
|---|---|---|
| வாதம் | பகலும் இரவும் | 6-10 மணி |
| பித்தம் | பகலும் இரவும் | 10-2 மணி |
| கோழை(ஐயம்) | பகலும் இரவும் | 2-6 மணி[11] |

என்று நாடிகள் நடக்கும் வேளைகள் கணித்தறியப்பட்டுள்ளன. இவ்வாறு நாடிகள் நடைபெறாமல் சொந்தமானாலோ மாறுபட்டாலோ நோயோ மரணமோ உண்டாகுமென்ற உணர்த்தப்படுகிறது.

## நாடிகளும் காலமும்

'காலையில் வாதநாடி கடிகையில் பத்தாகும்

பாலையில் பித்தநாடி பகருச்சி பத்தாகும்

மாலையாம் சேத்துமநாடி மதிப்புடன் பத்தாகும்'[11]

பகற்பொழுதில் உதயம் முதல் பத்து நாழிகை வாதமும், அதன் பின் பகல் இவற்றிற்குரிய காலமாகும். அதுபோல் ஞாயிறு மறைவிற்குப்பின் முன்னிரவு பத்து நாழிகை வாதமும், அதன்பின் நள்ளிரவு பத்துநாழிகை பித்தமும், பின்னிரவு பத்து நாழிகை ஐயமும் நாடிகள் இயங்கும் காலம் என்பர். இதனை வாதபித்த ஐயம் ஆகிய நாடிகளின் சிறப்புக்காலம்[12] எனவும் கூறுவர்.

'கடக முதல் துலாம் வரையும் வாதமாகும்

கன்னாடியைப் பசியுமதுவே யாகும்

வடமீன் முதல் மிதுனம் பித்தமாகும்

விரைகமழ் பங்குனி ஆனியது வேயாகும்

திடமான விருட்சிக முதற்கும்பஞ் சேத்துமஞ்

சேர்ந்த கார்த்திகை மாசியதுவே யாகும்

நடைமேவும் வாதபித்த சேத்துமத்தானும்

நலமாக மாதமுதல் நடக்குங் காலே'[13]

என்று கடகம் முதல் துலாம் வரை (ஆடி - ஐப்பசி) வாதம் வளர்ச்சி பெறும். மீனம் முதல் மிதுனம் வரை (பங்குனி - ஆனி) பித்தம்

வளர்ச்சி பெறும். விருச்சிகம் முதல் கும்பம் (கார்த்திகை - மாசி) ஐயம் வளர்ச்சி பெறும் என்று கூறுவர்.

### நாடிபார்க்கும் மாதம், வகை

சித்திரை வைகாசியில் ஞாயிறு உதயத்திலும், ஆனி, ஆடி, ஐப்பசி, கார்த்திகையில் நண்பகலிலும், மார்கழி, தை, மாசியில் மாலை ஏற்படு வேளையிலும், பங்குனி, ஆவணி, புரட்டாசியில் இரவிலும் நாடிகளைக் கணிக்க நவின்ற நேரமாகும் என்பதனால், இயற்கையில் ஏற்படுகின்ற தட்ப வெட்பங்களுக்கு ஏற்றவாறு நாடிகளின் இயக்கம் அமைந்திருக்குமென அறியமுடிகிறது. அதை

'சித்திரை வைகாசிக்குச் செழுங்கதிருதந் தன்னில்
அத்தமான மானி யாடி ஐப்பசி கார்த்தி கைக்கும்
மத்தியானத்திற் பார்க்க மார்கழி தையு மாசி
வித்தகம் கதிரேன் மேற்கில் விழுகின்ற நேரந் தானே'
'தானது பங்குனிக்குந் தனது நல்லா வினிக்கும்
மானமாம் புரட்டாசிக்கு மற்றை ராத்திரியிற் பார்க்கத்
தேனென்று மூன்று நாடித் தெளிவாகக் காணுமென்று
நானமா முனிவர்சொன்ன கருத்தை நீ கண்டு பாரே'[14]

இதனை போல, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி ஆகிய திங்களில் வாதம் வளர்ச்சி பெறும். கார்த்திகை, மாழ்கழி, தை, மாசி, ஆகிய திங்களில் ஐயம் வளர்ச்சி பெறும். பங்குனி, சித்திரை, வைகாசி, ஆனி ஆகிய மாதங்களில் பித்தம் வளர்ச்சி

பெறும். அவ்வாறே சிறு பொழுதான ஆறில், வைகறையில் வாதமும் நண்பகலில் பித்தமும் ஏற்பாட்டில் ஐயமும் சிறப்புறுவதாகக் கூறப்படும். இயற்கையும் மாந்தர்தம் உடலும் இயைந்து இயங்கும் தன்மையனவாக கருதுவர். ஆதலின் நாடிகளும் இயற்கைக்கு ஏற்ப இயைந்து இயங்குவதாகக் கருதலாம்.

## நாடி தெரியாத பேர்கள்

பெண்போகர், நீண்ட கால நோயாளி, குதிரை ஏற்றம் செய்வோர், யானை ஏற்றம் செய்வோர், வழி நடைப்பயணி, பேருண்டி உண்போர், போதைப் பொருள் கொண்டவர், நீர்ப்பாடு, நீரழிவு, பெருநோய், விக்கம் ஆகிய நோய்களுற்றோர், அத்தி சுரத்தால் இளைத்தவர், பயமுற்றோர், மூச்சுப் பயிற்சி மேற்கொள்வோர் போன்றவர்களது நாடி நடை விரைவு கொண்டதாக இருக்குமாதலினால் நாடி நடையைக் கணித்தறிவது அரிதாக கருதப்படுகிறது.

மேலே குறிப்பிடப்பட்டிருப்போரில் பெரும்பாலோர் மெய்ப்பாட்டுணர்ச்சியால் அதிவேக இரத்த ஓட்டத்தைக் கொண்டவர்களாக இருப்பர். அவ்வாறு அதிவேக இரத்த அழுத்தம் ஏற்படுகின்ற அந்த வேளையில் நாடித் தேர்வு நடத்துவது முறையற்ற மருத்துவத்திற்கு வழிகாட்டியதாக அமையும் என்பதனால் நாடி தெரியாத பேர்கள் எனச் சுட்டிக்

காட்டியுள்ளனர்.

## நாடி நடை

நோய் அற்றபோது ஒரு வகை நடையும் உற்ற போது ஒருவகை நடையும், நோயின் வேறுபாட்டிற்கு ஏற்ப நாடியின் நடையும் வேறுபட்டிருக்கும். இந்த நாடியின் நடை இம்மாதிரியிருந்தால் இந்த நோய் அல்லது வருவதற்குரிய அடையாளம் என அனுபவத்தின் மூலம் உணர்வர். இதைப் பயில்வதற்கு ஏற்றவாறு விலங்குகள், பறவைகள், ஊர்வன, பூச்சி, புழுக்கள் போன்றவற்றை எடுத்துக்காட்டி உவமைகள் மூலமாக உணர்த்தப்பட்டுள்ளன.

## வாதநாடி

வாத நாடியானது இயல்பினில் அன்னம், கோழி, மயில் போல நடக்கும். உடலின் தன்மை மாறி நிற்குமானால் இந்நடையில் மாற்றம் ஏற்பட்டு நோயின் தன்மைக்கு ஏற்பச் செயல்படும். அவை வண்டுகள் தவழ்து போலும், ஓணான் போலும், பாம்பு, அட்டை, வேலிக்குருவி, ஆமை போலவும் நடக்கும் என்று கூறுவர்.

'வாகினின் அன்னங் கோழி மயிலென நடக்கும் வாதம்'[35]

## பித்தநாடி

பித்த நாடியானது இயல்பினில் ஆமை, அட்டை போல நடக்கும். பித்த நோய்க்குறி தோன்றும் போது அந்நோய்க்கு ஏற்ப நடையில் மாற்றம் ஏற்படும். அவை நாகரிகமான அன்னநடை போலும், மயில்போலும், தாரா போலும், மாடப்புறா, ஊர்க்குருவி போலும், கருடப்போத்து, சிங்கம், பாம்பு, பின்னை குதிப்பது போல, மதயானை போல, சிறு காக்கை தூங்குவதுபோல நடக்கும் என்று கூறுவர்.[16]

'ஏகிய ஆமை அட்டை இவைபோல நடக்கும் பித்தம்'[17]

## ஐயநாடி

ஐய நாடியானது இயல்பினில் தவளை, பாம்புபோல நடக்கும். ஐய நோய் தோன்றும்போது அந்நோய்க்கு ஏற்ப நடையில் மாற்றம் ஏற்படும். அவை கோழியின் நடை, கொக்கினது உறக்கம், ஊர்க்குருவி, சிலந்திவலையினில் பூச்சி போல நடக்கும்.

'போகிய தவளை பாம்பு பொல்லாத சிலேட் டுமந் தானே'[18]

'பாம்பு நடை பொலப் பதுங்கியும், அரணையினது வால் போலவும் ஐயநாடி நடையிருக்கும்'[19]

## நாடிகளும் அளவுகளும்

நாடிகளை ஆராயும் போது அவற்றுக்கு உரிய அளவுகளின்படி அமையாமல் நாடிகளின் இயல்பால அளவுகள்

குறிப்பிடப்படுகின்றன. வாத நாடி ஒரு மாத்திரை அளவும், பித்த நாடி அரை மாத்திரை அளவும், ஐயநாடி கால் மாத்திரை அளவும் என மூன்று நாடிகளின் அளவும் குறிப்பிடப்படுகின்றது. இந்த அளவுகளில் மூன்று நாடிகளும் தோன்றினால் உடலில் ஒரு குற்றமும் இல்லை என்று உறுதியாகக் கூறலாம்.[10]

## நாடித் தேர்வினால் அறியக் கூடிய நோய்கள்

வாதம் கால், பித்தம் ஒன்று என்னும் அளவில் நாடிகள் தோன்றினால், வாந்தி, மந்தம் வயிற்றெரிச்சல், சுரம், கண்ணில் காந்தல், பாண்டு, மூலம் ஆகியநோயும் மேலும் செவி அடைப்பு, உடல் வெளுப்பு, உடல்வலி, உடல் நடுக்கம், மூத்திர எரிச்சல், போன்று உடலில் பலவிதமான குணங்களில் காணப்படும் என்று குறிப்பிடுவர்.[11]

வாதம் முக்கால், பித்தம் அரை, ஐயம் கால் என்னும் அளவில் நாடிகள் தோன்றினால் உடல் வேர்க்கும், சீதளம் உண்டாகும், மேகம் உண்டாகும், உடல் தடிக்கும், காலில் வெடிப்பு உண்டாகும்.[12]

பித்தம் அரை, ஐயம் அரை, வாதம் கால் என்னும் அளவில் நாடிகளின் நடை தோன்றினால், வாய் காந்தும், வாயில் நீரும் கண்ணழலும் உண்டாகும். கால்களில் வெடிப்புண்டாகும்.[13] வாதம் ஒன்று, பித்தம் ஒன்று, ஐயம் ஒன்று என நாடி நடையிருந்தால்,

சாவில்லை சாகாம லிருக்கலாம்

சாத்தியத்தில் குணங்களப்பா யிதுகளெல்லாம்

சாவில்லை நோயில்லை வறுமையில்லை"

என்பதனால், மரணமில்லாப் பெருவாழ்வுக்குரிய உடலினர்க்கு இவ்வாறான நாடி நடை அமையுமென்று தெரிகிறது.

ஐயம் ஒன்று, பித்தம் கால், வாதம் கால் என்னும் அளவில் நாடி நடந்தால் காது அடைக்கும், தலையில் வியர்வை உண்டாகும், கண், மூக்கில் நீர் வடியும், மயக்கம் உண்டாகும்"[45]

வாதம் கால், பித்தம் ஒன்று என்னும் அளவில் நாடி நடை அமைந்தால், வாய்வு தொடர்பான நோய்கள் தோன்றும்"[46]

வாதம் ஒன்று, பித்தம் முக்கால், ஐயம் ஒன்று என்னும் அளவில் நாடி நடந்தால் தொப்புளுக்கும் தொண்டைக்கும் முச்சிழுக்கும், நெஞ்சடைக்கும், உடல் முழுவதும் நோயும், மரணம் நெருக்கத்தில் வந்து விட்டதென்று அறியலாம்.[47]

எனவே நாடிகளின் தொந்தத்தால் பல நோய்களைக் கண்டறியும் குறிப்புகள் காணப்படுகின்றன. பெரும் பகுதி நாடிகள் மரணத்தின் அறிவிப்பைத் தெரிவிக்க கூடியதாகக் காணப்பட்டாலும், அவற்றின் அறிகுறியை அறிந்த பின்பு அதற்கான மருந்துகளைக் கொண்டு மரணத்திலிருந்து மீளுகின்ற வாய்ப்பு அதிகம் காணப்படுகிறது.

## ஒலித்தேர்வு

நோயுற்றவர் பேசுகின்ற போது அவரின் பேச்சு அவரின் இயல்பு நிலையினிலிருந்து மாறுபட்டு, வீணையினது நாதத்தைப் போலும், கின்னாரம் இசைப்பது போலவும், குழல் இசைப்பது போலவும், சன்னமாகவும், நாயின் சத்தத்தைப் போலவும், மூச்சு கொட்டுகின்றதைப் போல சத்தமும், மலை எதிரொலிப்பதைப் போன்ற ஓசையும், கிணற்றில் பேசுவது போலவும், எக்காளம் போன்ற ஓசையும் பேரியம் கொட்டுகின்றதைப் போன்ற முழக்கமும் இருக்கமேயானால் வீணையிசைக்கு ஒரு நாழிகையிலும், கின்னரத்திற்கு பத்து நாழிகையிலும், குழலோசைக்கு நூறு நாழிகையிலும், நாயோசைக்கு ஆயிரம் நாழிகையிலும், மூச்சு கொட்டுகின்ற ஓசைக்கு இரண்டாயிரம் நாழிகையிலும், மலையோசைக்கு மூவாயிரம் நாழிகையிலும், எக்களாத்திற்கு நாலாயிரம் நாழிகையிலும், கிணற்றோசைக்கு ஐயாயிரம் நாழிகையிலும், பெரிய வோசைக்கு ஆறாயிரம் நாழிகையிலும், இறுதி வரும் என்று உரைக்கலாம்.

'வீணையிசை நத்தோசை வேயோசை நாயோசை
வீணையிசை நத்தோசை வெற்போசை - வீணையினது
தாரையியம் பேரியந் தப்பாதெசுந் றாதிலக்கந்
தாரையியம் பேர்கலைவி தான்'[18]

என்பதனால் ஒலித்தேர்வு முறையினால் நோயைக் காணாமல் நோயாளிக்கு இறுதி நாள் எத்தனை நாழிகையில் வரும் என்பது

கண்டறியப்பட்டுள்ளது.

## உணர்வுத் தேர்வு

நோயாளியை மருத்துவர் தொடுகின்ற போது மருத்துவரின் உணர்வில் நோயாளியின் உடல், முலையினது முலைகைப் போல இருக்குமானால் பன்னிரண்டு நாளிலும், ஆமையினது முதுகு போல இருக்குமானால் ஐம்பத்தாறு நாளிலும், மீனினது வால்புறம் போல இருக்குமானால் நாற்பத்தைந்து நாளிலும், குளிர்ச்சி அதிகமாயிருக்குமானால் பன்னிரண்டு சாமத்திலும், வெப்பமும் சீதளமும் தொந்தித்து இக்குமானால் ஐம்பத்தாறு சாமத்திலும், அதிக வெப்பம் இருக்குமானால் நாற்பத்தைந்து சாமத்திலும், மறைவிடத்தைப் பார்க்கும் போது யானைத் தோலைப் போல வன்மையாயிருந்தால் பன்னிரண்டு நாழிகையிலும், மரத்தைப் போன்றிருந்தால் ஐம்பத்தாறு நாழிகையிலும், கல்லைப் போன்றிருந்தால் நாற்பத்தைந்து நாழிகையிலும் இறுதிவரும். இரத்த நாளமானது தாமரைக் கொடியின் முள்ளைப் போலிருக்குமானால் பன்னிரண்டு விநாடியிலும், தர்ப்ப உளிபோல கூர்மையாக இக்குமானால் நாற்பத்தைந்து விநாடியிலும் இறுதி வருமென்று உரைக்கலாம்." உணர்வுத் தேர்வு முறைகள் குறிப்பிட்டுக் காட்டுகின்ற தோலில் தோன்றும் வேறுபாடுகள் அனைவராலும் அறியக் கூடியதாக இருந்தாலும்,

அவ்வாறு தோன்றவதற்குரிய அடிப்படைகள் என்னவென்று அறியமுடியவில்லை. அதற்கு அறிவியல் அடிப்படையாக அமைகிறதா அல்லது அனுபவம் அடிப்படையாக அமைகிறதா என்பது கண்டறியப் படவேண்டிதொன்றாகும்.

## வண்ணத் தேர்வு

நோயாளியைக் காணுகின்ற மருத்துவன் கண்களுககு நோயாளியின் வடிவம், சூரியனைப் போலச் சிவந்த வண்ணமும், மினுமினுப்பும் தோன்றுமேயானால் இரண்டு மாதத்திலும், சந்திரனைப் போல வெள்ளை நிறமும் மினுமினுப்பு தோன்றுமேயானால் மூன்று மாதத்திலும், செவ்வாயைப் போலச் சிவந்த நெருப்பு நிறமும் மினுமினுப்பும் தோன்றுமேயானால் நான்கு மாதத்திலும், வியாழனைப் போல பொன்னிறமென்னும் மஞ்சள் நிறம் தோன்றுமேயானால் ஐந்து மாதத்திலும், வெள்ளியைப் போல வெண்ணிறமும் மினுமினுப்பும் தோன்றுமேயானால் ஆறுமாதத்திலும், காரியைப் போல கருமை நிறமும் மினுமினுப்பும் தோன்றுமேயானால் ஏழு மாதத்திலும், உமையாள் போல கறுத்த பச்சை நிறமான நீலச் சாமன நிறத்துடன் மினுமினுப்பும் தோன்றுமேயானால் எட்டு மாதத்திலும், வண்ணம் தோன்றாமல் மினுமினுப்பு மட்டும் தோன்றுமேயானால் அந்த நிமிடமே இறுதி வரும் என்று உறுதியாகக் கூறலாம்,.

'என்றுமதி செவ்வாய் இரணியன்சுங் கயன்காரி
யென்றுமதி செவ்வாய் இவையோடுமை - என்றுமதி
அஞ்சுமா தக்கணமேல் ஆறுதிங்க ளாமிதுக்கே
அஞ்சுமா தக்கணமே யாம்'[50]

இச்செய்யுளில் கிழமைகளையும் அவற்றிற்குரிய கோள்களின் வண்ணத்துடன் ஒப்பிட்டுக் காட்டி நோயாளியின் இறுதி நாள் எண்ணிக்கை காட்டப்பட்டுள்ளதை இங்கு காணலாம்.

## சுவைத் தேர்வு

நோயுற்றவர் அறுசுவைப் பொருள்களை உண்ணும் போது அந்தச் சுவை தோன்றாமல் வேறு சுவை தோன்றுவதாகக் கூறினால் அதனால், நோயுற்றவர் என்ன நிலையில் உள்ளார் என்பதைத் தெரிவிப்பதே சுவைத் தேர்வாகும்.

ஒரு சுவைப் பொருளை உண்ணும் போது, அதற்குரிய சுவை தோன்றாமல், வேறு எந்தப் பொருளை உண்டாலும் அந்தச் சுவை தோன்றுவதாகக் கூறினால், நோயின் முதிர்ச்சியால் எத்தனை நாளில் இறுதிவரும் என்பதை அறியலாம். கசப்புச் சுவையை உண்ணும் போது கசப்புத் தோன்றாமல் மற்றெந்தப் பொருளை உண்டாலும் கசப்பதாகக் கூறினால் ஏழு நாளிலும், இனிப்புச் சுவை தோன்றாவிட்டால் ஒரு திங்களிலும், புளிப்புச் சுவை தோன்றாவிட்டால் பதினைந்து நாளிலும், காரச் சுவை தோன்றாவிட்டால் அரை நாளிலும், கரிப்புச் சுவை

தோன்றாவிட்டால் ஒரு நாளிலும் துவர்ப்புச் சுவை தோன்றாவிட்டால் ஒரு நாழிகையிலும் இறுதி வருமெனலாம். நோயாளியைப் பற்றிக் கொண்ட நோய் உயிரை வாங்கிக் கொண்டு போக நினைத்திருக்கிற காலத்தை இவ்வாறு அறிய வேண்டும்.[51] மருத்துவர் மட்டுமல்ல, மற்றவர்களுக்கும் அறியக்கூடியதாக அமைந்திருக்கக் காணலாம். நோயாளியின் அனைத்து நிலைகளையும் ஆராய்ந்து நிலைமையை அறிய உணர்த்தப் பெற்ற இவ்வாறான முறைகள் அரிவையாக உள்ளன.

## நாற்றத் தேர்வு

மலர்களிடத்து எழுகின்ற மணத்தை நோயாளி நுகர்ந்து பார்த்து அந்த மலருக்குரிய மணம் தோன்றாமல் வேறு மணமாகத் தோன்றுவதாகக் கூறினால் நோயாளியின் நிலையை அறிவிப்பது நாற்றத் தேர்வாகும்.

'மூங்கிற்பூ மணம் அறியாவிட்டால் ஏழு வினாயிலும்,

வேங்கைப்பூ மணம் அறியாவிட்டால் ஏழு நாழிகைக்குள்ளும்,

தாழம்பூ மணம் அறியாவிட்டால் ஏழு சாமத்திற்குள்ளும்

அத்திப்பூ மணம் அறியாவிட்டால் ஏழு நாளிலும்,

கொன்றைப்பூ மணம் அறியாவிட்டால் ஏழு மாதத்திற்குள்ளும்

சிறுசெண்பகப்பூ மணம் அறியாவிட்டால் பதினான்கு மாதத்திலும்

மராமரப்பூ மணம் அறியாவிட்டால் மூன்று ஆண்டிற்குள்ளும்''[52]

இறுதி வருமென்று அறிந்து பார்த்துத் துணிவுடனே உரைக்கவேண்டும் என்று உறுதியாக உரைப்பதை இங்கு காணமுடிகிறது.

## மலத் தேர்வு

நோயாளியின் மலம் வந்த வடிவிலும் வண்ணத்திலும் தன்மையிலும் எவ்வாறு இருக்கிறது என்றறிந்து நோயாளியின் நிலையை அறிவிக்கிறது. வெள்ளாட்டு புழுக்கையைப்போல உலர்ந்து வரண்டிருந்தால், இறுதி அருகிலுள்ளதெனலாம். சற்று குழம்பு போலிருந்தால் மிக நன்று. போதுமான நீர்த்தன்மையுடையதாய் கடினமுமில்லாமல் தளர்ச்சியுமில்லாம், வெண்மையா யுமில்லாமலிருந்தால் மிக நன்று. செம்பு நிறம் மத்திமமாகவும், கறுப்பு நிறம் தீயதாகவும் இருக்கும்.[53] இத்தேர்வு அதிக ஆய்வும் விளக்கமுமில்லாமல் சாதாரண தோற்றத்தைக் கொண்டு பொதுவாக உரைப்படும் கருத்தைப் போலுரைக்கப் பெற்றவையாகும்.

## நீர்த்தேர்வு

நாட்டு மருத்துவம் ஆராயும் சிறுநீர்த் தேர்வு முறையில் சிறுநீர் அடிப்படையில் வண்ணங்களாக மஞ்சள், சிவப்பு, பச்சை,

கறுப்பு, வெண்மை என்னும் ஐந்து வண்ணங்கள் கொள்ளப்பட்டு, இவற்றின் பிரிவுகளாக இருபத்தொறு வண்ணங்கள் ஆராயப்படுகின்றன. சிறுநீரின் பொதுத் தன்மையாக நிறம், எடை, நாற்றம், நுரை, குறைதல் என்னும் ஐந்தினையைக் குறிப்பிடுவர். சிறுநீர்த் தேர்வினால், உடலின் வெப்பக் குணங்களும் அதனால் உண்டாகக் கூடிய நோய்களும், வாதம், பித்தம், ஐயம் ஆகியவற்றினால் உண்டாகக் கூடிய உடலின் மாற்றமும் அறியப்படுகிறது. சிறுநீர்த் தேர்வினால் கருப்பை, ஆண்குறியில் புண், கல்லடைப்பு போன்றவற்றை அறியக்கூடும் என்று குறிப்பிடுவர்.

'காணிதில் சீழும் கலந்துஇழிமணம் உறின்
கருப்ப நாட்கள் உளும் காமநா ளத்துளும்
விரணமுண்டு இன்றேல் எய்தும் அங்மரியலது
இடுத்தலே திண்ணம் எனமனத்து எண்ணே'[54]

சிறுநீரில் சீழும் நாற்றமும் வீசினால், கருப்பை, கொப்பூழ், ஆண் குறியில் புண்ணும் கல்லடைப்பும் ஏற்படுகிறது.

சிறுநீரில் எண்ணெய் விட்டு பார்த்து சோதிக்கும் முறை வேறு மருத்துவத் துறைகளில் இப்பதாகத் தெரியவில்லை என்று கூறலாம். இம்முறை சித்த மருத்துவத்துக்கு மட்டும் உரியது என்பது குறிப்பிடத்தக்கது. அவை சிறுநீரில் ஒரு துளி அளவு நல்லெண்ணெய் விட்டு எண்ணெய் நீரில் எவ்வாறு பிரிகிறது என்றும், தோன்றுகிறது என்றும் கண்டு நோயின் குற்றத்தைக்

கண்டறிவது இம்முறையாகும்.[55]

## எச்சில் தேர்வு

நோயாளின் உமிழ்நீர் எட்டுவகையாகப் பிரிக்கப்பட்டு அதனால் அறியப் பெறுவன உத்தமம், மத்திமம், அதமம் என்றும் மூன்று வகையில் கூறப்படுகிறது.

*1. உமிழ் நீரானது, இளநீர் போன்றிருந்தால் முதன்மையான உத்தமம்.*

*2. பால் போன்றிருந்தால் இரண்டாவது உத்தமமென்றும்*

*3. வெண்ணெய் போல் அழுந்தி வெண்மையா யிருக்குமானால் மத்திமத்தில் முதன்மை யென்றும் கூறுவர்.*

*4. தயிரைப் போல் அழுத்தமும் வெண்மையும் இருக்குமானால் மத்திமத்தில் இரண்டாவதென்றும்*

*5. குதிரை வாயிலிருந்து வெளியாகும் நுரைபோலிருந்தால் அதன்மத்தில் முதன்மையென்றும் கூறிப்பிடுவர்.*[56]

## விந்து தேர்வு

விந்து தேர்வும் எச்சில் தேர்வைப் போலவே உத்தமம், அத்மம், மத்திமம் என்கிற முறையில் உரைக்கப்படுகிறது. அதவாது நோயாளியின் விந்து,

*1. வெண்ணெய் போன்றிருந்தால் உத்தமத்தின் முதன்மை*

*2. தயிரைப் போன்றிருந்தால் உத்தமத்தின்*

இரண்டாவதாகும்.

3. பால்போன்றிருந்தால் மத்திமத்தில் முதன்மை

4. மோர் போன்றிருந்தால் மத்திமத்தில் இரண்டாவதாகும்.

5. தேன் போன்றிருந்தால் அதமத்தில் முதன்மையாகும்.

6. நெய்போன்றிருந்தால் அதமத்தில் இரண்டாவதாகும்

7. கள்போன்றிருந்தால் அதமத்தில் முதன்மையாகும்

8. தண்ணீர் போன்றிருந்தால் அதமத்தில் அதமம் முயற்சி வேண்டாம் என்று கைவிடலாம்.

என்று கூறப்படுகிறது. நோயாளியின் உயிர்ப்பிரியும் போது இரத்தமும் விந்தும் நீர்த்துத் தண்ணீரைப் போல வெளியாகும். அவ்வேளையில் நோயாளியைக் காப்பாற்ற முயல்வது வீண் என்று கூறப்படுகிறது.[57]

## பொதுவான நோய்களும் குணமாக்கும் முறைகளும்

மனிதனுக்குரிய நோய்களாக 4448 என்று முன்னர் குறிப்பிட்டதுபோல், தன்வந்தரி தனது மருத்துவக் குறிப்புகளில் எல்லா வகையான நோய்களுக்கும் மருந்துகளை எழுதியுள்ளார். சித்தர்கள் மருத்துவத் துறையில் பல புதிய செய்திகளைக் கூறியுள்ளனர். நாட்டுப்புற மக்கள் மனிதனுக்கு வரக்கூடிய பல நோய்களுக்குப் பல வகையான மருந்துகளைத் தெரிந்து வைத்துள்ளனர். அவை மக்களிடத்தில் சேகரிக்கப்பட்ட

பொதுவான நோய்களையும் அவற்றிற்குரிய மருத்துவ முறைகளையும் தொகுத்து ஆராயப்பட்டுள்ளது.

## பொதுவான நோய்கள்

மக்களில் ஆண், பெண், சிறுவர்கள், குழந்தைகள் ஆகியவர்களுக்கு ஏற்படும் பொதுவான நோய்களாகப் பல காணப்படுகின்றன. பெண்களுக்கு உரிய கர்ப்பம், மாதவிடாய் போன்றவற்றைத் தவிர்த்து ஏனைய முறைகளில் வரும் உடல் சம்பந்தப்பட்ட நோய்களைப் பொதுவான நோய்கள் எனலாம். இந்த நோய்கள் உடலில் உள்ள உறுப்புகளின் செயற்பாடுகளில் ஏற்படும் மாற்றங்களைக் கொண்டும் விலங்குகளினால் ஏற்படும் கடி முறைகளைக் கொண்டும் வரக் கூடியவையாகும். இவை பற்றி தொடர்ந்து காணலாம்.

## தலையில் வரும் நோய்கள்

தலைப் பகுதியில் வரும் தலைவலி, தலைச் சுற்றல், தலைப்பாரம் ஆகிய நோய்கள் தலையில் வரும் நோய்களாக அமைகின்றன, அவற்றை பிரிக்கும் போது, பொதுத் தலைவலி, ஒற்றைத் தலைவலி, திராத்தலைவலி, மண்டைப் பீனிசம் போன்றவை நோய்களாகப் பிரிப்பர்.

தலைமுடியினை மக்கள் பராமரிக்காவிட்டால் பேன், பொடு, அழுக்கு, வழுக்கை, புழுவெட்டு, முடி உதிர்தல்,

இளம்நரை, செம்பட்டை நிறமடைதல் போன்ற பல்வேறு பிரச்சினைகள் ஏற்படுகின்றன. இவைகளும் ஒருவிதமான நோய்களாக கருதுவர். இத்தகைய நோய்களையும் நீக்குவதற்குரிய மருந்து நாட்டுப்புற மருத்துவத்தில் மக்கள் அறிந்து வைத்துள்ளனர்.

எ.கா இளநரையினை நீக்குதல் பற்றிக் காணும் போது சிலருக்கு இளம் வயதிலேயே நரை தோன்றுகிறது. அத்தகையோர் கையாந்தகரைச் சாற்றினைக் கால்தம்ளர் அளவில் தினமும் காலையில் உணவிற்கு முன் ஒருமண்டலம் குடித்து வந்தால் இளநரை நீங்கும் என்பது நாட்டுப்புற மக்களின் கருத்தாகும்.

### கண்ணில் வரும் நோய்கள்

மனித படைப்பில் மிகவும் இன்றியமையாத உறுப்பாக விளங்குகின்ற கண்களில் பலவகைப்பட்ட நோய்கள் ஏற்படுகின்றன. அந்நோய்களுக்கான மருத்துமுறைகளையும் நாட்டுப்புற மக்கள் அறிந்து வைத்துள்ளனர். எ.கா. கண்களில் கட்டி எனும்போது கண்களின் உள்ளும் இமைகளின் ஓரங்களிலும் கட்டிகள் தோன்றும் போது மிகுந்த வலி ஏற்படும். இத்தகைய நோயினை நீக்கிட இரண்டு வகைப்பட்ட மருந்தினை நாட்டுப்புற மக்கள் பயன்படுத்தி வருகின்றனர்.

திருநீற்றுப் பச்சிலைகளை எடுத்துக் கைகளில் வைத்துக்

கசக்கிப் பிழியும் போது வரும் சாறினைக் கட்டி இருக்கும் கண்ணின் உள்ளோ அல்லது இமைகளிலோ படுமாறு அடிக்கடி ஊற்றி வந்தால் கட்டிகள் பழுத்து உடைந்து புண் ஆறிவிடும்.

சங்கினை முலைப்பால் சேர்த்து அரைக்கல்லில் வைத்து உரசும்போது கிடைக்கும் குழம்பினைக் கண்கட்டிகள் அல்லது இமைகளின் மேல் உண்டாகின்ற கட்டிகளில் அடிக்கடி தடவி வந்தால் குணம் அடையும் என்பது அவர்களுடைய கருத்தாக அமைகிறது.

இதேபோல் கண்களில் உறுத்தல், நீர்வடிதல், செங்கண்நோய், கண்களில் சதை வளர்தல், பார்வைத் தெளிவடைதல்,கண்களில் தூசு விழுதல், கண்விழிப்படலம் கேடடைதல் போன்ற நோய்களுக்கும் நாட்டுப்புற மருத்துவத்தில் ஏராளமான மருந்துகள் கண்டுபிடித்துவைத்துள்ளனர்.

## காதுநோய்கள் அவற்றை குணமாக்கும் முறைகள்

காதுகளிலுள்ள கேட்டும் சக்தியினால் தான் அனைத்துச் செய்திகளையும் மக்கள் கேட்டறிந்து கொள்ள முடிகிறது. இத்தகைய சிறப்புடைய காதினுள்ளும் கட்டிகள், வீக்கம் ஆகியன உண்டாகி பல்வகைப்பட்ட பிரச்சினைகள் ஏற்படுகின்றன. இவை களுக்குரிய மருத்துவ முறைகளையும் நாட்டுப்புற மக்கள் அறிந்து வைத்துள்ளனர். உதாரணமாக காது வலி வந்துவிட்டால் வெற்றிலையை அரைத்துச் சாறு பிழிந்து

வலி ஏற்படும் காதுகளில் இரண்டு துளிகள் விட்டு பஞ்சினால் அடைத்து வந்தால் வலி நின்று விடும் என்று குறிப்பிடுவர்.

கொடிக்கள்ளியினை அடுப்புத்தணலில் சூடு செய்து பிழியும் போது வரும் சாற்றில் இரண்டு சொட்டுகளை வலியிருக்கும் காதுகளில் விட்டுவந்தால் வலிநீங்கும் என்பர்.

அதேபோல் மருள் என்ற கற்றாழையின் இலைகளை நெருப்புத்தணலில் சூடுபடுத்திக் திருகிப்பிழியும் போது வரும் சாறுடன் சமனளவு தேங்காய் எண்ணெய் விட்டுசூடு செய்து, மிதமானச் சூட்டில் வலியிருக்கும் காதுகளில் மூன்று சொட்டுகள் விட்டு வரும்போது காது வலி நீங்கும் என்பது நாட்டுப்புற மக்களின் நம்பிக்கையாகும். இவ்வாறாக காதுகளில் சீழ்வடிதல், காதினுள் கட்டி போன்றவற்றிற்கும் மருந்துகள் கண்டறிந்துள்ளனர்.

## முக நோய்களும் அதை குணமாகுக்கும் முறைகளும்

முகமே ஒருவனை தோற்றத்தில் அழகானவனாக மாற்றுகிறது. முகத்தினை அழகுப்படுத்த இயற்கைப் பொருட்களைப் பயன்படுத்தலாம். சிலருக்கு இயற்கைப் பொருட்கள் முகத்திற்கு ஒத்து வராது. எனவே செயற்கைப் பொருட்களை உபயோகம் செய்யலாம். நாட்டுப்புற மக்கள் முகப்புள்ளி, முகப்பரு ஆகியவற்றிற்கு பின்வரும் மருத்துவமுறைகளை பயன்படுத்துகின்றனர்.

முகப்பரு வந்துவிட்டால் அதற்கு சாதிக்காய், சந்தனம் ஆகிய இரண்டினையும் சமஎடையளவில் எடுத்து நீர்விட்டு மைபோல அரைத்து வைத்திருக்கும் குழம்பினை ஐந்துநாட்கள் தொடர்ந்து இரவு வேளையில் விக்கமாக இருக்கும் முகப்பருக்களின்மீது தடவியபின் காலையில் குளிர்ந்த நீரில் குளிக்க வேண்டும். மேலும், திட்டுத் துணியை துவைத்து அதனை முகத்தில் தேய்த்து வர முகப்பரு மறையும். சந்தனம், மிளகு, சாதிக்காய் மூன்றையும் சம அளவு எடுத்து அரைத்து முகப்பருக்கள் மீது தடவி வர முகப்பரு மறையும் என்பது குறிப்பிடத்தக்கது.

## பல் சம்பந்தமான நோய்கள்

பற்களில் சொத்தை ஏற்பட்டுப் பல்வலி, பல் ஈறுகளில் புண் மற்றும் இரத்தம் வடித்தல் போன்றவை பல் சார்ந்த பொதுவான நோய்களாக உள்ளன. நாட்டுப்புற மக்கள் பெரும்பான்மையோர் பற்கள்மீது கவனம் செலுத்தாமையினால் பல்சம்பந்தமான நோய்களுக்கு உள்ளாகின்றனர். இத்தகைய நோய்களை நீக்குவதற்குரிய மருத்துவ முறைகளை நாட்டுப்புற மக்கள் அறிந்து வைத்துள்ளனர்.

## சொத்தைப் பல்

சொத்தைப்பல் உடையவர்கள் வெண்ணையை

உண்பதால் பல் சொத்தையாவதை தடுக்கலாம். ஏற்கனவே சொத்தையானப் பற்களை உறுதி பெறவும் உதவுகிறது. மூக்குப் பொடி கொண்டு பல் துலக்க பல் சொத்தையால் உண்டான வலி குறையும். மேலும் சொத்தைப் பல் வலி குறைய கரிசலாங் கண்ணிக் கீரையின் சாற்றைப் பற்களின் ஈறுகளின் மீது தடவி வர சொத்தையினால் உண்டான வலி போகும் என்பர்.

பல் சொத்தையால் முகம் வீங்கும். இதற்கு குப்பை மேனி இலையை மைபோல் அரைத்து குபபை மேனி சாறுடன் பச்சை மிளகாய் ஒன்றை கீறி அந்த மூழ்கிச் சூடுபடுத்தவும், சுண்டிய பின் இறக்கி அதனை சொத்தைப் பல்லில் தேய்த்து வர பல் சொத்தை பரவாது என்று குறிப்பிடுவர். இதேபோல் பல்வலி வந்தால் ஒரு கழஞ்சு கிராம்பினை நாழி நீரில் போட்டுக் காய்ச்சிய நீரினால் பல்வலியுடையோர் அடிக்கடி வாய்க்கொப்பளித்து, வலியிருக்கின்ற பல்லின் சொத்தைப்பகுதியிலுனுள் கிராம்புத்தைலத்தைப் பஞ்சில் தொட்டு வைத்தால் நோய் நீங்கும் என்பர்.[58]

மேலும், பல் ஈறுகளில் காணப்படும் நோய்களாக பல்கறை, பல் ஈறுகளில் வீக்கம், புண், இரத்தம் வடிதல் போன்ற நோய்கள் உண்டாகின்றன. அவற்றிற்கும் நாட்டுப்புற மருத்துவத்தில் சுக்கு, படிகாரம், போன்றவை பயன்படுத்தப்படுகின்றன.

## தொண்டை நோய்களும் குணமாக்கும் முறையும்

தொண்டையில் தோன்றும் நோய்களாக தொண்டை கரகரப்பு, தொண்டை வலி, தொண்டைப் புண், தொண்டைச் சளி ஆகியவை அமைகின்றன. அவை குறித்து காணும்போது தொண்டை கரகரப்பு உள்ளவர்கள் மிளகு பச்சை கற்பூரம், வெற்றிலை ஆகியவைகளை வாயில் போட்டு மென்று சிறிது சிறிதாக சாறை விழுங்க வேண்டும். இவ்வாறு செய்ய தொண்டை அடைப்பு, கரகரப்பு முதலியவை குணமாகும் என்பர். வெந்நீரில் உப்பைப் போட்டு வாய்கொப்பளிக்கத் தொண்டை கரகரப்பு குணமாகும். மணத்தக்காளி கீரையைப் போட்டு சூடு நீர் காய்ச்சி பருகிவர தொண்டைக் கட்டு குணமாகும் என்பர்.

## வயிற்று நோய்களும் குணமாக்கும் முறையும்

உணவுப்பொருட்களைப் பக்குவமாகச் சமைத்து உண்ணாமை, ஒரே வேளையில் அளவுக்கு அதிகமாகச் சாப்பிடுதல், கொழுப்புச்சத்து மிகுந்த உணவுவகைகளை உண்பது போன்ற காரணங்களால் அஜீரணம், வயிற்று வலி, வயிற்றுப்பொருமல், வயிற்றோட்டம் போன்ற நோய்கள் ஏற்படுகின்றன. இத்தகைய நோய்களுக்குரிய மருந்துகளையும் நாட்டுப்புற மக்கள் தெரிந்து வைத்துள்ளனர்.

உணவு உண்ட பின்னர் செரிக்காமல் வாந்திவருவதுபோல் ஏப்பம் வந்து புளிப்புச் சுவையுணர்வோடு வாய்வழியாக காற்று வெளிவருவதை அஜீரணக்கோளாறு

என்று பொதுவாகக் கூறுவர். அவற்றிற்கு இருவகைப்பட்ட மருந்துகளை நாட்டுப்புற மக்கள் பயன்படுத்துகின்றனர். காட்டுச்சீரகத்தை இஞ்சிச்சாற்றில் ஊறவைத்துச் சாறு வற்றியபின் எலுமிச்சைச்சாற்றில் மீண்டும் ஊறவைத்து அதுவும் வற்றிக் காய்ந்த வேளையில் வெயிலில் உலர்த்திப் பொடி செய்து வைத்துக் கொண்டு அஜீரணம் ஏற்படும்போது ஒருகரண்டியளவு பொடியினை ஒருநாழிகை நேர இடைவெளியில் இருதடவைகள் சாப்பிட்டு வந்தால் அஜீரணம் நீங்கிப் பசி ஏற்படும் என்பது இவர்களுடைய கருத்தாக அமைகின்றது.[59]

## குடல் நோய்களும் குணமாக்கும் முறையும்

குடலில் உள்ள உறுப்புகள் சரிவர வேலை செய்யவில்லை யெனில் மலம் ஒழுங்காக வெளியேறாது. இதனால் மலக்கட்டு, மூலம் போன்ற நோய்கள் தோன்றுகின்றன. அவற்றிற்கு கீரைகள், பழங்கள் முதலியவை சாப்பிட மலம் ஒழுங்காக வரும். பள்ளிப்பட்டு வட்ட மக்கள் உண்ணும் மருந்துகளை மேற்கொள்கின்றனர். சிறுஅம்மன் பச்சரிசியை மற்றும் காயை துவையல் செய்துசாப்பிட்டுவர மலக்கட்டுநீங்கும். விதை நீக்கிய கடுக்காய்த் தூளுடன் கிராம்பைச் சேர்த்து கொதிக்க வைத்து, அந்த நீரைப் பருகிவர மலச்சிக்கல் தீரும். இரவில், உறங்கும் முன் இரண்டுபூவன் வாழைப் பழங்களை சாப்பிட்டு வர மலச்சிக்கல் ஏற்படாது. வில்வமரத்தின் பூக்களை புளிச் சேர்க்காமல் ரசமாக

வைத்துச் சாப்பிட்டு வர மலச்சிக்கல் தீரும். அதி மதுரத்தை அரைத்து 5 கிராம் அளவு ஒரு அவுன்ஸ் மாதுளம் பூச்சாற்றுடன் கலந்து சாப்பிட மூலச்சூடு, மூலக்கடுப்பு நிற்கும். பண்ணைக் கீரைக்கு மலச்சிக்கலைக் குணப்படுத்தும் குணமுடையது. கடுக்காய் பொடி மலச்சிக்கலுக்கான நல்ல மருந்தாகும். நெல்லிக்காய் 'தான்றிக்காய் சூரணங்களைச் சம எடை கலந்து ஒரு தேக்கரண்டி வெந்நீரில் சாப்பிட வேண்டும். இவ்வாறு செய்கின்ற பொழுது குடலில் சம்பந்தமான நோய்கள் தீரும் என்பது இதன் கருத்தாகும்.

## காய்ச்சலும் குணமாக்கும் முறையும்

உடம்பின் சாதாரண வெப்பநிலை 98.4 பாரென் ஹீட். இதற்மேல் வெப்பம் அதிகமானால் காய்ச்சல் வெளிப்படும். காய்ச்சலில் பலவகைகள் உள்ளன. அவை சாதாரணக்காய்ச்சல், நீர்க்கோவைக்காய்ச்சல், குளிர்க்காய்ச்சல், பித்தக்காய்ச்சல், மலேரியாக் காய்ச்சல், குடற்சுரக்காய்ச்சல், வாதக்காய்ச்சல், மூளைக்காய்ச்சல் போன்றவையாகும்.

இதில் குளிர்க்காய்ச்சல் என்பது உடம்பில் அதிக அளவு குளிரோடு ஏற்படும் காய்ச்சலைக் குளிர்க்காய்ச்சல் என்கின்றனர். நுண்கிருமிகளின் தாக்குதலினால் இக்காய்ச்சல் ஏற்படுகின்றது. இதற்குரிய மருந்தாக நற்காரந்தை இலை, சுக்கு ஆகிய மருந்துகளைத் தனித்தனியாக எட்டுப் பங்கும், கழச்சிக்

கொட்டை, துளசிவேர் ஆகிய இரண்டு தனித்தனியே ஐந்துபங்குமாக எடுத்து தண்ணீரிட்டு எட்டிலொன்றாக வற்றக் காய்ச்சிய கஷாயத்தினை காலை மாலை ஆகிய இரு வேளைகளாக மூன்று நாட்கள் அரைத் தம்ளர் அளவில் குடிப்போரின் குளிர்க்காய்ச்சல் நீங்கும் என்று போகர் வைத்தியம் 700 என்ற நூலில் குறிப்பு உள்ளது.[60]

அதேபோல் பித்தக்காய்ச்சலுக்கு பேய்ச்சுரைவேர், கிராம்பு, சுக்கு கோரைக்கிழங்கு? சிறியாநங்கைவேர், கொத்தமல்லி ஆகியவற்றைச் சமஅளவில் சேர்த்து, நான்கு நாழி நீர் ஊற்றி எட்டிலொன்றாக வற்றக்காய்ச்சிய கசாயத்தை ஒருஅவுன்ஸ் விதம் குடித்து வந்தால் பித்தக்காய்ச்சல் நீங்கும். இதே மருந்தினைப் பற்றிய குறிப்பு போகர் வைத்திய 700 நூலிலும் காணப்படுகின்றது.[61]

## சலதோஷத்தால் ஏற்படும் நோய்களும் குணமாக்கும் முறையும்

காலநிலையில் மாற்றம், நீர்க்கோவை ஆகியவற்றையால் சலதோஷம் உண்டாகிறது. அதனால் நாசியிலிருந்து நீர்வடித்து நெஞ்சில் சளிகட்டி இருமல் உண்டாவதோடு உள்நாக்கு வீக்கம் போன்ற பிரச்சினைகள் ஏற்படுகின்றன. இவற்றுக்குரிய மருந்துகளையும் நாட்டுப்புற மக்கள் தெரிந்து பயன்படுத்தி உள்ளனர்.

குறிப்பாக நாசியிலிருந்துநீர்வடியும் போது அரைக்கைப்பிடியளவு பொடிசெய்யப்பட்ட பவளமல்லிகை வேர்ப்பட்டையுடன் ஐந்து வெற்றிலைகளையும் சேர்த்து, உழக்கு நீர் ஊற்றிப் பாதியாக வற்றக் காய்ச்சிய கசாயத்தை வடிகட்டிக் காலை மாலை வேளைகளில் குடிப்போரின் நாசியிலிருந்து ஜலதோஷத்தால் உண்டாகின்ற மூக்கில் நீர்வடிதல் நீங்கும் என்பர். இவ்வாறாக இருமல், உள்நாக்கு விக்கம், தும்மல், தூர்நீர் குறைந்திடல், தீக்காயம், கால்பித்து, குதிகால் வலி நீக்குதல், மூட்டுவலி, மலச்சிக்கல் நீக்கிடல், ஆறாத புண் போன்றவற்றிற்கு நாட்டுப்புற மருத்துவ குறிப்புகள் ஏராளமாக காணப்படுகின்றன.[62]

சிலரது உடம்பில் அதிகப்படியான சூடு இருந்து கொண்டே இருக்கும். அதனால் கண்எரிச்சல், வயிற்றுவலி, வயிற்றுப்போக்கு போன்ற பிரச்சினைகள் அடிக்கடி தோன்றும். இவற்றை நீக்கிட நாட்டுப்புற மக்கள் இரண்டு வகையான மருந்துகளைப் பயன்படுத்துகின்றனர்.

சமஅளவில் சமூலங்களாக எடுக்கப்பட்ட நெருஞ்சில், அருகன்புல், ஆகிய மூலிகைகளைத் தனித்தனியே நிழலில் உலர்த்தி சேர்த்து இடித்து சல்லடை யால் சலித்தெடுக்கும் மூலிகைப் பொடியினை, உடல் சூட்டினால் துன்புறும் நோயாளிகள் காலை, மாலை வேளைகளில் ஒருகரண்டியளவு எடுத்து சிறிதளவு கருப்புக்கட்டியுடன் குழைத்து ஏழு நாட்கள் தொடர்ந்து சாப்பிட்டு

வந்தால் நோய் நீங்கும் என்று கூறுவர்.

மூன்றுகழஞ்சு எடையளவு குடங்கல் தூளுடன், உலரவைத்த தான்றியக்காய், தாளிசபத்திரி மூவர், கிராம்பு, நெல்லிக்காய், ஏலரிசி, சாதிக்காய், கடுக்காய்த்தோல் ஆகியன வகைக்கு ஒரு கழஞ்சு எடுத்து உரலில் போட்டு இடித்துச் சலித்தெடுத்த மருந்துப் பொடிகளைக் கலந்துஉடல்சூட்டினால் துன்புறும் நோயாளிகள் தினமும் காலை, மாலை வேளைகளில் கரண்டியளவு பொடியுடன் அதேயளவு பசுவின் நெய் சேர்த்து குழைத்து சாப்பிட்டு வந்தால் நோய் குணமடையும் என்று மா. சத்தியபாமா குறிப்பிடுகிறார்.[63]

மேலும் கட்டிகள் உடைதல், மஞ்சள் காமாலை, காலரா, பித்தம் சார்த் நோய்கள் போன்றவற்றிற்கு போகர் வைத்திய 700 என்ற நூல் நோயைப்போக்குவதற்கான காணரங்களையும் அவற்றின் முறைகளையும் வரிசைப்படுத்திதரப்பட்டுள்ளது.[63]

அதேபோல் வாதநோய், மூக்கில் இரத்தம் வடிதல், புற்றுநோய், நகச்சுற்று, பசி ஏற்படல், பால்வினை நோய், வாந்தி, காக்காவலிப்பு நோய், வாய்நாற்றம்,சிறுநீர் சம்மந்தமான நோய்கள், நீரடைப்பு நோய், சொட்டுமூத்திரம், சிறுநீர்க்கட்டு, நீர்க்கருக்கு, சிறுநீரில் பழுப்பு, குண்டிக்காய்கோளாறு, உப்பு நோய், சிறுநீரில் இரத்தம் போதல், சிறுநீர்ப்பையில் சதையடைப்பு, சிறுநீர்க்கல்லடைப்பு, தோல்வியாதிகளான சொறி, சிரங்கு போன்றவற்றிற்கு போகர் வைத்தியம் 700 என்ற

நூலில் குணமாக்கும் முறைகள் குறிப்பிடப்பட்டுள்ளன.

அதேபோல் படர்தாமரை, தேமல், கொப்புளங்கள், சேற்றுப்புண், வியர்க்குரு, விதைப்பை நீக்கம், வெட்டை நோய் போன்றவற்றிற்கு புங்கு மரத்தின் தளிர் இலைகள், பூ ஆகியவற்றை இருகைகள் நிறைய எடுத்துச் சுத்தப்படுத்தி உலர வைத்தபின் உரலில் போட்டு இடித்து பொடியாக்க வேண்டும். பின்னர்ப் பசுவின் நெய் அல்லது நல்லெண்ணெயுடன் பொடியினைக் கலந்து அடுப்பேற்றி நன்றாக வறுத்து மீண்டும் இடித்துச் சல்லடையில் சலித்தெடுக்க வேண்டும். இவ்வாறு தயாரிக்கப்பட்ட மருந்தினைத் தினமும் இருவேளைகள் ஒருகரண்டியளவில் வெட்டை நோயினை போக ஒரு மண்டலம் உண்டு வந்தால் நோய்நீங்கும். மருந்து சாப்பிடும் நாட்களில் புளிப்பான உணவுவகைகளை உண்ணாது பத்தியமாக இருக்க வேண்டும். இதே மருந்து பற்றிய செய்தி போகர் வைத்திய 700ல் குறிப்பிடுகிறது.[66]

பொன்நீந்தில் கொடியை எடுத்துத் துண்டுகளாக நறுக்கில் நிழலில் சருகுபோல உலத்தியபின் நன்றாக இடித்துப் பொடி செய்து சல்லடையில் சலித்து வைத்துக் கொண்டு ஒருகரண்டியளவு பொடியும் அதேயளவு தேனும் சேர்த்துக் குழப்பிக் காலை, மாலை ஆகிய இருவேளைகள் முறையே வெறும்வயிற்றிலும், உணவிற்குப்பின்பும் உண்ண வேண்டும். ஒருமண்டலம் வெட்டை நோயுடையோர் சாப்பிட வேண்டும்.

எரிப்பு குறைத்து வறுத்த உப்பினைப் பயன்படுத்தி கறிசமைத்து உண்பது நல்லது. இதை மருந்தினைக் குறித்து மூலிகைக்கற்பங்கள் என்ற நூலில் மா. சத்தியபாமாவும் கூறியுள்ளார்.[67]

## கடிகளும் குணமாக்கும் முறைகளும்

மனிதனை மனிதனல்லாத விலங்குகள் கடிக்கும்போது விஷம் தாக்கி இறக்கும் நிலையை ஏற்படுத்துகின்றன. இந்தப் பகுதியில் பாம்புகடி, நாய்கடி, எலிக்கடி போன்ற கடிவகை நோய்களுக்கான மருத்துவ முறைகள் ஆராயப்படுகின்றன.

நாய்க்கடிக்கு விஷம் இறங்க பின்வரும் மருத்துவ முறைகளைப் பின்பற்றலாம்.

1. நாய் கடித்து விட்டால் உடனே நாய் கடித்த கடிவாயின் மேலே இரண்டு மூன்று எறுக்கன் பால் சொட்டு விட்டால் விஷம் முறியும்.

2. தண்ணீரும் நல்லெண்ணெயும் கலந்து நாய்கடி பட்டவர் குடிக்க வேண்டும்.

3. கறிவேப்பிலை அல்லது நாயுருவி இலையைத் தண்ணீர் விட்டு அரைத்து நாய்கடி பட்ட இடத்தில் பூசலாம்.

பாம்புக்கடிக்கு விஷம் இறங்க பின்வரும் மருத்துவ முறைகளைப் பின்பற்றலாம்.

1. பாம்பு கடித்த இடத்தை கீறி, இரத்தத்தை வெளிவரச் செய்ய வேண்டும். அதற்கு முன் மேல் இடத்தில் துணியால் கட்ட வேண்டும். அப்படி கட்டுவாரேயானால் விஷம் மேலே ஏறாது. பாம்பு கடிபட்ட இடத்தை கத்தியால் கீறிவிட்டு பின்னர் ஆடாதோடா இலை, மிளகு ஆகியவற்றை மென்று சாப்பிட வேண்டும்.

2. பாம்பு தீண்டியவர்களுக்கு வெள்ளி மரத்தின் பட்டையை, சிறிது இலையை சுத்தம் செய்து காயவைத்து இடித்து தூள் செய்து 5 கிராம் எடுத்து அதனுடன் தேன் கலந்து சாப்பிட்டால் விஷம் இறங்கும்.

தேள்கடிக்கு,

1. எலுமிச்சைப்பழ விதைகளுடன் சிறிது உப்பு சேர்த்து அரைத்துதண்ணீரில் கலந்து குடிக்க தேள்கடி விஷம் இறங்கும்.

2. கொட்டைப் பாக்களவு பெருங்காயத்தை எடுத்து தரையைச் சுத்தி செய்துதரையில் தேய்த்து அதனை தேள் கொட்டிய இடத்திற்கு பற்றுப் போட தேள்கடி விஷம் இறங்கும்.

வண்டுகடிக்கு,

1. பொன்னாவாரை இலையை அல்லது வேளை எலுமிச்சம் பழ சாற்றில் அரைத்து வண்டு கடி உள்ள இடத்தில் தடவ குணமாகிவிடும்.

2. செம்பருத்தி இலைகளை இடித்து அரை ஆழாக்கு சாறு பிழிந்து காலையில் வெறும் வயிற்றில் குடிக்கவேண்டும. இம்மருந்து சாப்பிடும் காலங்களில் உப்பு, புளி, நீக்கி உணவு சாப்பிட வேண்டும். சில நாட்டு வைத்தியக்ள் தாலிப்பு இல்லாமலும் சாப்பிட வேண்டும் என்று கூறுகின்றனர்.

அரணைக்கடிக்கு,

பனங்குருத்தை வாயில் போட்டு மென்று விழுங்கினால் அரணைக்கடி விஷம் முறிந்து விடும். அல்லது சுக்கையும் வசம்பையும் தனித்தனியாகச் சுட்டுக்கொள்ள வேண்டும். இரண்டையும் சேர்த்துத்தூள் செய்துசுண்டைக் காய் அளவு எடுத்து காலை, மாலை என இரண்டு வேளை சாப்பிடுவதால் அரணைக் கடி விஷம் முறிந்து விடும்.

## பெண்களுக்கனா நோய்களும் குணமாக்கும் முறைகளும்

பெண்கள் சமுதாயத்தில் பேணிப் பாதுகாக்கப்பட வேண்டியவர்கள். பெண் இல்லையெனில் ஒருமனிதன் இயல்பான பிறவி எடுக்கவோ அல்லது முழுமனிதனாக வாழ்ந்திடவோ முடியாது. ஆகையால் மனித சமுதாயத்தின் வாழ்க்கையில் முதலாவதாக மதிக்கப்பட வேண்டியவர்கள் பெண்கள். எனவேதான் 'அன்னையும் பிதாவும்

முன்னறிதெய்வம்' என்று அன்னையாகிய பெண்மணிக்கு முதலிடம் கொடுத்து ஆன்றோர் கூறியுள்ளனர். இத்தகைய முக்கியத்துவம் பெண்ண பெண் இனத்திற்கு ஏற்படுகின்ற பல்வேறு வகைப்பட்ட நோய்களை நீக்குவதற்குரிய மருத்துமுறைகளை நாட்டுப்புற மக்கள் அறிந்து வைத்துள்ளனர்.

## அடிதள்ளல்

பெண்களுக்கு மாதவிலக்கு பெரும்பாலும் நாற்பத்தைந்து வயது முதல் ஐம்பது வயதுக்குள் நின்றுவிடும். அவ்வேளையில் சிலருக்கு கருப்பை இறக்கம் ஏற்படலாம். இந்நிலை ஏற்பட்டோருக்கு மாதவிலக்கினைப் போன்ற இரத்தக்கசிவு இலேசாக இருந்து கொண்டே இருக்கும். இத்தகையக் கருப்பை இறக்கத்தினால் ஏற்படுகின்ற நோயினை நீக்குவதற்கு நாட்டுப்புற மக்கள் இருவகைப்பட்ட மருந்துகளை அறிந் வைத்துள்ளனர்.

மஞ்சளையும் தோல்நீக்கிய சோற்றுக்கத்தாழையினையும் சேர்த்து அரைத்து நாள்தோறும் இருவேளைகள் எலுமிச்சையளவில் ஒருமண்டலம் சாப்பிட்டுவரின் அடிதள்ளல் நோய் நீங்கும் என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

பொடுதலைக்கீரை, சிறுபுள்ளடிக்கீரை ஆகிய இரண்டினையும் தனித்தனியே ஒரு கைப்பிடியளவில் எடுத்து இடித்துப் பிழிந்து வைத்திருக்கும் சாற்றுடன்,

வெள்ளைப்பூண்டு, வசம்பு ஆகியன ஒரு கழஞ்சுவிதம் எடுத்து நன்றாக அரைத்துப் பச்சிலைச்சாற்றுடன் கலந்து நாழியளவு தேங்காய் எண்ணெயினையும் சேர்த்துக் காய்ச்சி எடுக்கும் எண்ணெயினை நாளொன்றுக்கு மூவேளைகள் ஒரு கரண்டி விதம், அடிதள்ளல் நோயுடையோர் ஒரு மண்டலம் குடித்து வந்தால் நோய் நீங்கும்.

## கருத்தடை மருத்துவம்

நாளுக்குநாள் மிகுந்தவரும் மக்கள் தொகையினைக் கட்டுப்படுத்துவதற்கெனக் குடும்பக்கட்டுப்பாட்டு முறையில் பலவிதமான அறுவை சிகிச்சைகளை இன்ற செய்து கொள்வதோடு, பலவித ஆங்கில மாத்திரை மருந்துகளையும் மக்கள் பயன்படுத்துகின்றனர். அதனால் பல்வகைப்பட்ட எதிர்விளைவுகளையும் அனுபவித்து மக்கள் அல்லல்படும் நிலையில் நாட்டுப்புற மக்கள் எந்தவிதமான எதிர்விளைவுகளையும் ஏற்படுத்தாத மூன்று வகைப்பட்ட எளிதான மருத்துவமுறைகளைக் கடைபிடித்து வருகின்றனர்.

சருகுபோல காயவைக்கப்பட்ட சிலாந்தி மரத்தின் உள்பட்டையில் பத்துகழஞ்சு எடையளவு எடுத்து, அதனுடன் ஒரு கழஞ்சி விதம் காசுகட்டி, இந்துப்பு ஆகியவற்றைச் சேர்த்து உரலில் போட்டு இடித்து சுத்தமானத் துணியில் சலத்து வைத்திருக்கும் மருந்தினை மாதவிலக்கு ஆரம்பித்த நாள்முதல்

காலை வேளையில் வெறும்வயிற்றில் அரைக்கரண்டியளவு பொடியெடுத்து வாய்ல்போட்டு வெந்நீர் குடிக்க வேண்டும். இவ்விதமாக ஏழு நாட்கள் மருந்து சாப்பிட்டுக் குறுமிளகு சேர்த்துச் சோறுடன் சேர்த்து உண்ண வேண்டும். எட்டாவது நாள் முதல் எத்தகைய உணவும் சாப்பிடலாம். மருந்து சாப்பிட்டு முடித்த நாளிலிருந்து ஆறுமாதக் காலம் வரை எப்போது உடலுறவில் ஈடுபட்டாலும் கருத்தரித்தல் நிகழாது. ஆறு மாதங்கள் கழிந்தபின் தேவையானால் மறுபடியும் இதே மருந்தினைக் கருத்தரிக்காமலிருக்க பயன்படுத்திக் கொள்ளலாம்.

வெற்றிலைக் கொடியின் இளம் வேர்களைக் கைபிடியளவு எடுத்து நன்றாக உலரவைத்துப் பொடிசெய்ய வேண்டும். அதனுடன் ஒருகரண்டி நிறையக் குறுமிளகினையும் பொடி செய்து சேர்த்தபின்னர் மருந்துக்கலவையினை மீண்டும் இடித்துத் துணியில் சலித்து வைத்துக்கொண்டு மாதவிலக்கு நின்ற நாள் தொட்டு ஏழுநாட்கள் தொடர்ந்து ஒருகரண்டி பொடி விதம் காலையில் வெறும் வயிற்றிலும், இரவில் தூங்குவதற்குப் போகும் போதும் வாயில்போட்டு வெந்நீர்க் குடித்து வரும் பெண் உடலுறவில் ஈடுபட்டாலும் மூன்று மாதங்கள்வரைக் கருத்தரிப்பது தடைப்படும். மீண்டும் தேவைப்பட்டால் மருந்தினைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஆணும் பெண்ணும் உடல் இன்பம் கொள்ளும் முன்னர் ஆண், பெண் குறிகளில் சுத்தமான வேப்பெண்ணெயினை

நன்றாகத் தேய்த்தபின்னர் உடல் சேர்க்கையில் ஈடுபட்டால் கருத்தரித்தல் நிகழாது. வேப்பெண்ணெயானது கருப்பையில் பெண்ணின் கருமுட்டை இருக்கும் பையினைத் திறக்கவிடாமல் அடைத்துக் கொள்ளும். சில நேரங்களில் கருப்பையின் வாய்த்திறந்து கருமுட்டை வெளிவந்தாலும் ஆணின் விந்து கருமுட்டையோடு சேரவிடாமல் எண்ணெயினுடைய சறுக்கும் தன்மை தடைசெய்கின்றது. பலமுறை கருமுட்டையுடன் விந்து சேரமுயலும்போது வழுக்கி விழுவதால் உயிரற்ற நிலைக்கு உள்ளாகிச் செயலற்று மயங்கிவிடும். எனவே சுத்தமான வேப்பெண்ணெயினை ஆண், பெண் குறிகளில் தேய்த்துப் புணர்வோருக்குக் கருத்தரித்தல் நிகழாது.

## கருத்தரித்தலுக்கான மருத்துவம்

ஆணும் பெண்ணும் உடல் இன்பம் கொள்ளும்போது ஆணின் விந்து பெண்ணின் கருமுட்டையுடன் சேர்ந்து கருப்பையில் இயல்பாக நடைபெறுகின்ற நிகழ்வினைக் கருத்தரித்தல் என்பர். ஆணின் விந்து, பெண்ணின் கருப்பை ஆகியவற்றில் ஏதேனும் குறைபாடுகள் இருந்தால் கருத்தரித்தல் நிகழாது. பெண்களில் சிலருக்குக் கருப்பையில் ஏதேனும் பிரச்சினைகள் இருந்து கருத்தரித்தல் நடைபெற்றாலும் குழந்தை நன்கு வளர்ச்சியடையும் காலம் வரைக் கருப்பையில் தங்காமல் உதிரப்போக்குடன் குறை மாதங்களில்

கருச்சிதைந்துவெளியேறிவிடும். அவ்வாறு மாதங்களில் கருச்சிதைந்து வெளியேறிவிடும். அவ்வாறு வெளியேறும்போது உதிரப்போக்கு அதிக அளவில் ஏற்பட்டுக் கருச்சிதைந்த பெண்ணின் உயிருக்கு ஆபத்தும் ஏற்படலாம். இந்நிகழ்வினைப் 'பிள்ளை அழிதல்' அல்லது 'சவுறு விழுதல்' என்பர். கோடைக்காலத்தில் பூமியில் கனலேறி உலர்ப்பதுபோல் உடலில் கனலேறிக் கருப்பையின் உட்புறம் உலர்ப்பூத்திருத்தல், சதைத்தடித்திருத்தல், இரத்தக்கட்டிகள் இருத்தல், கருமுட்டையின் பை கட்டியாக இருத்தல், நுண்கிருமிகள் கருப்பையினுள் இருத்தல் போன்ற பல்வேறுபட்ட பிரச்சினைகளிருந்தால் விந்தினைக் கருமுட்டையுடன் சேரவிடாமலும், கருமுட்டை இருக்கின்ற பையின் வாய்திறவாத நிலையிலும், விந்துடன் கருமுட்டை சேர்ந்து கருத்தரித்தல் நிகழ்ந்த பின்னரும், கருவினை வளரவிடாத குறைப்பிரசவ நாட்டுப்புற மக்கள் கூறுகின்றனர். இத்தகைய பிரச்சினைகளை நீக்கிக் கருவினை நல்லபடியாக வளரச் செய்கின்ற மருந்துகளையும் நாட்டுப்புற மக்கள் தெரிந்து வைத்துள்ளனர்.

அசோகத்தெற்றி, மகிழமரம் ஆகியவற்றின் பச்சைப்பட்டையினை இடித்துச் சாறுபிழிந்து வடிகட்டி தனித்தனியாக ஒரு அவுன்ஸ்வீதம் எடுத்து ஒன்றாகக் கலந்து, அடிக்கடி குறைப்பிரசவம் ஏற்பட்டு, மூன்று மாதங்கள் கழிந்த பெண்ணுக்கு உண்டாகின்ற முதல் மாதவிலக்கின் மூன்றாவது

நாள் தொட்டு மூன்று நாட்கள் வெறும்வயிற்றில் குடிப்பதற்குக் கொடுக்க வேண்டும். அதன்பின்னர் அடுத்த மாதவிலக்கு ஏற்படும்வரை உடல் இன்பம் கொள்ளாமல் காத்திருந்து, மாதவிலக்கு ஆரம்பித்து மூன்று நாட்கள் கழிந்தபின் மருந்தினை ஐந்துநாட்கள் தொடர்ந்து குடிக்குமாறு கொடுத்து, அதன்பின் உடல்சேர்க்கையில் ஈடுபட்டால், கருத்தரிப்பதோடு குழந்தை நன்கு வளர்ந்துசுகப்பேறு நடைபெறும். மேற்கூறிய மருந்து கருப்பையில் இருக்கும் நோய்க்கிருமிகளை அழித்து கருத்தரிப்பதற்கு எத்தகைய இடையூறும் ஏற்படாமலிருக்க உதவுகின்றது.

மாதவிலக்கு ஆரம்பித்ததிலிருந்து ஒன்பதாவது நாள்தொட்டு, முட்டையிடும் பருவத்திலிருக்கும் பெட்டைக் கோழியின் ஈரலுடன் அதேயளவில் காட்டுப்பருத்தி விதையின் பருப்பினைச் சேர்த்து மைபோல அரைத்துப் பெண் உறுப்பினுள் நன்றாகத் தேய்த்து உடல்சேர்க்கையில் தினமும் ஈடுபடுவோருக்குப் பத்து நாட்களுக்குள் கருத்தரித்தல் உண்டாகும். இம்மருந்தானது கருப்பையினுள் காணப்படுகின்ற சதை வளர்ச்சி, இரத்தக்கட்டிகள், கருப்பையின் வாய்திறவாமல் கருமுட்டை வெளிவரதடையாய் இருக்கின்ற அடைப்புகள் ஆகியவற்றை மாற்றுவதோடு, கருமுட்டைத் தடையின்றி வெளிவந்து விந்துடன் சேர்ந்து கருத்தரித்தல் நடைபெறச் செய்வதோடு, கருவினைத் தடையின்றி வளரச் செய்கின்ற ஆற்றலைப் பெற்றுள்ளது.

மேலும் கர்ப்பப்பை, மாதவிடாய் ஆகியவற்றை ஒட்டி அமையும் நோய்களை பெண்களுக்கான நோய்களாகக் களப்பகுதிகளில் கூறப்பட்ட செய்திகளைக் கொண்டு நோய்களுக்கான மருத்துவ முறைகள் அமைந்துள்ளன. கை, கால் விக்கம், பாதவிக்கம், வயிற்றுவலி, கழிச்சல், கொட்டை திரம், விலக்கு, குழந்தைப்பேறு போன்றவை அமைகின்றன. அவற்றைப் பற்றி கீழேக்காணலாம்.

## கர்ப்ப கால நோய்கள்

திருமணத்திற்குப் பின்பு கர்ப்பக்காலங்களில் பெண்களுக்கென்று சில நோய்கள் வருகின்றன. அந்தவகை நோய்களான கை, கால் விக்கம், வாந்தி, மயக்கம் போன்றவைகளாகும்.

## கை, கால் விக்கம்

கை, கால் விக்கமுள்ள பெண்கள் பின்வரும் மருத்துவ முறைகளை பின்பற்றலாம்.

1. கர்ப்பிணிப் பெண்கள் நெல்லிக்காய், முருங்கைக்காய், முள்ளங்கி போன்றவைகளை உணவில் சேர்த்து வந்தால் கை, கால் விக்கத்தை வராமல் தடுக்கலாம்.

2. கை, கால் விக்கம் குறைய முருங்கைக் கீரையைப் பொறியல் செய்து சாப்பிட வேண்டும். அடுத்ததாக, முருங்கை

கீரையின் காம்பைத் ஒரு படி நீரில் போட்டு கொதிக்க வைத்து ஒரு நாளைக்கு மூன்ற வேளை குடித்துவந்தால் கை, கால் வீக்கம் நீங்கும்.

3. முருங்கைப் பூவை கூட்டு சமைத்து சாப்பிட்டு வர கை, கால் வீக்கம் குணமாகிவிடும்.

## பாத வீக்கம்

கர்ப்பமான சில பெண்களுக்கு ஒன்று அல்லது இரண்டு மாதங்களில் பாதத்தில் வீக்கம் ஏற்பட்டு நடக்க இயலாமல் போய்விடும். இதனைப் போக்க நீர் முள்ளி இலை, விழி இலை, நன்கு காய்ந்த காக்கணத்தான் இலை முதலியவற்றைப் பொடி செய்து ஒரு பாத்திரத்தில் போட்டு 1 லிட்டர் நீர் விட்டு 200 மில்லி நீர் வரை சுண்டியதும் கீழே இறக்கி இளஞ்சூட்டோடு வீக்கமுள்ள பாத்தில் நன்கு தடவ வேண்டும். தொடர்ந்து பாதத்தில் தடவி வர வீக்கம் குறைந்து குணமடையும்.

## வயிற்று வலி

சிலருக்கு மாதவிலக்கு நாள்களில் கடுமையான வயிற்றுவலி உண்டாவது இயல்பு. அந்நேரத்தில் இரத்தம் குறைவாகவோ அல்லது கூடுதலாகவோ வெளியேற வாய்ப்புண்டு. இவ்விதமான பிரச்சனைகளில் இருக்கும பெண்கள் நாட்டு மருந்து கடைகளில் கிடைக்கும் பிரண்டை,

உப்பு போன்றவை கொண்டு வந்து 2 குன்றி மணியளவு வெண்ணெய்யில் குழைத்து தினசரி மூன்று வேளை சாப்பிட்டு வந்தால் வயிற்று வலி குணமாகும். இம்முறையை மூன்று நாட்கள் வரை கையாண்டால் போதுமானது.

## கெட்ட உதிரம்

பிரசவித்த பெண்களுக்கு உள்ளே கர்ப்பப்பையில் கெட்ட ரத்தம் சில நாட்கள் வரை தங்கியிருக்கும். இந்த இரத்தத்தை முழுவதும் வெளியேற்ற அரிசி, திப்பிலி, சதகுப்பை, சித்திர மூல வேர், மாவிலங்கப் பட்டை, மூங்கில் இலை, சிற்றரத்தை, சுக்கு ஆகிய மூலிகைகளைக் கொண்டு வந்து ஒவ்வொன்றையும் இடித்து பொடியாக்கி மண் சட்டியில் நீர் விட்டு கஷாயம் காய்ச்ச வேண்டும். பின்னர், இந்த கஷாயத்தை காலை மாலை குடித்து வந்தால் கெட்ட உதிரம் விரைவில் வெளியேறி பூரண நலத்தைக் கொடுக்கும்.

## மார்பு வீக்கம்

பெண்களில் சிலருக்கு மார்பகங்களில் வீக்கம் ஏற்பட்டு வலி உண்டாகும். இதற்கு கடுக்காய்த் தோல், நெல்லிக்காய் தோல், அதிமதுரம், வெள்ளெருக்கு, சுக்கு, மிளகு ஆகிய மூலிகைகளை நீரில் கொதிக்க வைத்து கஷாயம் காய்ச்சி காலை, மாலை இருவேளை உட்கொண்டால் மார்பக வீக்கம் குறையும்.

போதிய குணம் அடையவில்லை என்றால் மூன்று நாட்கள் குடிக்க வேண்டும். வெற்றிலையை சட்டியில் வதக்கி மார்பகங்களின் மீது வைத்து ஒத்தடம் கொடுத்து வந்தால் விரைவில் மார்பக வீக்கம் குறையும் அல்லது வேப்பம் பட்டை, சுக்கு, மிளகு, கடுக்காய்த்தோல், நெல்லிக்காய் முதலியவற்றை நீரில் கொதிக்க வைத்து இருவேளை சாப்பிட மார்பக வீக்கம் குறையும் என்பர்.

## பிற நோய்கள்

பெண்களுக்குப் பல நோய்கள் ஏற்படுகின்றன. கர்ப்ப கால நோய்கள் மட்டுமில்லாமல் வேறு பல நோய்களும் பெண்களுக்கு ஏற்படுகின்றன. நாட்டுப்புற மக்கள் இடுப்புப் புண், கொப்புள் ரணம், கருப்பை ரணம் போன்ற நோய்களுக்கு பூசும் மருந்துகளையே உபயோகிக்கின்றனர். பூப்பு, பெரும்பாடு, வெள்ளைப்போக்கு, அதிக மாதவிலக்கு போன்றவற்றிற்கு உண்ணும் மருந்துகளையே மேற்கொள்கின்றனர். அவற்றைப் பற்றி கீழே காண்போம்.

## இடுப்புப் புண்

சில பெண்கள் இடுப்பில் ஆடையை இறுக்கமாக அணிவதால் இடுப்பைச் சுற்றிலும் அரிப்பு உண்டாகிறது. இதனால் அந்த இடத்தில் புண் உண்டாகும். அதைப்போக்க பின்வரும் முறைகளைப் பின்பற்றலாம்.

1. கடுக்காய், வேப்பிலை, மஞ்சள் ஆகியவற்றை சம அளவாக எடுத்து வெங்காயச் சாறு அல்லது எலுமிச்சைச் சாற்றில் அரைத்து இரவு படுக்கைக்குச் செல்லும் முன் இடுப்பில் உள்ள புண்ணின் மீது பூசிக்கொள்ள இடுப்புப் புண் குணமாகும்.

2. சிறிது உளுந்தம் மாவுடன் எலுமிச்ச பழச்சாறை கலந்து அந்தக் கலவையை புண்ணின் மீது தடவி வர இடுப்புப் புண் குணமாகும்.

## வெள்ளைப் போக்கு

சில பெண்களுக்கு கொட்டை திரம் வெளி வருவதுப் போல வெள்ளைப் போக்கு வெளிவரும் இதற்கு நாட்டுப்புற மக்கள் உண்ணும் மருந்துகளையே உட்கொள்கின்றனர். அவற்றைப் பற்றி காணலாம்.

1. செம்பருத்திப் பூவின் மொட்டுக்களின் சாற்றை எடுத்து தினசரி இரண்டு வேளை பாலுடன் கலந்து சாப்பிட்டு வர வெள்ளை போக்கு குணமாகும்.

2. பெண்களுக்கு மிகுந்த தொல்லை தரும் வெள்ளைப் படுதல் நோய் நீங்க, குங்கிலியத்தை நெய்விட்டுப் பொரித்து நீரில் இட்டு பிசைந்து மெல்லிய துணியில் வடிகட்டி துணியின் மேல் பாகத்தில் இருகி இருக்கும் லேகியத்தை எடுத்து கோலி குண்டு அளவில் உண்டு வந்தால் வெள்ளைப்படுதல் நோய் குணமாகும்.

3. ஊமத்தை இலையை இடித்து சாறு பிழிந்து ஐந்து முதல் பத்து துளி சாறு எடுத்து தயிருடன் கலந்து அருந்திவர பெண்களுக்கு ஏற்படும் வெள்ளைப்படுதல் நோய் குணமாகும்.

## அதிக மாதவிலக்கு

சிலருக்கு மூன்று நாட்களோ அல்லது ஏழு நாட்களுக்கு மேலே உதிரப்போக்கு ஏற்படும்மானால் அதனை அதிக மாதவிலக்கு என்பர். அதை நிறுத்த பின்வரும் மருத்துவ முறைகளைப் பின்பற்றலாம்.

1. அதிக மாதவிலக்கு ஆகும்போது மாதுளம் பட்டையின் சாற்றைக் குடிக்க மாதவிலக்கு நிற்கும்.

2. அத்திமரப்பட்டையை தண்ணீர் விட்டு வேகவைத்துக் குடிக்க மாதவிலக்கு நிற்கும்.

3. மருதாணி இலையை இடித்து சாறு பிழிந்து குடிக்க வேண்டும்.

4. வெற்றிலை, சதகுப்பை, வெல்லக் கட்டி ஆகியவற்றைப் போட்டுத் தண்ணீர் விட்டு அவித்து அந்நீரைக் குடிக்க மாதவிலக்கு நிற்கும்.

## தொப்புள் இரணம்

தொப்புள் இரணம் உள்ளவர்கள் வறுத்த சீனாக் காரத்தை தூளாக்கி தொப்புள் இரணத்தின் மீது தடவி வர இரணம்

குணமாகும். அல்லது தொப்புள் ரணத்திற்கு விளக்கெண்ணெயைத் தடவி வந்தால் விரைவில் இரணம் குணமாகிவிடும்.

## கருப்பை இரணம்

கர்ப்பப் பையில் உள்ள இரணத்திற்கு கருப்பை இரணம் என்பர். இதைப் போக்கப் பின்வரும் மருத்துவ முறைகளைப் பின்பற்றலாம்.

பெண்களுக்கு கருப்பையில் உள்ள இரணத்தின் காரணமாக மாதவிலக்க அதிகமாக ஆகின்றது. இதற்கு தினமும் மாதுளம் பழத்தின் சாற்றைப் பிழிந்து அதனோடு சிறிது வெந்நீர் கலந்து அதிகாலையில் வெறும் வயிற்றில் அருந்த வேண்டும். மாலை வேளையில் மாதுளம் பழத்தின் மொட்டுகளை இடித்து சாறு எடுத்து ஒரு டம்ளராக சாற்றில் கற்கண்டு, ஏலக்காய் முதலியவை சேர்த்து நாற்பது நாட்கள் அருந்தி வர கருப்பையில் உள்ள இரணம் குணமாகும்.

பெண்களுக்குரிய நோய்களில் பெரும்பாலும் மாதவிலக்கு காலத்தில் அதிகமாக ஏற்படுகின்றன. இந்த நோய் உள்ளவர்கள் பத்திய மில்லாமலேயே மேற்கண்ட மருந்துகளை சாப்பிட்டு வந்தால் குணமாகும்.

## மந்திர மருத்துவ முறைகளில் நோய்களை குணமாக்கும்முறை

நடைமுறை வாழ்வில் சில பயன்களைப் பெறுவதற்காக ஆரம்பகால மனிதனால் உருவாக்கப்பட்ட சில தந்திர முறைகளே மந்திரமாக அமைகிறது. பண்டைக் காலந்தொட்டே அனைத்து மக்கள் சமுதாயத்திலும் இதனைப் பயன்படுத்தி வருகின்றனர். இயற்கையின் மாபெரும் இயக்கச் சக்திகளை உணர்ந்துகொள்ள முடியாத ஆதிமனிதன் சில பாவனைகளைச் செய்வதன்மூலம் இயற்கையைக் கட்டுப்படுத்த முடியும் என்று நம்பினான். அதன் தொடக்கமே மந்திரத்தின் ஆரம்பகட்டமாக இருந்தது. பிற்காலத்தில் உணவு சேகரித்தல், எதிரியைக் கொல்லுதல் முதலியவற்றிற்காக மந்திரங்கள் பயன்படுத்தப்பட்டன. அதன் அடுத்தக்கட்ட வளர்ச்சியாக மனிதனுக்குத் தீமை விளைவிக்கும் நோய்களை மந்திரங்களால் நீக்கமுடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டது. அந்நம்பிக்கை நாட்டுப்புற மக்களிடம் இப்பொழுதும் நடைமுறை வாழ்க்கையில் காணப்படுகிறது.

### அம்மை நோய்

பத்திரகாளி என்ற மாங்காளிக்கு முத்தாரம்மன், துர்க்கை, காளி, பேச்சியம்மன், இசக்கியம்மன் போன்ற பல்வேறு பெயர்கள் உள்ளன. இப்பெயர்களில் முத்தாரம்மன் என்ற பெயர் அனைத்துக் கிராமப்புற மக்களின் வழிபாட்டில்

பெரும்பான்மையாக வழக்கில் உள்ளது. முத்தாரம்மனைக் கோபத்திற்கு உள்ளாக்குவதால் அம்மை நோய் வருவதாக மக்கள் நம்புகின்றனர். எனவே இதனை போக்க மருத்துவம் மறுப்பு தெரிவிக்கின்றனர். நாட்டுப்புற மக்கள் மந்திர மருத்துவத்தை மேற்கொள்வது குறிப்பிடத்தக்கது. இம்மருத்துவ முறை இன்றும் வழக்கிலுள்ளதைக் காணமுடிகிறது.

இடைக்காலத்தில் மூலிகையுடன் கூடிய மந்திரமருத்துவமும் செய்து அம்மைநோயினை குணமாக்கி வந்தனர்.

இடைக்காலத்தில் மருத்துவம் செய்தால் அம்மை நோயாளியைக் குணப்படுத்த முடியும் என்பதைப் பட்டறிவினால் உணர்ந்த நாட்டுப்புற மக்கள், மூலிகை மருத்துவத்தோடு முத்தாரம்மனின் கோபத்தைத் தணித்திட மந்திரத்தையும் பயன்படுத்தியுள்ளனர். அம்மை வார்த்தவர்களின் உடம்பில் தோன்றும் கொப்புளங்களை 'முத்து' என்பர். அம்முத்துக்கள் தோன்றிய நோயாளிகளுக்கு மூலிகை மருத்துவம் செய்வதுடன், நோயாளிகள் தங்கும் குடிலின் வாசலில் வேப்பிலைக் கொத்துக்களைக் கட்டி தொங்கவிடுவர். அவரது படுக்கை அறையிலும் வேப்பிலையால் அமைந்திருக்கும். வேப்பிலை அம்மனது கோபத்தை தணிக்கவல்லது என்று நாட்டுப்புற மக்கள் நம்புகின்றனர்.

## பசியின்மைக்குரிய மந்திரம்

சிலருக்கு சில நாட்களில் உணவு செறித்தல் சீராக இருக்காது. இதனால், பசியின்மையும் சோர்வும் ஏற்படுவதுண்டு. உணவு செறிக்க பால் உடன் சிறிது உப்பு கலந்து மந்திரம் ஓதி நோயாளிக்கு குடிக்க கொடுப்பது வழக்கம். இதனால் செறித்தல் நன்கு ஏற்படும் என நம்புகின்றனர்.

## கண்கட்டி நோய் பயன்படுத்தப்படும் மந்திரம்

கண் இமைகளில் வரும் கட்டியினைப் கண்கட்டி என்று நாட்டுப்புற மக்கள் கூறுகின்றனர். கண்கட்டி உள்ளவர் தனது நண்பர் அல்லது உறவினர் வீட்டில் இரவு நேரத்தில் கதவைத் தட்டுவதுண்டு. அந்நேரம் வீட்டில் உள்ளவர்கள் யார் அங்கே? என குரல் எழுப்புவர். உடனே கண்கட்டி காரர் நான்தான் கட்டி என்று சொல்லி ஓட்டம் பிடிப்பதுண்டு. பின்னர் மந்திர மூதுவாரிடம் சென்று மூன்று முறை மந்திரித்துக் கொண்டால் கண்கட்டி மறையும் என நம்புகின்றனர். மேலும், தேள்கடி மந்திரம், பூரான் கடி மந்திரம், பாம்பு கடி மந்திரம் என்று பலவகை கடி மந்திரங்கள் இன்றும நாட்டுப்புறங்களில் இருந்து வருவதைக் காணமுடிகிறது.

## நாட்டுப்புற மருத்துவத்தில் மருந்துகள் பயன்படுத்தும் முறைகள்

மருந்து என்னும் சொல்லுக்கு ஔடதம் பரிகாரம், அமிர்தம், வசிய மருந்து , சோறு, இனிமை, குடிநீர்[68] ஆகிய பொருள்கள் உள்ளன. துன்பத்தை வேறுடன் களைந்து பிணி, மூப்பு, சாக்காடு, என்னும் இவற்றை யொழித்து, உடலில் எக்காலமும் உயிர் நிலைத்திருக்கச் செய்யும் கருவியே மருந்து எனவும், அது பயன்படுத்தப்படும் முறையே மருத்துவமாகும்.[69] இதனால் மருத்துவத்திற்கு பயன்படும் மருந்து எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும் காணலாம்.

நோய்களைக் குணப்படுத்தும் மருந்தைப் பற்றி திருவள்ளுவர் குறிப்பிடும்போது மருந்தானது உடலை சாவாமல் காப்பதாக இருக்க வேண்டும் எனக் கூறியுள்ளார்.

'மருந்தோமற்று ஊனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடு அறிய வந்த இடத்து'[70]

என்ற குறளிலும், மருந்தானது மிக்க துன்பத்தைத் தீர்த்து பலன் அளிக்கக் கூடியதாய் இருக்க வேண்டும் என்பதை,

'செறிகொ செய்த இறந்த காலம் உறுதுயர்
தீர்க்கும் மருந்தொன்று உடைத்து'[71]

என்ற குறளிலும் விளக்கியுள்ளார். மேலும், தமிழ் சித்தராகிய திருமூலர் திருமந்திரத்தில்,

மறுப்பது உடல்நோய் மருந்தெனலாகும்

மறுப்பத உளநோய் மந்தெனவாகும்

மறுப்பது இனிநோய் வாராதிருக்க

மறுப்பது சாவை மருந்தெனலாமே"[72]

என்று குறிப்பிட்டுள்ளார். முதலில் மருந்தான து நோயைத் தடுத்து உயிரைக் காக்கும் தன்மையுடையதாக இருக்க வேண்டும் என்பதை 'இன்னுயிர் செய்யும் மருந்து'[73] என்ற கலித்தொகைக் குறிப்பிடுகிறது. மருந்தானது நோயை மட்டுப்படுத்தி நோயாளியின் உயிருக்குத் தீங்குநேராதபடி அவன் உயிரைக் காக்க வேண்டும் என்பதாகும். இரண்டாவது மருந்தானது நோயாளியால் தாங்க முடியாத அளவுக்கு உடலில் ஏற்படும் துன்பத்யையும், உள்ளத்தின் அளவுக்கு உடலில் ஏற்படும் துன்பத்யையும், உள்ளத்தில் ஏற்படும் துன்பத்தையும் போக்கும் படியாக இருக்க வேண்டும். இக்கருத்தை கலித்தெகை 'அருந்துயர் ஆரஞர் திர்க்கும மருந்து'[74] என்று குறிக்கிறது.

மூன்றாவதாக மருந்தானது உடலில் உண்டாகும் நோயை உடனுக்குடனே தீர்த்து நோயுள்ளவனை நலம் பெறச் செய் வேண்டும். அதாவது மருந்தானது சரியாக உடலில் செயல்பட்டு, பின் விளைவுகளை ஏற்படுத்தாமல் நோயை மட்டும் விரைவாகத் தீர்க்கும் மருந்தாக இருக்க வேண்டும். இதை கலித்தொகை 'இடும்பை தணிக்கும் மருந்து' 'நோய்நாந் தணிக்கும் மருந்து'[75] என்று குறிப்பிடுகிறது.

நான்காவதாக உடல் நோயினால் ஏற்படும் துன்பத்தையும், அதனால் உள்ளத்தில் ஏற்படும் இழிவு, வெறுப்பும் ஆகியவைகளையும் போக்குபவையாக இருக்கவேண்டும் என்பதை நற்றிணை 'அருந்துயர் அவலம் தீர்க்கும் மருந்து''[6] என்று குறிப்பிடுகிறது. மருந்தின் இவ்வித நான்கு கூறுகளையும் திருமூலர் மேற்கண்ட பாடலில் விளக்கியுள்ளார்.

## மருந்தின் வகைகள்

நாட்டு மருத்துவர்கள் மருந்தை அகமருந்து, புறமருந்தென இரண்டாக வகைப்படுத்தி, அகமருந்து முப்பத்திரெண்டு எனவும், புறமருந்து முப்பத்திரெண்டு எனவும் கண்டறிந்துள்ளார்கள். அவை,

### அக மருந்துகள்

1. சுரசம்
2. சாறு
3. குடிநீர்
4. கற்கம்
5. உட்களி
6. அடை
7. சூரணம்
8. பிட்டு
9. வடகம்

10. வெண்ணெய்

11. மணப்பாகு

12.நெய்

13. இரசாயனம்

14. இளகம்

15. எண்ணெய்

16. மாத்திரை

17. கடுகு

18. பக்குவம்

19. தேனூறல்

20. தேநீர்

21. பதங்கம்

22. செந்தூரம்

23. நீறு (பற்பம்)

24. கட்டு

25. உருகு

26. களங்கு

27, உருக்கு

28. களங்கு

29. சுண்ணம்

30. கற்பகம்

31. சத்து

32. குளிகை

## புற மருந்துகள்

1. கட்டுதல்
2. பற்று
3. ஒற்றடம்
4. பூச்சு
5. வேது
6. பொட்டணம்
7. தொக்கணம்
8. புகை
9. மை
10. பொடிதிமிர்தல்
11. கலிங்கம்
12. நசியம்
13. ஊதல்
14. நாசிகாபரணம்
15. களிம்பு
16. சீலை
17. நீர்
18. வர்த்தி
19. சுட்டிகை
20. சலாகை
21. பசை

22. களி

23. பொடி

24. முறிச்சல்

25. கீறல்

26. காரம்

27. அட்டை விடல்

28. அறுவை

29. கொம்புகட்டல்

30. உறிஞ்சல்

31. குருதி வாங்கல்

32. பீச்சு

என்பனவாகும்.

## மருந்துகள் பயன்படுத்தப்படும் முறைகள்

கசாயம், மாத்திரை, சூரணம், தைலம், எண்ணெய், குழம்பு என்ற முறையில் தயாரிக்கப்படும் மருந்துகள் ஒரு நோய்க்கு ஒரு மருந்து, ஒரு நோய்க்கு பல மருந்து, பலநோய்க்கு ஒரு மருந்து என்ற முறையிலும், நோயைக் கூறி, நோய்க்கு மருந்துகூறல் என்ற முறையிலும் நாட்டு மருத்துவத்தில் மருந்து பயன்படுத்தப்பட்டு வருகிறது. ஒரு நோய்க்குப் பல மருந்துகள் கூறப்படுவது நாட்டு மருத்துவத்தின் சிறப்புக் கூறாகும். ஒரு மருந்து பல நோய்களைக் குணப்படுத்தும் தன்மையையும்

உடையது. கூறப்படும் மருந்துகள் துணை மருந்துகளுடன் உண்ணப்படுகிறது.

## துணை மருந்துகள்

நாட்டு மருத்துவத்தில் மருந்தின் ஒரு கூறாக விளங்குவது அநுபானம் என்று கூறப்படும் துணை மருந்தாகும். துணை மருந்துகள் மருந்துகளின் ஆற்றலை அதிகமாக்குகிறது. உண்ணக்கூடிய மருந்துகளினால் உடலுக்குப் பக்க விளைவுகள் எதுவும் தோன்றிவிடாதபடிக்கு உடலைப் பாதுகாக்கிறது. இதனை அறிந்துகொள்வதற்கு சான்றாக கீழ்கண்ட பாடல் மூலம் அறியலாம்.

'கண்ட ரசங் கந்தகந்தாம் பூரமுறாமி
கருத்து சமன் சமனிதுக்கு சாதிலிங்கம்
கொண்ட நொச்சி புன்முருங்கைப்பட்டை பிஞ்சி
குலவுஞ் சாற்றினில் மூன்று நாளரைத்து
அண்டி மிள கொக்குளிகை இஞ்சிச்சாற்றில்
அநுபானத் திட சன்னி பாதமாதி
தண்ட வெருந் திரிதோஷ சயசுரங் கள்தான்
தீரும் ராசசன்னி யேசுரவென் றெண்ணலாமே'[77]

சன்னி சுரம் மாத்திரையை உண்பதற்குத் துணை மருந்தாக இஞ்சிச் சாறு பயன்படுகிறது. சில மருந்துகளை உண்பதற்கு இரண்டு அல்லது மூன்று துணை மருந்துகளின் பெயர் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

## ஒரு நோய்க்கு ஒருமருந்து பயன்படும் முறை

சுரம், சன்னி போன்ற நோய்களும், கர்ப்பக் காலத்தில் ஏற்படும் நோய்களும் குணமடைய மருந்துகள் கூறப்பட்டுள்ளன. சுரம் குணமடைவதற்கான மருந்தைப் பற்றி கீழ்கண்ட பாடல் மூலம் அறியலாம்.

'துத்தமோ டரிதாரங் கெளரி தானுந்
தாமத்தின் சாற்றிலுண்டை செய்து வர்த்தி
மொத்தியிடும் பயிறளவு இஞ்சி சுக்கு
விரசி முலைப் பாலதனி லனுபானம் வேகம்
சுத்திசெய்யுந் சுரந்தனக்கு முருங்கைக் கஞ்சி
கலராதே உப்பொழிந்த கஞ்சிதானே'[78]

துத்தம், அரிதாரம், கெளரி இம்மூன்றையும் தூமத்தின் இலைச்சாறிலிட்டு அரைத்து பயிரளவு மாத்திரையாக பயன்படுத்துவர். இம்மாத்திரையை துணை மருந்துகளான இஞ்சிச்சாறு அல்லது சுக்குக் குடிநீர் அல்லது தாய்ப் பாலுடன் உண்ணவேண்டும். இம்மாத்திரையை உண்ணுகின்றபோது பத்தியமாக முருங்கைக் கீரை கலந்த அரிசிக் கஞ்சியை உப்பில்லாமல் உண்ணவேண்டும் என்பர்.

## புகையிடுதல்

இருமல் நோய் குணமடைவதற்கு வாயில் புகைப்பதற்கான மருந்தைப் பயன்படுத்துவதாக சித்த மருத்துவ மணிகளில்

குறிப்பிடுகின்றன. என்பதை,

'ஆடாதோடை நாரத்தை அணிசேர் நெச்சில் திறச்சாற்றில்
நீடரி தாரந் தன்னை நேகவே யரைத்துக் கொண்டு
நாடிய சிலை தனிலூட்டி நன்னிழலுலர்த்தித் திரியாக்கி
கூடிய புகையை வாயில் கொள்ளவே யிருமல் போமே'[79]

ஆடுதோடை, நாரத்தை, நொச்சி ஆகியவைகளின் சாற்றில் அரிதாரம் என்னும் தாளகத்தை நன்கு அரைத்துக் கொண்டு மனோசிலையையும் அரைத்துத் தூய்மையான துணியில் தடவி நிழலில் உலர்த்தித் திரியாக மாற்றி புகையை வாயில் புகைத்தால் இருமல் குணமடையும் என இம்மருந்து முறையினை பயன்படுத்துகின்றனர்.

## நாட்டுப்புற மருத்துவத்தில் நம்பிக்கைகள்

நம்பிக்கைகள் பழங்காலத்திலிருந்தே மக்களிடம் நிலவி வருவதைத் தொல்காப்பியம் மற்றும் சங்க இலக்கியங்கள் விளக்கிக் கூறுகின்றன. இயற்கையோடு வாழ்ந்த மனிதன் இயற்கை மாறுதலுக்கேற்ப மனம் மாறுபட்டு நம்பிக்கைகள் தோன்றலாயின. உலகெங்கிலும் வாழும் மக்களிடத்தில் முற்காலங்களிலிருந்து வந்த நம்பிக்கைகள் இன்றும் பின்பற்றி வருவதைக் காணமுடிகிறது. தொல்காப்பியம் 'நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்'[80] எனக் குறிப்பிடுகிறது. பண்டைக் காலத்தில் ஆறலைக் கள்வர் காட்டில் நடமாடுவதைக் 'களந்துன்'

என்ற பறவை சத்தம் உண்டாக்கி அறவுறுத்தியதை,

'ஆற்றயலிருந்த இருந்தோட்டஞ்சிறை

நெடுங்காற் கனந்துள் ஆறறிவுறீஇ

ஆறுசெல் வல்பலர் படைதலை பெயர்க்கும்'[81]

எனக் குறுந்தொகைப் பாடல் குறிப்பிடுகிறது. காகம் கத்தினால் விருந்தினர் வருவர் என்னும் நம்பிக்கையை,

'மறுவல் தூவிச் சிவகருங்காக்கை

அன்புடை மாபிலின் கிளையயோடார'[82]

எனக் குறுந்தொகை குறிப்பிடுகிறது. ஆந்தை அலறினால் சாவு நிகழும் என்றும் நம்பிக்கையைப் புறநானூறு 'அஞ்சுவரு குரலுந் சுற்றும்'[83] எனக் குறிப்பிடுவதை இன்றும் தமிழர்கள் பின்பற்றுவதைக் காண முடிகிறது.

பல்லி சத்தமிடுவதைப் ப'பல்லி சொல்லுதல்' என நம்புகின்றனர். இதனை,

'பகுவாய் பல்லி படுதொறும் பரவி

நல்ல கூறென நடுங்கிப்

புல்லென் மாலையொடு பொருங் கொறாளே'[84]

என அகநானூறு பாடல் குறிப்பிடுகிறது. மருத்துவர் தரும் மருந்துகளையும், நோய் குணமடைவதற்கான வழிகளையும் நம்பிக்கையில்லாமல் உண்ணவும், கடைபிடிக்கவும் இயலாது. மேலும் 'நாட்டுப்புற மருத்துவம் பல நாட்டு நம்பிக்கைகளுக்குத் தாய் என குறிப்பிடுகிறது.'[85] நோயால் பாதிக்கப்பட்ட நோயாளி

மருத்துவரிடம் நம்பிக்கைக் கொள்ள வேண்டும். நம்பிக்கை இல்லையென்றால் நோயிலிருந்து, நோயாளி விடுபடவே முடியாது என்பது குறிப்பிடத்தக்கது.

## இறை நம்பிக்கை

ஆதியும், அந்தமுமான இறைவனன்றி ஒரு அணுவும் அசையாது. எனவே, இறைவனை நாள்தோறும் வழிபட்டால் நோயில்லாமல் வாழ முடியும் என்பது மக்களின் நம்பிக்கையாகும்.

'வாக்குண்டாம் நல்ல மனமுண்டாம் மாமலராள்
நோக்குண்டாம் மேனி நுடங்காது - பூக்கொண்டு
துப்பார் திருமேனி தும்பிக்கையான் பாதம்
தப்பாமல் சார்வார் தமக்கு'[44]

என்ற பாடலில் விநாயகரை வணங்கும் மக்களுக்கு நல்வாக்கும், நல்ல சிந்தனையும், திருமகளின் அருட் பார்வையும் கிடைக்கும் என்பது புலப்படுகிறது. வழிபடும் தெய்வங்களான விநாயகன், முருகன், சிவன், திருமால், வைரவன், அம்பிகை முதலியவையாக அமைகின்றன என்பது சித்த மருத்து மணிகள் என்ற ஆய்வு நூலின் பல இடங்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஒன்றுக்கு மேற்பட்ட நோய்களினால் பாதிக்கப்படும் நோயாளிக்கு, இறைவனால் நோய் நீங்கி சுகம் பெற முடியும் என்ற நம்பிக்கையை ஏற்படுத்திவிட்டு மருந்து தரப்படுகிறது

என்பதை,

'பருவத மலையினில் வாழும் பகவனார் அருளினாலே

பொறுமையாய் உலகில் வாழும் புண்ணிய சனங்களுக்கு

ஒரு பல வியாதி வந்தால் உண்மையாய்த் தீருமென்று

பிரபல முனிவன் தானும் பேசிய மருந்து கேளே'[87]

என்ற பாடல் விளக்குகிறது. மனிதனைப் பிடித்திருக்கின்ற நோய் முற்றிலும் அகலவேண்டும் என்றால் இறைவனை வணங்க வேண்டும் என்பதை,

'நாடி வரும் நோய்கள் பலதுளதும் போக

மாற்றுமான னுன்மதியு மயன்முவர் துணையால்

மானிடர் நோய் போகு மிதுக்கு மலர்ந்து பாரே'[88]

என்ற பாடல் வரிகள் குறிப்பிடுகிறது. 'தேவனாலே கூடாத காரியம் ஒன்றுமில்லை'[89] மனிதனால் செய்யக்கூடாதது தேவனால் கூடும் என்பது விவிலியத்தின் கருத்தாகும். மக்கள் எந்த ஒரு செயலைச் செய்யத் தொடங்கினாலும், முதலில் இறைவனை வணங்கி, பின் தொடங்குவார்கள். அதுபோல மருத்துவர்களும், மருந்து தயாரிப்பதற்கு முன் இறைவனை வணங்குகின்றனர் என்பதை,

'மாசிலா னருளைக் கொண்டு மருத்துசெய் விரும்புவாயே'[90]

என்ற பாடல் வரி குறிப்பிடுகிறது. மருந்து உண்பதற்கு முன்பும் இறைவனை வணங்குகிறார்கள்.

'மெய்க்கியஞ் சிவனாரா லயங்கள்

ஓங்கும் தரிசனம் குருபூசை சிவபூசை

மயேசுரர்க்கு மகுவும் பூசை பலமுடித்து

ஓம்பூசை செய்யு முதலே உயருஞ் சித்தி விநாயகனே

நாம நாவில் நவின்றேத்தி நலக்கா பஞ்சாட் சரநீயே"[1]

என்பதலிருந்து, நோயாளிகள் மருந்து உண்ணும் முன்பு சிவன் கோவிலுக்குச் சென்று சிவன், குரு முதலான தெய்வங்களை வணங்கி, பூசை செய்து, விநாயகரையும் வணங்கி, பஞ்சாட்சர மந்திரத்தையும் ஓதி, மருந்தினை உண்டால் மருந்தின் ஆற்றல் அதிகமாகி, விரைவில் நோய் குணமாகும் என்பது மக்களின் நம்பிக்கையாகக் காணப்படுகிறது. மருந்துகளை உண்ணும்போது, ஏதாவது பக்க விளைவுகள் ஏற்படாமல் காக்கவும் இறைவனை வணங்கி மருந்து உண்ணுகின்றனர் என்பதை,

'கோவிந்த நமாசாமெனக் கொள்ளீர் பூசணி நெய்யதிதுலே"[2]

என்ற பாடல் வரி குறிப்பிடுகிறது. எனவே இறைநம்பிக்கை நாட்டுப்புற மருத்துவத்தில் மிக முக்கிய நம்பிக்கையாகக் காணப்படுகிறது.

## சகுனம் பார்ப்பதில் நம்பிக்கை

மக்களில் பெரும்பாலானோர் எந்த ஒரு காரியத்தைச் செய்வதற்கு முன்னும் நாள், நேரம், நிமித்தம் ஆகியவைகளைப் பார்த்து செய்வர். நகர்ப்புறங்களில் வாழும் மக்களைக் காட்டிலும், கிராமப்புறங்களில் வாழும் மக்கள் சகுனம்

பார்ப்பதில் அதிகஈடுபாடு உடையவர்களாகக் காணப்படுகிறார்கள். நோயாளிகளுக்குச் சிகிச்சைப் பெறுவதற்கு மருத்துவரைப் பார்க்கச் செல்கின்றபோது குரங்கு? முயல், கல்வியறிவில்லாத மக்கள், அட்டை, எலி, கூகை, பருந்து, ஆந்தை போன்றவை இடதுப்பக்கமாக செல்வதைக் கண்டால் காரியம் வெற்றி பெறும் என்பது நோயாளியின் நம்பிக்கையை,

'வானரஞ் சுணங்கு கட்டி வலியுடன் முயலாம் புல்லர்
யானமா முஞ்சு றட்டை எலியோடு சாரை கூகை
தானமாம் பருந்தோ டாந்தை காலை நல்லுடும்புகிரி
தானுகஞ் திடத்தே போகிற சாலவே கருமம் நன்றாம்'[93]

என்ற பாடல் குறிப்பிடுகிறது. மருத்துவரை அழைப்பதற்கு முதலில் ஆடவர் ஒருவர் வந்து, அதற்குப் பின் ஒரு பெண் வந்தால் முதலில் குணமாகாது என்று தோன்றிய நோய் பின்பு நன்றாகக் குணமாகிவிடும் என்ற நம்பிக்கையை,

'முன்னமே ஆணில் வந்து முயன்றபின் பெண்ணில் வந்தால்
முன்னமே கருமஞ் தீதாய் பின்பு நன்றாரு மென்பர்
முன்னமே பெண்ணில் வந்து முயன்றபின் ஆணில் வந்தால்
சொன்னவை முன்பு நன்றாய் அருளது அடுக்குமென்றே'[94]

என்ற பாடல் மூலம் புலப்படுகிறது. மேலும் நோயாளிக்கு மருத்துவம் பார்க்க மருத்துவரை அழைத்கக வந்தவனுடைய கண்ணிலிருந்து கண்ணீர் விழுந்தாலோ, தரையை நோக்கியவாறு தலை கவிழ்ந்து நின்றாலோ, காலால் நிலத்தைக்

கிறிக்கொண்டிருந்தாலோ, காய்ந்துபோன மரத்தைச் சார்ந்து நின்றாலோ, தடுமாறுகின்ற வார்த்தைகளைப் பேசினாலோ, நோயாளி மரணமடைந்து விடுவார் என்பதை.

'கண்ணின் நீர் சிந்தி விழல் கவிழ்ந்து மண் நோக்கி நிற்றல்
மண்ணினைப் பறித்துக் கீறல் வற்றிய மரத்தைச் சாரல்
இன்னின்னப் படியே தொட்டால் இடர்பட மொழிந்துநிற்றல்
திண்மையை உரைத்தல் செய்தல் செய்திடுங் கருமமெல்லாம்
திண்ணமாய்ச் சாவென்றெண்ணே'[95]

என்ற பாடல் குறிப்பிடுகிறது. இவ்வாறு நாட்டுப்புற மக்களின் நாட்டுப்புறமருத்துவத்திலும், இறைநம்பிக்கையிலும், சகுன நம்பிக்கையிலும் நோயாளியைப் பிடித்திருக்கின்ற நோய் குணமடைவதற்கான செய்திகளை இங்கு காணமுடிகின்றது.

## தொகுப்புரை

இவ்வியலின் முடிவாக, பண்டைத் தமிழ் மக்கள் பசியையும், தாகத்தையும் நோயாகவே கருதினர். மனிதர்களின் உடலில் நோய் ஏற்படக் காரணம், உடலிலுள்ள தாதுக்களே எனலாம். அதிகமான உணவு, உறக்கமின்மை நோய்களை ஏற்படுத்தும் என்பதும் வாத, பித்த, ஐய நோய்கள் எல்லா மனிதரிடையேயும் பொதுவாகக் காணப்படுகின்றன என்பது தெரியவருகின்றன. நாடிபார்த்து நோய் அறியும் தன்மை இன்றும் நாட்டுப்புறங்களில் காணக்கிடக்கின்றன. நாட்டுப்புற

மருந்துகள் பொதுவாக அகமருந்துகள், புறமருந்துகள் என இருவகைப்படுத்துவது தெரியவருகின்றன. ஒரு நோய்க்கு பல மருந்து, பல நோய்க்கு ஒரே மருந்து முறை நாட்டுப்புற மருத்துவத்தில் காணப்படுகின்றது என்பதும் தெரியவருகின்றது. பெண்களுக்கு ஏற்படும் நோய்களுக்கு நாட்டுப்புற மருத்துவத்தில் பெரும்பான்மையான மருத்துவ முறைகள் காணப்படுகின்றன. இன்றைய பெண்களும் நாட்டுப்புற மருத்துவத்தையே பெரிதும் அனுசரித்து வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. பொதுவாக கர்ப்ப காலத்தில் பெண்களுக்கு நோய்கள் உண்டாகின்றன. சில மந்திர சடங்குகளும் நோய்களை குணமாக்கவல்லது என்ற நம்பிக்கை நாட்டுப்புற மக்களிடத்தில் இன்றும் வழக்கில் உள்ளது.

